டிக்கெல்லாம் அளவற்ற தீங்குகளை நடத்திக்கொண்டுவந்தனை. இந் நடத்தைகளனைத்தையும் அந்நகரத்தரசன் கேள்வியுற்று உன்னை அந்நகரத்தினின்றுந்துரத்திவிடப் பின்னர் நீகாட்டிற்சென்று கள்ளர்களுடன்கூடிக்கொண்டு அவ்வழியிற்போகின்றவர்களையும் வருகின்றவர்களையுங் கொலைசெய்து கொள்ளையிட்டு மிருகங்கள்பட்சிகள் முதலானவைகளைப்படையினாற்கொன்று பசிதீரத்தின்று திரிகின்றகாலத்தில் ஒருநாள் - அம்மார்க்கமாகக் கணவர்த்தனென்னும் ஒருபிராமணன்வர அவனைநீபார்த்தவுடன் பொருக்கென்றெழுந்து எதிர்சென்று மறித்துக்கொண்டு அவன்கைகளைச்சேரப்பிடித்துக்கொல்லவெத்தனித்தனை. அப்பிராமணன் உன்னைக்காண்டலும் எமதூதனைக்கண்டாற்போல நடுங்கிப்பயந்து பெருமூச்சுவிட்டு அப்பா-நான் அந்தணன் என்னைக்கொல்லலாமா நான்வைத்திருக்கின்ற பொருள்களையெல்லாம் ஒளிக்காமற்றருகின்றேன் என்னைக்கொல்லாமல் மாத்திரம்விட்டுவிடு முன் பொருகன்னிகையைக் கல்யாணஞ்செய்தேன் அவள் புத்திரப்பேறில்லாமல் இறந்துவிட்டாள். பிதிர்கருமங்கட்குப்பிள்ளைவேண்டுமாதலால் இப்போது இரண்டாவது கல்யாணஞ்செய்திருக்கின்றேன் அவ்வனிதையோ இன்னும்புத்திரர்களைப்பெறமாட்டாத பருவத்தினளாயிருக்கின்றனள் அவளுக்கென்னைவிட ஆதரிக்கத்தக்கவர்கள் ஒருவருமில்லை நண்பனே - எனதுபிராணனை உனதடைக்கலமாக்கினேன் யான்தருகின்றதிரவியங்களை வாங்கிக்கொண்டு என்னைக்கொல்லாமல் உயிர்ப்பிச்சை தந்துவிடல்வேண்டுமென்று மேலும்மேலும் பிரார்த்தித்துக்கொண்டனன். அதற்கு நீ கொலை - களவு - கள் - காமம் - பொய் என்கின்றபஞ்சமாபாதகங்களிலே ஒன்றையும்விடாது செய்கின்றவனாதலால் அப்பிராமணன்சொல்லைக் கற்பாறைமீதுதாங்கியகோடாலியெனத்தள்ளிச் சற்றேனுமனமிரங்காமல் உனதிஷ்டத்தின்படி அவனைக்கொன்றுவிட்டனை. உடனே உன்னைப் பிரமஹத்திபிடித்துக்கொண்டு அனந்தவுபத்திரவங்களைச்செய்துவர அதனால் ஒருகிமிடம் ஒருகமாகக்கழித்துப் பலதுன்பங்களையநுபவித்துவந்தனை இத்தன்மைத்தான துன்பத்தோடுவருந்தியிருக்கின்றகாலத்தில் ஒரு புண்ணியப்பலனுங்கிடைக்கப்பெற்றனை. அப்புண்ணியப்பலத்தாலல்லவா இச்சனனத்தில் இப்பூவுலகத்தையாள்வதான அரசுரிமையைப்பெற்றனையென்றனர். இவ்வாறுசொல்லிய பிருகுமுனிவரைமீளவும் அவ்வரசன் பணிந்தெழுந்து அப்புண்ணியத்தையுந் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்ப

ஞ்செய்துகொண்டனன். அதற்குப் பிருகுமுனிவரிசைந்து அரச
னே - நீ முன்கூறியவண்ணம் அப்பிரமஹத்திபாவத்தினாற் பலது
ன்பங்களையனுபவித்து வனத்திற் சஞ்சரித்திருக்குங்காலையில் உனக்
கு - நடுக்கம் - இரைப்பு - கபம் - காசமுதலானவியாதிகள்நேர்ந்து வ
யதுமுதிர்ந்து சவரட்சணைசெய்வதற்கான துணைவர்கள் ஒருவருமில்
லாமல் மிக்கதுன்பத்தினையனுபவித்திருக்கின்ற தருணத்தில் நீ-உன்
மனைவியைநினைத்து அவளிடத்திற் கொருதூதுவனையனுப்பினை. அ
த்தூதுவன் அவ்வாறே இராக்கொண்டுசென்று நீதனியாயிருந்து ப
டுகின்ற துன்பங்களனைத்தையுஞ் சொல்லினன். அவற்றை உன்ம
னைவிமுதலானமற்றை யாவர்களுங்கேட்டுப்பயந்து இக்காரணம் அ
ரசனறிவானாயின் நம்மையெல்லாம் ஒருமிக்கவதைசெய்யத்துணிகுவ
னென்று நடுங்கி அத்தூதுவனைப்பார்த்து நீ - இவ்வார்த்தைகளை யெ
ங்கும்வெளிவிடாமல் விரைவிற்செல்லக்கடவையென்று பயமுறுத்தி
யனுப்பினர்.

அதையத்தூதுவன்வந்து சொல்லக்கேட்டு இனி யாதுசெய்யக்க
டவோமென்று துன்பமுற்றிருக்குங்காலையில், நீ யதற்கு முற்பிறப்
பிற்செய்த நல்வினைப்பயனானது உன்னை நெருங்கிவருங்காரணத்தா
ல் அவ்வழியிற்செல்லுகின்ற ஒரு வேதியன் உனதுவரலாறு இன்
னதென் றறியாதவனாகி உன்னைவந்து யாசித்தான். அவ்வேதியனு
க்கு நீ ஆடையாபரணமுதலிய திரவியங்களைக் கொடுத்து
மீட்டு மவனைப்பார்த்து இன்னும் பிராமணரை யழைத்துவரு
வையாயின் அவ்வவர்கட்கு வேண்டுமட்டுந் தானஞ் செய்கின்றே
னென்று சொல்லினை. அவ்வந்தணன் அவ்வாறே பலஆசிரமங்க
ளிற்சென்று ஆங்காங்கிருக்கின்ற பிராமணர்களைக்கூவி ஆடையாப
ரணமுதலான திரவியங்களை ஒருவன் தானஞ்செய்கின்றான், நீங்க
ள்யாவரும் விரைவில் வாருங்கள் வாருங்களென்று அழைக்க அவ்
வேதியர்கள் நீயென்றறியாது அப்பிராமணன் வழிகாட்டியபடி உன்
னிடத்திற்குவந்தார்கள். நீயவர்களைக்கண்டவுடன் மிகவும் பயபத்
தியோடு வணங்கிநின்றனையாயினும் அவ்வேதியர்க ளுன்னைப்பார்த்
து நீ இன்னானென்றறிந்துகொண்டு மனவருத்தமுற்று நகைத்து நீ
பாவியென் றறியாமல் அப்பிராமணன்சொன்ன வார்த்தையைக்கேட்
டல்லவோ இங்குவருவதாயினோம்,ஐயோ பாதகங்களனைத்தையும் வி
டாமற்செய்த மகாபாவியாகிய உன்னை அடுத்தவர்கள் - கண்டவர்க
ள் - உன்பெயரைக் கேட்டவர்கள் - உன்பெயரைச்சொன்னவர்கள் -

உன்னையாசிப்பவர்கள் முதலானயாவர்களும் தீவினைக்காட்டி லகப்
பட்டுப் பின்பு நரகக்குழியிலழுந்தி வருந்துவார்களே ஆயினும் - உ
னக்குத் தருமஞ்செய்யக்கருத்திருக்குமாயின் இவ்வனத்தில் நின்ம
லமூர்த்தியாகிய விநாயகக்கடவுளாலயமொன்று அடிமுதல் முடிவ
ரையிற் செடிகண்முதலானவைகளான் மூடப்பட்டுக் கிலமடைந்தி
ருக்கின்றதால் அவ்வாலயத்தைப் புதுக்கக்கடவையென்று சொல்லி
அவ்வவர்களாசிரமத்திற்சென்று, உன்னைக்கண்டபாவ நீங்குமாறுஸ்
நானஞ்செய்து செபதபங்கள்முதலானவற்றை நடத்திப் பரிசுத்தரா
னார்கள். பின்னர் உன்னைமனைவிமுதலாயினோர் வெறுத்துக்கைவி
ட்டதையும் அப்பிராமணர்களுன்னைப் பாவியென்று கழித்ததன்றி,
நீ செய்யப்புகுந்த தருமத்தையு மேற்றுக்கொள்ளாமற் சென்றதை
யும் உன்னைப்பலதுன்பங்கள் நேர்ந்துவாட்டுவதையும் உனக்குநீயே
எண்ணி எண்ணி யேக்கமுற்றுச் சகல ஆபத்துகளையும் விலக்கி இர
ட்சிப்பவர் விக்கினகருத்தாதலால் அக்கடவுளுடைய ஆலயத்தை
கட்டுவிப்பதைவிட மேலானதருமம் ஒன்றுமில்லையென்று நிச்சயித்
து அதுவரையிற் பலதுன்மார்க்க விஷயத்தாற் சேகரித்துவைத்திரு
ந்தபொருள்களையெல்லாம் எடுத்துக்கொண்டு பழுதுபட் டிருக்கின்
ற விநாயகராலயத்திற்கு மிகுந்த பத்தியுடன்வந்து அவ்வாலயத்தில்
அநாதியாயெழுந்தருளியிருக்கின்ற கணேசமூர்த்தியைத்தரிசித்துஉ
னது மனக் கவலைகளையெல்லாம் வாய்விட்டரற்றி அனந்தமுறை சா
ஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து ஆனந்தபரவசமுற்று ஆடிப்பாடிச் சி
றந்தகம்மியர் முதலாயினோரை வரவழைத்துச் சொர்னத்தாற் கர்ப்
பக்கிரகஞ்செய்வித்து அதன்முகப்பில் மாணிக்கமுதலிய ரத்தினங்க
ளை யிழைப்பித்து அர்த்தமண்டபம்-மகாமண்டபம் - மடைப்பள்ளி
யாகசாலை - ஆகாயத்தை யளாவத்தக்கதான மதில்முதலானவைகளை
வெள்ளிமுதலிய உலோகங்களாலுங் கருங்கல்-செங்கல்- முதலியவை
களாலும் மரங்களினாலும் தெய்வகம்மியர்களுங்கண்டு நாணத்தக்க
தாகச்செய்வித்து நாற்றிசைகளினு நான்குகோபுரங்களையெழுப்புவி
த்து மாடவீதிகளேற்படுத்தி வீடுகள் உப்பரிகைகள் முதலானவை
களை அணியணியாகக்கட்டுவித்து ஆலயத்தினாற்றிசையினு நான்கு
தடாகங்களைத் தொடுவித்துப் பொன்வெள்ளி முதலானவைகளால்
ஆலயத்திற்குவேண்டிய பாத்திரங்களைச் செய்வித்து ஆதிசைவப்பி
ராமணர்களைக்குடியேற்றி அவர்களால் விநாயகமூர்த்திக்கு அபிஷே
கமுதலிய ஆராதனைகளைச்செய்வித்து நாடகசாலையுண்டாக்கி அதிற்

சகலவாத்தியங்களையு முழக்குவித்துக் கணிகைமாதர்களை நடிப்பித்து யாழ்முதலியவைகளை வாசிப்பித்துச் - சொர்னத்தாற்செய்து நவரத்தினங்களா லிழைக்கப்பட் டிருக்கின்ற வாகனங்கள்-கொடைகள்-பல்லக்குகள்-இரதங்கள்-முதலானவைகளை வரவழைத்து யாவருங்கண்டு அற்புதமற்புதமென்று கொண்டாடத்தக்க திருவிழாக்களு நடப்பித்தனை. இவ்வாறு அளவற்றசிறப்புடன் பூசனைகளுந் திருவிழாக்களும் இடைவிடாது நடாத்திவருகின்றநாளையில் உன்னுடையு வாழ்நாண் முடிவெய்தி இறந்துபோய்விட்டனை. பின்னர் யமதூதுவருன்னைக் கொண்டுபோய்த் தங்களரசனெதிரோ விட்டார்கள். அவ்வரசனாகிய யமதருமராசன் சித்திரகுப்தனைக்கூவி இவன் இதுகாறுஞ் செய்திருக்கின்ற பாவபுண்ணியங்களை யெல்லாங் கிரமமாகச்சொல்லக்கடவையென்று ஆக்ஞாபிக்க உடனே அவன் நீ செய்துவந்த துன்மார்க்கங்களையெல்லாந் தினவாலாறாகவெடுத்து மழைபெய்ததுபோல ஒன்றையும்விடாமற்சொல்லிப் பின்னுஞ் சொல்லுவான் ஓ தருமபூபதி இவன் பிறந்தநாடொடங்கி இதுகாறுஞ் செய்துவந்ததெல்லாம் பாவமென்றும் அப்பாவத்தாற் சம்பாதித்த திரவியங்களைக்கொண்டு அந்தியகாலத்தில் விநாயகக்கடவுளுடைய ஆலயத்திருப்பணி செய்தானென்றுஞ்சொன்னான். இவை யனைத்தையும் யமதருமராசன் செவியுற்றுச் சற்றுநேரமாலோசித்துப் பஞ்சுமலைகளில் ஓர்அழற்பொறி பட்டதுபோல இவனிதுகாறுஞ் செய்துவந்ததீவினைகளனைத்தும் விநாயகக்கடவுளுடைய ஆலயத் திருப்பணிசெய்த பேற்றினாலொழிந்துபோயின. ஆயினும் - இவன் பூவுலகின்கண்மீளவும் உற்பவிக்கவேண்டுமென்றுயோசித்து ஒன்றோலென்று திரும்பி உனது முகத்தைப் பார்த்துச் சொல்லுவான், நீ அளவிறந்த பாவங்களைச்செய்து உன்னந்தியகாலத்தில் ஓரற்ப மாத்திரமொரு புண்ணியத்தைச் செய்திருக்கின்றாயாதலால் முன்னர் உனக்குப்பாவத்திற்கேற்ற பலனையனுபவிக்கவேண்டுமா, புண்ணியத்திற்கேற்ற பலனை யனுபவிக்கவேண்டுமாவென்றுகேட்டான், அதற்கு நீ இளகி நெஞ்சினால் முன்னர் புண்ணியப்பயனை யனுபவிக்க வேண்டுமென்று சொல்லினை அவ்வாறே யமதருமராசன் சம்மதித்து உன்னைப் போகும்படி உத்தரவுசெய்தான். ஆதலால் நீ இப்பூவுலகத்தில் அரசனாகப்பிறந்து நல்வினைப்பயனை முன்னரனுபவித்துப் பின்னர் இவ்வியாதியாற் றீவினைப்பயனை யனுபவிக்கின்றனை. இத்தீவினைப்பயனுமொழியுமாறு நீ அவ்விநாயகக்கடவுளையே போற்றவேண்டுமென்றுசொல்லினன்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே காமந்தனென்னும் பெயரைப்படைத்ததற்கேற்றபடி காமாந்தகாரனுகத்திரிந்து அளவற்ற பாதகங்களைநாடோறுஞ்செய்துவந்து இறக்குங்காலத்திற்செய்தவொருபுண்ணியத்திற்கு அப்பாதகங்கள்குறைந்து பின்னிடப்பெற்றுஞ் யின் விநாயகக்கடவுளைச் சதாகாலமுஞ் சிந்திக்குந்தன்மையையுடையவர்கள் எவ்வளவு பேற்றைப்பெறமாட்டார்கள். இப்பால் இவ்வளவுகருணையோடும் பிருகுமுனிவரருளிச்செய்த வுண்மையில் சோமகாந்தராசனுக்குநிச்சயந்தோற்றுமல் சந்தேகங்கொண்டனன். உடனே அவன்சரீரத்திலிருந்து ஆயிரம்வலியன்பட்சிகளுண்டாகி வச்சிரத்தால்வடித்துவைத்ததற்கொப்பாயிருக்கின்ற மூக்குகளினுற்றெழுநோய்கொண்டசரீரத்தையெல்லாங் குத்தித் தசைகளையெல்லாம்பிடுங்கித்தின்றன. அதனுல் அரசன் மிகவும்பயந்து அவ்வுபத்திரவத்தைச்சகிக்கமாட்டாது வருத்தங்கொண்டு பிருகிமுனிவருடையபாதத்தில் அடியற்றமரம்போலவீழ்ந்து ஓ மேலானதவசிரேஷ்டரே, அபயமபயம். தேவரீர்திருவடிகளையடைந்தேன்அபயமபயம். அடியேற்குத்தேவரீரையன்றிவேறுகதியில்லை அபயமபயம், தேவரீரென்னைக்கைவிட்டாலும் உமது திருவடிகளை விட்டு நீங்கேன், அபயமபயம். ஓ மகாதவக்குன்றமே, ஓ குளிர்ந்த கிருபாசமுத்திரமே, ஓதயாநிதியே. ஓ ஞானசூரியனே, ஓபுண்ணியமூர்த்தியே, தேவரீரைத்தியானஞ்செய்கின்றபேர்கள் எவ்வளவு தூரத்திலிருக்கினும் அவர்களையமனுமணுகமாட்டானே. அத்தன்மைத்தான தேவரீர் திவ்வியசமுகத்திற்கு எதிராக நிற்குமென்னை அவ்வலியன்கூட்டங்கள் சின்னுபின்னப்படுத்துவதைப் பார்க்கவில்லையோ. தேவரீருடைய ஆசிரமத்தில் எக்காலமும் பறவைகளு மிருகங்களும் பகையில்லாமல் உறவுபெற்று விளையாடுகின்றனவே தேவரீருடைய திருவடிகளைச் சேர்ந்திருக்கின்ற அடியேன்மாத்திரம் இத்துன்பத்தை யடைந்திருப்பது நீதிதானோ மகமேருவைச்சார்ந்த காகமும் பொன்னிறமாகின்றதே, அடியேன்படுகிறதுன்பத்தைநீக்கி யாட்கொள்ளாதிருப்பதுந் தேவரீருடையகிருபைக்குத்தக்கதா, என்றிவ்வாறு அனந்தமுறை ஓலமிட அவ்வரசன்தேவியாகிய சுதன்மையானவள் திடுக்கிட்டுப் பிருகுமுனிவரைச் சாஷ்டாங்கமாகப் பணிந்து, நிரோகமாத்தியந்தமும் நடுக்குற்று விழிகளினின்று நீர்த்தாரைகளைச்சொரிந்து இரண்டுகரங்களையுமேந்தி எங்கள்மனோரதங்களைஈடேற்றவெழுந்தருளிய ஓதயாநிதியே, அடியாட்கு மாங்கல்யபிச்சை தந்

தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனள். இரண்டமைச்சர்களு
ங் கீழேவிழுந்து நமஸ்கரித்து எமக்கு அன்னையும்பிதாவுமா யெழுந்
தருளிய கருணாநந்தமூர்த்தியே அரசனைவலியன்பக்ஷிகளெல்லாங்
கூடி வதைக்கின்றனவே, அவைகளைவிலக்கியாட்கொள்ளவேண்டா
வோவென்று அரற்றினர்கள் - அருகிலிருக்கின்ற மற்றமுனிவர்களு
ம்பயந்து, ஆ அ சுவாமி, இதென்னபாவம் - இப்பக்ஷிகள் செய்யுங்
கொடுமையைப்பார்க்க இரண்டுகண்ணுங் கூசுகின்றதே என்றுமி
குந்த இரக்கத்தோடுந் துயருற்றுச்சொன்னார் கள். இவ்வாறு யாவ
ரும்வருந்தி முறையிடப் பிருகுமுனிவர் சோமகாந்தராசனைப்பார்த்
து அரசனே யாம்சொன்னவார்த்தைகளை உண்மையென்று நம்பாம
ற் போயினையாதலால் உனக்கு இத்தன்மைத்தான துன்பங்கள் நேர்
ந்தன. இனியாயினும் யாம்கூறியவார்த்தைகளிற் சந்தேகமுறாமல்
நம்பக்கடவாய் அதனால்நீயும் புனிதனாகலாமென்று மிகுந்த அன்பு
டன் அருளிச்செய்து வலியன்பக்ஷிகளைநோக்கி ஒரு உங்காரஞ்செய்
தனர். அவ்வோசையக்கேட்டலும் பக்ஷிகளெல்லாம் ஆகாயத்திற்
பறந்துபோய்விட்டன. பின்னர் அரசனானவன் பிருகுமுனிவரரு
ளிச்செய்த தனது பூர்வவினைகளையெல்லாம் உண்மையென்று நம்பி
ஆனந்தங்கொண்டனன். சுதன்மைமுதலியயாவருந் தங்கள்தங்கள்
துயாநீங்கிச் சந்தோஷமானார்கள், இப்பால் பிருகுமுனிவர்தமது க
மண்டலத்திற் சலத்தைநிரப்பி விநாயகக்கடவுளை மனதிற்றியானித்து
இவ்வரசன்படுகின்ற வியாதியைவிலக்கி யருளவேண்டுமென்று பி
ரார்த்தித்து அவரதுமந்திரத்தை நூற்றெட்டுருச்செபித்துஅக்கமண்
டலசலத்தைக் கரத்தில்வார்த்துக்கொண்டு அரசன்சரீரத்திற் றூவி
னார். உடனே அவ்வரசன் செய்தபூர்வசன்மபாதகங்களெல்லாம் ஒ
ன்றாகச்சேர்ந்து வோருருவங்கொண்டு நின்றதுபோலச் சிவந்துதிர
ண்டுநீண்டிருக்கின்றகால்களும் நீண்டுநெருங்கிப்பரந்திருக்கின்ற ம
யிர்ச்சடைகளும் மேலெழும்பிவளைந்திருக்கின்ற கோரைப்பற்களு
ம் நீண்டபாதங்களும் குழிபட்டிருக்கின்ற விழிகளும் இருளைப்
போன்றகருத்தநிறமும் அகன்றவயிறும் ஏழு பனைமரங் கொண்ட
உயரமும் அவ்வுயர்வுக்குத்தக்க பருமனுமாக ஒருபூதமானது அவன்
சரீரத்தினின்றும்வெளிக்கொண்டு நெறநெறென்று பற்களைக்கடித்து
க்கண்கள் புருவத்தின்மே லேறநெறித்துவிழிகளிலிருந்துதீப்பொறி
களெழும்பிச் சிந்தத்தக்கதாகப்பார்த்து தோள்களைத்தட்டிக்கொண்
டு இடிமுழக்கம்போலக் குரலெடுத்துக் கூவி - அரசனே -

முன்னுளையின் உன்னுடைய ஆயுதவல்லபங்களைக்காட்டினையேஅவ்வல்லபங்களையிப்போதுபார்ப்போங்காட்டுவையென்று அதிகவுக்கிரத்தோடு வாய்விட்டுத்தருக்கி யெதிர்த்துநின்றது, இவ்வாறுஅப்பூதம் அரசனைத்தொடர்ந்து யெதிர்த்துநிற்பதைப் பிருகுமுனிவர்கண்டு உங்காரஞ்செய்து பயமுறுத்தி அரசனருகிற்செல்ல வொட்டாமறறுத்துக் கையமர்த்தி ஒபாரிடமே -'நீயார் உன்வரலாறென்ன வென்று கேட்டனர். அதற்கதுசொல்லுவதாவது, சுவாமி - நான் இவ்வரசனைப் பிடித்திருக்கின்ற பிரமஹத்தி, தேவரீர்கரங்கொண்டு தூவியசலத்தினலே யான் அவனைவிட்டுவெளிப்பட்டுவந்தேன் எனக்கு மிகப்பசியாயிருக்கின்றது தேவரீர் கிருபையுண்டாயின், இந்நிமிடத்தில் அவ்வரசனையும் அவன்மனைவியையும் இரண்டமைச்சர்களையுந் தின்று செல்கின்றேனென்று சொல்லி உத்தரவுதரும்படி பிரார்த்தித்துக்கொண்டது. அதற்குப் பிருகுமுனிவர்வியந்து, வலிமையிற்சிறந்தகிருத்திமமே - நீ அவசரப்படவேண்டாம் - உனக்குஞ்சுகமுண்டாகுங் காரியமேசெய்கின்றோம், அதுகாறும் அம்மரத்தின் பொந்தினுட்புகுந்திருக்கக் கடவையென்று தம்மெதிரிலோங்கித் தழைத்திருக்கின்ற ஓர்மாமரத்தைக் கரத்தாற்சுட்டினர். அவ்வாறே அப்பூதமானது பொந்தினுள்நுழைந்துபுகுதலும் அப்பூதமும் மாமரமும் ஒன்றாகவெறிந்து சாம்பராயின. பின்னர் அப்பூதசரீரத்தினுளிருந்த ஆன்மாவானது மகாதிவ்வியசரீரத்தோடும் ஒரு தெய்வரூபமாகிப் பிருகுமுனிவருடைய சரணாரவிந்தங்களில் நமஸ்காரம்புரிந்து ஓ கிருபாமூர்த்தியே இப்பாவிமுற்காலத்தில் என்னை ஆயுதத்தால்மாய்த்துவிட்டான், அந்தத்துர்மரணத்தினல் ஓய்வில்லாமல் மிக்கதுயரத்தைப்பெற்றிருந்தவெனக்குத், தேவரீர் தரிசனவிசேடத்தால் நற்கதி கிடைத்ததென்று சொல்லிக்கொண் டிருக்கையில் விநாயகமூர்த்தியினுடைய கட்டளையினல் ஆகாயத்தி னின்றும் ஒருதெய்வவிமானமிறங்க உடனே அவ்விமானத்தில் தெய்வசரீரம் பெற்றிருக்கின்ற அப்புருடனைவ னேறிக்கொண்டு ஆகாயமார்க்கமாகப் போய்விட்டான். அவ்வற்புதங்களைப் பார்த்தவர்களெல்லாம் ஆனந்தபரவசராகித் தீவினைகளையெல்லாங் கடியவல்ல பிருகுமுனிவருடைய திருவடிகளைப் பலமுறைபணிந்து துதித்திருந்தார்கள். இப்பால் பிருகுமுனிவர் சோமகாந்தராசனைப்பார்த்து இதுகாறும் உன்னைத்தொடர்ந்திருந்த பிரமஹத்தி விலகிப்போனதைக்கண்டனை இனி உனது சரீரத்தைத் தொடர்ந்திருக்கின்ற தொழுநோய் நீங்குவதற்கான திற

ச்சியுண்டாகுமோ அவ்வளவு மகிழ்ச்சியையடைந்து, பிருகுமுனிவரிடத்தில்வந்து, அவரைச் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, சுவாமி - தேவரீர்கிருபை அடியேற்குக்கிடைத்ததினாலே, அடைதற்கரியபயன்களெல்லாம் எளிதிலடையப்பெற்றேன். அன்றியும் - சுவாமிகளிடத்திற் புராணங்கேட்பதற்குச் சங்கற்பமோதியமாத்திரத்தில், அடியேனைவருத்தியிருந்த வியாதி யொழிந்துபோய்விட்டது. இவ்வற்புதத்தினை யானென்னென்றுசொல்லமாட்டுவேன் ஓகிருபாமூர்த்தியே - தேவரீரையடுத்தவர்கட்குக் கிடைக்காதபொருள் சொர்க்கமத்தியபாதலமென்கின்ற மூவுலகங்களினுமில்லை ஊரற்று, உறவற்று, மகனற்று, மனையற்று, நாடற்று, நகரற்று, அழகானதேகமற்று, அருமையானபோகமற்று, தடாகக்கரையிற் றுன்புற்றிருந்த ஏளியேனை, இங்ஙனம்வருவதாகக்கிருபைசெய்து, மகாஅற்புதமான சுகத்தைக்கொடுத்தருளிய தேவரீர்க்கு, யானுதவத்தக்கபொருள் என்னுவியேயன்றி வேறொன்றுமில்லை, இனிசுவாமிகள் அருள்சுரந்து, விநாயகபுராணத்தைத் திருவாய்மலரவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதனை அன்னைக்கொப்பாகிய பிருகுமுனிவர்கேட்டு மனமிரங்கி, அவனை அருகிலழைத்துத், தமது தாமரைமலர்போன்றதிருக்கரத்தினால் அவனுடைய சரீரத்தைத்தடவித், தமது சிறந்த ஆதனத்திலொன்றை அவனுக்குக்கொடுத்து, அதில் வீற்றிருக்கச்செய்தனர் பின்னர் அப்பிருகுமுனிவருடைய திருக்கரத்தாற் சரீரத்தைத்தடவிய மகத்துவத்தினாலும், அவராதனத்திலிருந்தமாட்சிமையினாலும், அவ்வரசன்சரீரமானது முன்னிருந்த காந்தியினுமிகுந்த காந்தியையுடைத்தாயது அவ்வற்புதத்தைக்கண்டவர்களெல்லாம் அதிக ஆச்சரியம்அடைந்தார்கள். துக்கசாகரத்தின்மூழ்கியிருந்தசுதன்மையும் அமைச்சர்களுந் தேவாமிர்தம்புசித்தவர்கட்கொப்பாக ஆனந்தித்தார்கள்.

சோமகாந்தன் பிருகுமுனிவரையடுத்தது

முற்றிற்று.

—※—



உ

கணபதிதுணை.

## வேதவியாசர்பிரமதேவனையடுத்தது.

ஓசவுனகாதிமுனிவர்களே, இப்பால் பிருகுமகாமுனிவர் கிருபை
கூர்ந்து, அரசனே-முன்னொருகாலத்தில் சொர்க்கமத்திய பாதலங்க
ளில் அமர்ந்த பிராணிகள் செய்த பிராரத்துவ கன்மசம்பந்தத்தினால்
அளவுபடாதவேதங்க ளனைத்தும் ஆதியந்த பதக்கிரமங்கள் தடுமாறி
ச்சிந்தின, அக்காரணத்தினால், விண்ணவர், தவத்தர், மானிடர் முத
லாயினோர்க்கு அறிவுவிளங்காமல், வேதவாய்மைகளின்மாறிப், பல
துஷ்கிருத்தியங்களை அனுசரித்து - அதற்கடுத்த சிலமோகன சாத்தி
ரங்களை யுண்டாக்கிக்கொண்டு பூவுலகத்தின்கண் முக்கியமாக வழங்
கிவருகின்ற கருமங்களனைத்துங்கொடிய பாசபந்தவினையென்றுநீக்கி
ப் பாதகங்களுக்கேதுவாகிய மார்க்கங்களைக் கடைப்பிடியாக வெண்
ணிச் சகலருமவைகளைத்தொடர்ந்து செய்துவந்தனர். அதை விஷ்
ணுவும், பிரமனுங்கண்டு பரமசிவகடாக்ஷமில்லாது இந்தமாறுபாடு நீ
ங்காதென்று நிச்சயித்து இந்திரன்முதலான தேவர்களுடன் திருக்
கைலையைச்சேர்ந்து முதல்வாயிலிற்றமதாணையைச் செலுத்திக்கணங்
கள்போற்ற வீற்றிருக்கின்ற நந்திதேவரைப்பணிந்து எங்கள்வரவை
ச் சிவபிரானுக்கறிவிக்க வேண்டுமெனப்போற்றினர் அதற்கவர் கிரு
பையுற்று அவர்களையவ்விடத்தில் நிறுத்திக் கர்த்தன் சந்நிதானத்தி
ற்சென்று வணங்கிக் கேசவன் முதலாயினோர்வரவை விண்ணப்பஞ்
செய்து அநுமதிபெற்றுவந்து நீங்கள்சபைக்குவருவதாகப் பரமசிவ
ங் கட்டளையிட்டதென்றனர் அவ்வாக்கியத்தை அவர்கள் அமுதமா
கக்கேட்டு ஆனந்தபரவசராய்ச் சிவகணங்கள் காவல்கொண்டிருக்கு
ம் பலவாயில்களைக்கடந்து திரிநேத்திரதாரியாகிய சிவபெருமானைத்
தரிசித்தவுடன் விழிகளில் ஆனந்தவாரிபெருகத் திருவடிகளிற் கற்
பகமலரைச்சொரிந்து தீர்க்கதண்டன் சமர்ப்பித்துப் பலமுறைபோ
ற்றிக் கரங்களைக்கூப்பிக் கர்த்தன் கிருபாநோக்கத்தைப் பெற்று கட்
டளையிட்டவாறே தந்தமக்குரியவிடங்களிலிருந்தனர்பின்பு சிவபிரா
னவர்களைநோக்கி உங்கள் செய்கைகள் குறைவறநடந்துவருகின்றன
வா? வென்றுவினவக் கேசவன்வந்தித்துத் தேவரீர் திருவுளப்படிக்
கு அடியேங்கள் விருத்திகள் சிதைவின்றி முற்றுகின்றனவாயினும்
பூமியின்கணிராநின்ற தபோதனர் முதலாயினோர் சிலமோகனசாத்

திரங்களிற்பட்டுத் தேவரீரைப்பரமெனநினையாது தமதுகட்டளையின்படி நடாத்திவருகின்ற என்னையும் பிரமனையுஞ்சிலர் கர்த்தவ்வியமாகக் கருதித்தொழுகின்றனர். சிலர் மற்றத்தேவர்களுடன் தேவரீரைச் சமமாகத் துணிவுற்றிருக்கின்றனர். காலகருமங்களைக் கடந்த ஆதிமூர்த்தியுமுண்டோவெனச் சிலரவமதிக்கின்றனர். கடவுள் வேறில்லை நாங்கற்ற சாத்திர வுணர்ச்சியே நித்தியமெனச் சிலர்பாவிக்கின்றனர் சிலராகம விதிப்படி விபூதி உருத்திராக்கங்க ளணிவதைமறந்து தங்களுக்கிஷ்டமான குறிகளைத் தரிக்கின்றனர். சிலர்-உண்ணல்-உடுத்தல்-புணர்தல்-களித்தலென்னும் இவைகளன்றி வேறொருமுத்தியிருக்கின்றதென்பது அஞ்ஞானமெனவு நினைக்கின்றனர் இவ்வாறு பறபலவிதங்களிற் சகலருமுயன்று பிறவிச்சாகரத்தைக்கடக்குமுண்மையினையறியாது உழன்று வேதாகமவரம்பைக்கடந்து பவநெறிகளை முக்கியமாகத்தொடர்ந்து தீவினைகளிற்படர்ந்து அலைந்து மயங்குகின்றார்கள் இவைகளனைத்துந்தேவரீர் திருவுளத்திற்கு விளங்கியிருப்பனவாயினும் அடியேங்கள் அறிந்தவற்றை விண்ணப்பஞ்செய்தனம் இதனைத் திருவுளத்திற்கொண்டு எங்களுக்காக இரக்கமுற்றுச் சீவராசிகள் மையலை நீக்கி முமூட்சுக்களாய்த் தேவரீர் பாதகமலங்களைக் கருதி மோட்சவீட்டினைச் சேருவதாகக் கிருபைசெய்யவேண்டுமென்றிரந்தனர்.

அவைகளனைத்தையும் எமதுகர்த்தன் செவிமடுத்து விண்டுவே உனது கலைகளில் ஒன்றைக்கொண்டு பூமியின்கணவதரித்துச் சிலப்பட்டிறைந்திருக்கின்ற வேதங்களைச்சேகரித்து அவைகளை நான்குவகைப்படுத்தித் தகுதியான இருடியர்களுக்கு அவைகளைப்போதித்து அவ்விருடியர்களால் ஆன்மகோடிகளது சிற்றுணர்வைமாற்றிப் புனிதராக்கக்கடவை அன்றியும் -அவைகளையோதப்பெறாத சூத்திராதியர்களும் எளிதில் முத்திபெறத்தக்கதாக வேதங்கட்கு முந்திவிதிக்கப்பட்டதாய் ஆகமமென்று ஒருசாத்திரமிருக்கின்றது, அஃது நமது பெருமைகளையே முக்கியமாக விளக்கும் மேலும் வாசித்தவர்களைப் பவித்திரமாக்கவல்ல பதினெண் புராணங்களுள அவைகளை நந்திக்கருளியிருக்கின்றனம் அவன் சனற்குமாரனுக்கு வரன்முறையாகப்போதித்திருக்கின்றான் அவனிடத்து அப்புராணங்களை யுணர்ந்து சகலருக்கும் ஓதி அறிவுவிளங்கச்செய்யக் கடவையென்று அநுக்கிரகஞ்செய்ய அதற்கிசைந்த விண்டுவானவர் பிரமன் முதலாயவர்களுடன் கர்த்தனைவணங்கி விடைபெற்று வைகுந்தத்திற்சென்று ச

கலருக்கும் விடைகொடுத்தனுப்பிச் சிலகாலஞ்சென்றபின்பு பூமியி ன்கண் தபோமகிமையுடைய பராச்சரமுனிவர் ஒருதினம் பிராத க்காலையிற் கங்கையைக்கடக்க ஓடமேறினவராய் அதைச் செலுத்து மச்சகந்தியினது சுந்தரத்தைக்கண்டு மோகித்து அவளைச்சம்மதப்ப டுத்தி யோசனைகந்தியாக்கிப்புணர அக்காலத்தில் அவர் அவள்கருப் பத்திற்பிரவேசித்துத் தண்ட கமண்டலத்துடன் அவதரித்து அவர் களிடத்திற் செலவுபெற்றுப்போய் வதரிகாச்சிரமமென்னும் வனம் வாசயோக்கியமென்றெண்ணி அவ்விடத்தமர்ந்தார் அக்காரணத்தி னால் வாதராயணனென்னுந் திருநாமம்பெற்றுப் பரமசிவகடாக்ஷத்தி னால் வேதாகமங்களை யொருவரிடத் தோதாதுணர்ந்து அவ்வேதத் தை நான்குவகைப்படுத்தினர் அச்செய்கையினால் வேதவியாசனென் னு நாமமும்பெற்றுச் சனற்குமாரரிடத்திற் பதினெண்புராணங்களை வாசித்துணர்ந்து பின்னர் வேதசாஸ்திரங்கள் ஸ்மிருதியைப்போ லப் பொருள் படத்தக்கதாய் விளங்கி யிருக்கின்ற அப்புராணங்களை ச் சுலோகமாகச்சொல்லுவதற்கு ஆரம்பித்தனர் அப்போது முன்ன ர் சிவபெருமான் சகலதேவர்களும் புடைசூழ்ந்துவரத் திரிபுரசங்கா ரஞ்செய்யப் பிரயாணமானகாலத்தில் அவர் தம்மைப் பூசியாது பிர யாணங்கொண்டதனால் அவரதுதேரை முறிந்துபோகும்படி செய்த விநாயகமூர்த்தியை நினைக்காமலும் யாவரும் வழிபடத்தக்க கடவுள வரேயென்றும் ஒருவர் தம்மைக்கருதியெடுத்துச் செய்கின்றகாரியங்க ளை விக்கினமின்றி நிறைவேற்றுவிக்குந் தெய்வமவரேயென்றும் அ ழிவினுக்கழிவுசெய்யுங்கர்த்தர்யானைமுகத்தையுடைய விக்கினேஸ்வ ரரேயென்றும் எள்ளளவுந்தன்மனதிற்றெளியாமலும் ஆரம்பித்தா ர், அக்காரணத்தால் அவருத்தேசித்த காரியத்திற்கு அவ்விக்கினகர் த்தருடைய கிருபையில்லாமல் எண்ணியபொருள்களொன்றுந்தோ ன்றாமல் நடக்கவேண்டுவது இன்னதென்று தெரியாமல் ஊமைக் கொப்பாகிமயங்கி நமக்குச்சாபமுண்டாயதோ பித்தமுயர்ந்ததோ அல்லது மற்றெதினாலாயினு மயக்கம்வந்து நேர்ந்ததோ வென்று வ கையறியாமல் சத்தியலோகத்திற்சென்று பிரமதேவனைச் சாஷ்டாங் கமாகவணங்கிப் பலமுறைவந்தித்துநின்றனர் பிரமன் அவ்வேதவி யாசருக்கு ஓராசனந்தந்து நீரிங்குவந்தகாரியமென்னென்றுவினவ சு வாமீ பிரபஞ்சத்தின்கண் சிலர் கடவுளில்லையென்று சொல்லுகின்ற நாஸ்திகராகியும் சிலர் வேதங்களைப் பழிக்கின்றவர்களாகியு மிருந்து அவ்வவர்கட்குரிய வருணாச்சிரமதருமங்களைத்தள்ளி நிலைகுலைந்திரு

ப்பதினாலே அவைகளையொழித்துச் சீர்திருத்தவேண்டியது இன்ன பொருளாலென்று யோசித்து, அவ்வவர்செய்யுங்காரியங்களில் இது செய்யத் தக்கதென்று அறிந்து நடந்துகொண்டு நற்கதியினையடையுமாறு உண்மையாய் விளங்கியிருக்கின்றபுராணங்களை உள்ளங்கைநெல்லிக்கனிபோல யாவர்க்குந் தெளிவாய்த் தெரியும்வண்ணஞ் சொல்லவேண்டுமென்று ஆரம்பித்தேன். நித்தியவிதி, நைமித்தியவிதி, யாகவிதி, திருக்கல்யாணவிதிமுதலான சகலவிதிகளும் நிறைந்திருக்கின்ற மகாவேதசாகைகளில், மேன்மேலும் வளர்ந்தேறியிருக்கின்ற என்புத்தியானது மழுங்கிப், பித்தங்கொண்டவனைப்போலாயினேன். இதற்கென்னசெய்வேன், யாருக்கென்ன பிழைசெய்தேனோ அதையுந் தெரிகிலேன். என்னைக்கவளீகரித்திருக்கின்ற இவ்வறியாமையென்னைவிட்டு நீங்கத்தக்கமார்க்கந் தேவரீர்சொல்லியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனர்.

அவையனைத்தையும் பிரமன்கேட்டுச் சிறிதுநேரந் தியானித்திருந்துநடந்த விசேடங்களைத்தெரிந்துகொண்டு புன்சிரிப்போடும் வேதவியாசனைப்பார்த்து இதனைச் சொல்லுவதாயினன். அநாதியாகியும் - அமலமாகியும் - அகண்டானந்தஸ்வரூபமாகியுமிருந்து அழிவினுக்கழிவுசெய்யத்தக்க விநாயகக்கடவுளது கிருபையில்லாவிடில், எவ்வகைப்பட்டபுத்தியும் வல்லபமும் உண்டானவர்களாயிருக்கினும் அவர்களெடுத்திருப்பது அற்பகாரியமாயினும் ஈடேற்றிக்கொள்ளமாட்டாது சோர்வுற்றுப்போவார்கள். விநாயகக்கடவுளை முதலிற்றுதிக்காமல் அளவற்றபேர்கள் தாங்களெடுத்த காரியங்களெல்லாங் கைகூடாமல் இகழ்வடைந்தார்கள் பிரணவத்தை முதலாகவுடையவேதங்கட்கு நீர்வரம்புசெய்தபோது அப்பிரணவத்தைமுன்னேஉச்சரிக்காமல் வேதமோதுவதுவழக்கின்மையாதலினால் பிரணவப்பொருளாயிருக்கின்றவிநாயகர் தம்மைஅப்பிரணவத்தினால் நீர் தோத்திரஞ்செய்ததாகவுட்கொண்டு இடையூறுகள் சேரவொட்டாது காத்திரட்சித்தார். விநாயகமூர்த்தியினுடையவுருவமேஓமென்கிறசொல்லாகவிருந்து சகல இடர்களையுந் தீர்க்கத்தக்கதாகையால் ஆதியில் மகேஸ்வரர்வேதத்தைச்சொல்லுவதற்கு ஆரம்பித்தகாலத்தில்தாமெடுத்தகாரியம் முழுவதுங் கைகூடவேண்டுமென்றே அப்பிரணவத்தை முதலில்வைத்துப் பின்பு வேதங்களையோதினர். இஃதன்றியும் - சகலருந்தாங்கள்முயல்கின்ற எக்காரியங்கட்கும் இவ்வோங்காரஸ்வரூபியாயிருக்கின்ற விநாயகமூர்த்தியை முன்னதாகத்தோத்திர

ஞ்செய்யவேண்டியநிமித்தமே; யாவையுமுணர்ந்தபெரியோர்கள் எல்லாமந்திரங்கட்குந்தலைப்பில் இவ்வோங்காரமந்திரத்தை வைத்திருக்கின்றார்கள். அவன் - அவள் - அது என்னும்- ஆண்பாலும்-பெண்பாலும் அலிப்பாலுமாயிருந்து யாவையுஞ்செய்து முடிக்கின்றவரும் தம்மைத்தியானித்தபேர்கட்கெல்லாம் அனுக்கிரகஞ்செய்கின்றவரும் அவ்வவர்கள் மனதுக்கெட்டாத அரும்பொருளாயிருக்கின்றவரும் வேதங்களாலும் அளவிட்டுரைக்கக்கூடாதவரும். இந்திரனும்-பிரமனுகியயானும் - விண்டுவும் - உருத்திரரும் - மற்றுமுள்ளதேவர்களும் - அக்கடவுளுடைய ஆக்கினையைக்கடக்கமாட்டாமல் அவருடையபாததாமரையைத் தோத்திரஞ்செய்து தொழும்படியாகத் தலைமைபெற்ற தெய்வமாகியிருக்கின்றவரும் ஒன்றைச்செய்பவரும்ஒன்றைவிலக்குபவரும் ஒன்றைவிட்டு மற்றொன்றைமுடிப்பவரும் தம்மைக் கருதாதவர்களுக்கு இடர்செய்பவரும் அவ்விநாயகக்கடவுளேயன்றிவேறில்லை ஆதலால் - அத்தன்மையானமுதற்கடவுளை நீர் மனத்தால்நினைக்காமலும் வாயால்வாழ்த்தாமலுங் காயத்தால்வணங்காமலும் நமக்கொருவர் நிகரில்லையென்கின்ற வித்தியாகர்வத்தினுல் உமது சுயவதிகாரமாகப்புராணஞ்சொல்லுவதற்காரம்பித்தீர். அதனுல் இவ்வளவுதுன்பங்கள்வந்துசேர்ந்தன. இனியேனும் வேழமுகத்தையுடைய விநாயகக்கடவுளைத் தோத்திரஞ்செய்து ஓபரமகருணநிதியே ஓ சர்வஞ்ஞமூர்த்தியே ஓ தீனதயாளுவே ஓபரமானந்தஸ்வரூபியே யான்செய்த அபசாரத்தைப்பொறுத்தருளவேண்டுமென்று பூசைசெய்யக்கடவீர். அவ்வாறுசெய்யாமல் உமது சுயாபேட்சையால் ஒருபுராணத்தைச் செய்யத்தொடங்குவீராயின் ஆயிரங்கோடிகற்பகாலமாயினும் ஒருபாயிரமேனுஞ் சொல்லிமுடிக்கமாட்டீர். சுமுகாயநமஃ ஏகதந்தாயநமஃ,கபிலாயநமஃ,கஜகர்ணிகாயநமஃ,லம்போதராயநமஃ, விகடாயநமஃ, விக்கினராஜாயநமஃ, கணுதிபதையேநமஃ, தூமகேதுவேநமஃ,கணுத்யக்ஷாயநமஃ,பாலசந்த்ராயநமஃ,கஜாநநாயநமஃ,வக்கிரதுண்டாயநமஃ,சூர்ப்பகர்ணுயநமஃ,ஏரம்பாயநமஃ, ஸ்கந்தபூர்வஜாயநமஃ,என்கிற சோடசநாமங்களைமாத்திரம் முதலில்மேற்கூறியபிரணவத்தோடு வாக்கினுல்வசனித்தாலும் செவியாற்கேட்டாலும், வித்தை - விவாகம் - சுபம் - சோபனம் - யாகம் - யுத்தம் இவை முதலான சகலகாரியங்களும் நினைக்குமுன்னமே கைகூடும். ஆதலால்-அவ்விநாயகக்கடவுளைப் பூசனைசெய்து உமதறிவைமறைத்திருக்கின்ற மயக்கத்தைத்தீர்த்துக்கொண்டு நீரெடுத்தகாரியத்தை நிறை

வெற்றிப்புகழுடையக் கடவீரென்றுசொன்னதாகப் பிருகுமுனிவர் சோமகாந்தராஜனுக்குச்சொல்லினர்.

வேதவியாசர்பிரமதேவனையடுத்தது முற்றிற்று.

---

## வேதவியாசர்வரம்பெற்றது.

---

ஓ சவுனகாதிமுனிவர்களே, பின்னுமவ்வரசனைப்பார்த்துப் பிருகுமுனிவர்சொல்லுவார். வேந்தனே - வேதவியாசர் இவ்வளவும் உள்ளதேயென்று மனமகிழ்ந்து மீட்டும் பிரமனைப்பணிந்தெழுந்து சுவாமீ பிரணவஸ்வரூபியாயிருக்கின்ற அக்கணபதிமூர்த்தியைப் பூசனைசெய்யத்தக்க முறைமை எவ்வாறென்றுகேட்டனர். அதற்குப்பிரமனிசைந்து வியாசமுனியேகணேசமூர்த்தி ஆகமத்தில் சத்தகோடிமகாமந்திரங்கள் சொல்லியிருக்கின்றன. அந்தச்சத்தகோடி மகாமந்திரங்களினும் சடாக்காமந்திரஞ்சிறந்ததாகும், அச்சடாக்கர மந்திரத்தினும் ஏகாட்சரமந்திரமேலானதாயிருக்கும். அவ்வேகாட்சரமந்திரத்தை உமதுமையல்நோய்நீங்கும்படியாகச்சொல்லுவோம், நீர்தடாகத்திற்சென்று ஸ்நானஞ்செய்து வருவீரென்றனன். அவ்வாறேஸ்நானஞ்செய்துவந்தவுடன் பிரமனவருக்கு ஆகமவிதிப்படி தீட்சைமுதலியவைகளைச்செய்து அவ்வேகாட்சர மநுவையுபதேசித்து, அம்மகாமந்திரத்தைத் தியானிக்கும்படியான முறைமையையுந்தெருட்டிப் பின்னுஞ்சொல்லுவான் - ஓபராசரன்மைந்தனே ஊறுபாடில்லாத உத்தமஸ்தானத்திலிருந்து மந்திரசலத்திறைப் புரோக்ஷித்து பூதசுத்திமுதலானவைகளைச்செய்து அகம்புறமாகியவிரண்டினுள்ளுநியாசஞ்செய்து, பிராணாயாமத்திலிருந்து இம்மந்திரத்தைத்தியானிக்கக்கடவீர். இம்மந்திரஞ்சித்தியாகவேண்டுமெனில் இதற்குரிய கணேசமூர்த்தியினது திருவுருவத்தையெல்லா மனதிற் றியானித்து அந்தரியாகபூசைசெய்யக்கடவீர்.

இவ்வாறு தினந்தோறும் பூசனைசெய்து மேற்சொன்ன மந்திரத்தை உமதுசத்திக்குத்தக்க உருச்செபித்துக்கொண்டிருப்பீராயினெங்கும் பரிபூரணமாயிருக்கின்ற விநாயகமூர்த்தியானவர் உம்மெதிரிலுருவங்கொண்டு அனந்தங்கோடி சூரியருதயமானதுபோலப் பிரத்தியக்ஷமாகிச் சோதிமயமாயிருக்கின்ற தமது தரிசனத்தைக்கொடுத்தருளுவர். நீர் அப்போதுமனவுறுதிபெற்று மிகுந்தஅன்புபொ

ங்கச் சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து சுவாமீ அடியேன்மீது கிருபை புரிந்து ரட்சிக்கவேண்டுமென்று பலமுறைவந்திப்பீராயின், சேய்க் குத்தாயிரங்குவதுபோல உமதுதோத்திரங்கட்குமனமிரங்கி அருள் சுரந்து நீர் கேட்டவரங்களையெல்லாம் வரையாது கொடுத்தருளுவர் இவ்வாறுபூசனைசெய்து இம்மந்திரசித்திபெற்றவர்கள் சகலவியாதிக ளுநீங்கித் தாங்கள்முயன்றகருமங்களெல்லாம் இடையூறின்றி நிறை வெய்தி அங்கைநெல்லிக்கனிபோல அளவற்றசித்திகளையடைந்து ஆ ணவமலசம்பந்தத்தையொழித்து அருள்வடிவாயிருந்து, சீவன்முத் தியென்கின்ற மேலானபேற்றினையடைந்து, தேவர்களெல்லாம் பு டைசூழ்ந்து வணங்கத்தக்கதான பரமானந்தசுகத்திற்கற்பகோடிகா லம் வாழ்ந்திருப்பார்கள். விநாயகக்கடவுள் பூசனைசெய்கின்றவர்க ளை விருப்போடு காண்கின்றவர்களும் அவர்கள் குணங்களைக்குறித் து வசனிக்கின்றவர்களும் அவ்வசனத்தை ஆவலோடுகேட்கின்றவர் களும் அவர்களுடன் அன்போடுகூடுகின்றவர்களுமாகிய யாவர்க ளும் இம்மைமுதலிய முப்பிறவிகளினு நற்கதியடையப்பெறுவார்க ள். கடவுளில்லையென்று சொல்லுகின்றநாத்திகர்கள், ஒழுக்கமில் லாதவர்கள், பரதூஷணஞ்செய்கின்றவர்கள், சித்தசுத்தியில்லாதவ ர்கள், துஷ்டர்கள், சோரர்கள்முதலானவர்களை நினைத்தவர்களுக்கும் இம்மகாமந்திரத்தை யுபதேசிக்கத்தகாது உபதேசிப்பாராயின் அவர் கள் அள்ளல்,ரௌரவம்,கும்பிபாகம்,கூடசாலம், செந்துத்தானம், பூ தி, மாபூதிஎன்கின்ற சத்தநகரங்களிற்சதாகாலமுமிருந்து வருந்து வார்கள். வணக்கம் - அன்பு - அருள் - ஆசாரம் - வேதாகமநெறிக ளிற் றவறுதவொழுக்கம் - நல்லோரிடத்திலிணக்கம் மந்திரமுபாசிக் கவேண்டுமென்னும்ஆசை-அவைமுதலானநன்னடைகளுள்ள ஆத் திகர்களுக்கு உபதேசிக்கவேண்டுமாயின் கிரமப்படி தீக்ஷைசெய்துஉ பதேசித்தல்வேண்டும். இவ்வாறு பக்குவாபக்குவங்களையறிந்து உ பதேசித்தவர்களும்உபதேசிக்கப்பெற்றவர்களும்அளவற்றகாலம்பே ரின்பவீட்டைத் தமக்குக்காணியாகூலியாகக்கொண்டுவாழ்வார்கள், இ ப்பூசாவிதியைமுன்பு சந்திரசடாதரமூர்த்தியாகிய சிவபெருமான் எ ன்மீதுகிருபைசுரந்து உபதேசித்தமுறைமைப்படியே உமக்குபதே சஞ்செய்தோமென்றனன். இவைகளனைத்தையும் வியாசமுனிவர் செவிகுளிரக்கேட்டுச் சகல துயரங்களையுநீக்கிப் பின்னும்பிரமதேவ னைத்தோத்திரஞ்செய்து சுவாமீ இதற்குமுன் இப்பூசனைசெய்துபே றுபெற்றவர்களுடைய சரித்திரங்களும் அடியேற்கருளிச்செய்யவே

ண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்கப்பிரமதேவன் மனதிரங்கி வியாசமுனியே - தேவர் - தானவர் - சித்தர் - முனிவர் - நாகர் - இயக்கர் - சாரணர் - வித்தியாதரர் - கின்னரர் - மனிதர்-முதலான அனந்தம்பேர்கள் விநாயகபூசைசெய்து பேறுபெற்றிருக்கின்றார்கள். அவர்களுள் யாமறிந்தமாத்திரஞ் சிலர் சரித்திரங்களைச் சொல்லுவோம் கேளுமென்று கல்லுமிரும்புங்கசிந்துருகத்தக்கதாய் கரும்புந்தேனுங்கலந்ததுபோலக் கிருபையோடுஞ்சொல்லுவான். (பிரமன்-விண்டு - உருத்திரனாகிய நாங்கள்மூவர்களும் பரப்பிரமநிச்சயத்தையறிய வேண்டித் தவஞ்செய்ததும். பின்னர் அப்பரப்பிரமஸ்வரூபத்தைத் தரிசித்துவரம்பெற்றதும். தங்களுக்கு அப்பரப்பிரமஸ்வரூபியாகிய விநாயகமூர்த்தி விசுவரூபங்காட்டியதும். பிரமதேவனாகிய தான்பின்னர் உலகசிருட்டிசெய்ததும். கணேசமூர்த்திசித்திபுத்தியென்னு மிவர்களைத் திருமணஞ்செய்ததும், விண்டுசடாட்சரமந்திரமனுட்டித்து மதுகைடவர்களைவென்றதும். புத்திரப்பேறுவேண்டி வனத்திற்சென்றவீமராசன்விசுவாமித்திரமுனிவரையடுத்ததும். முக்கலமுனிவர்மீது படிந்துவந்தகாற்றினால் தக்கனுடம்பிணிநீங்கியதும். அத்தக்கனுக்கு முக்கலமுனிவருபதேசித்ததும். விநாயகமூர்த்தி வல்லாளன்வேதனையைவிலக்கியதும். அவ்வல்லாளன் முத்தியடைந்ததும். தக்கனரசாட்சிபெற்றதும். விசுவாமித்திரமுனிவர் வீமராசனுக்குபதேசித்ததும். உருக்குமாங்கதராசன் சாபம்பெற்றதும். நாரதமுனிவர் அவ்வுருக்குமாங்கதராசனுக்குச் சாபந்தீர்வுகூறியதும். கௌதமமுனிவரால் இந்திரன்சாபம்பெற்றதும். கடவுள்குருவுக்குக் கௌதமருபதேசித்ததும். அக்கடவுள்குருவால் இந்திரனுபதேசம்பெற்றதும். இந்திரன் பூசித்துவரம்பெற்றதும், வீமராசனும் அவன்குமாரனாகிய உருக்குமாங்கதராசனுமுத்தியடைந்ததும். கிருச்சமதமுனிவர் தன்றந்தையிடத்தி லுபதேசம்பெற்றதும். அக்கிருச்சமதமுனிவர் உபாசித்துவரம்பெற்றதும். திரிபுரன்பூசித்துவரம்பெற்றதும். அத்திரிபுரன்மூவுலகத்தினையும் அரசாட்சிசெய்ததும். அவனழியும்படியாகத் தேவர்கள்பூசித்ததும். அதனிமித்தஞ்சிவபிரான் வரம்பெற்றதும். அச்சிவபிரான் திரிபுரதகனஞ்செய்ததும். உமையம்மை பர்வதராஜனிடத்தில் சதுர்த்திவிரதங்கேட்டதும். பின்னர் அவ்விரதத்தையநுட்டித்ததும். கர்த்தமராசன் பிருகுவாகியநம்மிடத்தில் அவ்விரதத்தைக்கேட்டு உபாசித்ததும். நளமகாராசன் கவுதமமுனிவரால் உபதேசிக்கப்பெற்

றுப்பூசித்ததும். சந்திராங்கதமகாராசனனுட்டித்துமுத்தியடைந்ததும். சண்முகர்வந்தித்துத் தாருகாசுரனைவென்றதும். மன்மதனருச்சித்து உருவம்பெற்றதும். ஆதிசேடனாராதித்து வரம்பெற்றதும். சூரசேனமகாராசன் இந்திரனைக்கண்டு புருசுண்டிமுனிவர் மகத்துவங்கேட்டதும். புருசுண்டிமுனிவர் சங்கட சதுர்த்திவிரதத்தையனுட்டித்ததும், கிருதவீரியமகாராசன் புத்திரப்பேறுவேண்டி வனத்திற்சென்று தவம்புரிந்ததும், அங்காரகன் சங்கடசதுர்த்திவிரதமனுட்டித்ததும். சந்திரனுபாசித்துச் சாபந்தீர்ந்ததும் தூர்வை மகத்துவத்தால் விடை - காம் புலைச்சி ஆகியவிம்மூவர்கள் வீடுற்றதும் கணேசமூர்த்தி அனலா சுரனைவிழுங்கிய வெப்பு நீங்கும்படித் தேவர்கள் தூர்வை யர்ச்சனை செய்ததும். விநாயகமூர்த்தி தூர்வையாசகஞ்செய்து பலவற்புதங்களை நடாத்தியதும் வன்னி மகத்துவத்தால் ஓரரக்கனுங் கிராதகனுமுத்தி யடைந்ததும், விண்டு வாமனவதாரத்தில் வன்னி யருச்சனைசெய்து மாவலியை வென்றதும், கீர்த்தி யென்பவள் வன்னிமகத்துவத்தால் மகப்பேறுபெற்றதும் அக்கீர்த்தியின் மகன் வன்னிமகிமையால் விடம்நீங்கியதும் சமியென்பவளும் மந்தாரனென்பவனும் வன்னியுமந்தாரமுமாக வுற்பவித்ததும். தேவர்கட்குச் சாவித்திரியிட்ட சாபத்தை அத்தேவர் பத்தினிகள் வன்னியருச்சனையா லகற்றியதும். கிப்பிரப்பிரசாத மகாராசன் வன்னியையருச்சித்து வரம்பெற்றதும். கிருதவீரிய மகாராசன் சங்கடசதுர்த்தி விரதமனுட்டித்து மகப்பேறுபெற்றதும். ஓர் புலைச்சியின்பார்வையால் இந்திரவிமானம் விண்ணி லெழுந்ததும். சூரசேனமகாராசன் சங்கடசதுர்த்தி விரதமனுட்டித்து முத்தியடைந்ததும். பரசிராமன் சிவபெருமானிடத்தில் சடாட்சர மந்திரத்தை உபதேசம்பெற்றுப் பூசித்ததும். இராவணன் உபாசித்துத் தான் செய்த அபசாரத்தை நீக்கிக்கொண்டதும். அகத்தியமுனிவர் வந்தித்துத் தமது கமண்டலத்திற் காவேரி தீர்த்தத்தை யடைத்ததும். காசிபர்முதலாயினோர் சகஸ்திரநாமத்தா லருச்சித்துப் பலவரங்களைப் பெற்றதும்.) ஆகிய இச்சரித்திரங்களையெல்லாம் விவரமாகச்சொல்ல வியாசமுனிவர், சிரவணானந்தமாகக் கேட்டு மீளவும்பணிந்தெழுந்து சுவாமி - இன்னுஞ் சில சரித்திரங்களை அடியேற்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனர்.

அதற்குப் பிரமதேவனிசைந்து ஓ வியாசமுனியே-பரமகருணாநிதியாகிய விநாயக மூர்த்தியானவர் அந்தந்தயுகங்கடோறும் உலகங்

களில் வெவ்வேறு திருவுருவங்கொண்டு வேதாகமநெறிகளிற் பிறழ்ந்து நடக்கின்ற துஷ்டர்களையெல்லாம் மறக்கருணையாற் றண்டித்துந் தமது திருவடிகளைவழிபட்ட அன்பினர்க்கு அறக்கருணையால் அநுக்கிரகித்து மிருக்கின்ற திருவிளையாடல்கள் அளவற்றன வாகும் அவைகளுள் முன்னொருகாலத்திற் சிவபெருமான் சுப்பிரமணியமூர்த்திக்குச சிலதிருவிளையாடல்களைத் திருவாய்மலர்ந்தருளி யிருக்கின்றனர். அவைகளையுஞ் சொல்லுவோங் கேளுமென்று பிரமதேவன்சொல்லுவான், (வக்கிரதுண்ட விநாயகர்திருவவதாரங்கொண்டு பிரமன்முதலிய தங்கள் மூவர்களைச் சிருஷ்டித்துத் தங்கட்கு முத்தொழில்களைத் தந்ததும். சிந்தாமணிவிநாயகர் திருவவதாரங்கொண்டு கபிலமுனிவருடைய சிந்தாமணியைக் கவர்ந்த கணராசனை வென்று அதை மீட்டு மவர்க்களித்ததும், கஜானனவிநாயகர் திருவவதாரங்கொண்டு பிரமதேவனாகிய தன்னுடைய கொட்டாவியினின்று முற்பவித்த சிந்தூரனைக்கொன்று தேவர்களைக்காத்ததும். விக்கினராஜவிநாயகர் திருவவதாரங்கொண்டு காலரூபனென்கின்ற விக்கினனையழித்து உலகத்தைக் காத்ததும் மயூரேசவிநாயகர் திருவவதாரங்கொண்டு வேதசாஸ்திரங்களைத் தேவர்களிடத்தினின் றுங் கவர்ந்த கமலாசுரனைச்சங்கரித்து மீட்டு மவ்வேத சாஸ்திரங்களை யத்தேவர்கட்குத் தந்ததும். பிந்திய-மயூரேசர் திருவவதாரங்கொண்டு தேவர்களைச் சிறையில்வைத்த சிந்தாசுரனைக் கொன்று மற்ற அவுணர்கள் செய்யுமாயையினை யொழித்ததும், பாலசந்திரவிநாயகர் திருவவதாரங்கொண்டு அனலாசுரனை விழுங்கித் தேவர்கள் பூசைகொண்டதும் தூமகேதுவிநாயகர் திருவவதாரங்கொண்டு மாதவராசனுக்கும் அவன்மனைவி சுமுதைக்குந் தீங்குசெய்த தூமராசனைக்கொன்று அவ்விருவரைப்பாதுகாத்ததும், கணேசவிநாயகர் திருவவதாரங்கொண்டு திரிபுராதிகளைவெல்லும்படியாகச் சிவபிரானுக்கு அநுக்கிரகித்ததும், கணபதிவிநாயகர் திருவவதாரங்கொண்டு தேவர்களைவருத்திய கஜமுகாசுரனைக்கொன்று விண்டுவின்சாபந் தீர்த்ததும், மகோற்கடவிநாயகர் திருவவதாரங்கொண்டு நராந்தகனையுந் தேவாந்தகனையு நாசஞ்செய்து காசிராசனுக்கு முத்தியளித்ததும், துண்டிவிநாயகர் திருவவதாரங்கொண்டு துராசதனைவென்று திவோதாசன்மனதைத் திருத்தி விசுவநாதமூர்த்திக்குக்காசிநகரையளித்ததும்,வல்லபைகணேசர் திருவவதாரங்கொண்டு மரீசிரிஷி புத்திரியாகிய வல்லபையையும், விண்டுபுத்திரிகள் பன்னிருவரையுந் திருமணஞ்செய்து, அவ்விண்டுவுக்கு யோகஞான தத்துவமென்கின்ற கணேச கீதையை உப

தேசித்ததும்.) ஆகிய இத்திருவிளையாடல்களை விவரமாகச் சொல்லிப் பின்னுஞ்சொல்லுவான் வியாசமுனியே - வேதசாத்திரங்களாலும் மற்றெவ்வகைத்தாகிய பிரமாணங்களாலும் அறிதற்கரிய கர்த்தாவாகிய கணேசமூர்த்தியினுடைய இச்சரித்திரமானது தேவர்கள் முனிவர்கள் முதலியோரால் பாராயணஞ்செய்யத்தக்கதாகியும் பாசபந்த முதலியவைகளை விலக்கத்தக்கதாகியும் இருக்கின்றது. யாவரேனுந் தங்களிஷ்டசித்திபெறக்கோருகின்றவர்கள் இவ்விதிகாசத்தைஇடைவிடாது பாராயணஞ்செய்து அதனைத்தடையின்றி யடையக்கடவர்களென்றனன். இவையனைத்தையும் வியாசமுனிவர் செவிக்கமுதாகப் பூரித்து மீளவும் பிரமதேவனைப்பணிந்தெழுந்து சுவாமி விண்டுவுக்கு வல்லபைகணேசர் யோகஞானதத்துவத்தை யுபதேசித்தாரென்று பொதுப்படச்சொன்னீரே அதனை விவரமாக அடியேற்கருள்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அவ்வாறே அதனை மிகவுந்தெளிவா வுபதேசித்தவியாசமுனிவரே இக்கணேசகீதையை விண்டுவிநாயகமூர்த்தியால் உபதேசிக்கப்பெற்று மரீசி முனிவருக்குச்சொல்ல அவர் மனுவுக்குப்போதிக்க அம்மனுவி னிடத்திலிருந்து பலமுனிவர்கள்கேட்டு அவ்வவர்கள் பரம்பரையினால் விளங்கவைத்தார்கள் இக்கணேச கீதையைத்துன்மார்க்கநடையினோர்கேட்பாராயின், அவர்கள் தீவினையாவுமொழிந்துபோய்ச் சன்மார்க்கநெறியினையடைவார்கள். சன்மார்க்கநடையினோர் கேட்பாராயின் கணேசமூர்த்தியினுடைய பாதாரவிந்தத்தைச்சேர்ந்து பிரமானந்தசாகரத்தின் மூழ்கியிருப்பார்கள். அன்றியும்- இனிவருகின்ற கலியுகத்தில், யாவரும் வருணாச்சிரமதருமங்களிற் றப்பிப் பிறர்செய்த நன்றியை மறத்தல், எல்லாவுயிர்க்கும் இன்னாதனசெய்தல், கல்வியையும் ஒப்புரவையுங்கடத்தல், யாகம், தவம்-தருமம்-தானம்-என்பவைகளைச்செய்யாதொழிதல், குருதக்ஷிணையைக்கொடாதிருத்தல், () முப்பாலொழுக்கங்களை முனிதல், * இணைவிழைச்சு || வாயில் விழைச்சு மலம்-மூத்திரம்-என்னு நால்வகை எச்சிலையுங்கருதாதிருத்தல் வணங்கப்படுந் தேவரைவழிபடுமிடத்தும்-தூய்மையின்மை யுண்டாயினவிடத்தும்-மயிர்களைந்தவிடத்தும்- இணைவிழைச் சுண்டானவிடத்தும்-கீழ்மக்களுடம்பு தீண்டியவிடத்தும்-நீராடாதிருத்தல். நிலமுதலிய ஐம்பூதங்களையும் பார்ப்பார்-பசுக்கள்-திங்கள் ஞாயிறு - என்னுமிவைகளையுந்-தம்முடம்புபோலக்கருதிப்போற்றாதிருத்தல்.அரசன்

() அதாவது, அறநூல்விதி-பொருணூல்விதி இன்பநூல்விதி-என்னும்-இம்மூன்றுமாம் * இணைவிழைச்சு புணர்ச்சி. || வாயில் விழைச்சு-எச்சில்.





உபாத்தியாயர் - தாய்-தந்தைமூத்தோன்-என்னும் ஐங்குரவர்களையுங் கருதிப் பேணாதிருத்தல், உண்ணும் உணவைத்தொழாதுண்ணல்-விருந்தினர்-மூத்தோர்-பசுக்கள்-சிறைகள் பிள்ளைகள்-என்றுசொல்லப்பட்ட இவர்கட்கு உணவுகொடாதிருத்தல் தம்மிற் பெரியார் தம்பந்தியி லிருந்துண்ணுமிடத்து; அப்பெரியாருண்பதற்குமுன்னே தாமுண்டு முந்துறவெழுந்திருத்தல்-குரவர்கொடுப்பனவற்றை ஒருகையால்வாங்கல் அவர்க்குத் தாமொருகையாற்கொடுத்தல்; எவரையுஞ்சீறுதல், அந்திப்பொழுதில் விளக்கினைத்தொழாதிருத்தல் இருதேவர் நடுவும் பார்ப்பார் பலர்நடுவும்- ஊடறுத்துச் செல்லல், புல்-விளைநிலம்-ஆப்பி-சுடலை-வழி-தீர்த்தம்-தேவர்கோட்டம்-நீழல் - ஆனிறைநிற்குமிடம்-சாம்பல்-என்னும் இப்பத்தின்கண்ணும், உமிழ் நீரையும் மூத்திர * புரீடங்களையுஞ்சொரிதல்-பரஸ்திரீகவனம்- மதுபானம்-களவு-சூது-கொலை-என்னுமிவ்வைந்தினையுஞ் செய்யக்கருதல், பொய்-குறளை-பிறர்பொருளை வெளவவேண்டுங்காதல், பிறர் ஆக்கத்தின்கட் பொறாமை-என்னுமிப்பெற்றியினைவிழைதல்; தமக்கென்றுலையேற்றல், தெய்வப்பொருட்டன்றித் தங்காரணத்தாற்கொன்றூனையருந்தல்,அட்டிலின்கண் எச்சில்படுத்தல், மனையுறைதெய்வங்கட்குப் பலியூட்டாதுண்ணல், தம்மனைவியர்க்குப் பூப்புநிகழ்ந்தால் மெய்யுறலாகாதநாள் மூன்றின்கண்ணும் அவரை நோக்கல்- உச்சிப்பொழுது-நடுக்கங்குல் - மாலை-காலை-ஆதிரை-ஓணம் உவா-அட்டமி - தாம்பிறந்தநாள்-என்னுமிந்நாட்களின்கண், தம்மனைவியரோடுடனுறைதல், கலியாணநாளின்கண்ணும்-தேவர்க்குச்சிறப்புநாளின்கண்ணும்-பிதிர்களுக்குச் சிறப்புசெய்யுநாளின்கண்ணும்- விழாநாளின்கண்ணும்-யாகஞ்செய்யுநாளின்கண்ணும்-அறஞ்செய்யா திருத்தல் அந்நாட்களில் விருந்தினர்க்குச்சோறிடாதருந்தல், உடை-நடை-சொற்சோர்வு-வைதல்-என இந்நான்கும்,தம்மாண்மைக்குங்-கல்விக்குங் -குடிப்பிறப்பிற்குந்-தக்கதகுதியின்றிச்செய்தல், பலர்நடுவணிருந்து பிறரைப்பழித்துரைத்தல் அவரைக்காணாதவழி இழித்துரைத்தல், பலர்நடுவணுறங்கல், தமக்குச்செய்யப்பொருந்தாதவற்றைப் பிறர்க்குச்செய்ய வுடன்படல், வறியாரையிகழ்ந்து முறைமைகடந்துரைத்தல், வஞ்சனையுரையும் - பயன்படாதவுரையும்-வாய்காவாது வேண்டியவுரைக்கு முறைமையும், பிறரைப்பழியுரைக்கு முரையுஞ்சொல்லல், ஒருவன்செய்கைசொன்முதலானவற்றைத் தானும் அவ்வகையிகழ்ந்து செய்துகாட்டல் பிறர்க்குவெளிப்படக்கண்ணிடுதல், தம்மிடத்தைநோக்கிவந்தார்க்குமுறுவலோடுகூடியவினியுரையும்- கால்கழுவநீரும்-இருக்க

* புரீடம் - மலம்.

மனையும்-இடக்கப்பாயும்-உண்ண வுணவும்-கொடாதிருத்தல், தங்குடியொழுக்கத்தைநீங்கிய தொழில்களைச்செய்தல், பிறரொழுந்து போகத்தொடங்கினபோது அவரைப்பின்னே நின்றழைத்தல், அப்பொழுதுதும்மல், அவரையெங்குபோகின்றீரென்று கேட்டல், பிறரைப் பார்த்து உடம்பு நன்றாயிருக்கின்றதென்று சொல்லல், விளக்கினை வாயாலூதியவித்தல், அருந்தவரைப்பாதுகாவாதுவைதல், பழிநாணுதிருத்தல், தாங்கற்றவற்றைக் குரவர்முன்கூறல், தாய்- மகள்- உடன் பிறந்தாள்-பிறன்மனை - என்னுமிவர்களோடுதெனித்துறைதல், பெரியராயுள்ளார் உவந்தனவற்றைத் தாமுவத்தல், தம்மில்லத்தின்கண்ணும்-தேவராலயத்தின்கண்ணும்-பெரியார் அவைக்கண்ணும் - கீழ்மக்களைக்கொண்டுபுகல், சிரிப்பு-கொட்டாவி-காறியுமிழ்தல் தும்மல் - என்னு மிவைகளைத் தம்மிற்பெரியாரிடத்துந் தேவர் கோட்டத்தினிடத்துஞ் செய்தல், கணவனது உடலின்வடிவத்தையன்றி ஏனைய ஆடவாது வடிவத்தைப்பார்த்தல், கைந்நொடித்தன் முதலியனவற்றைச் செய்து அவ்வாடவரை மயக்குதல், தங்குரவர்பெயரைச்சொல்லல், தம்மிற்பெரியாரை முறைப்பெயர்கொண்டழைத்தல், பிறர்மனையின்கட் புழைக்கடைவாயிலாற்புகல், ஒருவர்பக்கத்தில் வரிசைபடப் போதல், ஒருவருடையநிழலை மிதித்தல்,முன்னர் ஆராயாது பேசும்போதாராய்ச்சிசெய்துபேசல், ஊரிலுள்ளோர் வெறுக்கத்தக்க வைகளைச் செய்தல், அரசரதுபடையளவைப் பகைவர்க்குரைத்தல். தாமொருவருக்குச்செய்த நன்றியின்பயனைச் சொல்லல், தமக்கொருவரிட்டவுணவை யிகழ்ந்துரைத்தல், தாஞ்செய்த அறத்தையும் விரதத்தையுந் தாமேபுகழ்தல், தமக்குக் கிடைத்தற்கரியவற்றை விரும்பல் தம்மாலிழக்கப்பட்டனவற்றிற்கு வருந்தல், புலையருக்கெச்சிலைக்கொடுத்தல் மேலானநற்கருமஞ்செய்யுமிடத்துப் புலையரிடத்து நாட்கேட்டுச்செய்தல், சான்றோர் அவைக்களத்து அங்கசேட்டைபுரிதல், இருவராயிருந்துபேசுமிடத்துப்போகுதல், குரவர்கொடுப்பதை உட்காந்திருந்தேற்றல், தம்மிடத்தில் அடைக்கலமாகவைத்தபொருளை அபகரித்தல்முதலான அளவற்ற தீமைகளைச்செய்து வியாதி தரித்திர முதலான துன்பங்களையடைந்து வாழ்ந்திருப்பார்கள். அப்போதுவேதாகம விதிகள் மூழ்கிப்போகும் நீதிநெறிகள் தவறிப்போகும் அதனாற் றேவர்களெல்லாந் துன்பமடைந்து அக்கலியுகமுடிவில் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளைத் தியானித்து மிகுந்தபத்தியினுபசரித்துப் பலமுறைதோத்திரஞ்செய்வார்கள், அதற்கு விநாயகமூ

ர்த்தி அருள்சுரந்து தூமிரவர்ணராய், மகோற்கடவிநாயகர் திருவவதாரங்கொண்டு, இரண்டுதிருக்கரங்களுடனே, ஒருதிருக்கரத்திற்றாமரைமலரும் மற்றொருதிருக்கரத்தில்வாளாயுதமுமேந்திக்கறுத்த குதிரையின்மேலாரோகணித்து அளவற்ற படைக்கலங்களோடு நால்வகைச்சேனைகளும் புடைசூழ்ந்துவரப், பூவுலகத்திலுள்ள மிலேச்சர்கள் முதலாயினோர்களில் ஒருவரையும்விடாமற் சங்கரிப்பார். அப்பால் தருமஸ்வரூபமான கிரேதாயுகம்வரும். இத்தன்மையராகிய விநாயகமூர்த்திசெய்தருளுந் திருவிளையாட்டுக்கு ஓரளவில்லை. அவைகள் நமதாயுள்வரையிற்சொன்னாலு முடிவனவன்று, ஆதலால்-இதுகாறும் உமக்குரைத்துவந்த மான்மியங்களைக் கொண்டே திருப்தியடையக்கடவீர். அன்றியும்-இப்புராணத்திற்றானே, ஓரிடத்தில் விநாயகப்பெருமானானவர் பிரமாதியரான எங்கண்மூவரைச் சிருட்டித்தாரென்றும்-ஓரிடத்தில் உருத்திரமூர்த்தியினுடைய முகத்தினின்றும் அவர்வெளிக்கொண்டனரென்றும் ஓரிடத்திற்சிவபெருமான் அவரைப்பணிந்தனரென்றும் ஓரிடத்தில் அச்சிவபெருமானை அவர்பணிந்தனரென்றும் ஓரிடத்தில் உமாதேவியார் வயிற்றி லுற்பவித்தனரென்றும், ஓரிடத்தில் அவ்வுமாதேவியார் முகத்திற்றோன்றினரென்றும் ஓரிடத்தில் உமாதேவியார் அவரைப்பணிந்தனரென்றும். ஓரிடத்தில் அவ்வுமாதேவியை அவர்பணிந்தனரென்றும் இவ்வாறு நானாவிதங்களாகக் கூறியிருக்கினும், அவையனைத்தும் அந்தந்த யுகபேதங்களினாலும் அந்தந்த தேவர்கள் வல்லப விகற்பத்தினாலும் அடியார்களுடைய பரிபாக வேற்றுமையினாலும் உண்டாயினவேயன்றி, விநாயகமூர்த்தி சகலதேவர்கட்கு முதன்மையா யிருக்கின்ற அவரது சுபாவவியற்கை எக்காலத்துமாறுவதில்லை.

இத்தன்மையராகிய விநாயகமூர்த்தியினுடைய சரித்திரத்தி னியல்பை யறியுமிடத்து மத்திமகுணத்தை யுடையவர்கள் இவையனைத்தும் உண்மையோ அல்லவோவென்று மலைப்பார்கள். உத்தமகுணத்தை யுடையவர்கள் உண்மையென்றே தெரிந்துகொள்ளுவார்கள். உண்மையன்றென்றவர்கள் மிகவுங்கொடிதான இருபத்தெண்கோடிநரகங்களில் வீழ்ந்துவீழ்ந்து பலமுறைவருந்துவார்கள். விநாயகக்கடவுளைத் தேவர்கள் முதலாயினோ ருபாசித்தசரித்திரங்களும் அக்கடவுள்பற்பல அவதாரங்களைக் கொண்டு செய்தருளிய திருவிளையாடல்களும் விவரமாக வுமக்குச்சொன்னோம் இனிநீருமவ்விநாயக மூர்த்தியை உபாசிக்கக்கடவீரென்று வியாசமுனிவருக்குப்பிர

மதேவன்சொன்னதாகப், பிருகுமுனிவர் சோமகாந்தராசனுக்குத் தொகையாகத் தெரிவித்துப் பின்னர் அவைகளையெல்லாம் விரிவாகவுங்கூறினர் - இப்பால் பிருகுமுனிவரை அவ்வரசன்மீளவும் பணிந்தெழுந்து ஓ கிருபாமூர்த்தியே சுவாமிகளுடைய கருணைகடாட்சத்தினாற் றேவர்களாலும் அறிந்துணர்தற்கரிய விநாயகமகத்துவத்தையெளிதிற்கேட்டேன், யோகஞான தத்துவத்தையுமுணர்ந்தேன் இனி அடியேற்கென்ன குறையிருக்கின்றது இனி அவ்வேதவியாசர் விநாயகமூர்த்தியை உபாசித்ததும் விநாயகமூர்த்தியால் அவரடைந்த பேறும், அடியேற்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்னப் பிருகுமுனிவர் அதற்கிசைந்து அரசனேவியாசர்மீளவும் பிரமதேவனைத்தொழுதெழுந்து சுவாமி பரப்பிரமஸ்வரூபியாகிய விநாயகமூர்த்தி மகிமையையெல்லாம் யான்தெளிவுற்றறியுமாறு திருவாய்மலர்ந்தருளிய தேவரீர்க்கு யானென்னகைம்மாறு செய்யத்தக்கவனென்று பலமுறைதுதிசெய்து அவனனுக்ஞைபெற்றுவிநாயகக்கடவுள் திருமந்திரத்தைச்செபித்துத் தவஞ்செய்வதாகச் சென்று கந்தமூலபலாதிகள்சமிர்த்தியும் சகலசமிர்த்தியும் நல்லநீரும் எவ்விடத்துண்டென்றுதேடிச் சிறிதும் இடையூறுகளில்லாமலும் இதரசஞ்சாரமில்லாமலும் இருக்கின்றவொருவனத்திலிருந்து கணேசமூர்த்தியினுடைய ஏகாட்சர மந்திரத்தைச் செபஞ்செய்துகொண்டு தவத்திலிருந்தனர். அவ்வாறு பன்னிரண்டு வருடஞ்சென்றபின்னர் அத்தவத்திற்குக்கணேசமூர்த்தி கிருபைசுரந்து கோடிசூரியர்கள் ஒன்றாயுதயமானதுபோல மிருந்தவொளியைவீசுகின்ற சிவந்த திருமேனியும் சிவந்தவஸ்திரமும் சிவந்தபூமாலையும் சிவந்த ஆபரணங்களும் சிவந்தசாந்துமுடையவராய் மதம்பொழிகின்ற யானைமுகத்தோடு வியாசமுனிவருக்கெதிரே தரிசனமாயினர். வியாசமுனிவர் அத்தரிசனவிட்சண்ணியத்தைப் பார்க்கக்கூடாமற்பயந்து ஏகாட்சரமந்திரத்தை மனதிற் றியானித்து இரண்டுவிழிகளையு மூடிக்கொண்டனர். அதனைக் கணேசமூர்த்திகண்டு ஓபராசரன்மைந்தனே - நீ அஞ்சவேண்டாம் உன்மனத்தில் யாவர்வேண்டுமென்று பரிபூரணமாக நினைத்தனையோ அவரேயாம் உனக்குவேண்டிய வரங்களைக் கேள் தருகின்றேமென்று திருவாய்மலர்ந்தருளினர். அதைக்கேட்டவியாசமுனிவர் விரைவிலெழுந்து சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து கர்த்தருடைய திவ்வியஸ்வரூபத்தைக் கண்குளிரப்பார்த்துப் பலமுறை பிரதட்சணம் வந்து இருகாங்களையுஞ்சிரமேற்குவித்து ஏ

திர்நின்று, வாய்குழறி, விழிகளினாலானந்தவாரிபெருக்கி உடல்மு ழுவதும் உரோமாஞ்சிதங்கொண்டுஉள்ளமுருகிக் கணேசமூர்த்தியி னுடைய பெருமைகளைப்பாடி அளவற்ற வேதாகமங்களாற்றோத்தி ரஞ்செய்து ஓகாரணகாரணமானகடவுளே, சச்சிதானந்தப்பொரு ளே, அகண்டபரிபூரணரே - ஆதிமத்தியாந்தரகிதரே - இத்தினந் தேவரீருடைய பாதகமல சேவைதந்தருளியதனாலே அடியேன் சுத் தபவித்திரனாயினேன், அடியேன் தவமுஞ்சுத்தபவித்திரமாயிற்று இத்தேசம் இவ்வனம் இங்கிருக்குஞ்சராசரங்களெல்லாம் மகத்தா னபேறுகளையடைந்தன இனி அடியேன் குறைதீரும்படியாக என தறிவிற்செறிந்திருக்கின்ற மயக்கத்தை நீக்கி அதிலுள்ள மலபாசத் தையுமொழித்துச், சுவாமிகளுடைய தாரவிந்தத்திற் செலுத்து ம்படியான பத்தியைநிரப்பி மெய்ஞ்ஞான சுகத்தைக் கொடுத்து எ க்காலத்தும் அடியேனுள்ளத்திற் றேவரீர்வாசமாயிருத்தல் வேண்டு மன்றியும் பதினெண்புராணங்களை இடையூறின்றி நிறைவேற்றத்தக் க வல்லபத்தையும் அடியேற்கு அளித்தருளவேண்டுமென்று பிரார் த்தித்தனர். கணேசமூர்த்தி அதற்கிசைந்து ஓதவசீலனே நீ கே ட்டவரங்கள் முழுவதும் உனக்குண்டாகும் நீயுன்பெயருக்குத்தக்க பரிசுத்தவுத்தமனாகி மிக்கமேன்மைகள் பெற்று எல்லாக்குறைவுக ளுமொழிந்து, யாவர்க்குங் குரவனாகி, மெய்ஞ்ஞானம் - பெருகிச்சு கமாயிருப்பாய் - பதினெண்புராணங்கட்கு நீ அதிகாரியானதுபோ ல உபபுராணங்களுஞ்சொல்லத்தக்க வல்லபத்தை யுடையவனுவாய் முன்னர் அகங்காரத்தினாலே நம்மைநியானித்துத் துதிசெய்யாது பு ராணங்களைச்சொல்லத் தொடங்கினையாதலால் நீயுன்னினைவினையி ழந்தாய் அதனோடுவாக்கையும் இழக்கப்பெற்றாய் பின்னர்நமது மா ன்மியத்தைப் பத்தியோடுங் கேட்டு நம்மையுமனுட்டித்தனையாதலா ல் முன்னர்விளைந்திருந்த பாவங்களனைத்தையும் போக்கினாய் இனி உன்மனத்துள்யாமிருந்து யாவையுஞ்சொல்லி நிறைவேற்றுகின்றோ மென்று அனுக்கிரகித்து அம்முனிவருடைய இதயகமலத்தில் வாச மாயினர். அப்பால்வியாசமுனிவர் மிக்கதேஜசுடையவராய் உலக த்தாரெல்லாங்கண்டு அதிசயிக்கும்படியாக அவ்வனத்தின்கண்ணே யிருந்து கணேசமூர்த்தி தனக்குக்காட்சி கொடுத்தருளிய விடத்தில் ஓராலயமுண்டாக்கி அதில்விநாயகக்கடவுளைப் பிரதிட்டைசெய்து வேதாகமவிதிப்படி பூசனைபுரிந்து யாவருங்கொண்டாடத்தக்க பதி

னெண்புராணங்களையும் வழுவின்றிநிறைவேற்றினர். என்று பிருகுமுனிவர் சோமகாந்தராசனுக்குச் சொல்லினர்.

வேதவியாசர்வரம்பெற்றது முற்றிற்று.

## சோமகாந்தன் முத்தியடைந்தது.

ஓ சவுனகாதிமுனிவர்களே பின்னும்பிருகுமுனிவர் அவ்வரசனைநோக்கிச்சொல்லுவார் வேந்தனே - இவ்வாறு வியாசமுனிவர் கணேசமூர்த்தியினுடைய பெருங்கருணையைக்கொண்டு நிறைவேற்றிய பதினெண்புராணங்களையுந்தாம்பிரமதேவனால் உபதேசிக்கப்பெற்ற விநாயக மகத்துவத்தையும் வைசம்பாயனர் முதலாகிய எங்கட்கு உபதேசித்து அவைகளை யாவர்க்கும் வரன் முறையாகப் போதிக்கக்கட்டளையிட்டனர். யாங்களும் அவ்வாறே பரிபக்குவர்களுக்குணர்த்தினம். அவற்றுள் விநாயகமகத்துவத்தை உனக்குப்பாத்தமாக உபதேசித்தோம். ஆதலால் இனி நீயும் அக்கணேசமூர்த்தியை யனுஷ்டித்து உனது இஷ்டகாமியார்த்தங்களை நிறைவேற்றிக்கொள்ளுகவென்றுசொல்லினர் பின்னர் அவ்வரசன் அவ்வாசிரமத்திற்றனே யிருந்து தான்கேட்ட கணேசமான்மியத்தையும்பிரதிதினம் பாராயணஞ்செய்து பிருகுமகாமுனிவருடையபதங்களைத்தினந்தோறும் பூசனை புரிந்துகொண்டிருந்தனன். இவ்வாறு ஒருவருடஞ்சென்றபின்னர் அவ்வரசன் செய்துவருகின்ற அனுஷ்டிப்புக்குக் கணேச மூர்த்தி கிருபைசுரந்து - தேவ கணங்களைக்கூவி நமது திருவடிக் கன்பனாகிய சோமகாந்தராசனை இங்ஙனம் அழைத்து வருவீர்களென்று திருவாய்மலர்ந்தருளினர். அவ்வாறே தேவகணங்களிசைந்து அஷ்டதிசைகளினு நிறைந்து பிரகாசிக்கும்படியான சோதியைவீசுகின்ற ஒருதெய்வவிமானத்தைக் கொண்டுவந்து பிருகுமுனிவருடைய ஆசிரமத்திலிறக்கினார்கள். அதை யம்முனிவர்கண்டு சோமகாந்தராசனைநோக்கிஅரசனே-கணேசமூர்த்திஉனதன் புக்கிரங்கி விமானமனுப்பினர், அதில் நீயாரோகணித்து அவருலகத்திற்சென்று, நித்தியானந்தசுகத்தில் வசித்திருமென்று சொல்லினர், அதை யவ்வரசன் செவிக்கமுதமாகக்கேட்டுப் பிருகுமுனிவரைப்பணிந்தெழுந்து, இருகரங்களையுஞ்சிரமேற்குவித்து ஓ தபோதனசக்ரவர்த்தியே - நித்த சுத்த-நின்மல-நிராகர-நிருபத்திரவ-நிர்ச்சங்க- நிர்விகார-நிருவிகற்ப-நிராலம்ப - அகண்டானந்த ஸ்வரூபியாகிய கணேச

மூர்த்தியானவர், நாயிற்கடையாய நாயேனிடத்துவைத்த நிறைந்த கிருபைக்கு அற்பனேன்செய்யத்தக்க கைம்மாறு இவ்வுலகத்தி லென்ன விருக்கின்றது. தேவரீருடையகருணையினாலே அக்கர்த்தருடைய அனுக்கிரகத்தையெளிதிற்பெற்றேன். என்னிற்படர்ந்திருந்தவியாதி முன்னமேதீர்ந்தேன். அடியேன் தேவரீர் வசத்தனல்லாமல், இப்பிரபஞ்சத்தில் எனக்குண்டாகிய பற்றுவேறென்ன விருக்கின்றது. சுவாமிகளுடைய கட்டளை யாதோ அவ்வாறே அடிமைநடந்து கொள்ளுவனென்று பணிந்து தோத்திரஞ்செய்து அளவளாவிய அன்போடு ஆனந்தக் கண்ணீர்சொரிந்து நின்றனன். அவனையந்தேவகணங்கள்நோக்கி - அரசனே - நீ கணேசபுராணங்கேட்ட மகத்துவத்தினாலே விநாயகக்கடவுள் கிருபைசுரந்து மகாயோகியர்கள் செய்யும் அநுஷ்டிப்பினுங்கிடைத்தற்கரிய தமது உலகத்திற்கு உன்னை யழைத்துவருவதாகக் கட்டளையிட்டனர். பாக்கியமுடையவர்க்குள்ளும் பெரும்பாக்கிய முடையவனீயே யாகுமாதலால் நீ யுனது மனைவியோடும் இரண்டுமந்திரிகளோடும் இவ்விமானத்தில் ஆரோகணித்து வருவாயென்றுசொல்லினர். அதை அரசன்கேட்டு மீளவும் பிருகுமுனிவரைப்பணிந்தெழுந்து, பலமுறைதுதித்து, அம்முனி புங்கவருடைய சீடர்கட்கெல்லாம் வந்தனைசெய்து விமானத்தைத்தொழுது அவ்விமானத்தைக்கொணர்ந்துவந்த தேவகணங்களை நமஸ்காரஞ்செய்து தனதுபத்தினியோடும் இரண்டமைச்சர்களோடும் அவ்விமானத்திலேறினான். உடனே - அவ்விமானமானது ஆகாயமார்க்கத்தி லெழுந்துசென்றது. அவ்வாறு செல்லுகையில் அவ்வரசனுடைய தேவநகரமானது சுதன்மைக்குத்தோன்ற - அச்சுதன்மை தன்கொழுநனைநோக்கி சுவாமி - ஏமகூடன் நமதுவரவுக்கு எதிர்பார்த்திருப்பானாதலால் அவனைக்காணாமற் செல்வோமாயின் அவன்மிக்க துயரத்திலழுந்திவாடுவான் நாமவனைக்கண்டுகொண்டு, பின்னர்நமதெண்ணத்தின்படி செல்வது உத்தமமா யிருக்கின்றதென்று சொல்லினள். அதையத்தேவகணங்கள்கேட்டு மனமிரங்கிச் சோமகாந்தராசனையுஞ் சுதன்மையையும் பார்த்து, ஓ சர்வஜனமனோகராகிய சத்தியசீலர்களே உங்கள் குமாரனாகிய ஏமகண்டராசன் விநாயகமூர்த்தியைத் தினந்தோறும் வேதாகமவிதிப்படி மிகுந்த அன்புடன் பூசைசெய்து பரிபக்குவனாகி யிருக்கின்றானாதலாலும் நீங்களும் அவனைக்காணாது செல்லக் கருத்துறாமையினாலும் உங்களெண்ணப்படி இவ்விமானத்தை அந்நகரின்புறத்து நிறுத்

றுகின்றேம், நீங்கள் அவனைக்கூவி அவன்மனதைத் திருப்திசெய்யுங்களென்றுசொல்லி அந்நகரத்தின் வடதிசைப்புறத்தில் விமானத்தைச்செலுத்திக்கொண்டுபோய் நிறுத்தினார்கள். அரசன் அளவற்ற ஆனந்தங்கொண்டு தன்னுடன்வந்திருக்கின்ற அமைச்சர் இருவரையும் ஏமகண்டராசனிடத்தனுப்பினான். பின்னர் அவ்வமைச்சர்கள்சென்று, இராசகுமாரனைக்கண்டு பணிந்துநின்றனர். அவனுந் தனது கரங்களைக்கூப்பிப் பிரதிவந்தனஞ்செய்து அவர்களைத் தனதருகிலிருக்கவைத்து இவர்கள் தனித்துவந்தமையால்,நம்து தாய்தந்தையர் இறந்தனரோ பிழைத்திருக்கின்றனரோவென்னுங் கவலைகொண்ட மனத்தோடு அமைச்சர்களே - என்னை யீன்ற அருங் குரவர்கள் எவ்வாறாகி யிருக்கின்றனரென்று வினாவினான். அதற்கவ் வமைச்சர்கள் முகமலர்ந்து ஓ நரேந்திரசிகாமணியே - உமதுமனத்திற்கிலேசப்படவேண்டாம் உம்துதாய்தந்தையர் இதுகாறும் வனத்திற் சுகசீவியராயிருந்து இப்போது தேவரூபம்பெற்றிருக்கின்றார்கள். அஃதெவ்வாறெனில்-யாங்கள் இந்நகரத்தைவிட்டு நீங்கி மிக்கதுயரத்தோடும் வனத்திற்சென்று அவ்விடத்திற் சிலநாட்களைக் கழிவுசெய்திருக்கையில் உமது தந்தை தவசிரேஷ்டராகியபிருகுமுனிவராலே தொழுநோய் முழுவது நீங்கப்பெற்று. அம்மகானுபாவ ரிடத்தில் விநாயகப்புராணங்கேட்டனர். அதைக்கேட்டமகத்துவத்தால், அவ்விநாயகமூர்த்திக்குக் கிருபைசுரந்து சகலதேவ கணங்களோடும் ஒருதெய்வவிமானம் அனுப்பினார். அவ்விமானத்தில் யாங்கள் நால்வரும் ஆரோகணித்து ஆகாயமார்க்கமாகச்செல்லுகையில் உமது குரவர் உம்மைக்காணவேண்டுமென்கின்ற ஆவலைக்கொண்டு, அவ்விமானத்தோடும் இந்நகரின்புறத்து வந்திருக்கின்றார்கள். ஆதலால் நீரங்ஙனமெழுந்தருளி அவர்களுடைய மனக்கவலையை யொழிக்கவேண்டுமென்றுபிரார்த்திக்க உடனே-ஏமகண்டராசன்பெருமகிழ்ச்சிகொண்டுவந்த மந்திரிகளோடுந் தன்னிடத்திலிருந்த மந்திரிகளும்புடைசூழவெளிக்கொண்டனன். அந்நகரத்துள்ளவர்களும்அவனோடுபுடைசூழ்ந்துயானைக்கூட்டங்கள்போல நெருங்கிவந்தனர்; அதையவ்விமானத்தலைவர்கள் நோக்கிச் சோமகாந்தராசனைப்பார்த்து அரசனே உனதருமைப்புத்திரன் வருகின்றான். நீ அவனைக்கண்டு குலாவிசொல்லத்தக்கவிடயங்களைச் சொல்லக்கடவையென்றனர். அரசன் அவ்வுத்தரவைச் சிரசில்வகித்துத்தான் தனதுபத்தினியோடும் அவ்விமானத்தினின்று மிறங்கினன் உடனே அப்புத்திரன் விரைந்துவ

மநோரஞ்சிதனென்கின்ற தன்னிரண்டமைச்சர்களைப்பார்த்து அன்பினரோ யான்பூர்வத்திற்செய்திருக்கின்ற ஊழின்பயனோ என்மனையாள்செய்த தீவினையின்பயனோ மற்றியாதுகொண்டோ இதுகாறும் ஒருபுத்திரப்பேறில்லாமற் சகலவளங்களுநுகுன்றியிருக்கின்றோம் இனியேனும் ஓர்புதல்வனைப்பெற்று யாங்கள் கடைத்தேறுவதாகவனத்திற்குச்செல்வதானேம் எனக்குள்ளபூமிமுதலிய பொருள்களனைத்தையும் நீங்கள் இருவருமாகப்பகுத்து யான்வருமளவுங்காத்துவர்க்கடவீர்கள் மீட்டும் வராமற்போவேனாயின் நீங்களே சுதாவிலாண்டு கொள்ளலாமென்றுசொல்லித் தன்மனைவியுடன் எழுந்துபிரயாணமானான். அதையவ்வமைச்சர்கள்கண்டு கவலையுற்றுக் கண்களினீர்த்தாரைகளைச்சொரிந்து மனமெலிந்துஅரசன்சொல்லிய ஆணையைத்தடுக்கக்கூடாதவர்களாகி யிருந்தார்கள். பின்னர் அவ்வரசன்தன்மனைவியோடு வனத்திற்சென்று வசித்திருக்குங்காலையில் பூர்வத்திற்செய்த நல்வினைப்பயனுன்று அவர்களை விசுவாமித்திரமுனிவர் ஆசிரமத்தின்ருகிற்கொண்டுபோய்விட்டது.

அவ்விடத்தில்வண்டுகள் இசைபாடிமொய்க்கின்றதாமரைமுதலிய பலபுட்பங்களைவாய்ந்துகண்டவர் உள்ளத்தைக் கவளீகரிக்கத்தக்கவனப்பினோடு மிக்ககுளிர்ச்சிபொருந்தியிருக்கின்ற ஒருதடாகத்தைக்கண்டார்கள். அதில் அடுத்தவர்களை அன்போடு தழுவிஎன்பைக் கேட்கினும்இளையாதுதந்து பலவின்சொற்களோடு நல்லபயன்களை விளைவிக்கின்ற சான்றோரைப்போலத் தன்னையடைந்தோர்க்குமணமுங்குளிர்ச்சியும் இளங்காற்றுந்தந்து சகலதுன்பங்களையு மொழிக்கவல்லநிரம்பிய சலத்தைக்கண்டார்கள் சகலமுந்தெளிந்துமனங்குளிர்ந்து இனியவாய்மைபெற்று நல்லபயனைவிளைத்து அளத்தற்கரிய நன்னெறிகளையுடைய அறிஞர்களிடத்தில் யாவரும் பலவுபகாரங்களையேற்றுச்செல்வரென்னு மூதுரையின்படி தெளிந்துங்குளிர்ந்தும் இனிமையுற்றும்நல்லபயன்களைவிளைவித்தும் அளத்தற்கரியஆழத்தோடிருக்கின்ற அத்தடாகத்தில் சகலபட்சிகளு நீரருந்திச் செல்வதைக்கண்டார்கள். சிலமுனிவர்கள் அதிலுள்ளதாமரைகளைப் பிடிங்கி அவைகளின்கிழங்குகளைத் தங்கள்பசிதீரஉண்டு மற்ற மலர் முதலியவைகளைக் கரையிலெறிந்துசெல்ல, "நிலையற்றோரெல்லாம் உலைவுற்றோராவர்,, என்னும்பழமொழியின்படி அம்மலர்கள் சூரியவெப்பத்தால் வாடியிருப்பதைக்கண்டார்கள். சேற்கூட்டங்கள் திரண்டு அதன்கரையில்வருகின்றவரையில் தாமுயிரற்றதுபோலிருந்து பின்ன

ர்கண்டவுடன் மூக்கினாற்கொத்தி மேலெழுகின்றகொக்குகளும் சமயம்பார்த்து நீரின்மூழ்கிமேற்கொண்டுவருகின்ற நீர்க்காக்கைகள் பாவபுண்ணியமறியாத பாதகர்களாயினோர் தங்களுக்குக்கிடைத்தபொருளைப் பிறர்க்குதவியுண்ணாரென்னும் பழமொழியின்படி அவைகளைத் தம்மினங்கட்குச்சிறிதும் உதவாதுண்ணுவதைக்கண்டார்கள். அன்றியும் அதிலுள்ளசிறுமீன்களையெல்லாம் பெருமீன்கள் வயிறுநிரம்பவுண்டுநீந்தச் சத்தியின்றிக்கரையிலொதுங்க "எளியாரைவலியார்வருத்தின் வலியாரைத்தெய்வம்வருத்து,, மென்னும் வாக்கியத்தின்படி அவைகளைப்பறவைகள்கொத்தி மேலெழும்புவதைக்கண்டார்கள். அன்னம்-சக்கரவாகம் - குருகு-தாரா-சிச்சிலி வானம்பாடி-நாரை-பெருநாரை-முதலான சகலபட்சிகட்கும் அடுத்தவர்களையாதரிக்கின்ற பரமசிவத்தைப்போலத் தான் இடைவிடாது இரைகொடுத்துவரவுங்கண்டார்கள். இவ்வாறளவற்ற அற்புதங்களை அத்தடாகத்தினிடத்திற்கண்டு அப்பாற்செல்லுகையில் அதன்சமீபத்தில் ஓர் பொழிலைக்கண்டார்கள். அப்பொழிலில் பகலிற் சூரியனைக்கண்டு வாட்டமுறுகின்ற குமுதமலர்போலவும் இரவிற்சந்திரனைக்கண்டுவாட்டமுறுகின்ற தாமரைமலர்போலவும் இன்றியாவரிடத்தும் உறவுபகையில்லாத முனிவர்களைப்போல அச்சூரியசந்திரர்களுடைய உறவுபகையில்லாமல் எக்காலத்தும் ஒரேசீராய்மலர்ந்திருக்கின்ற அநிச்சமலர்களைக்கண்டார்கள். காதல்முதிர்ந்த காமுகர்களைப்போல ஆணன்றிலும்பெண்ணன்றிலும் ஒன்றோடொன்றுபிரியாதுசிறகோடுசிறகினைச்சேர்த்துக்கொண்டு அவ்வாறே இணைகளையுந்தேடியுண்டுபலபூங்கிளைகளிற் புணர்ந்திருப்பதைக் கண்டார்கள். கட்டவிழ்ந்தமலர்களினின்றுந் துளிக்கின்றதேனைச் சாதகப்புள்ளானது மழைத்துளியெனக்கருதித் தன்வாயைத்திறந்துபருக அதனைமற்றமலர்களின் மொய்க்கின்ற வண்டினங்கண்டு பாரியைவிட்டுப் பரத்தையைவிழைகின்றகாமுகனைப்போல அவைகளைவிடுத்து அப்புள்ளினது இரண்டு கடைவாய்களினுமொழுகுகின்ற தேனைச்சூழ்ந்து பருகுவதைக்கண்டார்கள். அப்பொழிலானது வெளுத்தமணன்மேட்டின்மீது வெள்ளங்கொழிக்கின்றவண்டலைப்போலத் தேனையும்மலர்களையும் பூந்தாதுக்களையுந் தளிர்களையுஞ்சொரிவதனால் அவைகள் தாழ்ந்தபுட்பச்செடிகளையுடைய நந்தனவனத்தை யொத்திருப்பக்கண்டார்கள்.

இவ்வாறு அளவற்றமாட்சிமைகளை அப்பொழிலினிடத்திற்கண்டு அப்பாற்செல்லுகையில் முனிபுங்கவர்கள்வசிக்கின்ற பல ஆசி

ர்மங்களைக்கண்டார்கள்·அவ்வாசிரமங்களானவை திருமால் - அயன் - தேவேந்திரன்முதலிய தேவர்களை வசிக்கப்பெற்றிருக்கின்றமையால் மகமேருவுக்கொப்பாகி இருக்கவும்அங்குவசிக்கின்ற முனிவர்கள்அணிந்திருப்பது சடைமுடிமரவுரிதிருநீறுஉருத்திராக்கங்களாயினும் அவைகள் இரத்தினகிரீடந்தரித்ததேவர்கள் வணங்கத்தக்கதாகவும், கற்பகமுங்கண்டு சூழத்தக்கதாகவும் சகலவினைகளையும் நீக்கத்தக்கதாகவும் அருட்கண்களென்று சொல்லத்தக்கதாகவு மிருப்பக்கண்டார்கள். மேலும் அம்முனிவர்கள் சதாகாலமும்வேள்வித்தீயைவளர்த்து அதன்முன்னிலையிற்றேவர்கட்கெல்லாம் அவிப்பாகந்தந்துவருவதையும் மேகமானது மாதமும்மாரிசொரிந்து இப்பூவுலகத்துள்ள உயிர்களையாதரிக்கச்செய்கின்ற முறைமையையுங்கண்டு இதனுலல்லவா திருமாலானவர் தனதுகாக்குந்தொழிலைக் கைவிட்டவராய்ப்பகலெல்லாம் இரவுபோலக்கருதித் திருப்பாற்கடலிலிடைவிடாது கண்டுயில்வதானுமென்றும் சிவபெருமான் பலதிருவிளையாட்டுகளை நடாத்திவருவதுந் திருமால்கண்ணுறங்குவதும் பிரமன் வேதங்களையோதுவதும் இந்திரன் அவுணருயிரைத்தாக்கப் போர்க்குச்செல்வதும் சந்திராதித்தர்கள் ஆகாயமார்க்கத்திற்றிரிவதும் இம்முனிவர்கள் தருகின்ற அவிப்பாகங்களை நாடோறுமேற்றுவரும் ஆதரவைக்கொண்டல்லவாவென்று அதிசயித்தார்கள். பின்னும் அம்முனிவர்கள் வசிக்குமிடங்கடோறும் ஒருபக்கம் யாகத்திற்குரியபசுக்களும் ஒருபுடைபால்கறந்துவிடுக்கின்றபசுக்களும் ஒருபால் யாகமுடித்தவுடன் தானஞ்செய்யவிட்டிருக்கின்ற பசுக்களும் - ஒருபுறங்கன்னியர் வதுவைக்குக்கட்டிவைத்திருக்கின்ற பசுக்களுமாகச்சூழ்ந்திருப்பதைக்கண்டார்கள். அங்கிருக்கின்ற தடாகங்களிலுள்ள நீலோற்பலமலருஞ் சகத்திரதளத்தோடுங்கூடிவிரிந்திருக்கின்ற தாமரைமலரும், யாம்முன்னர் காமன்கைக்குக் கணையாகவிருந்ததினுல் அல்லவா அக்காமன் பரமசிவத்தினது நெற்றிக்கண்ணினுலெரிந்தபோது அவனேடு யாமும் அவ்வெரிக்கிரையாயினேம் இனிஅவ்வாறுசெல்லாமல் அடுத்தவர்க்கிதமேசெய்பவராகிய இம்முனிவரிடத்திலிருந்தால் நம்மையப்பரமசிவத்திற்குவப்புண்டாக அவர்திருவடிகளில் அருச்சிப்பார்களென்றடைந்து தவஞ்செய்வதுபோலிருக்கக்கண்டார்கள். அங்கிருக்கின்ற-கொடி-செடி - விருட்சமுதலியவைகளெல்லாம் முனிவர்களுக்குக்-கிழங்கு-கனி-காய்-மது-மலர்·தளிர்-இலை-சமிதை-என்கின்ற பொருள்களை நாடோறும்வழங்கி அவர்கட்கு உவப்பைத்தருகின்ற

குற்றமற்றபெருந்தவத்தினுல்அவைகள்சிறிதுமெலிவின்றிச்சதாகால மூந் தங்கிளைகளோடுநிறைந்து தழைத்திருப்பதைக்கண்டார்கள். முன்னம் பாற்கடலிலுண்டாகிய அமுதத்தையுஞ் சந்திரனிடத்திலுண்டாகிய அமுதத்தையுஞ் சிவபெருமானுற்புசித்திருக்கின்ற தேவர்கட்கு அம்முனிவராற்றருகின்ற அவியமுதத்தையும் அவரேகொடுப்பினல்லாமல் யாவர்கொடுப்பார்கள் ஆனுல் அவர்வடிவாயிருக்கின்ற அக்கினியானது அம்முனிவர்கள்கொடுக்கவாங்கித் தானும்புசித்துஅத்தேவர்கட்கும் வழங்கிவருவதைக் கண்டார்கள். மேலுந்தங்களுடல்வருந்தச்செய்கின்ற தவத்தினுலும் வேள்வியினுலும் சகலவுலகங்களுமழியாமற் காத்துவந்த அம்முனிவர்கள் மலபாசங்களையொழித்து முத்தியிற்சேர்ந்துவாழ்வதையன்றி ஒன்றுக்கொன்று தொந்தப்பட்டு மயங்குகின்ற தேவர்கநிலையடையச் சற்றுங்கருதாதவர்களாயிருப்பதைக்கண்டார்கள்.

இத்தன்மையவாகிய மேலான சிறப்புகள் வாய்ந்தமுனிவர்களையும் அம்முனிவர்கள் வசித்திருக்கின்ற ஆசிரமங்களையும் வீமராசனும் அவன்மனைவியாகிய சாருகாசினியுங்கண்டு நமது அரண்மனையும் இவ்வாசிரமங்கட்கு நிகரல்லவென்று சந்தோஷித்துஅப்பாற்செல்லுகையில் சகலமுனிபுங்கவர்களும் புடைசூழ்ந்து வணங்கும்படியாகப் பிரமதேவனே தடாகத்திலிருக்கின்ற புண்டரீக வாதனத்தை விடுத்து வனத்திலிருக்கின்ற புலியாதனத்திற்றங்கியிருப்பதுபோல வேங்கைத்தோலாதனத்தின்மீது வீற்றிருந்து வேதாகமப் பொருளை விரித்துரைக்கின்ற விசுவாமித்திரமுனிவரைக்கண்டு சாஷ்டாங்கமாகவணங்கினுர்கள். அவர்களை யம்முனிவர்தழுவி உங்கட்குப் புத்திரனுண்டாகக்கடவதென் றுசீர்வதித்துத் தமதுகரங்களைக்கொண்டெழுப்ப உடனே இருவருமெழுந்து கைகூப்பிநின்றுர்கள். பின்னரவ்விசுவாமித்திர முனிவர் வீமராசனைப்பார்த்துஅரசனே நீயார்நம்மாசிரமத்தைநோக்கிவந்தவர்கள் யாதேனும் ஓர்பயனையடையாமற்போவதில்லை யாதலால் உனதுகோரிக்கையைச் சொல்வையாயின் அதனைத்தடையின்றி யாந்தருவோமென்றுசொல்லலும் அதையவ்வரசன் செவிக்கமுதாகக்கொண்டு அப்போதே புத்திரப்பே றுண்டானதுபோல முகமலர்ந்து சுவாமீ யான்கவுண்டின்னியதேயத்திற் கரசன் என்பெயர் வீமன் இவள்சாருகாசினியென்னும் பெயரினையுடையளனதுமனையாள் யாங்களிருவோரும் அளவற்ற தருமாதிகளைச்செய்தும் ஒருபுத்திரப்பேறில்லாமையால் மனமெலிந்து அவமானத்துட

ன்வாழ்கின்ற இல்லறத்தைத் துறந்து இவ்வனத்திற்குவந்தோம் இ துகாறும் இயற்றிவந்ததவமுதிர்ச்சியோ அல்லது பூர்வசன்மத்திற் செய்த நல்வினைப்பயனோ சகலரும்போற்றத்தக்க இவ்வாசிரமத்தில் வந்து தேவரீரைத்தரிசிக்கப்பெற்றோம் மகமேருவை யடுத்தவர்களு ங் கற்பகவிருக்கத்தைச் சார்ந்தவர்களும் அவ்வவர்கள்கொண்ட வி ழைவை யடையாமற்செல்வதுமுண்டோ ஓ கிருபாமூர்த்தியே தே வரீரைக்கண்டபோதே இனிப்புத்திரப்பேறுண்டாகுமென்று துணி வுற்றேன் அஃதன்றித் தேவரீர் செய்தருளிய ஆசீரவாதத்தால் இத் தினமே அப்புத்திரப்பேறடைந்தவனாயினேன் மேலான தவத்திலு ம் வேதசாஸ்திர விசாரணையினும் சிறந்தகருணையிலும் சீலமானவி ரதத்தினும் மகத்தானவேள்வியிலும் பொய்மையற்ற கலைஞானங்க ளிலும் பெருமைபொருந்திய தருமதானத்திலும் தேவரீருக்கொப் பாக யாவரிருக்கின்றார்கள். தேவரீர்செய்தருளிய ஆசீர்வாதம் வி ணிற்போகுமா சுவாமீ பூர்வத்திலடியேன்செய்திருக்கின்ற தீவினைக ள் இன்னவையென்றுணர்த்தி மீளவும் அவைகளைத்தீர்த்து யான்ப வித்திரனாகும்படியான உபாயமுமருளிச்செய்ய வேண்டுமென்று பி ரார்த்தித்தான், உடனே விசுவாமித்திரமுனிவர் மனதிரங்கி அவ்வ ரசன்செய்திருக்கின்ற பூர்வவினைகளைத் தமது ஞானநோக்கினாலறிந் து ஓ நராதிபனே உனதுவம்சத்திலிருந்த முன்னோர்கள் நித்தமும் விநாயகபூசைசெய்து மிகுந்த நன்மைகளைப்பெற்று வாழ்ந்திருந்தார் கள். நீ யுன்மனைவிமீது வைத்திருக்கின்ற விழைவினால் அப்பூசை யைச்செய்யாமற் கைவிட்டாய், அதனாற் புத்திரப்பே றடையாமற் போயினை இனியாயினும் அவ்விநாயகமூர்த்தியை நீங்களிருவோரு ம் பத்தியோடு பூசனைசெய்து வருவீர்களாயின் உங்களுக்குப் புத்தி ரசம்பத்துண்டாகுமென்றார்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே இவ்வாறுவிசுவாமித் திரர்சொல்லிப் பின்னுஞ்சொல்லுவார் ஓ பார்த்திபனே விநாயகமூர் த்தி உனதுகுடிக்குக் குலதெய்வமாயிருந்து சகலதுன்பங்களையு நீக்கி ரட்சித்தருளிய கதைகளையுஞ் சொல்வோம் கேட்பாயாக பூர்வத்தில் உனதுபெரியோர்கள் கருநாடதேயத்திற் கரசராகிப் பானுவென்கிற பட்டணத்திலிருந்து ராச்சியபாரஞ்செய்துவருங்காலத்தில் உனக்கே ழாவது தலைமுறையில் வல்லவனென்னும் ஓர் அரசனிருந்தான். அ வனுக்கும் அவன்மனைவியாகிய கமலையென்பவட்கும் ஒருபுதல்வன் பிறந்தான் அப்புதல்வன்பிறந்தபோதேகுருடாகியும் செவிடாகியும்

ஊமையாகியும் சரீரமெங்குந்தொழுநோய்கொண்டு சீயுஞ் செந்நீரு மொழுகும்படியான விரணத்துடனேயிருந்தான். இத்தன்மையவாகிய துன்பத்துடன் பிறந்தபிள்ளையைத் தாய்பார்த்து மிகுந்ததுயரங்கொண்டு கண்கள்நீர்சொரியப்புலம்பித் தெய்வமே மறுதேயத்து மன்னர்கள் பழிக்கும்படியான இத்தொழுநோய்கொண்ட பிள்ளையை வருந்திப்பெற்றதைவிடப் பிள்ளையில்லாமையாயிருப்பது மிகவு நலமாச்சுதே ஐயோ இத்துன்பமாகிய பிள்ளையைப் பார்க்கும்படியாகப் பிரமதேவனெனக்கேன்விதித்தார் இப்பிள்ளை பிழைத்திருப்பதைவிட இறந்துபோனாலுஞ் சுகுணமாச்சுதேயென்று பலவாறு துயரப்பட்டிருப்பதை அரசனறிந்து மனைவியிடத்தில்வந்து குமாரனைப்பார்த்துத் தானும் மிக்கக்லேசத்தையடைந்து-ஆஅ - நாம்செய்ததவப்பயன் நன்றாயிருக்கின்றதென் றரற்றி ஊழ்வினையால்வந்து உற்பவிக்குங்காரியத்திற்கு யாம்துன்பப்படுவதால் ஆவதென்னென்று தன்மனதைத் தானேதேற்றித் தன்மனைவிடுகின்ற துன்பத்தினையுமாற்றவேண்டி அவள் சரீரத்தைத் தனது கரத்தால் வருடிக்கொடுத்து, காதலியே நீ துயரப்படவேண்டாம் இப்பிரபஞ்சத்துள் ஓர்காலத்திற் றுன்ப மநுபவிக்கின்றவர்களே மற்றொருகாலத்தில் இன்பமெளிதி லனுபவிக்கின்றார்கள். பொறியிழந் திருக்கின்ற விப்புதல்வனே நாளைச் சகல மாட்சிமையினுஞ் சிறந்தமன்னவனாவன் ஆதலால் மணிமந்திர ஔஷதாதிகளாற் சொஸ்தப்படுத்துவோம் அவைகளாலுங் குணமாகாவிட்டால் தவதான விரதமுதலான வைகளைச் செய்து எல்லாத்துன்பங்களையு மொழித்துக்கொள்வோஞ் சின்னாள் மாத்திரம் மனம்பொறுத்திருவென்று சொன்னான், அதனை லவன்மனைவியானவள் தன்துயரத்தைத் தன்னுலடக்கக் கூடுமானவளாயி லடக்கி அப்பொறியிழந்த புதல்வனைத் தனதுகண்ணீருடன் தண்ணீரும்விட்டுக்குளிப்பாட்டினாள். பின்னர் அரசன் தன்புத்திரனுக்குச் சாதககருமாதிகளைச் சாஸ்திரவிதிப்படிச்சிறப்பாகநடப்பித்துச்சோதிடர்களைக்கூவி அவர்கள்சொற்படியேதக்கனென்று நாமதேயம்வைத்து அப்புத்திரன் பிறந்தநாடொடுத்துப் பன்னிரண்டுவயதுவரையிற் பிணியொழியவேண்டிச்சகலவிதத்தில் அளவற்ற திரவியங்களைச் செலவுசெய்துஎண்ணிறந்த பரிகாரங்களையும் பண்ணுவித்தனன். பின்னர் எவ்விதஉபேகைஷயாலும் பிணிநீங்காமையால் அரசன் மனவெறுப்படைந்து ஓர்தினம்தன்மனையாளையழைத்துப்பெண்ணே இதுகாறுமிப்புதல்வற்காக அளவிறந்த திரவியங்களைச்செலவுசெய்தும்

இரவும்பகலுமாகப் பலதவங்களைமுபன்றும் இவைகளால் நமது சரீரம்வாடியும் பிணிநீங்குவ தில்லாமையால் இனி இவனிங்கிருக்க லாகாது இருக்கினும் மற்றுமுள்ள திரவியங்கள் வீணிற் செலவழிந் துபோகும் ஆகலால் சற்றுந் தாமதஞ்செய்யாமல் உன்மகனை யழை த்துக்கொண்டு இந்நிமிஷத்தில் வெளியிற் செல்லக்கடவையென்று ஆக்கியாபித்தான்.

அவ்வார்த்தையைக் கமலையானவள்கேட்டு நடுநடுங்கிப் பதைப தைத்துப்பயந்து அப்புதல்வனைப்பெற்றகாலத்திலுண்டான துபரத் தைப்பார்க்கினும் அதிகதுயரங்கொண்டு ஐயையோவென்று துக்கித் து அரசன்மனதிற்கொதிப்புண்டாகி என்மீதிற்கோபஞ்செய்தால் இ னி என்னசெய்வேனென்றுமனநொந்து, கொடுமையானபிணிகொ ண்டிருக்கின்றமைந்தனை உடனேயழைத்துக்கொண்டு வெளிவந்து ந ல்லகாலத்திற்குப்பகையில்லை பொல்லாதகாலத்திற் குறவில்லையென் று பெரியோர்கள்சொல்கின்றாராதலால் இனி என்னசெய்யப்போ கின்றோமென்று இடுக்கணுற்றிருப்பதில் ஆகத்தக்கபயன்யாதுமில் லையென்று தன்னுள்ளத்தைத் தானேதேற்றிக்கொண்டு இனிநமக்கு ப்பரமசிவத்தைவிட வேறொருதிக்கில்லையென்கிற உறுதியுடன்வழி நடந்து வனத்திற்சஞ்சரித்திருந்தனள். அக்காலத்தில் ஒருநாள்கள் ளர்கள் அவளைப்புடைசூழ்ந்து பூண்டிருக்கின்ற ஆபரணங்களனைத் தையுங் கொள்ளையிட்டுத்துரத்திவிட, அதனால்மிகவும் வாட்டமுற் றுப்பயந்து ஓரூரினுட்சென்று எக்காலத்தும் பசிதாகத்தால் வருத்த முறாதிருந்தவள் அப்பசியாலுந் தாகத்தாலுமிளைப்புற்று இத்துன்ப ங்களிற்பட்டுவருந்துவதைவிட உயிர்விட்டிறக்கலாமென்று நினைத்து மீளவும் புத்திரனிமித்தஞ் சகலசெல்வங்களையுங் கைவிட்டுவந்து இ ங்கு நம்முயிரைவிடுத்தால் இவனைப்பாதுகாப்பவரின்றிஇறப்பானே யென்றுநிதானித்து அப்புத்திரனையோர்கோயிலுள் இருக்கவைத்து அக்கோயிலுக்கடுத்தகிராமங்களி லுபாதானமெடுத்துவந்து தன்புத ல்வனுக்கூட்டிப்பின்னர்தானும்புசித்து இவ்வாறுகாலங்கழித்துவரு கையில் தான்நாடோறும்உபாதானத்திற்குச்செல்கின்றகுண்டினபு ரத்திற்கு ஒருநாள் நல்வினைப்பயனனது தன்னை நெருங்கிவருந்தன் மையளாய்த் தன்புத்திரனையுமழைத்துக்கொண்டு வீதியிற்சென்றன ள். அப்போது அக்குண்டினபுரத்திற்குச் சமீபமான ஓர்வனத்தில் சகலசீவராசிகளும் பகையின்றியுலவுகின்ற சிறந்த ஆசிரமத்தினையு டைய முக்கலமுனிவர்எதிரேவந்தார். கணேசமூர்த்திக்கன்பராகிய

அம்முக்கலமுனிவர்மீது படிந்துவந்தகாற்றானது அத்தக்கனுடைய சரீரத்திற் பட்டமாத்திரத்தில் அவனுக்குண்டாயிருந்த பிணிமுழுவதுநீங்கி வாய்பேசிச்செவிகேட்டுக் கண்டெரிந்து புனிதபவித்திரனாகிநடந்தனன். பின்னர் அத்தக்கனுடையவடிவத்தைப்பார்க்கின்றவர்கள் இவன்மன்மதனோ முருகக்கடவுளோ அல்லது மகாவிஷ்ணுதானோவென்றுநினைத்தக்கதானபேரழகும் பிரகாசமும்வாய்ந்துவிளங்கினான். இப்படிவிளங்கியிருக்கின்ற புத்திரனைத்தாய்பார்த்து அதிகமகிழ்ச்சிபொங்கிக் கையிலெடுத்தணைத்துக்கொண்டு உச்சிமோந்து உள்ளம்பூரித்து முத்தமிட்டு ஆனந்தக்கண்ணீர்சொரிந்து நமது காதலன்கோபித்தநன்மையாலல்லவா நாமிங்குவரப்பெற்றுப் பெரியோர்கள்மீதிற் படிந்துவந்தகாற்றினால் நமதுபுத்திரன்பிணிநீங்கிப் பிரகாசமாயினானென்றுசந்தோஷித்து இதற்குமுன்தன்றலைவன்மீதுவைத்திருந்த வெறுப்பைவிடுத்து விருப்புற்றவளாயினாள். இவ்வற்புதத்தை அந்நகரத்துள்ளோர்களறிந்து இவ்விருவர்மீதுங்கிருபையுண்டாகி நல்லபோனகமும் ஆடைகளுந்தந்து பாதுகாத்துவர அதையவர்களேற்றுச் சீவித்திருக்குங்காலத்தில் அரவக்கச்சினைவீக்கி அஷ்டபுயாசலங்களைப்பெற்றுத் திரிநேத்திரதாரியாய் வீற்றிருக்கின்ற சிவபிரானைச் சதாகாலமும் பூசிக்கும்பேற்றினைவாய்ந்த ஓர் ஆதிசைவப்பிராமணர் தங்களெதிரில்வரக்கண்டு அவனைத்தானுந்தன்புத்திரனுமாகச் சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்தார்கள். அவ்வேதியரிவர்கண்மீது கிருபைவைத்து, இருவருக்குந் தீட்சைசெய்து கணேசமூர்த்தியினுடைய அஷ்டாட்சரமந்திரத்தையுபதேசித்து அதைச்செபிக்கின்றமுறைமையையுங்கூறினார். அவ்வாறே இருவருஞ்செபஞ்செய்துவருகையில், கணேசமூர்த்திக்குக்கிருபைசுரந்து அவர்கள்வேண்டியவரங்களை அநுக்கிரகிக்கும்படியாகவெழுந்தருளி முன்னர் கமலைக்குத்தரிசனந்தந்து அவள் கோரியவரங்களையுமளித்துப் பின்னர் தக்கனுக்கெதிரில்வந்து ஒருமுழந்தாண்மீது மற்றொரு திருவடியைவைத்துக்கொண்டு ஒருகொம்பும் இரண்டுசெவிகளும் மூன்றுவிழிகளும் நான்குதோள்களுமாகப் பொன்னுடையுடுத்திப் பலரத்னாபரணங்களைத் தரித்ததிருக்கோலத்துடன் தரிசனமானார். இவ்வாறு தரிசனந்தந்தருளியகர்த்தனைத் தக்கனானவன்கண்டு மனதில் அச்சமும் அன்புமுண்டாகிச் சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து பலமுறைவலம்வந்துகரங்களைச்சிரமீதுகூப்பி இருவிழிகளினும் ஆனந்தபாஷ்பஞ்சொரிந்து [illegible]பங்கொண் டெழுந்தருளியிருக்கின்ற விநாயகமூர்த்தியைத் [illegible]ஞ்செய்வதாயினான்.

வேதகாரணமுநீவேதமோர்நான்குநீ
பாதமோர்நான்குநீபதங்களோர்நான்குநீ
போதவிமலயமார்புவன்காரணனுநீ
நாதநின்பெருமையைநவிலவல்லாரெவர்.

புராதனப்பொருளுநீபுறம்பினுமுள்ளினும்
விராவுமெய்க்கரியுநீமிகுமுபநிடதநீ
சராசரகுருவுநீதத்துவமுழுதுநீ
பராபரநின்றியல்பகரவல்லாரெவர்.

மூவர்காரணனுநீமூன்றுகாரணமுநீ
மூவகையுலகுநீமொழியுமுச்சுடருநீ
மூவகையுயிருநீமூவகையுருவுநீ
தேவனேயுன்தருட்டெளியவல்லாரெவர்.

இந்திரியங்களிவிசையதிதெய்வநீ
இந்திரன்முதலியவெண்டிசைத்தேவர்நீ
யந்திநண்பகலுநீயறுவகைப்பருவநீ
எந்தைநின்னுருவினையியம்பவல்லாரெவர்.

ஏகநீயனேகநீயிருளுநீயொளியுநீ
போகிநீயோகிநீபுலவரெல்லாருநீ
சாகரமேழுநீதடவரைக்குலமுநீ
மாகநின்னடிமலர்மருவவல்லாரெவர்.

அறைபிரமேயநீயப்பிரமேயநீ
பறையும்பாவனையுநீபாவனாதீதநீ
நிறைபரப்பிரமநீநிலமுதலைந்துநீ
யிறைவநின்னருளினையெய்தவல்லாரெவர்.

மிருதிநீபுராணநீவேறுபல்கலையுநீ
வருணமோர்நான்குநீவனமுபவனமுநீ
தருவொடுகொடியுநீசகலசெந்துக்கணீ
யொருவநின்றன்னிய லுணரவல்லாரெவர்.

காமமாதிகளுநீகடும்பசிதாகநீ
நாமநித்திரையுநீநகுவிநோதங்கணீ
ஏமமார்பொறையுநீயின்பநீதுன்பநீ
வாமனேநின்கழன்மதிக்கவல்லாரெவர்.

அருளுநீமறமுநீயன்புநீவன்புநீ
தெருளுநீமருளுநீசெல்வநீவறுமைநீ
வெருளுநீதேற்றநீவேறுநீயொன்றுநீ
குரவநின்குணங்களைக்குறிக்கவல்லாரெவர்.

புண்ணியத்தலங்களீபொருவிறீர்த்தங்களீ
வண்ணமூர்த்திகளுநீவரந்தரும்வள்ளனீ
பண்ணியம்பலவுநீபரமதப்பொருளுநீ
யண்ணலேநின்செயலறியவல்லாரெவர்.

செய்வினைமுதலுநீசெயப்படுபொருளுநீ
செய்வினைத்தொழிலுநீசெய்கருமப்பய
னுய்வகையவரவர்க்குதவவல்லவனுநீ
மெய்வலாய்நினதியல்விளக்கவல்லாரெவர்.

குணமொடுகுறிபலகொள்கைகொள்ளாயெனி
னணிமலர்மணமெனவாக்கையினுயிரெனப்
பணியுயிரறிவெனப்பயிலுமத்துவிதமாங்
கணபதிநினதியல்காணவல்லாரெவர்.

இவ்வாறுதோத்திரங்கள்செய்து நிற்கின்றதக்கனுக்கெதிரில் யானைமுகத்தோடுங் கூடியிருந்த விநாயகமூர்த்தியானவர் அவ்வுருவத்தைமாற்றி முக்கலமுனிவருடைய வுருவத்தைத் தரித்துக்கொண்டு தக்கனைப்பார்த்துஅன்பனே-நீசெய்ததோத்திரங்கட்குமனமுவந்தோம் உனக்குவேண்டியவரங்களைக்கேள் தருகின்றோமென்று திருவாய்மலர்ந்தனர். தக்கன்மீளவுஞ்சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து ஓதேவாதிதேவனே அடியேன்மனையில் அஷ்டபாக்கியங்க ளுண்டாகவும் மிக்கபுகழுடனே அடியேன்வாழ்ந்திருக்கவும் அனுக்கிரகிக்கவேண்டுமென்றுபிரார்த்தித்தான் அதற்குக்கர்த்தன் கிருபைசுரந்துதக்கனே முன்பு நம்மால் முக்கலனென்னும் பெயரைப்பெற்றிருக்கின்ற ஓர் தவசிரேஷ்டனுடையஉருவத்தையே இப்போதுயாம்பெற்றிருக்கின்றோம் அவனேநமது பாததாமரைக்கன்பன் அவனுயிரே நமதுருவமானதால் அவனுருவே நமதுருவமென்பதை யுனக்கறிவிக்குமாறு அவன்போலவேயிருந்து உனக்குத்தரிசனந்தந்தோம் அவனுருவத்திற்படிந்துவந்தகாற்றினல் உன்னரிட்டத்தைமுன்புநிவிர்த்திசெய்வித்தோம் இனிநீ அவனைச் சரணடைவையாயின் உன்கோரிக்கை

யெல்லாம் அவனே நிறைவேற்றிவைப்பான் பின்னர் நீ தேவேந்திரனைப்போலச்சகல்போகங்களையும் பெற்றுவாழ்ந்திருப்பாயென்று திருவாய்மலர்ந்து தமதுதிருவுருவத்தைக் கரந்தருளினார். சந்திரசடாதரமூர்த்தியாகிய விநாயகக்கடவுள் இவ்வாறு கரந்தருளலுந் தக்கனவன் பசுவைப்பிரிந்த கன்றுபோலவுந் தாயைப்பிரிந்த சேய்போலவுங் கைப்பொருளிழந்த வறுமையாளன்போலவும் எவ்வளவேனுமனந்தாவரிக்கமாட்டாமல் தரையில்வீழ்ந்தெழுந்து கர்த்தன்கரந்தருளிய திசையைநோக்கி அனந்தமுறைவணங்கிப் பல திக்குகளைத்துந்தேடித்திரிந்து மீட்டுந்தனக்குக் காட்சிகொடுத்தருளியநிலத்தில் வந்துவீழ்ந்து வீழ்ந்து புரண்டுபுரண்டு அலறியலறி சரக்கொன்றைமரத்திற் பூத்திருக்கின்ற மலர்ச்சரங்களைநோக்கிச்சுவாமிகள்திருமுடியிலணிந்திருந்த மாலைஎன்றெண்ணி அம்மரத்தைத் தழுவிமுகந்துஓ.தடாகங்களே ஓபறவைகளே ஓகயங்களே ஓ மாளிகைகளேஓயானைகளே ஓகமுகமரங்களே ஓபனைமரங்களேஓஅன்றில்களேஎன்னையாட்கொண்டருளிய கிருபாமூர்த்தியைக் கண்டீர்களோவென்றுபுலம்பி, யானைகளைப்பார்த்து என்னையிரட்சித்தருளிய தயாபராதுதிருமுகத்தைப்பெற்றிருக்கிறீர்களேயென்று கும்பிட்டுத்தாமரைமலர்களைப்பார்த்து எனதாண்டவருடைய திருவடிக்கொப்பாக விருக்கின்றீர்களே யென்றுநமஸ்காரஞ்செய்து அழலிற்பட்ட மெழுகினைப்போலச் சரீரமிளகி உருமாறிஆனந்தக்கூத்தாடி அற்புதங்கொண்டு முக்கலமுனிவருடைய ஆசீர்மத்தையடைந்தான். அவ்வாசீர்மத்தில் அருளென்னுங் கடலைக்கடந்து ஆனந்தவமுதுண்டு பூரித்திருக்கின்றமாணாக்கர்கள் தம்மைப்புடைசூழ்ந்து போற்றத்தக்கதாக, வேதாகமமுதலிய சகலபொருள்களையுந் தெளிந்துணர்த்தி தேவதேவராகிய விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளைச் சதாகாலமுஞ் சிந்தித்திருக்கின்ற அருந்தவத்தினாலும் யோகவலியினாலும் வேண்டியவண்ணம் வேறுவேறுவடிவங்களைக் கொள்ளத்தக்க சத்தியையுடையவராய் ஞான சூரியனைப்போல விளங்கியிருக்கின்ற முக்கலமுனிவரையும் அவர்கருணைபொழிகின்ற திரிநேத்திரங்கள் சதுர்ப்புசங்கள் முதலிய உறுப்புக்களோடு சிற்பசாத்திரவிதிப்படி பொன்னினாலும்மணியினாலுங் கணேசமூர்த்தியினுடைய திருவுருவங்களைச் சமைத்துச்சதாகாலமுந் தரிசித்துவருகின்ற பெருமையையுங்கண்டு சாஷ்டாங்கமாகப்பணிந்து நெடுநேரம் அவ்வண்ணமேயிருந்துபின்னரெழுந்து மேகத்தைப்போல ஆனந்தக்கண்ணீர்சொரிந்து பெருமூச்செறிந்து

பரவசனாகிக்கரங்களைச் சிரமேற்கூப்பி அளவற்ற தோத்திரங்களைச் செய்து நிற்றலும் அத்தக்கனை முக்கலமுனிவர் கிருபையோடும்பார்த்து அவன்பேரன்புக் கதிசயங்கொண்டு அன்பனே உன்பெயரென்ன நீ வசித்திருக்கும் ஊர்யாது உன்மனதிற்கருதிவந்த விருப்பங்கள் எவை சொல்லென்று திருவாய்மலர்ந்தனர்.

உடனே தக்கன்தேவாமிர்த முண்டவனையொத்துக்களித்தவனாய்க்கரங்களைக் கூப்பித்தொழுது இதனை விண்ணப்பஞ் செய்வதாயினன். சுவாமிஎன்தந்தை கருநாடதேயத்திலே பானுவென்கிறபுரத்தில் அரசாட்சிசெய்கின்ற வல்லவராசன் என்தாய் கமலையென்பவள் என்பெயர்தக்கன் மேற்சொன்ன அவ்விருவருக்கும் யான்புதல்வனாய்உற்பவித்தபோதே என்சரீரமானது தொழுநோய்முதலியபிணிகளோடுமிருந்ததனால் அவர்கள் மனவருத்தமுற்றுப் பன்னிரண்டுவயதுவரையிற் பற்பலமுயற்சிகளைசெய்துவந்தார்கள். பின்னர்எவ்வாற்றானும் என்பிணிநீங்காமைகண்டு தந்தைமனவெறுப்படைந்து தாயையும் என்னையுங்கோபித்துவிலக்க யாங்கள் அவ்வாணையைத்தடுக்கக்கூடாமல்வெளிக்கொண்டு இந்நகரத்தையடைந்து உபாதானமெடுத்துச் சீவிக்கின்றநாளையில் ஒருநாள்சுவாமிகள் திருமேனியிற்றுதைந்துவந்தகாற்றினால் என்பிணியனைத்து நீங்கப்பெற்றதுமன்றி ஓர்மறையவருபதேசித்தமந்திரத்தையனுட்டித்து அதன்முன்னிலையிற் கணேசமூர்த்தியினுடைய தரிசனங்கண்டு அவரிட்டருளியகட்டளையின்படித் தேவரீணாச்சரணடைந்தேன் இஃதன்றியும்யானைமுகத்தோடும் என்னெதிர்வந்துகாட்சிதந்த கணேசமூர்த்தியானவர் பின்னர்அவ்வுருவத்தைமாற்றித் தேவரீர் திருவுருவத்தினைக்கொண்டு தரிசனந்தந்தருளியதால் சுவாமிகட்குந்தேவரீர்க்குந் திருவுருவமொன்றாகவிருக்கின்றது. தேவரீர் அநுக்கிரகத்தால் அடியேற்கு இப்பிரபஞ்சவாழ்க்கை மிகுதியுண்டாகவேண்டுமென்று கோரியிருக்கின்றேன்அவ்வண்ணமே தேவரீர்கருணாகடாட்சம்வைத்து, நிரந்தரபத்தியும்அடியேற்கருள்வேண்டுமென்று பணிந்துபிரார்த்தித்தான். இவையனைத்தையுமுக்கலமுனிவர்கேட்டு அதிக ஆச்சரியங்கொண்டு மைந்தனே நீயேபெரியபாக்கியமுடையவன் நீயே இவ்வுடம்பின் பயனைப்பெற்றவன், நீயேநினைத்தகாரியத்தை நிறைவேற்றிக் கொள்ளத்தக்க மகாதவத்தையுடையவன், நீயேவிநாயகக்கடவுளுடைய திருவடிகளில் நிரந்தரபத்தியுடையவன், நீயேமுற்றத் துறந்தவன், நீயேசீவன்முத்தன், "யான்தேவவருடத்தில் ஆயிரம்வருடம் அருமையானதவ

ங்கள்செய்தும் அவ்வாறேஅளவற்றகாலந்தியானத்திருந்தும் பற்பல தருமங்களில் முயன்றும் எண்ணிறந்ததானங்களை நடாத்தியும்அதுகாறும் எனக்குக்கணேசமூர்த்தியானவர்தரிசனந்தந்ததேயில்லை. பிரமன்விண்டு உருத்திரனென்கிற மூவருள்ளத்திலுஞ் சிருட்டி-திதி-சங்காரமென்கிற முத்தொழில்களைநடாத்தி அம்முத்தொழில்களை அம்மூவர்முன்னிலையில் இம்மூவகையுலகத்தினு மியற்றுதல் செய்து அம்மூவர்க்கு முதல்வனாகவிருக்கின்ற ஓர்முதல்வனுக்குந் தானேமுதல்வராயிருக்கின்றவர் அக்கணேசமூர்த்தி அவரையுன்மூவகைக்கரணத்தாலு முயங்கியிருக்கின்றனையாயின் இப்புவியிலுனக்கொப்பாகயாவரிருக்கின்றார்கள். அந்தணர்க்கழல்வண்ணமாகவும்யோகியர்க்குமந்திர சொரூபமாகவுமிருந்து அவ்வவர்களைத் தரிசனந்தந்து ஆட்கொள்ளத்தக்க அக்கணேசமூர்த்தியானவர் என்னெதிரிற் காட்சிதந்ததெவ்வாறோ அவ்வாறே நீயுங்கண்டதாகமொழிந்தனை,யானுனக்குதவத்தக்க கைம்மாறு என்னவிருக்கின்றதென்று சொல்லி ஆலிங்கனஞ்செய்து தமதுகரத்தால் சரீரத்தைவருடி அளவளாவிய அற்புதங்கொண்டு பற்பல சந்தோஷ வார்த்தைகளாடிச் சகல பாக்கியங்களையுந் தரத்தக்கவிநாயகமூர்த்தியினுடைய ஏகாட்சரமந்திரத்தை யுபதேசித்து அதைத் தியானிக்கு முறைமையும் அருளிச்செய்தார். இப்பால் அத்தக்கனுடைய தாயாகிய கமலையானவள் நெடுநேரந் தன்புத்திரனைக்காணாமற் றேடினவளாய்ப்பின்னர்ஞானசொரூபியாய் வீற்றிருக்கின்ற முக்கலமுனிவரிடத்தி லிருக்கக்கண்டு தானும் அவரைத் தீர்க்கதெண்டன் செய்துநின்றனள். அவளை யம்முனிபுங்கவர்பார்த்து ஓ மகாவுத்தமியே நீயும் உன்புத்திரனும் வேதங்களாலுமறியக்கூடாத குணங்குறிகடந்த கொள்கையராகிய கணேசமூர்த்தியினுடைய கிருபைக்குப் பாத்திரரானீர்கள் சகலவினைகளையும் வென்றீர்கள் இன்னுநீங்கள் பெறத்தக்கதென்னவிருக்கின்றது உன்குமாரனுக்கு அவ்விநாயகக்கடவுளுடைய ஏகாட்சர மந்திரத்தை யுபதேசித்திருக்கின்றேன் அம்மனுவைச் செபஞ்செய்து சித்திபெற்ற முடிவிலே இவ்வுலகத்தில் அவன்சக்கிராதிபதியாயிருந்து தேவேந்திரன் முதலாயினோர் கண்டு மதிக்கத்தக்க அரசாக்ஷியைப்பெற்று வாழ்ந்திருப்பன் இனியொன்றிற்கும் அஞ்சலையென்றுசொல்லி விடைகொடுத்ததாக விசுவாமித்திர முனிவர் வீமாசனை நோக்கிச் சொன்னார்.

௯ - வது - தக்கனுபாசித்தபடலமுற்றிற்று.

உ

ஏழாவது

## வல்லாளன் உபாசித்தபடலம்.

அந்தணீரருட்டக்கன்கயமுகத்
தெந்தைதாண்மல ரேத்தியதோதினுஞ்
சிந்துதேயந்திகழ வல்லாளனு
வந்ததோன்றல் வழுத்தியதோதுவாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே, விநாயகமூர்த்தியைத் தக்கனுபாசித்
துப் பிணிநீங்கிய சரித்திரத்தைச்சொன்னோம், இப்பால் வல்லாள
னுபாசித்த திறத்தைச்சொல்வோங் கேட்பீராக. வீமராசன் விசுவா
மித்திரமுனிவரை மீளவும்பணிந்தெழுந்து சுவாமி முக்கலமுனிவர்
மீது படிந்துவந்தகாற்றுனது தக்கன் சரீரத்திற் பட்டவுடன் அக்
கொடியவியாதி அவனைவிட்டுநீங்கவும் உடனே கணேசமூர்த்திதரிச
னமாகவும் பூர்வத்திலவன் என்னதவத்தினைச் செய்திருக்கின்றான்
அதனையும்அருளல்வேண்டுமென்றுபிரார்த்தித்தான். அதற்குவிசுவா
மித்திரமுனிவர்கிருபைசுரந்து அரசனேசகலவளமுஞ்சிறந்த சிந்து
தேயத்திலேபல்லியென்கின்ற பட்டணத்திலே வைசியகுலத்திலே க
லியாணனென்பவனுக்குங் கற்பிற்சிறந்தஅவன்மனைவியாகிய இந்தும
தியென்பவட்கும்முன்செய்துவிட்ட தவக்குறைவைநிறைவேற்றவந்த
வனென்றுசொல்லும்படி ஒருபுத்திரன்அவதரித்தான். அதனாற்கலி
யாணன்மனமகிழ்ச்சிகொண்டுசகலசடங்குகளையுஞ்சிறக்கச்செய்துஅ
நேகதானதருமங்களியற்றிப்புத்திரன்பிறந்தபன்னிரண்டாநாள் வீட்
டையலங்கரிக்கச்செய்து சோதிடர்களைக்கூவிஅவர்களால் அப்புத்தி
ரனுடைய திதிநிலைமுதலிய எல்லாநிலைகளையு நன்குணர்ந்து அவர்
கள்சொற்படியே வல்லாளனென்கிற நாமகரணஞ்செய்து அன்போ
டுவளர்த்துவர அவ்வல்லாளனென்னும் புத்திரன் நாளுக்குநாள் இ
ருந்தும் தவழ்ந்தும்நடந்தும்;அறிவுதெரிந்துந்தினமொருமேனிகொ
ண்டு வளர்பிறைபோல்வளர்ந்துவிளையாடிக்கொண்டிருக்குநாளையில்
தன்வீட்டைவிட்டுச்சிறுபிள்ளைகளுடன்கூடித் தோப்புகளிற்சென்
று விளையாடிக்கொண்டிருப்பான். அவ்வாறுநாடோறும் விளையாட
ல்செய்யுங்காலத்தில் ஒருநாள்அவனுக்குப்பூர்வநல்வினைப்பயனானது
நெருங்கிவரவும்அத்தோப்பிலொருகல்லையெடுத்துவைத்துஅக்கல்லை
விநாயகமூர்த்தியாகப்பாவனைசெய்துசலத்தால் அபிஷேகித்துப்புட்

பத்தாலருச்சித்துப் பத்தியுடன் பூசித்துமீட்டும்தன் வீட்டிற்கு அச்சிறுபிள்ளைகளோடுகூடிச்செல்வான். மறுதினம் அவ்வாறேசென்றுதான்பாவனையாலருச்சித்த அவ்விநாயகமூர்த்தியைக்கண்டுதரிசித்துமுன்னைநாளினுமிகுந்த சிறப்புகளைநடாத்தி ஆராதித்துவருவான். இவ்வாறுநாளுக்குநாள்தனது பூசனைகளைவிருத்திசெய்து விளையாடிவருங்காலத்தில் ஒருநாள் பிராதக்காலையிலெழுந்து அச்சிறுபிள்ளைகளை யழைத்துக்கொண்டு தோப்பின்கட்சென்று மிகுந்தவிசுவாசத்துடன் தான் பிரதிஷ்டைசெய்துவைத்த கணேசமூர்த்திக்குச் சிலபிள்ளைகள் உயரமாகப்பூப்பந்தரிடவும் சிலபிள்ளைகள் பலவாச்சியங்களிசைக்கவும் சிலபிள்ளைகள் கனிவர்க்கங்களைச்சேகரித்துவரவும் சிலபிள்ளைகள் பூச்சரங்கள்கட்டித்தொங்கவிடவும், சிலபிள்ளைகள்திருமஞ்சனங்கொண்டுவந்துவைக்கவும் சிலபிள்ளைகள் பஞ்சகவ்வியஞ்சேர்க்கவும் சிலபிள்ளைகள் பஞ்சாமிர்தங்கூட்டவும் சிலபிள்ளைகள்சந்தனமிழைக்கவும் இவ்வாறு எல்லாப்பிள்ளைகளும்ஒவ்வொருதிருப்பணிகளை நடாத்திவரக்கட்டளையிட்டு வல்லாளன் ஸ்நானஞ்செய்து அநுட்டானமுடித்துப் புட்பங்களால் அலங்கரித்திருக்கின்ற ஆலயத்தில் நுழைந்து மிகுந்தபத்தியுடனே விநாயகமூர்த்திக் கபிஷேகஞ்செய்து பூச்சரங்களைச்சாத்திப் பற்பலநைவேத்தியவுகைகளைக் குறைவில்லாமற்கொடுத்து சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து இருகரங்களையுஞ் சிரமேற்குவித்துப் பலமுறைவந்தனைசெய்துகொண்டிருந்தான். அக்காரணத்தால் தன்னோடுவந்த எல்லாப்பிள்ளைகட்குங்காலைபோசனம் மத்தியானபோசனமில்லாமலும் அத்தமிக்கின்றவுளையில் தங்கள் வீட்டிற்சென்று சேராமலுமிருந்தார்கள். இப்பால்அப்பிள்ளைகளையீன்றோர்கள் வல்லாளன்மீதுகோபங்கொண்டு அவன்தந்தையாகிய கலியாணனிடத்திற்சென்று உன்பிள்ளை எங்கள் சிறுவர்களை அதிகாலையில் அழைத்துக்கொண்டுபோய் இன்னும்அவர்களை வீட்டிற்கனுப்பாமல் விளையாடிக்கொண்டிருக்கிறான் அவனைநீ தண்டித்தடக்காவிட்டால் யாங்களிக்கொடுமையை அரசனுக்கறிவித்து உன்னை இந்நகரத்தினின்றுந் துரத்திவிடச்செய்வோம் இதனையுண்மையாக நம்பக்கடவையென்றுசொல்லி அவன்மனதைக்கலைத்தார்கள். இவ்வாறுயாவருந்தனக்கு மனவருத்தமுண்டாகும்படிக் கூச்சலிட்டுரைத்தலுங் கலியாணனுக்கு மிகுந்தகோபமுண்டாகித் தடியையெடுத்துக்கொண்டுபோய்த் தன்குமாரன் விநாயகபூசைசெய்து விளையாடிக்கொண்டிருக்கின்ற தோப்பையடைந்து பூவாற்சமைத்துவைத்திருக்

கின்ற பூப்பந்தரைப்பிரித்துத்தள்ளி ஆதிற்கணேசனை ஆவாகனஞ்செய்துவைத்திருக்கின்ற மூர்த்தியையெடுத்தெறிந்து வல்லாளனையும் உதிரமொழுகவடித்துப் பின்னுங்கோபம் ஆறாமையால் அவனைமரத்துடனேசேர்த்து இறுகக்கட்டினான். அப்போது அக்குற்றமற்ற குமாரன்பயந்துதந்தையேதந்தையேயென்றுகும்பிட்டுக்கட்டையவிழ்த்துவிடும்படியாகப் பலமுறைபிரார்த்தித்துக்கொள்ள அதற்கப்பாவிசற்றுமனதிரங்காமல் உதட்டைமடித்துகடித்துக்கொடியவார்த்தைகளாற்பேசிநீவிநாயகரைக்குறைவில்லாமற்பூசைசெய்திருப்பையாயின் அவரேவந்து யான்கட்டியகட்டைஅவிழ்த்துவிடுவார்அன்னபானாதிகளை உன்கையிற்றந்து நீவேண்டியபடி அனுக்கிரகித்து உன்னுயிரையும்பாதுகாப்பார். நீயீட்டும் வீட்டிற்குவராதிருந்தாற் பிழைத்தாய்வருவையாயின் மாண்டுபோவாயென்று பகைவரைப்போலப் பேசித் தன்னிருக்கையை யடைந்தனன்.

இப்பால் வல்லாளனுக்குவேறொருதுணையில்லாமல் மிக்கதுயரத்தையடைந்து ஓ திரிநேத்திரதாரியாயிருக்கின்ற கணேசமூர்த்தியே யான்படுந்துன்பங்களைத் தேவரீர் பார்க்கவில்லையோ, முழுமையுந் தேவரீரையேநம்பியிருக்கின்ற அடியேற்கு இத்தன்மைத்தாகியதுன்பம்வரலாமா, விக்கினகர்த்தரென்னுந்திருநாமம் தேவரீர்க்கிருப்பதற்கு இதுதகுதியா. தேவரீர் திருவடித்தாமரைகளை ஆராதிக்கின்றவெனக்கும் இவ்விடர்நேர்ந்ததே, இஃதுன் கிருபாசமுகத்திற்குஎதிர்ப்படவில்லையாவென்று முறையிட்டு ஐயனே யானுனக்கடிமையென்பதுண்மையாயின் யான்சமைத்துவைத்தஆலயத்தை எவன்பிரித்துத்தள்ளினனோயான்பிரதிஷ்டைசெய்தமூர்த்தியை எவனெடுத்தெறிந்தானோ எனதுசரீரத்தில் உதிரமுண்டாகும்படி எவன்அடித்து இம்மரத்திற்கட்டினனோ தேவரீரை எவ்வளவேனுமதியாமல் எவன்நிந்தித்தானோ அப்பாதகன் இந்நிமிடத்தில்குருடாகியும் ஊமையாகியும்செவிடாகியும் அழுகியதொழுநோய்கொண்டு அதிற்சீயுஞ்செந்நீருமொழுகத்தக்கதாய் சரீரமாத்தியந்தமும் விரணங்களுண்டாகித்துன்பப்படக்கடவனென்றுசபித்துத் திடசித்தங்கொண்டு நமது உடல் மாத்திரமே கயிற்றாற்கட்டுண்டதன்றி உள்ளத்திற்குஎன்னகுறையிருக்கின்றதென்று தன்மனதினுள்ளே விநாயகக்கடவுளையிறுகப்பிடித்துத்தியானித்து உயிரைவிடுவதற்குத்துணிந்தான். உடனேவிநாயகமூர்த்திக்கு மனந்தளர்ந்து பிராமணச்சிறுவன்போல மாறுவடிவங்கொண்டு அவ்வல்லாளனுக்கெதிராக வந்தார். சூரியோதயத்திற்கு

முன்னர் இருளும்பனியும் எவ்வாறுநீங்குமோ அவ்வாறுவிநாயகமூர்த்திபிராமணச்சிறுவனுகிவரவும் அவ்வல்லாளனை இறுகக்கட்டியிருந்தகட்டும் அடிகளாலுண்டானவிரணங்களும் ஒருநொடிப்போதில் விலகிப்போய்விட்டன. பின்னர்வல்லாளன் அற்புதங்கொண்டு இவரேநம்மைஆட்கொள்ளவந்த விநாயகப்பெருமானென்று நிச்சயித்து சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து ஓ ஜகத்ரட்சகனே எளியேற்குத்தந்தைதாய் சுற்றமுதலியயாவருஞ் சுவாமிகளேயன்றி இப்பிரபஞ்சத்தில் வேறொருவரில்லையென்பது இத்தினத்திற் கண்டுணர்ந்தேனென்று பலவாறுதோத்திரஞ்செய்தனன். அதற்கப்பிராமணப்பிள்ளைவடிவங்கொண்டுவந்த கணேசமூர்த்தியானவர் வல்லாளனைத் தழுவிக்கொண்டு அன்பிற்சிறந்தகுழந்தாய் நமக்கபராதஞ்செய்தபாவிகளும் நமதுபத்தருக்கு இடுக்கண்செய்த சண்டாளர்களும் அந்நிமிடத்திற் கொடியநரகவேதனைகளிலழுந்தி இம்மைமறுமையினும் முடிவுகாணாத பொல்லாதவியாதிகளாற் றுன்பப்படுவார்களாதலால் இப்போது நம்மிருவரிடத்துங் குற்றஞ்செய்தகலியாணனுக்கு நீயிட்டசாபத்தின்பயனை அனுபவிக்கச்செய்தோம் நீ யுன்துயரத்தைநீங்கி உனக்கு வேண்டியவரங்களைக்கேள் தருகின்றோமென்றருளிச்செய்தார். வல்லாளன் அம்மொழியையமுதாக்கேட்டு ஆனந்தபரவசனுகி அடியேற்குத்தேவரீருடைய திருவடிகளில் நீங்காதபத்தியைத்தந்து இவ்விடத்தில் எக்காலமும்சுவாமிகள்வாசமாயிருந்து அவ்வவர்கள்இச்சித்தவரங்களை யனுக்கிரகிக்கவேண்டுமென்றுபிரார்த்திக்க அதற்கு அக்கணேசமூர்த்தியிசைந்து மைந்தனேஉனக்கெமது திருவடிகளிலென்றைக்கும் அழியாதபேரன்பினைத்தந்தோம், அன்றியும்உனதுபெயரை நமதுபெயர்க்கு முன்னர்வைத்து, வல்லாளகணபதியென்று உலகத்தாரெல்லாந் துதிசெய்யும்படியாக அவ்வவர்களிச்சித்தவரங்களைத்தந்து இங்ஙனேவசித்திருப்போம்சொர்க்கமத்தியபாதலமென்கின்றமூவுலகத்தாரும் இங்குவந்தும்மைப்பூசனைசெய்யக்கடவர், இங்குண்டாயிருக்கின்ற நமதுசொரூபத்தை யாவர்தரிசித்தாலும் அவ்வவர்கள்பெறக் கருதிய அரியபொருள்களையெல்லாம் எளிதிலடையக்கடவர்கள். இனி தினவுச்சவம் - மாதவுச்சவம் - வருடவுச்சவமுதலானவைபவங்கள் இங்குசிறப்பாக நடக்கும், இதனைநீ யுண்மையாகநம்பக்கடவையென்று திருவாய்மலர்ந்து, பிராமணப்பிள்ளைவடிவங்கொண்டிருந்த கணேசமூர்த்தியானவர் சகலவுலகத்தாரும் பூசிக்கத்தக்கதாக விக்கிரகவடிவங்கொண்டிருந்தனர்.

இவ்வாறு சொல்லினும் பொருளினுந்தொடர்ந்தறிதற்கரிய கணேசமூர்த்தியானவர், விக்கிரகவடிவங்கொண்டுவீற்றிருப்பதை வல்லாளன்பார்த்து மிகுந்தபத்தியுடனே பணிந்தெழுந்து முன்போலவே பூப்பந்தர்புதுக்கி, ஸ்நானஞ்செய்து, பூசைமுடித்தற்குவேண்டியதிரவியங்களையும், வாசனையூட்டிய திருமஞ்சனத்தையும், பரிமளமிகுந்த புட்பவகைகளையும், இனிமையாகிய காய்கனிவர்க்கங்களையுஞ்சேகரித்து, அளவற்றவுவகையோடும் ஆராதித்துக்கொண்டிருந்தான். இங்கிவ்வாறிருக்க. இவனைமுன்னர் வருத்திச் சென்றகலியாணன் தன்வீட்டையடைவதன்முன் இவனோடும்விளையாடிக்கொண்டிருந்தபிள்ளைகள் விரைவிலோடி இவன்தாயாகிய இந்துமதியிடத்திற்சென்று, கலியாணன்றன்புத்திரனை யலைபக்கண்டதும், சரீரமெங்கும் உதிரப்பிரவாகமுண்டாகும்படி எள்ளளவுமிரக்கமின்றியடித்து மரத்திற்கட்டித்தனியே விட்டுவந்ததும், விபரமாகச்சொன்னார்கள். அதனைஇந்துமதிகேட்டு, மிகுந்ததுயரப்பட்டு மனவாட்டமுற்றிருக்கையில், வீட்டைநோக்கி வருகின்ற கலியாணனானவன். தன்குமாரனிட்ட சாபத்தினாற் கண்டெரியாமலும், வாய்பேசாமலும், செவிகேளாமலும், சரீரமெங்குந்தொழுநோய்கொண்டு, திகைதப்பி, மதிமயங்கி, சிலவரத்தோடுந் தன்வீட்டில்வந்து வீழ்ந்தான், அவனை இந்துமதிகண்டு, ஈதென்னபாவமென்று திடுக்கிட்டு, நடுநடுங்கி, உளம்வருந்தி, ஐயையோநமதுநாயகனுக் கிவ்விதவிடுக்கண்வந்தகாரணம் யாதினாலென்று நினைந்து, மனமுருகிக், கண்ணீர்சொரிந்து, நெருப்பின்மீது மற்றோர்நெருப்புவீழ்ந்ததுபோலவும், நோயின்மீதுவேறோர் நோயுண்டானதுபோலவுந் தன்புத்திரனாற்படுகின்றதுன்பத்தின்மீது புருடனாற்படுகின்றதுன்பத்தையு மேற்றவளாய், மனந்தாவரிக்கமாட்டாது ஓ தெய்வமே சிறந்தசெல்வத்தோடு நல்லஇளமைப்பருவத்தைச் சேர்ந்திருந்தகாலத்தினும் ஒருவருக்குந் தீங்கென்பதை நினையாமல், தருமத்தையேநடாத்தி வந்த இவருக்கும்இவ்வினைவருமாயின். இதுமுற்சனனத்திற்செய்த தீவினையின்பயனோ, புத்திரனைத்துன்பப்படுத்திவந்த கொடுமையோவென்றுதுக்கித்துவீட்டிலிருக்கின்ற மற்றையமாதர்களோடுங்கூடித், தன்புத்திரனிருக்குமிடத்திற்சென்று, அவன்மிகுந்தபத்தியோடு விநாயகபூசைசெய்து கொண்டிருப்பதைக்கண்டு, சந்தோஷங்கொண்டு, இவனைமரத்திற்கட்டி யிருக்கின்றதென்றுஞ், சரீரமுழுவதும் அடிபட்டு உதிரமொழுகிக்கொண்டிருக்கின்ற தென்றுங் கேள்வி யானேமே,

அவ்வாறொன்றினையுங்காணேமே ஈதென்னவிந்தையென்று தன்னு டனேவந்தமாதர்களோடுஞ்சொல்ல, அவர்களும்வல்லாளனைமகிழ்ச் சியுடனேபார்த்து, இச்சிறுவன்கணேசமூர்த்தியை அன்போடும்ஆ ராதித்துவருகின்றமகிமையினாலே, இவன்சரீரத்திலெவ்வளவேனு ந்துன்பமணுகவில்லையென்று நிச்சயித்து, அவன்தாயாகிய இந்தும தியைப்பார்த்து, விநாயகமூர்த்தியைப் பத்தியோடுபூசைசெய்பவரி ல் உன்மகனுக்கொப்பானவர்கள் இப்பிரபஞ்சத்திலெங்கணுமில்லை, ஆதலால் அவன்சரீரத்தில் யாதொருதுன்பமு நெருங்காமலிருக்கின் றதென்றுசொன்னார்கள். அதைஇந்துமதிகேட்டு, அக்குமாரனரு கிற்சென்று, தன்னுள்ளத்துண்டான அன்பின்பெருக்கினால் குசங்க ளினின்றும் அமுதம்பெருகத்தக்கதாகத்தழுவி, முகத்தோடுமுகத் தையணைத்து. முத்தமிட்டு, அப்பா என்னருமைச்செல்வனே-நீ-இ ப்பிள்ளைமைப்பருவத்திற்றானே விநாயகமூர்த்தியை யன்போடு மா றாதிருக்கின்ற அற்புதத்தாலே, யானும் உன்தந்தையுஞ் சன்மசாப ல்யராானோம், ஆயினும்நீ கணேசமூர்த்தியைப் பூசைசெய்யுங்கால ம்போக, மற்றகாலங்களில் உலகநடைக்குரித்தாகமீளவும், வீட்டில் வந்துசேரலாகாதா, அல்லவெனில் வீட்டிற்றானே அக்கடவுளை வ த்துப்பூசிக்கலாகாதா, ஏதுமின்றிஎங்களைமுழுதுமறந்துவிட்டுப்பட் டணத்திற்குவெளியிற்றானே ஒருவர்துணையின்றித் தனியே வாசமா யிருப்பது உனக்குத்தகுமா, இப்போதுன்தந்தையானவர், நீரோது வாய்யாவரும் அதிசயிக்கும்படி, சரீரமெங்கணும் புண்கள்கொண் டு, ஊமையாகியுங் குருடாகியுஞ் செவிடாகியுமிருந்து, மதிமயங்கி த் தடுமாறி, வீட்டில்வந்துவீழ்ந்தார். அதையான் கண்டவுடன் முடிவற்றதுபரத்தையடைந்து, உனக்குத் தெரிவிக்கலாமென்றிங்கு வந்தேன், தப்புவழியிற் செல்கின்றபிள்ளைகளைத் தாய்தந்தையராயி னோர் கோபித்தும், அடித்தும், அவர்களை நல்வழிக்குக் கொண்டுவ ரவேண்டுமென்று வேதசாஸ்திரங்களாற் கூறப்பட்டிருக்கின்ற மு றைமையின்படியல்லவா உன்தந்தை யுன்னைத்தண்டித்தார். அது நீதிதானே தந்தையாதுசெய்யினும் புத்திரர்கள்பொறுக்கவேண்டுவ து சுபாவமாச்சுதே, அப்பா-இனியேனும் புத்திரர்கட்குரிய தருமத் தைநன்றாயோசித்து உன்கோபத்தைத்தணித்து, உன்தந்தைபடுகி ன்ற கொடியவியாதிகளைப் போக்குவதற்கான உபாயம், மந்திரங்க ளினாலோ, மற்றெவ்வகையாலோ, அதனைநீயேயறிந்துதீர்க்கவேண் டும். விவேகத்திற்சிறந்த பிள்ளைகளாயினோர்தங்கள் தாய்தந்தையர்

கள

சொல்லுகின்றவார்த்தையைக் கீழ்ப்படுத்தாமல் மேன்மையாகக்கொள்வனென்று சகல நூல்களையும் ஆராய்ந்துணர்ந்த பெரியோர்கள்சொல்லுகின்றார்கள், ஆதலால் எனதுதுயரந்திரும்படியாக, யான்சொல்லுகின்றபுத்தியைக்கேளென்று பலவாறுதுக்கித்துக்கெஞ்சினின்றனள். அவளைவல்லாளன்பார்த்து, அம்மையே- கருப்பத்திற்கருவாகி வளர்கின்றகாலத்திலும், அதினின்றும் வெளிக்கொண்டு உருவாகிவளர்கின்றகாலத்திலும்; சகலவான்மகோடிகட்கும் உயிர்க்குயிராகிஇருவினையின்படி அவ்வவர்கட்குள்ளபுசிப்புக்களையூட்டித் தந்தையுந் தாயுமாயிருந்து பாதுகாக்கவல்லகர்த்தரெவரோ, அவரே இவ்வுலகத்தில் எனக்குரிய தாய்தந்தையன்றி, மற்றையரீங்களா என்பொருட்டு இரக்கங்கொண்டாளத்தக்கவர்கள். ஒருவர்க்கொருவர் இடையூறுநீக்குவதும், ஒருவர்க்கொருவர் நன்மைசெய்வதும் அக்கடவுள் கிருபையைக்கொண்டல்லாமல்; தங்கள்தங்கள் வல்லபத்தாலு மாவதுண்டோ. அவ்வவர்கள்செய்தபாவபுண்ணியங்களை அவ்வவர்களே அனுபவிக்கவேண்டுவதன்றி மற்றையராற் போக்கவுங்காக்கவுங்கூடுமோ, புத்திரர்கள், தங்கள்தாய்தந்தையர் அனுமதியின்றித் தமையாளும் அரசனுக்கேவல்புரிவாராயின், அவர்களை அத்தாய்தந்தையர் ஒறுக்கவல்லரோ அவ்வாறொறுத்துத் தாங்களுயிர்பெற்றுவாழினும், அரசன்பணிக்கு மெலிவுசெய்தமையால் அவனாணையிற் றப்பிப்பிழைப்பதுண்டோ சிவபெருமானே கடைக்கண்பார்வை கிடைக்கப் போகின்றதாவென்று சமயம்பார்த்திருக்கத்தக்க பேருளையுடைய விநாயகமூர்த்தியாலயத்தைத்தள்ளி என்னையுந்துன்பப்படுத்தி, என் சுவாமியினுடைய திருவுருவத்தையுந் தன்கையா லெடுத்தெறிந்ததினாலே, அவனுக்கு நீங்காத்தொழுநோய்வந்துநேர்ந்தது. இவ்வியாதியை இச்சன்மத்திலநுபவிப்பதல்லாமல் மறுசன்மத்தினுஞ் சிறிதுநாள் அநுபவித்திருப்பான்.

அஃதெவ்வாறெனில். நீமறுசன்மத்தில் வல்லவராஜனுடையமனைவியாகிக் கமலையென்னும்பெயரைவகித்திருப்பாயப்போதுஉன்புருடனாகியகல்யாணன், இவ்வியாதியோடும்உன்புத்திரனாக அவதரித்துத் தக்கனென்னும்பெயர்பெற்றுத் துன்பப்படுவான், அக்காலத்து அவன்தந்தையாகிய வல்லவராசன் மனவருத்தங்கொண்டு, பன்னிரண்டுவயதுவரையில் அவ்வியாதி தீரத்தக்கபரிகாரங்கள் அளவற்றுச்செய்வான். அவ்வாறுசெய்தும் அதுதீராமையை நோக்கிப் பி அவ்வரசனுக்குக் கோபமுண்டாகும். அப்போது உன்னையு

மவனையுந் துரத்திவிடுவான். பின்னர் நீங்கள் முக்கலமுனிவராலே நன்மைபெறுவீர்கள் போவென்றுசொல்லி யனுப்பிவிட்டான். இந்நுமரி இவ்வார்த்தைகளைக்கேட்டு அவன் மனோதிடங்கொண்டு பேசுவதைத்தடுக்கக்கூடாமல் தன்வீட்டிற் சென்று சேர்ந்தனள். இப்பால் வல்லாளன் மீளவுங் குறைவற்ற அன்போடு விநாயக மூர்த்தியைப் பூசைசெய்துகொண்டிருந்தான். அவனுறுதிக்கு விநாயகக்கடவுள் சந்தோஷங்கொண்டு தேவகணங்களைக்கூவி நமதன்பனுகிய வல்லாளனை இங்ஙனமழைத்துவரக்கடவீர்களென்ன அவ்வாறேதேவகணங்கள் விமானத்தைக்கொண்டுபோய் வல்லாளனிருக்குமிடத்தில் நிறுத்தினர்கள் அவ்விமானத்தை யவன்பார்த்துக் கணேசமூர்த்தியினுடைய திருவருட்கு யான்பாத்திரனுவனே வென்று துதித்துச் சாஷ்டாங்கமாகச்சேவித்து. இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி நின்றுன். தேவகணங்கள் அவ்வல்லாளனைப்பார்த்து ஓ சர்வவல்லமையுள்ள மகாதவசிரேஷ்டனே விநாயகக்கடவுளுடைய கட்டளையின்படி விமானமுங்கொண்டுவந்தோம், நீ - இதன்மீதாரோகணிக்கவேண்டுமென்றுசொல்ல அவ்வாறேவல்லாளன் ஆனந்தபரவசனுகி யேறினுன். தேவகணங்கள் அந்தரதுந்துமி முழக்கினுர்கள். சித்தர்கள்சந்திரவட்டக்குடைபிடித்தார்கள். கருடர்கள்வெண்சாமரை வீசினுர்கள். கின்னரர் ஆலவட்டமெடுத்தார்கள். தேவர்கள்புட்பவருடம்பொழிந்தார்கள். அரம்பையர்நாட்டியமாடினுர்கள். கந்தருவர்சங்கீதம்பாடினுர்கள். முனிவர்கள் இருபக்கங்களினு நெருங்கினுர்கள். அந்தணர்கள் வேதாகமங்களாற் றுதித்தார்கள். இவ்வாறு வரிசை வரிசையாகப் பலபரிசனங்கள்புடைசூழ்ந்துவரச் சகல சம்பிரமத்துடன் வல்லாளன்ஆகாயமார்க்கமாகச்சென்று, விநாயகலோகத்திற் சேர்ந்து இகலோக பரலோகவிச்சைகளைவெறுத்து இந்திரன்முதலிய தேவர்கட்குங் கிடைத்தற்கு அருமையதாகி எக்காலத்தும் இராப்பகலென்பதின்றி ஆதியந்த மத்தியம் அளவிடப்படாதோங்கிய நிரந்தரபோகத்தைப் புசித்துப், போதவாதனையையொழித்துக் கணேசமூர்த்தியினுடைய திவ்வியசரணுரவிந்தங்களில் இரண்டறக்கலந்து வாழ்ந்தனன். இவ்வற்புதங்களனைத்தையும் அந்நகரத்துள்ளோர்கள்கண்டுமனங்களித்து அங்குமூர்த்திகரித்திருக்கின்ற விநாயகக்கடவுளுக்குச்சிறந்ததபதியர்களைக்கொண்டு ஆலயங்கட்டுவித்து அந்தணர்களைக்கொண்டு காலங்கடவுமல் பூசனைசெய்வித்து, திருவிழாக்கண்முதலியவைகளுஞ் சிறக்கச் செய்தார்கள். விநாயக சதுர்த்திதோறுஞ் சகலச

னங்களும்வந்து பூசனைசெய்து வேண்டியவரங்களைப்பெற்று வாழ்ந்திருந்தார்கள். வல்லாளனுக்கு எல்லாவேதனைகளும் நீக்கி அத்தினமே முத்திகொடுத்தருளிய விநாயகமூர்த்திக்குச் சகலமானபெரியோர்களும் வல்லாளகணேசரென்று திருநாமந் தரித்துத் துதித்தார்கள். பின்னர் தொழுநோய்கொண்டு துன்பப்படுகின்ற கல்யாணன் அச்சனனமுழுவது மிக்கதுன்பத்தையடைந்து சிலநாட் சென்றபின்பு அவன்மனைவியாகிய இந்துமதியானவள் அவனுக்கு முன்னமேமற்றொரு சனனமெடுத்துக் கமலையென்னும் பெயரைவகித்து வல்லவராசனுக்கு மனைவியாகியிருக்க அவளிடத்தில் அந்நோயுடன் புத்திரனாயவதரித்துத் தக்கனென்னும்பெயர்பெற்றுத் துன்புற்றிருக்குங்காலையில் தன்தாயாகிய கமலை முற்சனனத்தில் மனைவியாகவிருந்து அளவற்றதருமாதிகளைச்செய்த பலத்தினாலும் அப்போது தன் குமாரனாயிருந்தவல்லாளன் விநாயக பூசைசெய்து முத்தியடைந்தமகிமையினாலும் முக்கலமுனிவர்மீது படிந்துவந்த காற்றினால் அவன் தொழுநோய்முதலியனவுந்தீர்ந்து, ஒருபிராமணனால் விநாயகமூர்த்தியினுடைய அஷ்டாக்ஷரமந்திரத்தைஉபதேசிக்கப்பெற்றுக்கணேசமூர்த்தியைத்தரிசித்து, அவர்பெருங்கருணையாற் பின்னர் முக்கலமுனிவருடைய திருவடிகளை யடைந்து அவரால் ஏகாக்ஷரமந்திரத்தையு முபதேசிக்கப்பெற்றுச் சுகமுற்றிருந்தானென்று, விசுவாமித்திரமுனிவர் வீமராசனுக்குத் திருவாய்மலர்ந்தருளினர்.

எ-வது-வல்லாளனுபாசித்தபடலம்
முற்றிற்று.

—*—

எட்டாவது,

## வீமன் உபாசித்தபடலம்.

**தா**மமார்புயத்தலைவன்வல்லாளன்பூசித்தே
யேமமேவியதுனைத்தன மிலகிருந்தவத்திர்
சேமவைப்பெனுங் கணேசனைச்சிந்தையிற்குறித்தே
வீமவேளுபாசித்ததை விளம்புதுமன்றே.

ஓ சவுனகாதிமுனிவர்களே, விநாயகமூர்த்தியை வல்லாளனுபாசித்து முத்தியடைந்த வரலாற்றைச் சொன்னோம், இப்பால் வீமராச னுபாசித்த திறத்தைச் சொல்லுவோங் கேட்பீராக.

அவ்வீமராசன் விசுவாமித்திரமுனிவரைப் பணிந்தெழுந்து, சுவாமீ தக்கன் முக்கலமுனிவரால் உபதேசம்பெற்ற பின்னர் எவ்வாறாயினன் அதனையுந் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க விசுவாமித்திரர் சொல்லுவார், அரசனே எல்லாப் பாக்கியங்களையுந் தரத்தக்க ஏகாக்ஷரமந்திரத்தை யுபதேசித்த முக்கல முனிவரைத் தக்கன் மிக்க அன்புடனே பூசைசெய்துவிடைபெற்றுத்தானும் தனது தாயும் அவ்விடத்தினின்றுநீங்கிக் கவுண்டின்னியநகரத்தின் சமீபமான ஓர்குளிர்ந்த நந்தன வனத்தின்கணுள்ள தடாகக்கரையில், திப்பியமாகியும் புராதனமாகியும் ஓர் விநாயகராலயமிருக்கக்கண்டு, அவ்வாலயத்தையடைந்து, கணேசமூர்த்தியினுடையதிருவடிகளைத்தியானித்துமுக்கலமுனிவரா லுபதேசிக்கப்பெற்ற ஏகாக்ஷரமந்திரத்தைப்பன்னிரண்டுவருடம்வரையிற் செபித்துப், பின்னர்திருமஞ்சனம்புட்பம்சந்தனம்தூபதீபநைவேத்தியமுதலியதிரவியங்களைச் சேகரித்து அவ்வாலயத்திலெழுந்தருளியிருக்கின்ற விநாயகமூர்த்தியையிருபத்தொருநாள்பூசித்தான். அந்த இருபத்தோராநாளிரவில், நாலாஞ்சாமத்தில், அத்தக்கனுடையசொப்பனத்தில், ஒருமதயானையானது, அதன்றுதிக்கையிற்பூமாலைகொண்டுவந்து, தன்கழுத்திலிட்டுமீளவுந் தன்னையெடுத்து அதனதுமுதுகில்வைத்துக்கொண்டு ஒருபட்டணத்துட்கொண்டு போவதாகக்கண்டு நித்திரைவிட்டுநீங்கி மறுநாளுதயத்திற் றனதுநித்தியநியமங்களை நிறைவேற்றிக்கொண்டு தன்தாயாகிய கமலையைச் சேவித்துத், தான்கண்டசொப்பனத்தைச் சொன்னான். அவளதைக்கேட்டுச்சந்தோஷித்து அப்பா நமதுசிறுமையாவும் இன்றொழிந்தது நீ இப்போதே அவனியாளத்தக்கஅரசனாவையென்றுசொல்லி இருவருமனமகிழ்ச்சியடைந்து முன்போலவே விநாயகமந்திரத்தைத் தியானித்துக்கொண்டிருந்தார்கள். இவர்களிவ்வாறிருக்க அக்கவுண்டின்னியநகரை அரசாக்ஷிசெய்துவந்த சந்திரசேனமகாராசன் அன்றையத்தினம் நிரோதுவாய் இறந்துபோயினன். உடனே அவன்மனைவியாகிய சுலபையென்பவள் மிகுந்த துயரங்கொண்டு என்னுயிருக்கொப்பானவரோ என்கண்மணிகட்கிணையானவரோ அரசர்க்கரசரோ இப்பூவுலகத்தை யாள்வதைவிட்டுச் சொர்க்கவுலகத்தையாளுநிமித்தம் என்னைக்கைவிட்டீரோ தேவாமுதத்தினுஞ்சிறந்த என்பிராணநாயகா இது உமக்குத்தருமமா கொழுகொம்பற்றகொடிபோலவும் குளிர்ந்தசலத்தினின்றுநீங்கியகயல்போலவும் தைலமில்லாததீபம்போலவும்சூரியவொளியில்லாதநாள்போ

லவும் என்னைமுழுமையுந் துக்கசாகரத்தின்மூழ்கும்படிவிடுத்து நீர் தெய்வமகளிரோடுஞ் சேர்ந்தீரோ இதுநீதிதானோ நானும்மைவேள் வித்தீயின்முன்னர் மாலையிட்டநாள்முதல் இதுகாறும் எனக்கொரு குறைவுவராமற்காத்துவந்த உமக்கு யான்செய்துவந்த வழிபாடுகளில் இப்போதென்ன தாழ்ச்சியினைச்செய்தேன் அப்படியேதேனுமுண்டாயின் அதனைவாய்விட்டுப்பேசாமல் என்னைப்பலவிடர்கள்சூழும்படிவிடுத்தீரோ இஃதுமக்குத்தக்கதா ஐயையோ இனிஎன்னசெய்யப்போகின்றேன் தெய்வமேயென்று தீயில்வீழ்ந்த செந்தளிர்போல வேற்றுருவாகி விழிகளினின்றும் நீர்த்தாரைகள்பெருகத்தக்கதாய்ப் புலம்பிப் புருடன்மேல்விழுந்து முகத்தை மோதிக்கொண்டுந் தலையையிடித்துக்கொண்டும் வாயிலறைந்துகொண்டுந் தனங்கள்குழையும்படி மார்பிலடித்துக்கொண்டும் கைகளைநெரித்துக்கொண்டும் வயிற்றைப்பிசைந்துகொண்டும் இவ்வாறுபதைபதைத்துப் பூமியில்வீழ்ந்து புரண்டுபுரண்டு அலறியலறி ஓ என்புருஷசிகாமணியே அருவுமாயாவது தோற்றி விசனப்படவேண்டாமென்று ஓராறுதல்சொல்லீரோ-ஓ-என்னாசைக்கணவரோ-ஓ-என்பிராணவல்லபாவென்று கதறிக்கொண்டிருந்தாள். அவளோடு அமைச்சர்முதலான சகலசனங்களும் மிகுந்ததுயரத்துடன் நெடுநேரம் அழுதுகொண்டிருக்கையில் புரோகிதர்கள் அவர்களையெல்லாங்கையமர்த்தி உங்கள் சுகத்தைக்குறித்து அழுகின்றீர்களேயன்றி இறந்தவனடையவேண்டியசுகத்தை யாவரும் நினையாதிருக்கின்றீர்களே என்வீணிற் புலம்புகின்றீர்கள் இனி நமதரசனுக்குச்செய்யவேண்டிய கருமாதிகளைச்செய்துமுடியுங்கள் இப்பூமியிற்பிறந்தவர்களில் யாவரிறவாதிருந்தவர்கள் அப்படி இறந்தவர்களோடுகூட இறப்பவரொருவருமில்லையேவாழ்நாள்முடிவானால் வானுடருமிறப்பதையறியீர்களோ இறந்தவர்களுக்குச்செய்யத்தக்க கருமங்களைச்செய்து அவர்களைநற்கதியிற்சேர்க்கின்றவர்களே நல்ல அன்பினராவார் அதைநடத்தாமற்பொய்ப்பொருளையிச்சித்துப் புலம்புகின்றவர்கள் மெய்ப்பொருளையறியாத வீணர்களேயாகும் விணாவில்காரியத்தை நடத்துவதைப்பாருங்கள் நீங்கள் விசனப்படுவதினால் ஆகத்தக்கதொன்றுமில்லையென்று சொல்லித்தேற்ற அதனாற் சிறிது துயரத்தையாற்றியிருந்தார்கள்.

இப்பால் இறந்திருக்கின்ற வரசனுக்குப் புத்திரனில்லாமையால் உன்னமைச்சர்களாகிய மனோரஞ்சனன் சுமந்துவென்னுமிருவருள் சுமந்தென்பவன் உங்கள்குலமாயிருத்தலினாலே அக்கால் அவன்

சந்ததியிலிருந்த ஒருவனைக்கொண்டு சகலகருமங்களையு நடப்பித்துத் தகனஞ்செய்தார்கள். பின்னர் - சுலைபஸ்நானஞ்செய்து வேப்பிலையருந்தி அரண்மனைக்குட்சென்று தர்ப்பணாதிகளை முடித்துத் தினக்கிரியைகளைப் பதின்மூன்று நாள்வரையிற்செய்து சகலகாரியங்களையு முடித்தபின்பு அமைச்சர் - புரோகிதர் - சோதிடர் - பிராமணர்-மற்றுமந்நகரத்துள்ளகாரியஸ்தர்முதலியோரை ஒற்றனைவிட்டு வரவழைத்து நம்மைச்சத்துருக்கள் நெருங்காதவண்ணம் இனி இப்பூமியைத் தாங்கும் புஜபலபராக்கிரமத்தையுடைய ஓரரசனை ஏற்படுத்தக்கடவீர்களென்றாக்கியாபித்தாள். அந்த அவ்வமைச்சர்முதலாயினோர்கேட்டு ஆலோசித்திருக்கின்றசமயத்தில் முற்கலமுனிவர் அவ்விடத்தில்வந்து அச்சபையிலிருக்கின்றவர்களை நோக்கிப் பட்டத்துயானையை அலங்கரித்து அதன்றுதிக்கையிற்பூமாலைதந்து தலையவிழ்த்தனுப்புங்கள் அஃது எவனைமாலையிட்டெடுத்துக்கொண்டுவருகின்றதோ அவனையே இவ்வுலகாள்வதற்கான அரசாக்கிக்கொள்வோமென்று கிருபையோடுந் திருவாய்மலர்ந்தருளினார். அதனைச் செவியுற்றயாவரும் வியப்படைந்து ககனமென்கின்ற பட்டத்துயானையை அலங்கரித்து சுலைபக்கெதிராக நடத்திவந்துவிடுத்த அவள் தன் கணவன்மார்பிற்றரித்திருந்த பொற்றாமரைமாலையையெடுத்துவந்து அந்தயானையின்றுதிக்கையிற்றந்து இவ்விராச்சியத்தை யாளத்தக்க ஓரரசனைக்கொண்டுவருவையென்றாக்கியாபித்தனள். அதனையம்மதயானைசெவியுற்று மலைநடப்பதுபோலத் தான்முன்னதாகநடப்ப அதன்பின்னர் அமைச்சர்முதலான சகலசனங்களும் முன்னர் தவஞ்செய்தற்குரிய தானமொன்றைக்காணுமாறு பிரமதேவனால்விட்ட தருப்பைச்சக்கரத்தின் பின்சென்ற முனிவர்கூட்டம்போலத் தம்மையாளற்குரிய வோரரசனைக்காணுமாறு அதிக விரைவோடுந் தொடர்ந்துசென்றார்கள் அந்தயானையுந் தங்கள்கணவனையன்றி மற்றையெவ்வகைப்பட்டபேரழகுள்ளோராய் எதிர்வந்திருக்கினும் அவர்கள்மேற்சிறிதேனுங் கண்ணோக்கஞ்செலுத்தாத கற்பின்மாதர்களைப்போல அரசாள்வதைவிழைந்து பற்பலர் தன்னெதிரில்வந்துநிற்கினும் அவர்களையெல்லாஞ்சரபத்தையொத்துச்சீறி விலக்கிக்கொண்டுநடந்தது. அவ்வற்புதத்தை யாவருங்கண்டதிசயித்து இந்தயானை மஹாபாக்கியமசாலியாகிய மன்னவனையே தேடிக்கொண்டுவருமென்றதிசயித்துச் சந்தோஷங்கொண்டு வீதிகடோறுந் தண்ணீர்தெளித்துத் துகளடக்கிப் பரிமளமிகுந்த புட்பசரங்களாற் றோரண

முதலியவைகளைக்கட்டி அலங்கரித்தார்கள். இப்பாலந்தயானையானது கோட்டைவாயிலினின்று நீங்கி வீதியெல்லாங்கடந்து பட்டணத்திற்குவெளியிற்சென்று வனத்திற்புகுந்து முக்கலமுனிவருடைய ஆசிரமத்திற்குச்சமீபமாகவசித்திருக்கின்ற தக்கனருகிற்சென்று அவன்கழுத்திற்பொற்றாமரைமாலையைத்தரித்தது.

ஓவீமராசனே இத்தக்கன் தானிருந்தவிடத்தையிருந்து இந்தன்மைத்தாகிய அரசுரிமையைப்பெற்றானாயின் மூவர்பெருமானாகியும் என்னையாட்கொண்ட முக்கட்பெருமானாகியும், திருமால்முதலியதேவர் பெருமானாகியும் ஒற்றைக் கொம்பேந்திய செல்வப்பெருமானாகியுமிருக்கின்ற விநாயகப்பெருமானைப் பூசைசெய்கின்ற அடியார்க்குக், கிடைத்தற்கரியபாக்கியங்களெவ்வுலகத்திலிருக்கின்றன. இப்பால் அத்தக்கனுக்குமாலையிட்டவுடனே தேவர்கள் அந்தரதுந்துபிமுழக்கினார்கள். ஆகாயத்தில் புஷ்பவருஷம்வருஷித்தது, யானையின் பின்னர்வந்த சகலபரிசனங்களும் அவ்வவர்கண் மனத்திருந்த கவலைகளையொழித்து ஆனந்தங்கொண்டார்கள். அமைச்சர் முதலாயினோர் இராசயோக்கியமான ஆடையாபரணாதிகளை யெடுத்தணிந்தார்கள். அந்தணர்களெல்லாம் ஆசீர்வாதஞ்செய்து இருபுறத்திலுமிருந்தார்கள். சேனாபதியர்-தூதர்-சாரணர் - முதலாயினோர் வீரகண்டாமணியைத் தரித்திருக்கின்றபாதங்களில்வணங்கி ஏவலுக் கெதிர்பார்த்தார்கள். இவ்விதசம்பிரமங்களோடுந் தக்கனெழுந்து அங்கு திருக்கோயில்கொண்டு வீற்றிருக்கின்ற கணேசமூர்த்தியைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து, அருகிருக்கின்ற அந்தணர்கட்கெல்லாம் பற்பல திரவியங்களைத் தானஞ்செய்து தன்னருமைத்தாயை நவரத்ன கசிதமாயுள்ள சொர்ன்னச்சிவிகையிலேற்றித், தான்பட்டத்துயானையின்மேல் உதயகாலசூரியன்போல ஆரோகணித்து அமைச்சர்களிருமருங்கிலும் அசுவங்களிலேறிவரவும், தாசிகள் நாட்டியஞ்செய்துநடக்கவும் சமுத்திரகோட்டம்போலப் பேரிகை முதலான வாத்தியங்கள் முழங்கவும் இன்னுமிவைமுதலான சகல ஆடம்பரங்களோடு மலையினுச்சியி லுதயமாகின்ற பூரணச் சந்திரனைப்போல யானைமேலோங்கியிருக்கின்ற வெண்குடை நிழலிலிருந்து, அதனைமெல்லமெல்ல நடாத்திப் பட்டணத்துள் நுழைந்து பவனிவந்து அரண்மனையிற்சென்று சொர்னத்தினாற்செய்து சிரோரத்தினங்களா விழைத்திருசிங்காதனத்தின்மீதிருந்து மந்திரத்தலைவர்களை நோக்கிக், கு களால் அருகிலழைத்து என்னை யாட்கொண்டருளிய

 

முக்கல் முனிவரைச் சகல சிறப்போடும் இங்ஙன மழைத்து வரக் கடவீர்களென்று கட்டளையிட்டான். அவர்கள் அவ்வாறே விரைந்துசென்று தவசிரேஷ்டராகிய முக்கலமுனிவரைத்தேரிலேற்றி ஆடல்பாடல் வாத்தியமுதலிய பல முழக்கங்களுடனே அந்நகரத்துள்ளயாவரும் ஆனந்தங் கொள்ளத்தக்கதாக அரண்மனைக்குள்ளாக எழுந்தருளச்செய்தார்கள். உடனே தக்கனெதிர்சென்றழைத்து அளவளாவிய அன்போடுஞ்சிறந்த ஆசனத்தின்மீதிருத்தித், தேய்வைபூசி-அக்ஷதைசாத்தி, மந்திரமலரால ருச்சித்துத், தூபதீபநைவேத்திய முதலிய சோடசவுபசாரங்களைச் செய்து நவரத்தினங்களிழைத்த பொற்றட்டில் ஆடையாபரணங்களை நிறைத்துக், கனிவர்க்கங்களைப்பரப்பி முனிபுங்கவர்க்கெதிரில்வைத்து,சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்துபலபரிசனங்கள் தன்னைப்புடைசூழ்ந்திருக்கத்தக்க தாகநின்று முக்கலமுனிவரைப்பார்த்து சுவாமிகளுடைய கருணாகடாட்சத்தினால் அடியேன் ராஜரீகத்தினைப்பெற்றேன், அடியேற்குச்சுவாமிகளே விநாயகக்கடவுளன்றிவேறில்லை சுவாமிகளுடைய அஸ்தத்தை அடியேன்முடிமீதுவைத்து ஆசீர்வதிக்கவேண்டுமென்று மிகுந்தகனிவோடு இருகரங்களையுங்கூட்டிச் சிரங்கவிழ்த்துநின்றனன். அதற்குக்கிருபாமூர்த்தியாகிய முக்கலமுனிவர்சந்தோஷித்து அவ்வாறே தமது அஸ்தத்தை அவன்முடிமீதுவைத்து உனதுநற்குணத்திற்குயாவரும் பகையாகமாட்டார்களென்றுதிருவாய்மலர்ந்து சகலதிரவியங்களும் உன்கைவசத்தாகி நீ அளவற்றசந்தோஷத்தோடு வாழ்ந்திருக்கக்கடவதென்று ஆசீர்வதித்து, ஓராசனத்திலிருக்கச்செய்து மிக்கபெருவகையோடும் இதனைப்போதிப்பதாயினர். அன்பனே - இக்கடல்சூழ்ந்த உலகத்துள்ளமன்னுயிர்களுக்குணர்த்தியிருக்கின்ற வருணாச்சிரமதருமங்கள் பலவாகவிருக்கின்றன.அவைகளுள் உனக்குமுக்கியமாக உணர்த்தவேண்டுவனவாகிய அரசநீதிகளைச் சொல்வோங்கேட்பாயாக. அருணோதயமாக ஐந்து நாழிகைக்குமுன்னதாகத் துயிலொழிந்து அமளியைவிட்டுநீங்கிமற்றோரிடத்திலிருந்து சரீரத்தைச்சுத்திசெய்து கொடிதாகிய வல்வினைக்கூட்டங்களைப்பொடிபடுத்தவல்ல அழகியதிருவெண்ணீறு தரித்து குருசுவாமியையும் வழிபடுகடவுளையும் மனதிற்றியானித்து பூமிதேவியைப்பார்த்து என்தாயேயானுலவுகின்ற போதெல்லாம் உனதுதிருமேனியிலெனதுபாதம் படுகின்ற பிழைகளைப்பொறுத்தருளவேண்டுமென்று இரந்துதுதிசெய்து பின்னர்விநாயகமூர்த்தியைத்தியானித்து அளவற்ற வேதாகமங்கட்கெல்லா முடிவாயிருக்கின்றகணேசனேமனோவாக்குக் காயங்கட்கெட்டாதவனே உனது திருவடித்தாமரைகட்கு உதயகாலவந்தனஞ் செய்கின்றேனென்றும் ஆவாபரண

னே சந்திரசேகரனே திரிபுரதகனனேஉமாபரமேஸ்வரிமணாளனே உனதுபாதாம்புயங்கட்குஉதயகால வந்தனஞ்செய்கின்றேனென்றும். திரிநேத்திரதாரியே சகலதத்துவங்கட்கும் ஆதிகாரணியே பங்கமுத்தியாகிய விரண்டினையும் விளங்கவைத்திருக்கின்றபார்வதிதேவியே. உனது சரணாரவிந்தங்கட்கு உதயகாலவந்தனஞ் செய்கின்றேனென்றும், இலக்குமி மணாளனே திருப்பாற்கடலின் கண் அறிதுயில் செய்பவனே தேவேந்திரனுக்குச் சகோதரனாகிய உபேந்திரனே உனது சரோருகத்தாள்களுக்கு உதயகாலவந்தனஞ் செய்கின்றேனென்றும். சகலகருமங்களையும் வழுவின்றிமுடிப்பதற்குக் காரணமாகியிருக்கின்றவனே உலகவிருளினையுந் தானவர்செய்கின்ற மாயையினையும் நாசஞ்செய்ய வல்லவனே யாவருங்கண்டு தொழும்படியான சூரியபகவானே உனது உபயபாதமலர்களுக்கு உதயகாலவந்தனஞ் செய்கின்றேனென்றும் இவ்வாறு கிரமமாக மற்றைத்தேவர்களையும்முனிவர்களையும்மிகுந்த அன்போடுதுதித்துப் பின்னர் நாடோறுஞ்செய்துவருகின்ற நித்தியகருமங்களை விதிப்படிமுடித்து அமைச்சர்வேதியர் முதலானவர்களோடிருந்து அரசாட்சிசெய்யுமிடத்து நீ யறிந்துகொள்ள வேண்டிய கடமையாவது. மைந்தனே இந்திரன்முதலிய இறைவர்பதங்களும் அந்தமில் இன்பத்து அழிவில்வீடும் நெறியறிந்து எய்துதற்குரியமாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரால் எடுக்கப்பட்ட பொருள்நான்கு. அவை-அறம்-பொருள்-இன்பம்-வீடு-என்பனவாம்.

அவற்றுள் ஒருகாலத்துஒருபொருளால் ஐம்புலனுநுகர்தற்சிறப்புடைத்தாய இன்பத்தினையும் சிந்தையுமொழியுஞ் செல்லாநிலைமைத்தாகியவீட்டினையுந் தருவது அறமும்பொருளுமாகும் - அவ்வறம் மனுமுதலிய நூல்களில் (கடவுள்வாழ்த்து - வான்சிறப்பு - நீத்தார்பெருமை - அறன்வலியுறுத்தல் - இல்வாழ்க்கை- வாழ்க்கைத்துணைநலம் - புதல்வரைப்பெறுதல் - அன்புடைமை - விருந்தோம்பல்-செய்ந்நன்றியறிதல் - நடுவுநிலைமை - அடக்கமுடைமை - ஒழுக்கமுடைமை - பிறனில் விழையாமை - பொறையுடைமை - அழுக்காறாமை - வெஃகாமை - புறங்கூறாமை - பயனிலசொல்லாமை - தீவினையச்சம் - ஒப்புரவறிதல் - ஈகை - புகழ் என்னும் இருபத்துமூன்றுவகுப்பினதாகும். பொருள் (இறைமாட்சி-கல்வி-கல்லாமை கேள்வி-அறிவுடைமை-குற்றங்கடிதல் பெரியாரைத்துணைக்கோடல்-சிற்றினஞ்சேராமை - தெரிந்துசெயல்வகை - வலியறிதல் - காலமறிதல்-

இடனறிதல்-தெரிந்துதெளிதல்-தெரிந்துவினையாடல்- சுற்றந்தழால்-பொச்சாவாமை-செங்கோன்மை-கொடுங்கோன்மை-வெருவந்தசெய்யாமை-கண்ணோட்டம்-ஒற்றாடல்- ஊக்கமுடைமை-மடியின்மை-ஆள்வினையுடைமை-இடுக்கணழியாமை - அமைச்சு-சொல்வன்மை-வினைத்தூய்மை-வினைத்திட்பம்- வினைசெயல்வகை - தூது-மன்னரைச்சேர்ந்தொழுதல்-குறிப்பறிதல்- அவையறிதல் - அவையஞ்சாமை-நாடு-அரண்-பொருள்செயல்வகை-படைமாட்சி - படைச்செருக்கு-நட்பு-நட்பாராய்தல்-பழைமை- தீநட்பு- கூடாநட்பு-பேதைமை-புல்லறிவாண்மை-இகல்-பகைமாட்சி - பகைத்திறந்தெரிதல்-உட்பகை-பெரியாரைப்பிழையாமை - பெண்வழிச்சேறல் - வரைவின்மகளிர்-கள்ளுண்ணாமை-சூது-மருந்து-குடிமை-மானம்-பெருமை-சான்றாண்மை-பண்புடைமை-நன்றியிற்செல்வம்-நாணுடைமை குடிசெயல்வகை-உழவு-நல்குரவு-இரவு-இரவச்சம்-கயமை) என்னும் எழுபது வகுப்பினதாகும். இவற்றுள் (கடவுள்வாழ்த்து. என்பது மூவர்க்குமுதலாயுள்ளமூர்த்தியைவாழ்த்துதல்.) என்றால் விருப்பு - வெறுப்பு அகன்று தன்வயத்தனாதல்-தூயவுடம்பினனாதல் - இயற்கையுணர்வினனாதல்-முற்றுமுணர்தல்-இயல்பாகவே பாசங்களினீங்குதல்-பேரருளுடைமை-முடிவிலாற்றலுடைமை - வரம்பிலின்பமுடைமை என்னும் எண்குணத்தோடுதனக்கொப்பற்றிருக்கின்றகடவுளாகியோன் அதன் திருவடிகளை வணங்கல்வேண்டும். இத்தலையாயவறத்தினால் மற்றைப்பொருளும் இன்பமும்மலைபோலவுங் கடல்போலவும் பெருகிவளரும். (வான்சிறப்பு, என்பது-அக்கடவுளது-ஆணையால் உலகமும் அதற்குறுதியாகிய அறம்பொருளின்பங்களும் நடத்தற்கேதுவாகிய மழையினதுசிறப்பு.) என்றால் வானம் வழங்காதாயின் அறநெறியால்வந்த பொருள்களைத்தக்கார்க்கு உவகையோடு தானங்கொடுத்தலாகிய இல்லறமும் மனம்பொறிவழிப்போகாது நிற்றற்பொருட்டு தவஞ்செய்தலாகிய துறவறமுங்கெடுமாதலால் அவ்வானம் வழுமையாதவண்ணம் வேள்விகளையுந் தருமங்களையுஞ் செய்துவால்வேண்டும். (நீத்தார்பெருமை - என்பது முற்றத்துறந்த முனிவரதுபெருமை.) என்றால் அறமாதி நான்குபொருள்களையுந்தெரிந்து பஞ்சேந்திரியங்களை நிக்கிரகித்தமுனிவர்கள்-வேதியர்-புலமையோர்-என்னும் இக்கூட்டத்தினரிடத்து அன்புகூர்ந்திருத்தல்வேண்டும்இவர்கள் ஒருகாற்கோபித்து ஓர்மொழியுதிப்பாராயின் காத்தருளுகின்றகடவுளருங்கலங்கலெய்துவர் ஆதலால் அப்பெரியோர்களை வ

த்துவதேகடன் அவர்கள்பொறுப்பரொன்று அவமதிக்கத்தகாது. குரவர்களையும் பெரியோர்களையும் வேதாகமங்களையும் மேலாகவெண்ணிப் பரவத்தக்கதேயன்றி ஒளித்தேனும் ஓர்சிந்தனையைக் கருதலாகாது.(அறன்வலியுறுத்தல், என்பது-அம்மேலோரால் உணர்த்தப்பட்ட உறுதிப்பொருள் நான்கனுள் அறமானது பொருள்-இன்பம்-வீடென்னுமூன்றனையுந் தருவதற்கேதுவாதலால் அதனைவலியுறுத்திக் கூறுதல்.) என்றால் செல்வப்பொருளும் சொர்க்கலோக வின்பமும் முத்திவீடும் ஆகியமூன்றினையுந் தருவதான அறத்தினைமனவாக்குக்காயமென்கின்ற முக்கரணத்தாலும் ஒன்றுபட்டு நாடோறும் பரிந்துநடாத்தி வரல்வேண்டும். அதனை நேர்ந்தபோதுசெய்யாது பின்னாற்செய்துமெனக்கருதி நழுவவிடலாகாது, அவ்வாறு விடாமல் உனக்கியன்றமட்டுஞ்செய்து வருகின்றகாலத்தினும் பிறராக்கம் பொறாமையும் புலன்கண்மேற்செல்லுகின்ற அவாவும் அவையேதுவாகப் பிறர்பால்தரும்வெகுளியும் அதுபற்றிவருங் கடுஞ்சொல்லும் ஆகியநான்கனையுங்கடிந்துசெய்தல்வேண்டும். அறத்தாலடுக்கும் இன்பமே இன்பமன்றி மற்றையின்பங்களெல்லாந் துன்பத்தினையும் பழியையுந்தோற்றுவிக்கும் அதனை மறந்தோர்க்கு உடனே எல்லாக்கேடும்வந்து உற்பவிக்கும்.

இல்வாழ்க்கை-என்பது இல்லறத்தோடுங்கூடி வாழ்தல்.) என்றால்-பிரமசாரி-வானப்பிரத்தன் சந்நியாசி * பிதிரர்-குரவர்-தேவர்-விருந்து ஒக்கல்-பெரியோர்-மறையோர்-இறந்தோர்-ஏற்போர் - உறுப்பில்லார்-பிணியாளர் - விருத்தர்-பாலர்-சிசுக்கள்-மூத்தோர் - என்னுமிவர்களையோம்பி இல்லறநெறியை வழுவாமற்செய்தல் வேண்டும். (வாழ்க்கைத்துணைநலம் என்பது அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய இல்லாளதுநன்மை.) என்றால் ஒருவன் எய்தும் பொருள்களுள் மனையறத்திற்குத்தக்க நற்குண நற்செய்கைகளை ‖ உடையவ

---

* பிதிரராவர்-படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர்கடவுட்சாதி. அவர்க்கிடந்தென்றிசையாகலின் தென்புலத்தாரென்றுகூறுவர்.

‖ நற்குணங்களாவன-துறந்தார்ப்பேணலும்-விருந்தயர்தலும்-வறியார்மாட்டருளுடைமையு முதலாயின. நற்செய்கைகளாவன வாழ்க்கைக்குவேண்டும்பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தலும் அட்டிற்றொழில்வன்மையும் ஒப்புரவுசெய்தலு முதலாயின.

ளாயுந் தன்னைக்கொண்டவனது வருவாய்க்குத்தக்க வாழ்க்கையையு டையவளாயு மிருக்கின்ற இல்லாளின்மேம்பட்ட பொருள்கள் யாவையுள அவளால்மேலான பிரயோசனமும் புகழும் உண்டாவதன்றிப் பகைவரெதிரில் இடபத்தைப்போல மனக்கோட்டமின்றி நடக்கத்தக்கபெருமிதநடையும் உண்டாகும் ஆதலால் அத்தன்மைத்தாகியமனைவியோடு உவப்புற்றுவாழ்தல்வேண்டும். (புதல்வனைப்பெறுதல்என்பது அந்தணர்முதலிய மூவராலும் இயல்பாக இறுக்கப்படுங்கடன், மூன்றனுள் முனிவர்கடன் கேள்வியானுந் தேவர்கடன்வேள்வியானுந் தென்புலத்தார்கடன் புதல்வனைப்பெறுதலானும் அல்லது இறுக்கப்படாமையின், அக்கடன் இறுத்தற்பொருட்டு நன்மக்களைப்பெறுதல்) என்றால் புதல்வரானவர், பிறப்பேழின் கண்ணும் பெற்றோனுக்குத் தீவினைவளராதுதேய்த்தற்குக்காரணமாகிய நல்வினைகளையுந் தென்புலத்தார்க்குரிய கடன்களைச் சாலமுடிக்கு மாண்பினையும் உடையோராதலால் குற்றமற்ற தவங்களைச்செய்தேனும் புதல்வனைப் பெறவேண்டும் பின்னர் அப்புதல்வனைக் கற்றோர் அவையத்தின்கண் அவரினு மிக்கிருக்குமாறு கல்விபுடையவ ராக்கல்வேண்டும். (அன்புடைமை, என்பது-இல்லறம் இனிது நடாத்தலும்பிறவுயிர்கண்மேல் அருள்பிறத்தலுமாம்) என்றால் யாக்கையகத்தின்கணின்று இல்லறத்திற்குறுப்பாகிய அன்புடையரல்லாதார்க்குப் புறத்தின்கண் இடமும்பொருளும் ஏவல்செய்வாருமான உறுப்புக்களெல்லாம்அவ்வறஞ்செய்வதற்கண் என்னஉதவியைச்செய்யும் ஒருவன்சோர்வுற்றகாலத்தும் அவ்வன்பின் வழுவா திருத்தல் வேண்டும், அவ்வாறிருந்ததினல் நொதுமலும் பகையும் உறவாகும் அளவிறந்த சிறப்பெய்தும் மேற்கூறிய வாழ்க்கைத் துணையையும் மைந்தரையுந் தொடர்பின்வளர்த்துவரும்.(விருந்தோம்பல்-என்பது இருவகை 0 விருந்தினரையும்பேணி அவர்க்குபசாரஞ் செய்தல்.) என்றால் பயன்வேண்டினோர் விருந்தினரைச் சேய்மையிற் கண்டுழி இன்முகமும் அவர்பற்றிநண்ணியவழி இன்சொல்லும் பின்னர் உடன்பட்டவழி வஞ்சகமில்லாத நன்றாற்றலும்என இன்றியமையாத இம்மூன்றனுள் முதற்கண் இன்முகம் வேண்டும்அஃது இல்லாவிடின் மோந்துழியல்லது வாடாத அனிச்சம்பூவினும் விருந்தினர்மெனி

0 விருந்தினர்என்பது புதியராய்வந்தவர். அவர்பண்டறிவுண்மையிற் குறித்துவந்தாரும் அஃதின்மையிற்குறியாது வந்தவரும் என இருவகையர்.

யராதலால் அவர்சேய்மைக்கண்ணே வாடிநீங்குவர். (செய்ந்நன்றி யறிதல், என்பது - தனக்குப் பிறர்செய்தநன்றியைமறவாமை.) என்ருல் இவர்க்குஇதுசெய்யின் இன்னதுபயக்குமென்று ஆராய்தலில்லாமல் ஒருவனுக்கு இறுதிவந்தஎல்லைக்கண்செய்த உபகாரந்தன்னை நோக்கச்சிறிதாயிருந்ததாயினும் அக்காலத்தைநோக்க அதற்கோரளவில்லை. அல்லது பயனுலேனுங்காரணத்தாலேனும் வருந்தும்பதத்திற்செய்த உதவியாயின் அதனைஉலகத்தினும் பெரிதாகவிரும்பி மதித்தல் ஏற்போரதுகடமையாம்-மேலும் - தமக்குமுன்னொருநன்மைசெய்தவர் பின்கொன்ருலொத்த இன்னுதவற்றைச் செய்தாராயினும் அவர்முன்செய்த நன்மையைமதித்துப் பின்செய்ததீமையைச் செய்தபொழுதே மறத்தல்வேண்டும் இல்லையாயின் அந்தணனைக் கொன்றபிழையினும் மேலானபிழைமலைபோலப் பெருகும். (நடுவுநிலைமை-என்பது-அறத்தின்வழுவாது ஒப்பநிற்குநிலைமை.) என்ருல் பகை-நொதுமல்-நண்பு என்னுமிம்மூன்றுபகுதியினுஞ் சமனுகநின்று நோக்குநிலைமையுடையார்க்குச் செல்வப்பேறும் - மக்கட்பேறும் உண்டாகும் இவ்விரண்டுபேறும் அம்மக்கள்வழியுள்ளார்க்கும்அழிவின்றி நிலைத்திருக்கும். அந்நிலைமையினை யடையாராயின் அஃது அவர்க்குத்தீவினையாற்கேடும் நல்வினையாற் பெருக்கமுமாக முன்னர் அமைத்திருக்கின்றபயன்களைப்போக்கி இடையில் வேறுவேருன பெரும்பிழைகள்வந்துபொருந்தும்.

அடக்கமுடைமை, என்பது - முக்காரணங்களுந் தீநெறிக்கட் செல்லாது அடங்குதலுடையனுதல்.) என்ருல் இல்லறத்திலிருந்து எல்லாப்போகங்களையும் பஞ்சேந்திரியங்கட்கு விருந்தூட்டிவாழ்கின்றகாலத்தினும் மெய் - மொழி - மனம் - ஆகியமூன்றனையும் அவ்விந்திரியங்களின் வழிச்செல்லவிடாமல் அடக்கினர், எழுமைநப்பிறவியினும்நல்ல பயனையடைவர் அவர் அப்பிறவிகடோறுஞ் செய்துவருகின்றவினைகளெல்லாம் நல்வினையேயாகும் எல்லாத்துன்பங்களும் ஒழியும் தருமதேவதையும்அடுக்கும். சொர்க்கலோகத்தினையும்அடைவர். (ஒழுக்கமுடைமை-என்பது-தத்தம் வருணத்திற்கும் நிலைமைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கத்தினையுடையராதல்.) என்ருல் தாழ்ந்தவருணத்துதித்தவராயினும் ஒழுக்கமுடையராயின் உயர்ந்தவர். உயர்ந்தகுலத்திற்பிறந்தாராயினும் ஒழுக்கமில்லாராயின் இழிந்தாவர். ஆதலால் அவ்வொழுக்கத்தினை எல்லாப்பொருளினுஞ்சிறந்ததாகிய உயிரினும்மேலாக எண்ணிப் பாதுகாத்தல்வேண்

 

டும், அஃது தன்னையடுத்தோர்க்குத்துணையாகச்சூழ்ந்து எல்லாச்சிறப்பினையும் இன்பத்தினையுஞ்சுரப்பிக்கும் தன்னை ஒழுக்கிவிட்டோர்க்கு இழுக்கினைத்தரும்.(பிறனில்விழையாமை என்பது காமமயக்கத்தாற்பிறனுடைய இல்லாளைவிரும்பாமை) என்றால் பிறனுக்குப் பொருளாயுள்ள தன்மையையுடையாளைக் காதலித்தொழுகுகின்ற அறிவினர்களும் வரைவின்மகளிரோடும் இழிகுலமகளிரோடுங்கூடி இன்பத்தினை நுகர்வாரும் அறமும்பொருளும் இழந்தலேயன்றி அச்சத்தாற்றுங்கருதிய இன்பத்தையும் இழக்கின்றாராதலால் பிறனில்லாளைக்காதலிக்குந் தீங்கினைக்கைவிடல்வேண்டும் இல்லாவிடின் பகை-பாவம்-அச்சம்-குடிப்பழி- என்னு நான்குகுற்றமும் ஒருக்காலுநீங்காவாம் எல்லாப்பெருமைகளு மழியும். அத்தீமையினையொழிந்தோர்கள் அறம்-பொருள்-இன்பம் - என்னு மூன்றினோடுங்கூடிவாழ்வர் ஓர்விளையாட்டால் அதனைக் கனவின்கண்கருதுவராயினும் எல்லாத்தீங்கும்வந்தெய்தும். (பொறையுடைமை - என்பது-ஒருவன் தமக்குமிகைசெய்யின் அதனைத்தாமும் அவன்கட்செய்யாது பொறுத்தலையுடையராதல்) என்றால்-ஒருவன் காரணத்தாலேனும் மடமையாலேனுந் தாம்வெறுக்கும்படியாகச் செய்தபிழையைப் பொறுப்பதே பேரறமாகும். தமக்குத் தீங்குசெய்தவனையொறுத்தார்க்கு உண்டாவது கருதியதுமுடித்தேமெனத் தருக்கியிருக்கும் பொய்யின்பமாகிய அவ்வொருநாளையின்பமேயன்று அதனைப்பொறுத்தார்க்கு உலகமழியுமளவும் உண்டாகும்புகழுநிறைவும் அவருக்கில்லை அறிவுடையாரும் மகிழ்ச்சிகொண்டு பொறையுடையாரைப் பொன்போலப்பொதிந்துகொள்வர். மிகைசெய்தவனைப் பகைசெய்வதால் வருவதொன்றுமில்லையாதலால் பொறுமையை உயிர்த்துணையாக எண்ணல்வேண்டும். (* அழுக்காறுமை—என்பது-பொறாமைசெய்யாமை) என்றால் ஒருவன் தனதுநெஞ்சத்தின்கண் அழுக்காறென்னும் பெரும்பிழையையுடையானாயின் அது அவனுக்குரியவொழுக்கநெறிகளைக்கொடுக்கும் எல்லாப்பொருள்களையும்ஒழிக்கும் இம்மைக்கட்செல்வத்தைக்கெடுப்பதன்றி, அவன் சுற்றத்தினர்க்கும் உண்ணப்படுவன உடுக்கப்படுவன வின்றிக்கெடுத்து மறுமைக்கண்

* அழுக்காறு என்பதொருசொல். அச்சொல் - பின்னழுக்காற்றைச்செய்யாமையென்னும் பொருள்பட எதிர்மறையாகாரமும் மகரவைகாரவிகுதியும்பெற்று அழுக்காறுமை யெனநின்றது.

நரகத்திற்செலுத்திவிடும். ஆதலால் அவ்வழுக்காறென்னும் பெரு
ம்பகையைத் தேவர்களிடத்துஞ்செலுத்தாதிருத்தல்வேண்டும். (வெ
ஃகாமை-என்பது பிறர்க்குரியபொருளை வெளவக்கருதாமை.) என்
றால்பிறர்க்குரியனகோடல் நமக்கு அறன் அன்றென்று நடுவுநிலைமை
யின்றி அவர் நன்பொருளை ஒருவன்கவரக் கருத்துறுவனாயின் அக்க
ருத்து அப்பொழுதே அவனுக்குப் பலகுற்றங்களைக்கொடுத்து அவ
ன்குடியையுங்கெடச்செய்யும், என்றும் அழியாதபெருந்துன்பத்தி
னைவிளைக்கும் வசையுற்றபழிச்சொற்களையும் வளர்க்கும் பழமையா
யுள்ளநீரைப் புதியவெள்ளங்கொண்டுபோவதுபோல அவனுக்கு மு
ன்னுள்ளபொருள்களும் அழிந்துபோம்.

புறங்கூறாமை, என்பது - காணாதவழிப்பிறரை இகழ்ந்துரை
யாமை.) என்றால்ஒருவன் எந்நாளும்அறமென்பதைக்கொன்று பா
வங்களைச் செய்வானாயினுந் தம்மெதிர்நின்று மாளவுரைத்தானாயி
னும் அவனைக் காணாதவழி இகழ்ந்துரைப்பதை மறந்துஞ்செய்
வராயின் சுற்றத்தினர்பிரிவார் நட்பினர் நாடார் யாவருந்நேர்நி
ன்று வசைகூறுவர். (பயனிலசொல்லாமை, என்பது- தமக்கும்பி
றர்க்கும்அறம்பொருளின்பமாகிய பயன்களுள், ஒன்றுபயவாதசொ
ற்களைச்சொல்லாமை.) என்றால்பயனிலவாகியபொருள்களை ஒருவ
ன்விரித்துரைப்பானாயின் அஃது அறிவுடையார்க்கு வெறுப்பைச்
செய்வதன்றி எல்லாராலும் இகழ்ந்துநகைக்கப்படும் வெளிற்றறிவ
னென்னும் பெயரையுண்டாக்கும் விழுப்பத்தினையும் மதிப்பினையு
நீக்கிவிடும் அறமுதலியநான்கு உறுதிப்பொருள்களும் பயக்காது
ஆதலால்யாவரிடத்தும் பயனிலசொல்லாமைவேண்டும் (தீவினையு
ச்சம், என்பது பாவங்களாயின செய்தற்குஅஞ்சுதல்) என்றால்இப்
பூவுலகத்தின்கண் பலவகைகட்குந்தப்பிப்பிழைத்தல்எளிதாருந்தீவி
னைப்பகையானது எக்கதியிற்செல்லினும் பின்தொடர்ந்து நன்றென்
பனவனைத்தையுங் கொன்று அருந்துயரைப் பலவாறளிக்கும்ஆதலா
ல்கொடியதீவினையால் யாதொன்றுஞ் செய்யாதிருத்தல் வேண்டும்,
(ஒப்புரவறிதல், என்பது உலகநடையினையறிந்து செய்தல்.) என்
றால் ஒருவன்தனதுமுயற்சியாற் பெருக்கிய பொருள்களை யெல்லாம்
ஊரின்வாழ்வார் தண்ணீருண்ணுங்குளம் நீர்நிறைந்தாற்போலும்
ரபடுமரம் ஊர்நடுவேபழுத்தாற்போலும்யாவர்மாட்டுஞ்செலுத்
விநிற்றல்வேண்டும். அவ்வொப்புரவு செய்தலால் அவ
கேடு வருமாயினும் அக்கேடு தன்னை விற்றாயினும்

கொள்ளுந் தகுதியையுடையது - (ஈகை, - என்பது வறியராயேற்றார்க்குமாற்றாதுகொடுத்தல்.) என்றால் ஒருவன்தன்னிடத்தில்இரக்க வந்தானாயின் அவன் வீணிற்செல்லயான் இதுபொழுதுபொருளுடையேனல்லேன் எனக்கரப்பாற்சொல்லுஞ் சொல்லையுரையாது அவன் இரப்பினையிரப்புதலும் யான்வறியேனென்றுசொல்லும்இளிவரவைப்பிறர்பாற்கூறுகவென்று இரப்பினும் அதனையவ்வாறுகூறாது இரக்கமோடிதலும் இரப்பான் இவனென்றுசொல்வதன்முன் குறிப்பறிந்தீதலும் அதுபோதாமைபற்றிப்பின்னும் பிறனொருவன்பாற்சென்று அவனுரையா வகைகொடுத்தலும் எக்காலத்தும்வறியனென்னுவகை அளவின்றியளித்தலும் ஆகியஇவ்வைவகைஈகையும்ஒன்றுக்கொன்று மேலானபுகழோடு விளங்கிநிற்கும். அன்றியும்இவன்நலமிருக்க செல்வத்தைப்பெற்றுந் தரித்திரனைக்காக்குந் தன்மை இலன் அறமாதி புருஷார்த்தங்களுமில்லனென்று பிறர்கூறும் பழியுரைக்கஞ்சியேனும் புகழும்பிரயோசனமும் வேண்டினேன், இரப்பானைவறியானென்று அவைமதிக்காதுதனது யாக்கையையுமளித்தல்வேண்டும். (புகழ் என்பது இல்வாழ்க்கைமுதல் ஈகை யீறாகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனாகிஇவ்வுலகத்தின்கண் இகழ்ந்து இறவாதுநிற்குங்கீர்த்தி) என்றால்பூதவுடம்பிறக்கினும் பூதலமழியுங்காறும் புகழுடம்பிருக்குமாதலால்அப்புகழுடம்போடு வறியார்க்குவரையாது கொடுக்குங் கொடையால்உண்டாகின்ற செல்வத்தைப் பெற்றுவாழும்பேற்றினையுடையவரேவான் செல்வத்தையுந் தமக்குக் கிழாக்குஞ்சீர்மையையுடையார்.

இறைமாட்சி, என்பது, அரசனதுநற்குண நற்செய்கைகள்.)என்றால் மேற்கூறிய அறத்தின்வழியால் தனது வொருகுடையின்கண் கடல்சூழ்ந்த உலகமுழுவதும் ஆளவேண்டிய அரசன்-அமைச்சு-நாடு-அரண்-பொருள்-படை-நட்புஎன்னும் இவ்வாறங்கங்களையும்அவன்யாக்கைக்குற்ற உறுப்புக்களை யொப்பமதிக்கக் கடவன். அன்றியும் ஓர்வினையின்கண் அஞ்சாமையிற்றல்-அவ்வினை செய்வோர்க்களித்தல்-அவ்வினைசெய்தற்கண் மனவெழுச்சியுறல்-அவ்வினையினைவிரைவின்முடித்தல். ஆண்மையுறல்கொலையாதிகளைநீக்கல்வீரத்தின்வழுவாதமானமுடைமை முதலியகுணங்களெல்லாம் அவ்வரசனுக்குஇயல்பாகஇருத்தல்வேண்டும். குடிகள்தளர்வுற்றகாலத்தில் அவர்களிடத்திலிருந்து தான்கொள்கின்ற ஆறிலொன்றாகிய பொருளைக்கொள்

ளாது விடுத்துமுறைசொல்வார்க்கும் * குறைசொல்வார்க்குந் தடையற்றதனது காட்சியையளித்து யாவரிடத்துங் குளிர்ந்த இன்சொற்களைக்காட்டித் தீயனகண்டால் நெருங்கிஇடித்துச்சொல்லுந் துணையாந்தன்மையையுடையார் கூறும் வன்சொற்களையும்பொறுத்துத்தனக்கோதிய ! அறத்தின்கண்வழுவாதொழுகிநிற்றல் வேண்டும். மேலும்அவ்வரசன் போர்முகத்திற் பகைவரைவென்றுதிறைகொண்டுதன் னாட்டினையளித்து-மணி-பொன்-நெல்முதலிய பொருள்களையீட்டிஅப்பொருளைப் பகைவர் கள்வர்சுற்றத்தார் வினைசெய்வார் முதலாயினோர் கொள்ளாமற்காத்து அறமாதி ? மூன்றின்பொருட்டாகவிடுத்துதனதுசெங்கோலை வளர்ப்பதுமாட்சிமையாகும் (கல்வி, என்பது அவ்வரசன் தான்கற்றற்குரிய நூல்களைக்கற்றல்.) என்றால்அறநூலையும் நீதிநூலையுந் தேர் - கரி - பரி- படைக்கலம்என்னுமிவற்றினூல்களையும் ஐயந்திரிவறக்கற்று அவைகளைக்கற்றிருக்கின்ற பண்பினரோடுநாளும் அளவளாவி அவைசொல்லுகின்ற நெறிக்கண்ணேநிற்றல்வேண்டும். (கல்லாமை, என்பதுகற்றலைச்செய்யாமை.) என்றால்உடலோடொழியுஞ் சாதியின்கண், உயர்ந்தாராயினுந் தாழ்ந்தாராயினும். உயிரோடொழியுங்கல்வி ‖ யுயர்ச்சியாற்சிறப்பினையுடையார். மற்றெவ்வகைக்கல்வியாற் சிறப்படைவாரெனில் தமக்கோரகக்கண்ணுதித்தாம்புக்கும் எக்கதியின்கண்ணுந் தொடருந்த

* முறைசொல்வார், வலியரான்மெலிவெய்தினோர். குறைசொல்வார், வறுமையுற்றிரந்தார் எனக்கொள்க.

! அவ்வறமாவது ஓதல் - வேட்டல் - ஈதல் - என்னும் பொதுத்தொழிலினும் படைக்கலம்பயிறல் பல்லுயிரோம்பல் பகைத்திறந்தெறுதல் என்னுஞ் சிறப்புத்தொழிலினும் வழுவாதுநிற்றலாம்.

? கடவுளர் அந்தணர் வறியோர் என்னுமிவர்க்கும் புகழிற்குங்கொடுத்தலை, அறப்பொருட்டாகவும் யானை குதிரை படை நாடு அரண் என்னுமிவற்றிற்கும் பகையோடுகூடலிற் பிரிக்கப்படுவார்க்குங்கொடுத்தலைப் பொருட்பொருட்டாகவும் மண்டபம் வாவி செய்குன்று இளமரக்கா முதலிய செய்தற்கும், ஐம்புலன்களானுகர்வனவற்றிற்குங்கொடுத்தலை இன்பப்பொருட்டாகவுங்கொள்க.

‖ உயிரோடொழியுங் கல்வியாவது அறமுதலாயுள்ள உறுதிப்பொருள்களையுணர்த்தாது, பிறபொருள்களை யுணர்த்துவதாம். உடலோடொழியாக்கல்வியாவது, அவ்வுறுதிப்பொருள்களை யுணர்த்தி ...ள்களையொழிப்பதாம்.

ன்மையனவாகிய கல்வியினூற்சிறப்படைவாராதலால் இத்தன்மைத்தாகிய பெருங்கல்வியைக் கல்லாமையென்னுந்தொழிலினை ஒருவன் பற்றறவிடல்வேண்டும். (கேள்வி, என்பது கேட்கப்படுநூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டல்.) என்றுல்கசடறக்கற்றகல்வியோடுங் குற்றமற்றஒழுக்கம் * உடையார் வாய்ச்சொல்லானது ஒருவன் வறுமையாலேனும் அறிவின்மையாலேனுந் தளர்வெய்திநெஞ்சழியுங்காலத்து உறுதிபயத்தற்கு உற்றதுணையாயும் எக்காலத்துங்கற்றவுணர்வினை வளர்ப்பதாயும் இறுதியற்ற இன்பத்தை யீட்டுவதாயு மிருக்கின்றதால் அதனைக்கேட்டல் வேண்டும்.

அறிவுடைமை, என்பது கல்விகேள்விகளினுய அறிவோடு உண்மையறிவுடையனுதல்.) என்றுல்யாவர்க்குங் குணங்கள் ! மூன்றும் மாறிமாறிவருதல் உண்மையாதலின் இழிந்தவன் உயர்ந்தபொருளையியம்பினுனாயினும், உயர்ந்தவன் இழிந்தபொருளையுரைத்தானாயினும் அப்பொருளின்கணுள்ளபயனை ஆராய்ந்துகொள்ளவேண்டுவனவற்றைக்கொண்டு ஒழிக்கவேண்டுவனவற்றை யொழித்தல்வேண்டும். பிறராற்கூறப்படுஞ்சொற்கள்வழுவுள்ளனவாயினும் இனிதுவிளங்காதன வாயினும் உள்ளபயனைக்கொண்டொழித்துத்தான் சொல்லுஞ் சொற்கள் அரியபொருளினவாயினுங் கேட்போர்க்கு எளிதாய்விளங்குமாறு அவர்மனங்கொளச் சொல்லல்வேண்டும். அன்றியும் உலகத்தையெல்லாம் யான்நியமித்தலால் என்னைநியமிப்பார் இல்லையெனக்கருதித்தானினைத்தவாறே யொழிகிற்பாவமும் பழியுமாகலால் உலகம்யாதொருவகையால் ஒழுகுகின்றதோ அவ்வுலகத்தோடுமேவித்தானும் அவ்வாறொழுகிப் பின்னர்வரத்தக்கதாகிய அழிவினை முன்னரறிந்துகாத்துப்பழிபாவமுதலானவைகட்கஞ்சிக் குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன்போல மனத்தைப்

* கல்வியுடையரேனும் ஒழுக்கமில்லாதார் அறிவிலராகலின் அவர்வாய்ச்சொற் கேட்கப்படாதென்பது தோன்ற,ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்லென்றார்.

! குணங்கள் சாத்துவீகம்-இராசதம்- தாமதம்எனமூன்றும். அவற்றுள்,ஞானம்-அருள்-தவம்-பொறை-வாய்மை- மேன்மை-மோனம்-ஐம்பொறியடக்கல்-எனவெட்டுஞ்சாத்துவீகம்.மனவூக்கம் ஞானம்-வீரம்-தவம்-தருமம்தானம்கல்விகேள்வி எனவெட்டும் இராசதம் பேருண்டி -நெடுந்துயில் - சோம்பு-நீதிவழு - ஒழுக்கவழு - வஞ்சம் - மறதிபொய் கோபம் காமம் கொலை இவைகள் தாமதம்.

புலமறிந்து செலுத்துவது அறிவாதலின் அவ்வறிவால்மனத்தை அது சென்றபுலத்தின்கட் செல்லவிடாது அப்புலத்தினது நன்மைதீமைகளை ஆராய்ந்துதீயதனினின்று நீக்கி நல்லதன்கட்செலுத்தல் வேண்டும். உலகத்துள் உயர்ந்தவராயினாரைத் தழுவிக்கொள்ளுங்காலத்து அவரோடு ஒருநிலைமையாயிருக்கின்ற கோட்டுப்பூவைப்போல விருப்பதன்றி முன்னர் மலர்தலும் பின்னர்க்கூம்புதலுமான வேறுபாட்டினையுடைய கயப்பூப்போலச், செல்வமிருந்தகாலத்து மலர்தலும்-வறுமையெய்தியகாலத்துக் கூம்புதலுமான அறிவின்மையையொழித்தல்வேண்டும். (குற்றங்கடிதல், என்பது எல்லாக்குற்றங்களையும் அரசன் தன்கணிகழாமற் கடிதல்.) என்றால் அருந்தவர்தாய்தந்தையர்-முன்னோர்-அந்தணர்-சான்றோர் என்னுமிவர்களிடத்தில் வணக்கமின்மையும் செருக்கும்வேண்டும்வழிப்பொருள் கொடாமையும்வெகுளியும் காமமும் கடும்பற்றுள்ளமும் ஆகியஇக்குணங்களை யெல்லாங்கடிதல்வேண்டும். ஒருவன் தன்குற்றங்கடியாதவழிப் பிறர்குற்றங் கடிதல்பெருங்குற்றமாதலால் முன்னர் தன்குற்றத்தினைக்கண்டு கடிந்துபின்னர் பிறர்குற்றங்களைக்களைதல்வேண்டும். சிறிதேனுங் குற்றம்புரிவனாயின் அதனால் அவன்பெரியசெல்வமானது எரிமுகத்துநின்ற வைக்குவைபோல அழிந்துவிடுவதன்றி அதுபகைவர்க்கு இலாபத்தையுண்டாக்கும் முனியாதவரானு முனிவிக்கும் முற்றும் பெருநோயையுழப்பிக்கும். அன்றியும் ஒருவன் தான்காதலித்த பொருள்களையனுபவிக்குங்கால், அக்காதல் பகைவரறியாதவண்ணம் ()அநுபவித்துஎஞ்ஞான்றுந் தன்னை நன்குமதித்துவியவாது தனக்குநன்மைபயவாதவினைகளை மதத்தான் முடிக்காதிருக்கின் அவனுக்கு வென்றியும் புகழும் விழுப்பமும் உண்டாகும். (பெரியாரைத்துணைக்கோடல் - என்பது அரசன் றீமைநீக்கி நன்னெறிசெலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக்கோடல்.) என்றால் அறத்தினது நுண்மையையறிந்து நூலினியல்பும் உலகினியல்புமாகிய விரண்டனையுந் தெரிவி

() அறிந்தவழி அவைவாயிலாகப்புகுந்து வஞ்சிப்பாராதலின் அறியாதவண்ணம் அநுபவித்தென்றும். தன்னைவியந்துழி இடமுங்காலமும்வலியும் அறியப்படாமையானும் அறனும்பொருளும் இகழப்படுதலானும் எஞ்ஞான்றும் வியவற்கவென்றும். கருதியதுமுடித்தேவிடுவலென்று அறம்பொருளின்பங்கள் பயவாவினைகளை நயப்பின் அவற்றாற்பாவமும் பழியும்கேடும்வருமாகலின் அவற்றைமதத்தான்முடிக்கற்க வென்றுங்கூறினார்.

க்கவல்லாராகிச்சீலம்உறுதி ஆயுள்என்னுமிவைகளின்முதிர்ந்தோரை அரசன்தனக்குத் துணையாகக்கொண்டு அவரைத்தன்னினுஞ்சிறந்தவராகவெண்ணி அவர் இயம்பு நெறியே நிற்றல் வேண்டும். மழையின்மிகுதி - மழையின்மை - காற்று - தீ - பிணியென்னுந் தெய்வத்தால் வருந்துன்பங்களை உற்பாதங்களால் அறிந்து கடவுளரையுந் தக்கோரையு நோக்கிச்செய்யுஞ் சாந்திகளால் நீக்கிவைப்பாரும் பகைவர் - கள்வர் - சுற்றத்தார் - வினைசெய்வார் என்னுமக்களால்வருந் துன்பங்களைக் குணம் இங்கிதம் * ஆகாரஞ்செயல் என்பனவற்றுலறிந்து சாமபேததான தண்டங்களாகிய நால்வகையுபாயத்தால் விலக்கி வைப்பாரும், அப்பெரியோராதலால் அவரதுதுணையே சிறந்ததுணையாகும்.

சிற்றினஞ் சேராமை - என்பது சிறியவினத்தைப் பொருந்தாமை.) என்றால் ஒருவன் நல்லவினைக்கு நற்பயனும் தீயவினைக்குந் தீப்பயனும் இல்லையென்கின்ற அறிவிலார்களையும் விடர் - தூர்த்தர் - நடர்முதலிய குழுவினரையுஞ் சேர்ந்தொழுகுவனாயின் இம்மைமறுமைப்பயனோடு புகழையு மிழப்பனாதலால் எத்துணையான்றுஞ் சிற்றினத்தைச் சேராதிருத்தல் வேண்டும். (தெரிந்துசெயல்வகை, என்பது அரசன்தான்செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்யுந்திறம்) என்றால் ஓர்வினையைச் செய்யும்பொழுதே அவ்வினைக்கு அழிக்கும்பொருளுக்குப்பின் வரும் ஆக்கம்மேலாதலும் அவ்வழிபொருளுக்கு அவ்வாக்கம் ஒத்திருத்தலும் ஆகிய இரண்டனுளொன்று உறுவதாயின் அவ்வினையைத் தெரிந்த வினைத் தொழில் ஆராய்ந்து பின்னர் தானுந் தனித்தெண்ணிச் செய்தல் வேண்டும். வலியுங்காலமுமிடனுமறியாது பிறர்மனை வெல்வானெனவுந் தன்மனனுமிழுத்தல்போலெடுத்தவை யழிதலினைநோக்கி, முன்னெய்தின்ற முதலையும் இழத்தற்கேதுவாய்வினையைச் செய்யாதிருத்தல்வேண்டும் அன்றியும் - பகைவர்மேற் செல்லுங்கால் வலி - காலம் - இடம் - என்னுமிவைகளால்தனக்கும் அப்பகைவர்க்கும் உள்ள நிலைமைகளும் வினைதொடங்கும்பொழுது அதற்குவரும் இடையூறுகளும் அவற்றை விலக்குவதும் பின்னர் வெல்லுவதும் அதனால்வரும்பயனும் ஆகிய இவைபலவற்றையுந்தேர்ந்துணர்ந்து, ஓர்வினையைச் செய்தல்வேண்டும். தன்வினைகளுட் செய்யத்தகாதனவாகிய பெரியமுயற்சியானவும்

---

* இங்கிதம் குறிப்பால்வெளிப்படும் உறுப்பின்றொழில். ஆகாரங்குறிப்பின்றிநிகழும் வேறுபாடு.

செய்தாற்பயனில்லனவும் அதுசிறிதாயினவும் ஐயமாயினவும் பின்னர் துயர்விளைப்பனவும் ஆகிய இவைகளைச்செய்தாலும் செய்யத்தகுந்தனவாகிய அவற்றின்மறுதலையாயினவைகளைச் செய்யாதொழிந்தாலும் எல்லாப்பெருமைகளுங்கெடும் இவ்வாறு தேர்ந்துசெய்யத்தக்ககருமமுடிக்கு முபாயத்தையெண்ணி முயறல்வேண்டும் அவ்வுபாயம் தானம் - சாமம் - பேதம் - தண்டம் - எனநால்வகைப்படும் அவற்றுள்தானமாகிய கொடுத்தலைப்பொருள் நசையாளன்கண்ணும் சாமமாகிய இன்சொல்லைச் செப்பமுடையான் மடியாளன் முன்னேபிறரோடுபொருது அயர்ந்தவன் எனஇவர்கண்ணும் பேதமாகியவேறுபடுத்தலைத் துணைப்படையாளன் தன்பகுதியோடு பொருந்தாதான் என இவர்கண்ணும்தண்டமாகிய ஒறுத்தலை இம்மூவிதவுபாயத்தினும்வாராதவர், கீழ்மக்கள் எனஇவர்கண்ணுஞ்செய்துவெல்லுமாற்றால் முயறல்வேண்டும். மேலும் - தான்வலியனுயுள்ளகாலத்துத் தான சாம - பேதமாகிய - மூன்றினை மெலியாரிடத்திற்செய்தாலும் மெலியனுயுள்ளகாலத்துத்தண்டத்தை வலியாரிடத்திற்செய்தாலும் நலிவினையுண்டாக்குமாதலால் எக்காலத்து எவ்வெவரிடத்தில் எவ்வாறுசெய்யவேண்டுவதோ அக்காலத்து அவ்வவரிடத்தில் அவ்வாறுசெய்தல்வேண்டும்.

வலியறிதல், என்பது. அவ்வுபாயங்களுள் ஒறுத்தல்குறித்த அரசன்நால்வகைவலியையும்அளந்தறிதல்) என்றால் தான்செய்யக்கருதியவினைவலியும் அதனைச்செய்துமுடிக்குந் தன்வலியும் அதனைவிலக்கலுறும் மாற்றான்வலியும் இருவர்க்குந்துணையாவார் வலியும் ஆகியஇந்நான்குவலியினையும் அறிந்துசீர்தூக்கித் தன்வலிமிகுமாயின் அவ்வினையைச் செய்யல்வேண்டுமன்றி இருவர்வலியுமொப்பாயிருந்தவின்கண்ணும் தன்வலி குறைந்தவிடத்தின்கண்ணும் ஓர்வினையை எண்ணத்தகாது அதனாற்றோல்வியும் இழுக்கும்உண்டாகும். நிறைந்தவலியினன் ஒருவனுநல்லிணையாகக்குறைந்த வலியார்பலர்கூடினும். அதுஎன்னபயனைத்தரும் ஆதலால் அத்தன்மைத்தாகியவலியினனைத் துணைக்கொள்ளுதலும் பலர்கூடினுமொன்னும் மனவெழுச்சியாற் றம்மின்வலியாரோடு வினைசெய்யத்தொடங்குதலும் வெற்றியைத்தரமாட்டாது. ஈயுநெறியின்கண் தனக்குள்ளபொருளின் எல்லையை யறிந்து அவ்வெல்லையை நான்குகூறாக்கி அதில் ஒருகூறைமேல்வருங்களைகட்குதற்கும் இரண்டுகூறைத்தன்செலவிற்கும் வைப்பான்றனையீதல்வேண்டும் அவ்வாறீயுமிடத்து அதனி

வேண்டும். அஃதெவ்வாறெனில் - முதலாவதுபுரோகிதனையும் அற வோனையும்விட்டு அவரால்இவ்வரசன் அறவோனல்லாமையின்இவ னைப்போக்கி அறனும்உரிமையுமுடையானொருவனைவைத்தற்கெண் ணினம் இதுதான்யாவர்க்கும் இயைந்தது நின்கருத்தென்னையெனச் சூளுறவோடு சொல்லுவித்தல்வேண்டும். இரண்டாவதுசேனைத்தலை வனையும் அவனோடியைந்தாரையும்விட்டு அவரால்இவ்வரசன்பொரு ளாசையுள்ளவனாகலின் இவனைப்போக்கி கொடையும் உரிமையுமு டையான் ஒருவனைவைத்தற்கெண்ணினம். இதுதான்யாவர்க்குமி யைந்தது நின்கருத்தென்னையெனச் சூளுறவோடு சொல்லுவித்தல் வேண்டும். மூன்றாவதுதொன்றுதொட்டும் உரிமையோடும் பயின் றவளாகி ஓர்தவமுதாட்டியைவிட்டு அவளால் உரிமையுள் இன்னாள் நின்னைக்கண்டு வருத்தமுற்றுக்கூடுவிக்கவேண்டுமென்று என்னைவி டுத்தாள் அவளைக்கூடுவையாயின் நினக்குப்பேரின்பமேயன்றிப்பெ ரும்பொருளுங் கைகூடுமெனச் சூளுறவோடு சொல்லுவித்தல்வே ண்டும். நான்காவதுஒருநிமித்தத்தின்மேலிட்டு ஓரமைச்சனால் எனை யோரை அவனில்லின்கண் அழைப்பித்து இவர் அறைபோவான் எ ண்ணற்குக் குழீஇ ஒன்றுதான்காவல்செய்து ஒருவனால் இவ்வர சன் நம்மைக்கொல்லச் சூழ்கின்றமையால் அதனை நாம்முற்படச் செய்து நமக்கினிய அரசனொருவனைவைத்தல் யாவர்க்குமியைந்த து நின்கருத்தென்னையெனச் சூளுறவோடு சொல்லுவித்தல் வே ண்டும் இந்நான்கு உபதைகளினும் திரிபிலராயின் அவர் எதிர் காலத்துந் திரிபிலரென்று தெளியப்படும் மேலும் நல்ல குடியி ற்பிறந்து காமமுதலிய அறுவகைக்குற்றங்களோடு மடி-மறப்பு முத லியவைகளையு நீக்கி நமக்குவடுவருங்கொல் என்றஞ்சாநிற்கு நாணு டையவனையே ஓர்ந்தறிதல்வேண்டும். கற்றற்கரிய நூல்களைக்கற்று மேற்சொல்லியகுற்றங்களைக்களைந்தாரிடத்தும் அறிவின்மை விளங் கிநிற்குமாதலால்அதனை நுண்ணிதாகஆராய்தல்வேண்டும்இவ்வாறு ஆராய்ந்து தெளியப்பட்டவருஞ் சுற்றமில்லாதாராயின் அவர்களிட த்து பழிப்பன ஒழிதற்கும் புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உல கநடையியல்பு இன்மையின் அவர்கள்பழிபாவத்திற் கஞ்சார்கள். ஆ ால் சுற்றமாயினாரைச் சூழ்தல்வேண்டும், குணங்குற்றங்களுள் ஒ ாடையார் உலகத்தின்மையின் பின்னர் அச்சுற்றத்தினரிடத் ருதிகளையும்ஆராய்ந்து குற்றமின்றிக்குணமேமிக்கதா க்குரியவராக்கிக்கொள்ளல்வேண்டும். ஒருவனது

பெருமையுஞ் சிறுமையுந் தப்பாமல் அறியவேண்டில் அவனவன் செய்யுங்கருமமே உரைக்கல்லாவதன்றிப் பிறிதொன் றின்மையால் அதனுல் அவனைத் தேர்ந்தறிதல்வேண்டும். அன்புடைமையேபற்றுக்கோடாகத் தமக்கறியவேண்டுவனஅறியாதாரிடத்தில் ஓர்வினையளித்தலை யொழித்தல்வேண்டும். தன்னுேடியை புடைய ரல்லாதாரைப் பிறப்புமுதலியவற்ருனுஞ் செயலானும் ஆராய்ந்தறிதல்வேண்டும். அவ்வாறு ஆராய்ந்து தெளியப்பட்டபின்னர் அவரை அவர் ஆற்றலுக்கேற்றவினைகளில் விடுத்தல்வேண்டும் அவ்வாறு விடுத்த பின்னர் அவரிடத்து ஒருதீதுகாணுது அரசன் ஐயுறுவனுயின் அதனை அவரறிந்து இனி இதுநில்லாதென்னுங் கருத்தால் அவ்வினையினின்று நீங்குவர் அதனைப்பகைவரறிந்தால் எளிதிற்பிரித்து விடுவர் பின்னர்தேரான் தெளிவினைப்போலக் கேடுவருமாதலால் வினைசெய்வார்பால்தீதுகண்டவழி ஐயுறல்வேண்டும்.

தெரிந்துவினையாடல், என்பது-அத்தெளியப்பட்டாரை அரசன் அவர்செய்யவல்ல வினைகளையறிந்து அவற்றின்கண்ணே யாளுந் திறம்) என்றுல் மேல்கூறிய எல்லாவகையானும் ஆராய்ந்து தன்னுல் தெளியப்பட்டவரை முன்னர்ப்பொதுவாகிய வினையில் விடுத்தல் வேண்டும். அவர் அவ்வினையின்கண் ஆவனவும் ஆகாதனவுமாய செயல்களை யாராய்ந்தறிந்து அவற்றுள் ஆவனவற்றையேவிரும்பி நடாத்திவருவராயின் பின்னர் அவரைச் சிறந்தவினையின்கண் விடுத்தல்வேண்டும். அவ்வாறுவிடுத்தபின்னர் வேறுபடுவராயின் மீட்டும் மேற்கூறிய பொதுவினையின்கண்விடுத்து ஒழித்து விடல்வேண்டும். அன்றியும் அரசன்மாட்டன்பும் அவனுக்கு ஆவனவற்றையறியும் அறிவும் அவைசெய்தலின்கண் கலக்கமின்றி இனிது முடிக்கத்தக்க மனத்துணிவும் அவ்வினையாற்பொருள் தமது கையுற்றவழி அதன்மேல் அவாவின்மையும் ஆகியசெய்கைகளையுடையாரோ தம்மரசனது வினையைக்குற்றமறமுடிக்குங் குணத்தையுள்ளவர். இவ்வாறுசெய்பவரது இலக்கணத்தை முன்னர் ஆராய்ந்துபின்னர்செய்யப்படும்வினையினது இயல்பை யாராய்ந்து இக்காலத்து இவ்விலக்கணமுடையான்செய்யின் இவ்வியல்பிற்றாய வினைமுடியுமென்று அறிந்துவிடுத்தல்வேண்டும். ஒருவன் தன்னினத்தின் மிக்கவுரிமையனுகிய சுற்றத்தினனுயினும் செய்யுமுபாயங்களையறிந்து செயலாலும்இடையூறுகளாலும் வருந்துன்பங்களைப் பொறுத்து முடிவுசெய்யவல்ல அறிவும் ஆற்றலும் இலனுயின் இவ்வினையை இப்பொருளா

லும்இத்துணைவராலும் இவன் முடிக்கவல்ல னெனக் கூறுபடுத்து ஆராந்துமூன்றுந் தன்னுளியைந்தவழி அவ்வினையையவன்கண்ணே விடுத்துப் பின்னர்அதனைத் தானேசெய்துமுடிக்கும் ஆற்றலுடையான் ஆக்கல்வேண்டும் ஒருவன் எப்பொழுதுந் தன்வினையின்கண்ணே முயற்சிதவறாதுபிறனுயுநில்லாது கேளிர்செய்யும் உரிமையெல்லாஞ்செய்தொழுக அதுபொறாதார் கூறுஞ்சொற்களை அரசன்கேட்டு அவனை அவமதிப்பாகக்கொண்டு பகைப்பனுயின் அவன் அவ்வினையினின்று நீங்குவன் பின்னொருவரும்அவ்வினைக்குஉட்பட்டுமுயல்வாரில்லையாம். ஆகவேதன்செல்வத்திற்குக் கேடுறும் வினைசெய்வார் கோடாதிருப்பராயின் உலகங்கெடாதிருக்குமாதலால் அரசன் அவர்செயலைநாடோறும் ஆராய்தல்வேண்டும். (சுற்றந்தழால், என்பது அரசன் தன்கிளைஞரைத்தன்னினீங்காமல் அணைத்தல்) என்றுல் ஒருவன்செல்வந்தொலைந்து வறியனுயகாலத்தும் பிறரைப்போலவிடாது தம்மோடு அவனிடைப்பழைமையெடுத்துப்பாராட்டுமியல்புகள் சுற்றத்தாரிடத்துளவாகலால் அவரைப்பெருங்கொடையாலும் இன்சொற்களாலும் அரசன்தழுவுவனுயின் அவனுக்கு எக்காலத்துஞ்சோர்வனுகாது செல்வம்மேலுமேலும் விர்த்தியாகும் தன்னைவெல்லநினைக்கும்பகைவர் தொழிலும் பயன்பெறாது. (பொச்சாவாமை, என்பது-உருவுந்திருவும் ஆற்றலுமுதலியவற்றான்மகிழ்ந்து தற்காத்தலினும் பகையழித்தன்முதலிய காரியங்களினுஞ்சோர்தலைச்செய்யாமை) என்றுல் அரசனுயினன் பெருமிதம் - பெருஞ்செல்வம் பேரெழில்-பேரின்பம்- என்னுமிவைகளால் வருங்களிப்பின்மூழ்கினனுயின் உடனேபொச்சாப்புஉண்டாகும் அதனுல் அவன்பகைவரைவென்று பாதுகாக்கவல்ல எல்லாப்பொருளும் அழிவெய்தும் தூங்காமைமுதலியமூவகையாற்றலுந் தானமுதலிய நால்வகையுபாயங்களும் ஈட்டல்முதலிய ஐவகைத்தொழில்களும் நட்பாக்கல்முதலிய அறுவகைக்குணங்களும் மற்றுமுள்ள யாவுங்கெடுவதன்றி தேவர்முதலிய எழுவகைப்பிறவிகட்கும் நன்மையுறாது ஆதலால் தான்செய்யக்கருதிய காரியத்தின்கண்நெகிழ்ச்சியுறாமற்சென்றுமுயற்சிசெய்வனுயின் அவனுக்குக் கிடைக்காதபொருள் ஒன்றுமில்லை முற்காலத்தில் அந்நெகிழ்ச்சியினுற்கெட்டவர்களைநினைத்து- நாமும் அவ்வாறிருக்கின் நம்மைக் கேடுறுமென்றுகருதி அதனைக்கைவிடல் வேண்டும்.

செங்கோன்மை, என்பது- அரசனாற்செய்யப்படுமுறையினது தன்மை * என்றால்மழைவளத்தாற் குடிகட்கு உணவுமுதலியவுளவாயினுந் தம்மையாளுமரசன்ஒழுக்கம்-வழக்கு-தண்டம்-என்னுமூவகை 0 அறத்தின்வழி தனதுசெங்கோலைச்செலுத்திலனாயின்அவைகளால்அக்குடிகட்கு என்னபயன். ஆதலாற்செங்கோல்செலுத்தும் வெண்குடைவேந்தன் தீயார்மாட்டுமூவகையொறுப்பும் உடைத்தாதல்வேண்டும். அம்மூவகையொறுப்பு துன்பஞ்செய்தலும் பொருட்கோடலும் கோறலும் ஆம் அவற்றுள் துன்பஞ்செய்தலாவது குற்றஞ் செய்தவர்கள் உயிரினுஞ் சிறந்தவராயினும், அவர் பாற்கண்ணோடாது அக்குற்றத்தையேநாடி நடுவுநிலைமையைப்பொருந்தி அக்குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடும் ஆராய்ந்து அவ்வளவிற்றாகச் செய்வதாம். பொருள்கோடலென்பது குற்றத்தாராலும் பகைவராலுங் கள்வராலும் உயிர்வர்க்கங்களாலுந் துன்னுறுங்குடிகட்கு ஓரிடையூறெய்தாவண்ணங் காத்து தீயவின்கண் ஒழுக்கினோர்களைப் புடைத்துப் பொருள்சம்பாதித்தலாம். கோறலென்பது தீக்கொளுவுவார் நஞ்சிடுவார் கருவியிற்கொல்வார் கள்வர் ஆறலைப்பார் சூறைகொள்வார் பிறனில்விழையார் என்னுமிவர் முதலாயினோரை உழவன் களையைக்களைந்து பைங்கூழைக் காப்பது போலக் கொலையானொறுத்துத் தக்கோரைக்காத்தலாம் மழைவளஞ்சுரப்பது

* அம்முறை ஒருபாற்கோடாது செவ்வியகோல் போறலிற்செங்கோலெனப்பட்டது.

0 ஒழுக்கம்-என்பது, அந்தணர்முதலியவருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசாரியமுதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற் கோதிய அறங்களில் வழுவாதொழுகல். வழக்கென்பது-ஒருபொருளைத்தனித்தனியே எனதெனதென்றிருப்பார் அதுகாரணமாகத் தம்முண்மாறுபட்டு அப்பொருண்மேற்சொல்வது அது - கடன்கோடல்-உபநிதி-கூடிமேம்படல் நல்கியதைநல்காமை ஒப்பிப்பணிசெய்யாமை-கூலிகொடாமை-உடையனல்லான் விற்றல் - விற்றுக்கொடாமை-கொண்டுள்ளமொப்பாமை கட்டுப்பாடுகடத்தல்-நிலவழக்குமாதராடவர் தருமம்-தாய்பாகம்- வன்செய்கை-சொற்கொடுமை-தண்டக்கொடுமை-சூது-ஒழிபு - எனப்பதினெட்டாம். தண்டமென்பது- அவ்வொழுக்கநெறியினும் - வழக்குநெறியினும் வழீஇனோரை அந்நெறிநிறுத்தற்பொருட்டுஒப்பநாடி அதற்குத்தகவொறுத்தல்.

ம்வயனிலம்விளைவதும் அறம்வளர்வதும் வேதநூல் விளங்குவதும் பொருளீட்டுவதும் சமரில்வெல்வதும் குற்றமறவாழ்வதும் அரசனு ற்செலுத்தப்படுகின்ற செங்கோலினுகும். ஆதலால் இத்தன்மைத் தாகிய செங்கோலைத்தனக்கு முட்டுவந்தவழியும் முட்டாமற்செலுத் துவனுயின் -அவனை அச்செங்கோலேகாக்கும், முறைவேண்டினோர் க்கு எளியசெவ்வியை யுடையவனுய் அவர்சொல்லியவற்றை நூலோ ர்பலரோடும் ஆராய்ந்து நின்ற உண்மைக் கொப்பமுறைசெய்யானுயி ன்தனக்குப்பகையின்றி மேனும் பழியும்பாவமுந் தேய்ந்து விடும். (கொடுங்கோன்மை,என்பது அம்முறையினது கோடுற்ற தன்மை.) என்றால் அரசன்பொருளை வெஃகிக் குடிகளை அலைத்தற் றொழிலைத் தன்மேற்கொண்டு முறையல்லவற்றைச் செய்தொழுகுவனுயின் அந் தணர் நூல்களைமறந்துவிடுவர் அவனுட்டுப்பசுக்களும் பால்குன்றும் பருவமழையின்றும்வகைமேகமும் பொழிதலைச்செய்யாது முன்னீ ட்டியபொருளும் பின்னீட்டுதற் கேதுவாகிய குடிகளும் ஒருங்கு நீங் கும் அவனுட்டின்கணுள்ளபெரும்பயனுங்குன்றும், அவன் புகழுநி லைபெருது. (வெருவந்தசெய்யாமை, என்பது குடிகளஞ்சுவதும்ப குதியஞ்சுவதுந் தானஞ்சுவதுமாய தொழில்களைச்செய்யாமை.) எ ன்றால் அரசனுயினேன் கடியசொல்லுங்கண்ணேட்டமின்மையுங்கு ற்றத்தின்மிக்க தண்டமும் நடுவுநிலையின்மையுந் தன்னைக் காணவே ண்டுவார்க்குச் செவ்வியின்மையுங்கண்டால் இன்னுமுகத்தினையுடை மையுங் காரியத்தைப்பற்றிவந்தஎண்ணத்தை அமைச்சர்மேல்வைத் து அவரோடுதானும் எண்ணிச்செய்யாமையும் அப்பிழையாற்றன்கா ரியந்தப்பியவழிசினந்து அவ்வமைச்சரை வெகுளுதலும் செருவருத ற்குமுன்னே தனக்குப் புகலாவதோர் அரண்செய்து கொள்ளாமை யும் ஆகிய இவைகளெல்லாந் தீங்காக எண்ணிவிடல்வேண்டும்.

கண்ணேட்டம், என்பது பட்சம். ) என்றால்அரசன்தன்னே டுபயின்றுரைக்கண்டால் அவர்கூறின்மறுக்கப்படாமையாகிய கண் ணேட்டத்தைத், தான்முயன்றுசெய்யு முறைக்குக் கேடுநினைப்பார் மாட்டுந் தனக்குநன்மைகெடத் தீங்குகாட்டினூர் மாட்டுங் கொள்ளா திருத்தல்வேண்டும். (ஒற்றுடல், என்பதுபகை-நொதுமல்-நட்புஎ ன்னுமூன்று திறத்தார்மாட்டுநிகழ்ந்தனவறிதற்குஒற்றனையாளுதல்) -சன்நீதிநூலைத் தனதுஉளக்கண்ணுகவும் ஒற்றைவெளி

க்கண்ணாகவும் * விடுத்துத் தன்காரியஞ்செய்வார் சுற்றத்தார் பகைவர்என்று சொல்லப்பட்ட அனைவரையுஞ்சொல்லாலுஞ் செயலாலும்ஆராய்தல்வேண்டும் அவ்வாறுஆராயத்தக்கஒற்றன் எவ்வாறிருக்கவேண்டுமெனில். ஏனையோர்கண்டால் ஐயுறாதவடிவோடுபொருந்தி அஞ்சாதுநின்று யாவரேனும்ஐயுற்றுப்பிடித்து என்செய்துகேட்டாலுந் தன்னைவெளிப்படுத்தாதவனாயிருத்தல்வேண்டும். அந்தன்மைத்தாகிய ஒற்றையாளுமிடத்து ஒருவனை யொருவனறியாதவண்ணம்ஆளல்வேண்டும். அங்ஙனமாண்ட ஒற்றர்மூவரை ஒருபொருண்மேல்வேறுவேறுவிடுத்தல்வேண்டும் பின்னர் அம்மூவர்கள்வந்து சொல்லுமொழிகள் ஒன்றுக்கொன்றொத்திருக்கின் அக்கருமத்தை மெய்யென்றுதெளிதல்வேண்டும், அக்கருமத்தைப் பின்புமறைக்க வேண்டுவனாயின், அவ்வொற்றர்கட்குச் செய்யுஞ்சிறப்பினைப்பிறரறியாமற் செய்தல்வேண்டும். (ஊக்கமுடைமை, என்பது மனமெலிதலின்றி வினைசெய்தற்கட் கிளர்ச்சியுடைத்தாதல்) என்றால் ஊக்கமுடையவர்கள் கைப்பொருளையிழந்தார்களேனும் அவர்கள் அழிவில்லாதஆக்கத்தையுடையவரேயாவர். அவ்வாக்கமிருந்தும் அசைவற்றஊக்கமிலராயின், ஏதுமிலராவர் அவர்கள்முயல்கின்ற முயற்சியும்பொருளுங்கொடையுஞ்செருக்கும் முறைமையைச்சேராது. (மடியின்மை, என்பதுகருதியனசெய்யுங்காற் சோம்புதலில்லாமை.) என்றால் ஒருவனிடத்தில்மடியென்பதொன்றிருக்குமாயின், அவன்வினைந்துசெய்யுந் தொழிலைக்கெடுக்கும் ஐயமறநிற்குமாயில் இவைகளைவிளைவிக்கும் கலதியைச்சேர்ப்பிக்கும் பகைவர்க்கு அடிமையாகச்செய்யும் தான்பிறந்தகுடியைக்கெடுக்கும் ஆதலால் அதனைவிடுக்கின் அவன்குடியுள்ளும் ஆண்மையுள்ளும் வந்தகுற்றங்கள்ஒழியும். (ஆள்வினையுடைமையென்பது இடைவிடாத மெய்ம்முயற்சியுடையனாதல்.) என்றால் ஒருவன்தன்தனுவினைவிடாது செய்கின்றமுயற்சியானது பொருளைமேலுமேலும் வளர்க்கும்சுற்றம்கட்புலனை என்றுமிவைகளைக் கொடாதவண்ணந்தாங்கும் யாவர்க்குந்தடைபடாத உபகாரத்தை

---

* ஒற்றானது தன்கண்செல்லமாட்டாத பரப்பெல்லாஞ்சென்று கண்டு-ஆண்டுநிகழ்ந்தனவெல்லாமுணர்த்தலாலும் நூலானது அங்நிகழ்ந்தவற்றிற்குத்தன்னுணர்வு செல்லமாட்டாத வினைகளையெல்லாஞ் சொல்லியுணர்த்தலாலும் - இவ்விரண்டனையுமே தனக்கு ஊனக்கண்ணும் ஞானக்கண்ணுமாகத் துணிந்துகொண்டு ஒழுகவேண்டுமென்பதாம்.

ச்செய்விக்கும் இலக்குமிவிலாசமுண்டாக்கும் பயனைவிலக்குவதாய் ஊழ்வந்தகாலத்தும் அப்பயனையே கெடாதவண்ணம் விர்த்தியாக்கும்பழிகளைநீக்கும். (இடுக்கணழியாமை, என்பதுவினையின்கண்முயல்வான் இடுக்கண்வந்துழி அதற்குமனங்கலங்காமை) என்றால்ஒருவனுக்குத்தெய்வத்தாலேனும் பொருளின்மையாலேனும் மெயவருத்தத்தாலேனும் இடுக்கண்வருமாயின் அதற்கழிவுறாது தேவகதி மக்கட்கதி விலங்கின்கதி நரககதிஎன்னு நாற்கதியினுமுள்ள உடம்புகள் இடும்பையென்னும்வாளுக்கு இலக்காவதுசுபாவமென்றுதெளிந்து தன்மேல்வந்த இடும்பையைஇன்பமாகக்கொள்ளல்வேண்டும்.

அமைச்சு, என்பது அமைச்சனதுதன்மை) என்றால் சிறியமுயற்சியினாற்பெரியபயனைத்தருவதானவினையும் அவ்வினைசெய்யுங்கால்அதற்குவேண்டியபொருளும்அதற்கியைந்தபடையும் அதற்கேற்றகாலமும், அதுதொடங்குமஉபாயமும் அதுசெய்யுமாறும் அதனிடையூறு நீக்கிமுடிவுபோக்குமாறும் ஆகிய இவைகளோடுதனக்குத்துன்பநேரிட்டகாலத்தும் வினைசெய்தற்கண் அசைவின்மையுங்குடிகளைக்காத்தலும் முயற்சியும் நீதிநூல்களைக்கற்றுச் செய்வனதவிர்வன அறிதலும், வினைவந்துழிபகைவர்க்குத்துணையாயினரை அவரிற்பிரிக்கவேண்டிற் பிரித்தலுந் தன்பாலாரை அவர்பிரியாமற்கொடை இன்சொற்களாற்பேணிக்கொள்ளுதலும் முன்னே தம்மினுந்தம்பாலாரினும் பிரிந்தாரைமீண்டும் பொருத்தவேண்டிற்பொருத்தலும் ஒருகாரியச்செய்கை பலவாற்றாற்றோன்றின் அவற்றுள் ஆவது ஆராய்ந்தறிதலும் அதுசெய்யுங்கால் வாய்க்குந்திறநாடிச்செய்தலும் சிலரைப்பிரித்தல் பொருத்தல்செயற்கண் அவர்க்கு இதுவேசெயற்பாலதென்று துணிவுபிறக்கும்வகைசொல்லுதலும் அரசனுக்கு ஆக்கமொருத்தனவாகுந்திறலும், அறிந்துசொல்லியாரது அறிவையும் அழித்து அரசன்தானும்அறியானேயாயினும் அக்குற்றம்நோக்கியொழியாது,அவனுக்குஉறுதியாயினகூறுதலும், நூனெறியான்வினைசெய்யுந்திறங்களை யறிந்தவிடத்தும் அப்பொழுதுநடக்கின்ற உலகவியற்கையையறிந்து அதனோடுபொருந்தச்செய்தலும் தன்னரசன் சுருங்கியகாலத்தும்பெருகியகாலத்தும் இடைநிகராயகாலத்தும் அவன்செய்யப்படும் அறங்களையறிந்துதனக்கேற்ற கல்வியால் நிறைந்தமைந்த சொல்லையுடையவனுய் வினைசெய்யுந் திறங்களையறிவதும் ஆகிய இவ்வியல்புகளையுமுடையவனே அமைச்சனுவான். செய்யப்படும்வினைகளை முன்னர் அளவுபட எண்ணல் மாத்திரமன்றிசெய்யுங்கால்

அவைகளை முடிக்கமாட்டாத அமைச்சனுந் தன்னரசனுக்கு அகிதமெண்ணும் அமைச்சனும்எழுதப்பட்டசித்திரங்களினுமாகா. (சொல்வன்மை, என்பது தான்கருதியவினை முடிக்குமாற்றால் அமைச்சியல் நடத்துதற்கேதுவாய சொற்களைச்சொல்லவல்லனாதல்.) என்றால் தன்னிற்பிரிக்கப்பட்டவரும் பகைவருமாகிய இவர்கள்பின்னர்கூடி வேறுபடாமலிருக்குமாறும் அப்பகைமையொழிந்து நட்பினைவிரும்புமாறும் அவருள்ளத்தைப் பிரிக்கத்தக்கசொற்களைத் தன்காரிய முடிவெய்தும்வண்ணங், குடிப்பிறப்பினுங்கல்வியிலும் ஒழுக்கத்திலுஞ் செல்வத்திலும் உருவத்திலும பருவத்திலுந் தனக்கும் அவர்க்கும் உளவாய ஏற்றத்தாழ்வுகளை யறிந்துசொல்லல்வேண்டும். அவ்வாறுசொல்லுமிடத்து சுருக்கி மெய்விளக்கி இனிமையையும் பயனையுந்தொகுத்து அயலார்கூறுமொழிக்கு இடையாதமொழியாக வழுவின்றி அவைசொல்லுமாறஞ்சுதலின்றி யுரைக்க வல்லவனே அமைச்சனாவன். அவ்வாறின்றி மேற்கூறிய சுருக்கன்முதலிய குணங்கட்கு மறுதலையாகப் பலவாய வார்த்தைகளை வீணேவிரித்துரைக்க வல்லவனுங்கற்றுவைத்த நூலைப் பிறரறியும்வண்ணம் விரித்துரைக்க மாட்டாதவனும் மெல்லியனேயாவன்.

வினைத்தூய்மை, என்பது செய்யப்படும்வினைகள் நல்லவாதல்) என்றால் தன்னரசனுக்கு ஆக்கத்தை யுண்டாக்கவல்ல அமைச்சன் பொருளையன்றி அறமும் இன்பமும் பயவாத வினையை எஞ்ஞான்றும் புரியான் ஒருகால்மயங்கி அவற்றைச் செய்தானாயினும் அது செய்தற்குப் பின்னிருந்திரங்கான் * தாய்தந்தையர் கற்புடையமனைவியர் இளமக்கள் என்னுமிவர்கள் பசியால்வருந்தினும் உலகத்தின்கண் ஏனையோர்போல அறிவுடையார் பழிக்கும் வினைகளைச்செய்யான். (வினைத்திட்பம் என்பது அத்தூயவினைமுடிப்பானுக்குவேண்டுவதாய மனத்திண்மை) என்றால் பழிபடும் தீவினைகளைச்செய்யானும் ஊழால் ஊறுவந்தடுப்பினுங் கலங்கானும் செய்யப்படும்வினையை முடிவின்கண் அன்றிஇடையில்தனது இங்கிதம் வடிவுசெயல்மொழி என்னுமிவைகளால் வேறுபடுமாறுசெய்யானும் மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்தவினையின்கண் பின்னசைதலின்றி முடிக்க

* பின்னிருந்திரங்குவனாயின் அதுதீரும் வாயிலறிந்திலனெனவுந் திட்பமிலனெனவும் பயனில்லனசெய்கின்றானெனவுந்தன்பழியைத் தானேதூற்றுகின்றானெனவும் எல்லாருமிகழ்தலிற் பின்னிரங்காமை நன்றென்றார்.

விரைவானுமே அமைச்சனாவன் இத்தன்மையனாகிய அமைச்சனை அவனதுவடிவின் சிறுமைநோக்கி இகழ்தலைச்செய்யாதஅரசனே அரசனென்னப்படும். (வினைசெயல்வகை, என்பது அத்திட்பமுடைய அமைச்சன் பகையிற்றன்வலியனாயகாலத்தும் ஒப்பானாயகாலத்தும் மெலியனாயகாலத்தும் அவ்வினையைச்செய்யுந்திறம்) என்றால் தான்வலியனாயகாலத்து இனி இவ்வினைதப்பாதென்னுந் துணிவினைப் பெறுமளவும்விசாரித்து அங்ஙனம் விசாரித்துந்துணிவுபெற்றவினையின்கண்நீடித்தலை யொழித்துத் தன்பகையோடுநேரிற்செய்தலும்- அப்பகையிற் றனொப்பானாயகாலத்து அழிபொருளும் ஆகுபொருளும் தன்றானையும் மாற்றான்றானையும் தனக்காங்காலமும் அவற்காங்காலமும் தான்வல்லவினையும் அவன்வல்லவினையும் தான்வெல்லுமிடமும் அவன்வெல்லுமிடமும்ஆகிய இவ்வைந்தையுமாராய்ந்துதான்வென்றியெய்துந் திறத்திற்பிழையாமல் எண்ணிபடர்த்தலும். தானாளுகின்றநாடும் அரணும் அற்பமாகித் தன்னின்வலியனாயெதிர்வழிதன்பகுதி நடுங்கலுக்கஞ்சி மெலியோனாயகாலத்து அந்நிலைக்குவேண்டுவதாய சந்துகூடுமாயின் அவனைத்தாழ்ந்து அதனை ஏற்றுக்கொள்ளலும்ஆகிய இம்மூவகைத்தொழிலும் பண்பின்மிக்க அவ்வமைச்சர்தொழிலாகும். (தூது, என்பது சந்திவிக்கிரகங்கட்கு 0 வேற்றுவேந்தரிடைச்செல்வாரதுதன்மை) என்றால் தூதருள்தலை இடை கடைஎனமூவகையாருளர் அவருள் அமைச்சு பூணற்கமைந்தகுடியின்கட்பிறந்து நீதிநூலையுணர்ந்த அமைச்சரிடைத்தான் அந்நூலைகற்றறிந்து அவ்வமைச்சரது குணங்களையுமுடையனாய்த் தன்சுற்றத்தார்மாட்டுந் தன்னரசன்மாட்டும் அன்புடைமையும் வேற்றரசர்விரும்பும்பண்புடைமையும் அவர்மாட்டாராய்ந்து கூறுஞ்சொல்வன்மையும் கண்டார்விரும்புந்தோற்றப்பொலிவும் இயற்கையறிவும் ஆகிய இவையனைத்தையுமருவி வேற்றரசரிடத்துச்செல்லுங்கால் அவரிடத்துத்தான்செய்யுமுறைமையறிந்து பின்சென்றகருமஞ்சொல்லுதற்கேற்றஇடமறிந்து அவர்செவ்விபார்த்து காலத்தோடுபொருந்த அதைமுடிக்கத்தக்க உபாயத்தையறிந்து சொல்லவல்லவன்தலையாயதூதனாம். பொருள்காமங்களைப்பற்றி வேற்றரசரிடத்துவேறுபடக்கூறாததூய்மையும் அவ்வார்த்தை தன்னுயிருக்கு இறுதிதருமாயினும் அதற்கஞ்சியொழியாமையுந், தனக்கு அவர் அமைச்சர் துணையாக்

0 இவற்றுள் பொருத்தலுக்குச் சந்தியென்றும் பிரித்தலுக்கு விக்கிரகமென்றும்பெயர்.

தன்மையும், ஆகிய இம்மூன்றோடுகூடிய மெய்மையுந் தனக்குவரும் ஏதத்திற்கஞ்சி அவனுக்குத் தாழ்வானவார்த்தையை வாய்சோர்ந்துஞ் சொல்லாத திண்மையு முடையவன், இடையாயதூதனும். வேற்றரசனாக்குறுகி ஓலைகொடுத்துநிற்பான், கடையாயதூதனும்.

மன்னரைச்சேர்ந்தொழுகல், என்பது - அமைச்சர் அரசனைப் பொருந்தியொழுகுமாறு) என்றால், அமைச்சனாயினோன்-தன்னாற் சேரப்பட்ட அரசன்அணியப்படுவன, நுகரப்படுவன, மேன்மைப் படுவன. முதலானவைகளைத்தான்விரும்புதலும், அதனைப்பொறுத்தற்கரிய அறைபோதலும், உரிமையோடுமருவலும் அரும்பொருள்வெளவலும் அரசன்அருகிருக்குங்காலத்து அவன்காண ஒருவன்செவிக்கட்சொல்லுதலும், ஒருவன்முகநோக்கிநகுதலும், அரசனுக்கு யாம்பழையமெனக்கருதித் தனக்கியல்பல்லாதவற்றைச் செய்தலும், அரசனை எனக்கிளையவனென்றும்எனக்கின்னமுறைமையினையுடையனென்றுங்கருதி அவமதித்தலும் அரசனால்யாம் நன்குமதிக்கப்பட்டோமெனக்கருதி அவன்விரும்பாதவற்றைச்செய்தலும், ஆகிய இக்கொடுஞ்செய்கைகளைக் கூடாதிருத்தல்வேண்டும். அன்றியுந்-தான் தன்னரசனுக்குக் காரியஞ்சொல்லுங்கால், அப்பொழுதுநிகழ்கின்ற அவன்குறிப்பினையறிந்து, சொல்லுதற்கேற்றகாலத்தையுநோக்கி, அவன்மனம்விரும்பும்வகை வெறுப்பிலவுமாய் வேண்டுவனவுமாயகாரியங்களைவிளம்புதல்வேண்டும். எஞ்ஞான்றும் பயனிலவாயவற்றை அவனேகேட்டாலும் விளம்பாதிருத்தல்வேண்டும். தன்னரசனுக்குப்பிறரோடுமறைநிகழ்வுழித்தான் ஓர்தற்கேற்கும்பொருளாயினும், அம்மறைப்பொருளை அவன்றானேயடக்காதுசொல்லியக்காற்கேட்பதல்லாது, அவனைமுடுகிவினவுவதும், செவிகொடுத்துக்கேட்பதும், அவ்விடத்தணுகுவதும், ஒழித்தல்வேண்டும். (குறிப்பறிதல், என்பது - அரசன்கருதியவதனை அவன்கூறாமலறிதல்.) என்றால், அரசன் தன்மனத்தின்கண்குறித்தகருமத்தைத் தன்னுடன்கூறவேண்டாவகை ஐயப்படாது, அவன்முகமாகுங் கண்ணைநோக்கி, ஒருதலையாகவுணரவல்லதன்மையையும் முகம்விழி இரண்டினுமன்றி தன்குறிப்புநிகழுமாறறிந்து, அதனாற் பிறர்குறிப்பறியுந் தன்மையையும் உடையானை அரசன் தனது-கரி-பரி-பொருள்-நாடு-முதலியபுறத்துறைப்புக்களில் அவன்விழைவனவற்றைக் கொடுத்தாயினுந் தனக்குத் துணையாகக் கொள்ளல்வேண்டும் ( அவையறிதல், என்பது-அரசனேறிருந்த அவையினதியல்பையறிதல் . ) என்றால்

அமைச்சனாயினான்-செஞ்சொல்-இலக்கணச்சொல்-குறிப்புச்சொல்-என்னுமூவகைச்சொற்களையும்;செம்பொருள்-இலக்கணப்பொருள்-குறிப்புப்பொருள்-என்னுமூவகைப்பொருள்களோடு விளங்கச்சொல்லவல்லவனாய், உயர்ந்தோர்-ஒத்தோர்-தாழ்ந்தோர்-என்னுமூவகைத்தாகிய அவைகளையுமாராய்ந்து, உயர்ந்தோரவையின்கண் ஒன்றனை முற்படச்சொல்லாமையும், ஒத்தோரவையின்கண் எவ்வழியுஞ்சொல்லுதலும், தாழ்ந்தோரவையின்கண் ஒருவழியுஞ்சொல்லாமையும், ஆனநற்குணங்களை யுடைத்தாதல் வேண்டும். (அவையஞ்சாமை, என்பது - சொல்லுதற்குரிய அவையினையறிந்து சொல்லுங்கால் அதற்கஞ்சாமை.) என்றால், கற்றாரெல்லாரினும், இவன்நன்கு கற்றானென்று உலகத்தாராற் சொல்லப்படும் அமைச்சன்பலநூல்களையுங் கற்றாரவைக்கண் தான்கற்றவற்றையஞ்சாது அவர்மனங்கொள்ளு மாற்றாற்சொல்லி அவற்றின்மிக்க பொருள்களை, அம்மிகக்கற்றாரிடத்தறிந்து கொள்வன். நூல்களைக்கற்றுவைத்தும் அவற்றின்பயனறிந்துவைத்தும் நல்லாரிருந்த அவைக்கண்நல்லசொற்பொருள்களைத்தன்னச்சத்தால் அவற்கேற்கச் சொல்ல மாட்டாதான், கற்றுங் கல்லாதபுல்லியனாவன். அவன்உயிர்வாழ்கின்றானாயினும், உலகத்தாரால்எண்ணப்படாமையின், இறந்தானேடொப்பன்

(நாடு,என்பது - அவ்வரசனாலும் அமைச்சனாலுங் கொண்டியக்கப்படுவதாய் விளங்குவது.) என்றால், கீழ்நீர் - மேனீர் - எனப்பட்ட இருவகைநீரும்; மலையினின்றும் வருவதாயநீரும், நகர்களுமுடையதாய் எல்லாப்பொருள்களையும் ஒழிவறவிளைவுசெய்யும்பெருங்குடிகளும் கலத்தானுங் - காலானும்-அறம்பொருளீட்டும்- வணிகச்செல்வரும் அந்தணர்-தவத்தர்-துறந்தோர்-கலைஞர்-என்னுமிவர்களும், பிறவுமுள்ளபலரும் வாழ்ந்திருக்கத்தக்கதே நாடாகும். இத்தன்மையத்தாகிய நாட்டிக்குக்குற்றமாவது கடவுள்பற்றியும். சாதிசுற்றியும்-மாறுபட்டுக்கூடும் பலகூட்டமும். ஆறலைப்பார்-கள்வர் குறளைகூறுவார்- முதலியமக்களோடு, பன்றி-மான்-கரடி-புலி - முதலியவிலங்குகளுமான உட்பகைகளும், பொருளினது அளவுபார்த்துஅதனைக்கெடுக்கவருங் குறும்பரும், மிக்கபெயல் - பெயலின்மை- எலி-கிளி-விட்டில்-அரசன்மை-என்னுமிவைகளுமாம். ஆதலால்-மேற்கூறுகுடிகள் முதலாயினோர்கூடவும், சங்கேதர்முதலாயினோர் ஒழியவுந்நாட்டை அரசன் காவல்புரியவனாயின் அதுபிணியின்மை-ம்-விளைவு-இன்பம்-முதலியவனைத்தும் எஞ்ஞான்றும்

உளவாகும் பிறதேயங்களினுள்ளார் குலைந்துவரினும் அவர்களைத் தா ங்கும் தங்கண்வாழ்வார் தேடிவருந்தாமல்அவர்கள்வேண்டியயாவை யுமளிக்கும். (அரண், என்பது - அந்நாட்டிற்குறுப்பாயடங்கியி ருப்பது)என்றால் நீர்க்கிடங்கு -வெள்ளிடைநிலம் - கானம்-மலை- எ ன்னுமிவைகளைக் கொண்டுபுறத்தோர்க்கு அழலாகாத அடி அகலமு ம் எணியெய்தாதவுயர்வும் கல்இட்டிகைகளாற் செயதலிற்குத்தப்ப டாத்திண்மையும் உடையுதாய்ப்புலவகை எந்திரப்பாவைகளையும்அ ணிந்து அகன்ற விடத்தையுடைத்தாய் நல்லபடைவீரர்களோடு பல பொருள்களையுந் தழுவிக்காக்க வேண்டுமிடஞ் சிறிதாய் எத்திறத்தி னும்புறத்தாரற் கோடற்கரிதாய் சுருங்கையாதிகளு மமைந்து அகத் தார்விட்ட ஆயுதமுதலிய புறத்தாரின்மேல் எளிதிற்சேரலும் அவர் விட்டன அகத்தார்மேற் செல்லாமையுமானபோர் நிலைக்கெளிதாயசீ ர்மையையுடையதே அரணெனப்படும். (பொருள்செயல்வகை, எ ன்பது - பெரும்பான்மையும், ஈட்டலும்-அரணும்-ஆக்கவுங்கா க்கவும்படுவதாய, பொருளைச்செய்தலின் திறம்.) என்றால், அரச ன் - தன்குடிகண்மாட்டுச்செய்யும் அருளோடும் அவர்தன் மாட்டுச் செய்யும் அன்போடுங்கூடிவருகின்ற ஆறி லொன்றாகியபொருளும் வைத்தார் இறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட்கிடந்து பின்னர் கண்டெடுத்தபொருளும் உடையாரின்மையிற்றானே வந்துற்றபொ ருளும்கலத்தினுங் காலினும்வரும் பண்டங்கட்கு இறையாய பொரு ளும் தன்பகைவரைத்திறையாகக் கொள்ளும்பொருளும், ஆகியஇவ் வகைப்பொருள்களை ஈட்டல்வேண்டும் இவ்வாறீட்டிய பொருளா னது அவனுக்குஅறத்தையும் - இன்பத்தையும்-புகழையுங்கொடுக் கும்மேலும் பெரும்படையும் நட்பும்-உண்டாகும்-ஆகவேபகைவர் தருக்கொழிந்து தாமேபடங்குவர் எல்லாவினைகளையும்அவனுக்கச்ச மில்லாதபடி வல்லாரையே வித்தாளினிதிருந்துமுடிக்கும். (படை மாட்சி, என்பது-அப்பொருளினால் ஆவதாய்வெல்வதாயபடையின துநன்மை.) என்றால், யானைமுதலிய நான்குறுப்பானும்நிறைந்து போரின்கண் ஊறுபடுதற் கஞ்சாதுநின்று, பகையை வெல்வதாகிய படையே படையாகும். அப்படை கூலிப்படை - நாட்டுப்படை- காட்டுப்படை - துணைப்படை - கைப்படை - மூலப்படை - என அறுவகைப்படும். இவற்றுட்சிறந்தது மூலப்படையாகும் இதிற் சி றந்தவரே வீரரெனப்படும்.இத்தன்மைத்தாகிய படைவீரராயினோ ர், பகைவரைக்கடிதிற்கொன்றுமிற்குந் தறுகண்மையும் அரசனுக்குந்

தாழ்வுவராமற் காக்கும்மானமும் போரின்கண் அஞ்சினுளை எதிர்த்துக்கொல்லும் ஆண்மையும் பகைவராற் கீழறுக்கப்படாத தேற்றமும் ஆகிய, இக்குணங்களையுடையவரோயாயினும் அரசன்பொருள்கொடாமையால் வறுமையும் - சிறுமையும் வெறுப்பும் -உளராயின் பகைவரைவெல்லார். அப்பொருளைக்கொடுத்தகாலத்தும் அவர்வினைசெய்தற்கண் தமக்குத்தலைவரில்லாதவழியும் வெல்லார் (படைச்செருக்கு என்பது-அப்படையினதுமறமிகுதி.) என்றால் தமக்கெதிரில் வேல்வருங்காலத்தும் விழித்தகண்ணை இமையாதிருக்கின்ற வீருப்பும் தமதுமெய்யின்கண் ஊறுபடாதநாள்களையெல்லாம் பயன்படாது கழிந்தநாளாகச் சினந்து நுழிலாட்டயர்கின்ற * ஆண்மையும் அவனைக்கொல்வேனுயின்யான் இன்னனாகுவனென்றுகூறிய ஓர்வஞ்சினத்தைத்தப்பாது முடிக்கவல்ல திறமும் தம் மிறைவன் அதுவேண்டாவென்று முனியினுந் தமது வீரமிகுதியிற்குன்றாதமறமும் தம்மையாண்ட அரசன்தனக்குச்செய்தநன்றிகளைநினைந்து கண்களில் நீர்மல்கும்வகைபோரிடை மடியப்பெறும்பெருமையும் ஆகிய இவையனைத்தும் மேற்கூறியபடையினது செருக்காகும்.

நட்பு என்பது-அரசனுக்கு வினையிடத்துதவுவது.) என்றால்கேட்டினைத்தருந்தீநெறிகளிற் செல்லுங்கால்விலக்கி ஏனையநன்னெறிகளிற்செல்லாக்காற்செலுத்தி தெய்வத்தாற்கேடுவந்துழி அதுவிலக்கப்படாமையின் அத்துன்பத்தை உடனனுபவித்து ஆக்கையொன்றுமே வேறன்றி உயிர்உடனே நீங்கும் உரிமைத்தாய் உணர்ச்சியினும் ஒத்து நூற்பொருள்கற்குந்தோறும் கற்றார்க்கின்பஞ்செய்தலைப்போலத் தம்முட்செய்த நட்புபயிலுந்தோறும் மகிழ்ச்சியுண்டாகக் கலந்திருப்பதேநட்பென்றுசொல்லப்படும். (நட்பாராய்தல், என்பது மேற்சொல்லிய விலக்கணத்தாரை ஆராய்ந்தறிந்தே நட்கவேண்டுதலின் அவரை ஆராயுந்திறம்) என்றால் ஒருவன்மற்றொருவனது மதியுடைமையையும் குடிப்பிறப்பினையும் குணத்தினையும் குற்றத்தினையும் குறைவற்ற சுற்றத்தினையும் எல்லாத்திறத்தினும் பலவாற்றானுராய்ந்து நட்புசெய்வானாயின் அந்நட்பு பின்பாம்பொடு பழையகாலத்தும் பிறிபடாதநிலைமைத்தாம். அவ்வாறு ஆராயாது கொள்ளும் நட்பு புன்மையையும் பழியையுந்தந்து இருமைப்பயனையும் போக்கும். (பழைமை, என்பது நட்டாரது பழைமையாந்தன்மைபற்றி அவர் பிழைத்தனபொறுத்தல்) என்றால் கெடுங்காலத்து உரிமையோ
உதவவல்லவராகிய நட்பினர்தாஞ்செய்யு முதவியைக் கேளாது

*நுழிலாட்டென்பது. தன்மெய்புதைத்த படையைப்பறித்தெறிதல்.

செய்யினும், கெடும்வகைசெய்தல் தமக்குவேண்டியன தாமேகோடல்பணிவின்மை அச்சமின்மை என்றிவைமுதலாயின ஊழ்வகையாற்புரியினும் அவற்றைப்பழையதாய்வந்த நட்பென்றறிந்து அவர்பிழையைநோக்கி விடுதல்செய்யாது விழைந்திருப்பாரை நம்மாட்டும் இவரித்தன்மை யாவரென்று யாவருந் தாமேவந்து நட்பாவர்.

அன்றியும் அத்திரிபின்மைநோக்கிப் பகைவரும் நட்டாராவர். (தீநட்பு, என்பது தீக்குணத்தாரோடு உளதாயநட்பு ) என்றால்கொடுப்பாரைக்கொள்ளாதுவிலையைக்கொள்ளும் பொதுமகளிரைப்போலவும், பிறர்கேடுநோக்காது அவர்சோர்வுநோக்குங் கள்வரைப்போலவும் நட்பளவு பாராது அதனால் வரும்பயனளவுபார்ப்போரும் எல்லாத்தீங்கினையும் பயப்பவராகிய பேதையரும் அமர்வாராத போதெல்லாந் தாங்குவதுபோன்று அமர்வந்துழிவிட்டு நீங்குவோரும் விடமர் தூர்த்தர் வேழம்பர் என்னுமிவர்களைப்போன்று பலவகையால்நகுவித்துத் தாம்பயன்கொண்டொழிவாரும் தம்மானமுடியுங் கருமத்தை முடியாதாக்கிச்செய்யாதாரும் உள்ளமுஞ்சொல்லுமொவ்வாது வேறுவேறாயிருப்பாரும் தனியேமனைக்கணிருந்துழிநட்பாடிப் பலரோடுமன்றின் கணிருந்துழிப்பழிகூறுவாரும் ஆகியவிவர்கள் காதன்மிகுதியாற் பருகுவர்போன்றாராயினும் அவரைச்சிறிதாயினும் நணுகுதலைப்பரிகல்வேண்டும் (கூடாநட்பு, என்பது பகைமையால் அகத்தாற்கூடாதிருந்தே தமக்குவாய்க்கும் இடம்பெறுந்துணையும் புறத்தாற்கூடியொழுகுவார்நட்பு.) என்றால் நல்லனவாகியபல நூல்களைக்கற்றவிடத்தும் அதனால் மனந்திருந்தி நட்பாதலில்லாதகண்டபொழுது முகத்தானினியவாகச்சிரித்து எப்பொழுதும் மனத்தால் இன்னாதனசெய்யும் பகைவரது சொல்லனைக்குறும் அவரது தொழுகையும் அவரழுதகண்ணீரும் சொல்லாலுங்கையாலுங் கண்ணுணுங்கேற்றப் பின்னர்நட்பாது கொல்லின்றவன்படையாகும் ஆகலால் பகைமைதோன்றுமற்புறத்தின்கண் நட்பினைமிகச்செய்து அகத்தின்கட்டன்னையிகழும் பகைவரைத்தாமும் அந்நட்பின்கண்ணேயிருந்து புறத்தின்கண் அவர்மகிழும்வண்ணஞ்செய்து அகத்தின்கண் அதுசாம்வண்ணம்பொருந்தி நிற்றல்வேண்டும் * அப்பகைவர்

* உள்ளொன்று புறமொன்றுதல் ஒருவனுக்குத்தகாதாயினும் பகைவரிடத்தானல் தருமமென்பது நீதிநூலது துணிவென்பதற்கு அதன்மேல்வைத்துச்சொல்லினர்.

தனக்குநட்டாராயொழுகுங் காலம்வந்தால் தானும் அவரோடுமுகத்தால்நட்புசெய்து அகத்தால் அதனைவிட்டுப் பின்னதுவுந்தவிர்தல் வேண்டும். (பேதைமை. என்பது யாதுமறியாமை.) என்றால் பழி பாவம் வறுமைஎன்பனவற்றிற்கு நாணாமையும்செய்வன தவிர்வன அறியாமையும் குடிப்பிறப்பு ஒழுக்கங்-கல்விமுதலானவைகளைப் பேணாமையும் யாவர்மாட்டும் முறிந்தசொல்லாடுஞ் செயலுடைமையும் ஆகாதவொழுக்கத்தின்கட் காதன்மையும்கேடுபயப்பனவற்றைக்கொண்டு ஆக்கம்பயப்பனவற்றைக் கைவிடுக்குந்தன்மையும் பெரியசெல்வத்தைத் தெய்வத்தாலெய்தியவழியும் பயனெய்தாமையும் மனமொழிமெய்கள் அடங்குதற்கேதுவாய நூல்களையோதியும் அவ்வடக்கத்தான்வரும்பயன்களையுணர்ந்தும் அதனையறியலுறப் பிறர்க்குரைத்தும் தானவையடங்கியொழுகாமையும் ஆகிய இப்பெற்றிகளையுடையோனைப் பேதையென்றுசொல்லப்படும்.

புல்லறிவாண்மை, என்பது புல்லியவறிவினையாடற்றன்மை) என்றால்தாஞ்சிற்றறிவினராகவிருந்தே, தம்மைப்பேரறிவினராகமதிக்கும் புல்லறிவினையுடையார் தமக்குறுதியாயவற்றை அறிவுடையார் கூறினுங்கேளார் தாங்கல்லாதநூல்களையுங் கற்றாராகவுரைத்தும் தம்புன்மையைவெளிப்படுத்துவர் தங்கணிகழுங்குற்றங்களையறிந்து கடியாதுமறைத்து அவ்வளவாற்றாம் உலகத்தினரைப்போல நடிப்பர் தமக்குநல்லுணர்ச்சியையறிவிக்கப்புகும் ஆன்றோரை அறிவிலாராக நாட்டுவர் ஆதலால் இத்தன்மையரோடுநண்ணாதிருத்தல்வேண்டும். (இகல், என்பது இருவர் தம்முட்பொருதுவலிதொலைத்தற்கேதுவாயமாறுபாடு.) என்றால், ஒருவன்தனக்குவெறுப்பனசெய்தானாயினும், அவனோடுமாறுபடுதலைக்குறித்துத் தான்அவனுக்கு இன்னாதவற்றைச் செய்யாதிருப்பானாயின் அவனுக்குப்பகைவரும் உறவாவர்எல்லாச் செல்வமும்பலிக்கும் கொடைமுதலிய காரணங்களாற் புகழும் பெறுவன். பிறரோடு மாறுபடுதற்கண்மிகுதல் எனக்கு இனிதென்று இன்னாதனசெய்வனாயின், உடனே தமரும் ஏதிலராவர். பகைமைவளரும் வலிதொலையும் பொருட்கேடும் உயிர்க்கேடும் அப்பொழுதேயுண்டாகும். (பகைமாட்சி என்பது-அறிவின்மைமுதலிய குற்றங்களுடைமையாற் பகையைமாட்சிப்படுத்தல்.) என்றால், படை[illegible]ரகள் முதலிய வேற்றுமைத்துணையும், நல்லறிவுடைமை- நீதிநா[illegible]ழுகல் முதலிய ஒற்றுமைத்துணையும், ஆகிய இருவகைத் [illegible] வலியார்மேற்பகையாயெதிர்த்தலையொழித்தல்வேண்

டும். அவ்விருவகைத்துணையினும் சுற்றம்-பொருள்-நட்பு படை-என்னுமிவைகளினும் மெலியராயுள்ளார், அஞ்சவேண்டாத வற்றிற்கஞ்சுவோர் அறியவேண்டுமவற்றை அறியாதார் பிறரோடுபொருந்தமில்லாதார் யாவர்மாட்டும்ஈகையில்லாதார், நவியாதவெகுளியையுடையார்; நிறையின்மையையுடையார் மிக்கதாமதத்தையுடையார் நீதிநூலைக்கல்லாதார் தமக்குவரும்பழியை யாராயாதார் பண்பில்லாதார் என்னுமிவர்களோடு பகையாதலை யொழியாது விரும்பல் வேண்டும். (பகைத்திறந்தெரிதல், என்பது- பகையதுதிறமும், பகையிடத்தார்க்குந்திறமு மாராய்தல்.) என்றால், தனக்குவேண்டிய்வழிபகையை வேறுபடுத்து நட்பாகச்செய்து கொண்டொழுகலும், வீரமேயுடையாரோடு பகைகொள்ளாமையும் சுற்றம்-நட்பு-படை-முதலிய துணையில்லாதவழியும் இருந்தவழியும் பலரோடுபகைகொள்ளாமையும் தனக்குதவிசெய்யுந் துணையில்லாதகாலத்துப் பகையிரண்டாயின் அதிலொன்றை வெல்லுமாறு மற்றொன்றை யுறவாக்கிக் கொள்ளுதலும் ஆகியவித்திறங்களை அரசன் இயல்பாகவுடையனுதல்வேண்டும். அன்றியும்-தான்மெலியதென்று இகழ்ந்தபகையே பின்னர் வலியதாய்த்தன்னைக் களையலுறுமாதலால் அவ்வாறாகாமுன்னம் அது மெலியதாயகாலத்தேகளைதல்வேண்டும். தனக்குப்புறத்தொருவினையாற்றும் வழி தன்பகைவனைமுன் தெளிந்தானாயினும் தெளிந்திலனாயினும்அவனைநொதுமலாக்கி அவனோடுகூடுதலையும்பிரிதலையும் ஒழித்தல்வேண்டும். * பின்னர்அப்பகையைக் களையவேண்டின் பொருள்-படையாதிகளைப் பெருக்கித்தான்அப்பகைக்கெதிரே பெருமாற்றினையாராய்ந்து தான் வலியனுயவளவிற் களைதல் வேண்டும். (உட்பகை; என்பது - புறப்பகைக்கு இடனுக்கிக் கொடுத்து அதுவெல்லுந் துணையும் உள்ளாயிருக்கும்பகை.) என்றால் புறத்து உறவுமுறைத் தன்மையோடுங்கூடி அமைச்சர்முதலியஉறுப்புகளைத்தேய்ப்பாரும் சுற்றத்தாரா உள்ளாய்நின்று வேறுபடுத்துவாரும்தன் குடிக்குறுதிங்காற்றியழிப்பாரும் உட்பகையாதலால். அவரையஞ்சி அவரோடேயாமலும் அவர்க்குடம்படாமலும் தன்னைக்காத்துக் கொண்டொழுகல் வேண்டும். ஒருகாற்கூடுவாராயின் உடனே அவரைக்கடிதல் வேண்டும்.

* முன்தெளிந்தானாயினும் அப்பொழுதுகூடாதொழிகவென்றது உள்ளாய் நின்றுகெடுத்தலைநோக்கி, தெளிந்திலனாயினும் அப்பொழுதுபிரியாதொழிகவென்றது அவ்வழிவிற்குத் துணையாதலைநோக்கி ஒழித்தல்வேண்டுமென்றார்.

(பெரியாரைப்பிழையாமை, என்பது - பெரியரானோரை அவமதித்தொழுகாமை. என்றால், பெருமை - அறிவு-முயற்சி-என்னும் மூவகையாற்றல்களு முடைய வேந்தரையும் தவத்திற் சிறந்தமுனிவரையும்போற்றி யொழுகவல்லார்க்குஅவரிட்டிவைத்தஎல்லாப்பொருள்களும் விருத்தியடையும் அவமதிப்பார்க்கு அரண்-படை- பொருள்-நட்பு-என்னும் இச்சார்புகளிருந்தும் அழிந்துவிடுவர் இப்பிழையொன்றனால் திரிபுரன்-சூரபன்மன்- முதலியஅசுரர்களும், இந்திரன்-திருமால்-முதலியதேவர்களுந் தளர்ந்தனரென்னில் இன்னுமெவ்வாறுரைக்கற்பாலது. (பெண்வழிச்சேரல், என்பது-தன்வழியொழுகற்பாலளாய இல்லாள்வழியேதானொழுகல்.) என்றால்,ஒருவன் இன்பங்காரணமாகத் தன்மனையாளை விழைந்து அவள் தன்மையனாயொழுகுவானெனில் தனக்கின் றுணையாய அறம்பொருளை யெய்தான்செல்வமிருந்தகாலத்தும் - ஈதல்-துய்த்தல் - முதலிய பயன்களைக்கொள்ளான் மறுமைப்பயனும் அணுகான் எல்லாப்பிழையும்அவனுக்குமுன்னிற்கும் பின்னர் அஃதுபெரியநாளும் - அழியாப்பழியும்-அவனுக்குண்டாக்கும். (வரைவின்மகளிர், என்பது - தந்நலம், விலைகொடுப்பார்யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்னும்வரைவில்லாதமகளிரது இயல்பு.) என்றால், ஆடல் - பாடல்-அழகுஎன்பனவற்றால் - ஆடவர்க்குஇச்சையைப் பெருக்கிடவொவ்வாதசொற்செயல்களாற் றம்வசமாக்கிமுற்றினும் பொருளைப்பறித்துவிடுகின்ற பழிநாணாதபரத்தையர்முயக்கத்தையொழியாதவரை ஆய்ந்துசெய்யும் அறிவினையுடையார்தீண்டார். (கள்ளுண்ணாமை, என்பது - கள்ளினையுண்ணாமையதுசிறப்பு.) என்றால்ஒருவன்கள்ளின்மேற்காதல் செய்தொழுகுவானாயின்அதுஅவனதுஅறிவையும்செயலையும் மானத்தையும்-அழிப்பதன்றி சான்றோரால் மதிக்கப்படாதசெருக்கினைவிளைக்கும் யாதுசெய்யினும் உவக்கவல்லஈன்றாளுமனையறிவள் யாவர்க்கும் வெறுப்பையுங் கோபத்தையும் உண்டாக்கும். பொருள் படைமுதலியவற்றாற் பெரியனாயகாலத்தும் அறிவின்மையாற்பகைவர்அஞ்சார் உள்ளூர்வாழ்பவரால் எஞ்ஞான்றும் நகுதல்செய்யப்படுவன். (சூது-என்பது- அக்கள்ளுண்ணல்போல அறம்பொருளின்பங்கட்கு இடையீடாகிய சூதினையாடல்.) என்றால், சூயாடுவான் தான்வெல்லுமாற்ற லுடையானாயினும் அவ்வென்ற ஒன்றுக்கும்பின்தானெய்தியபொருள் ஆயிரமாகஅழியும் தானீட்டியபொருளுந் தன்பொருள் வருவாயுங்கெடும்

அஃதுகண்டுயாவரும் பகையாவார் அமைச்சர்முதலிய உறுப்புக்களும் ஒழியும்ஒளி-கல்வி-செல்வம்-ஊண்-உடை- என்னுமிவைகளோடு மறுமைப்பயனு முண்டாகாது. (மருந்து, என்பது- பழவினையானுங் காரணங்களானும் மக்கட்குவாதமுதலிய பிணிகள்வரும்அவற்றுள்பழவினையால் வருவன அதன்கழிவின்கணல்லது தீராமையின் அவையொழித்து ஏனைக்காரணங்களால் வருவன வற்றைத் தீர்க்கும்மருந்தின் நால்வகைத்திறம் 0 ) என்றால், உணவுஞ்செயல்களும் ஒருவன்பகுதிக்கொத்த * அளவினவன்றி அதனின் மிகுமாயினுங் குறையுமாயினும் ஆயுள்வேதமுடையோரால் வாதநோய் பித்தநோய் ஐயநோய் என்றுசொல்லப்பட்ட மூன்றுநோயும் அவனுக்குத் துன்பஞ்செய்யுமாதலால்மனமொழிமெய்களாலாய தொழில்களைச்செய்யுங்கால் அவைகள்வருந்தாமல் முன்னுண்டது அற்றுப் பின்னு

0 மருந்தாவது - பிணியுற்றவன் அதனைத்தீர்க்குமருத்துவன் அவனுக்குக் கருவியாகியமருந்து அதனைப்பிழையாமை யியற்றுவான் எனநான்கு பகுதியையுடைய நான்குதிறத்ததாம், அவற்றுள் உற்றவன் வகை நான்காவன பொருளுடைமை - மருத்துவன்வழிநிற்றல்- நோய்நிலையுணர்த்தல் வன்மை-மருந்துத்துன்பம்பொறுத்தல்-எனவிவை, தீர்ப்பான்வகைநான்காவன பலநோய்கண்டஞ்சாமை ஆசிரியனை வழிபட்டோதிய கல்வியுநுண்ணறிவு முடைமை. பலகாலுந்தீர்த்துவருதல் - மனமொழிமெய்கள் தூயவாதல்-எனவிவை, மருந்தின் வகைநான்காவன பலபிணிகட்குமேற்றல் - சுவை-வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல் - எளிதினெய்தப்படுதல்- பகுதியோடுபொருந்துதல்- எனவிவை. இயற்றுவான்வகைநான்காவன ஆதுலன்மாட்டன் புடைமை - மனமொழிமெய்கடூயவாதல் - சொல்லியன அவ்வாறேசெய்தல்வன்மை-அறிவுடைமை - எனவிவை. இவையெல்லாங்கூடிய வழியல்லது பிணிதீராமையின் இத்தொகுதியையும் மருந்தென்றார்.

* அவைகட்குஉணவொத்தலாவது சுவை வீரியங்களானும் அளவானும்பொருந்துதல். செயல்களொத்தலாவது-மனமொழிமெய்களாற் செய்யுந்தொழில்களை அவைவருந்துவதற்கு முன்னேயொழிதல்.

ண்பதனை அறுமள வறிந்து மாறுகொள்ளாத ? இனியவுணவை மி
கப்பசித்தவிடத்துத் தன்னுள்ளம் வேண்டிய 'வளவிஞனன்றிப் பி
ணிவாராவளவினல் உண்ணல்வேண்டும். அவ்வா றுண்ணில் பிணி
களாற்றுன்பம் விளைதலுண்டாகாது. ஒருகால் அம்முறைகளாபிறழ
ப்பிணிநேருமாயின் ஆதுரனளவினையும் அவன் பால் நிகழ்கின்ற
நோயினளவினையுந்தன்செயற்கேற்றகாலத்தினளவினையும் ‖ நூலொ
றியானும்-உணர்வுமிகுதியானும்-ஆராய்ந்துசெய்யவல்ல வயித்தியன்
வழிநின்று அப்பிணியை யொழிக்கவேண்டும். (குடிமை என்பது-
உயர்ந்தக்குடியின்கட்பிறந்தாரது தன்மை.) என்றால் எக்காலத்துந்தி
ரிபில்லாத் குடியின்கட் பிறந்தார் கருத்துஞ்-சொல்லுஞ்- செயலுந்த
ம்முண்மாறுகாது ஒத்திருக்கின்ற வொழுக்கம்-மெய்ம்மொழி-நாண்
எனப்பட்ட இம்மூன்றன்கண்ணுங் கல்வியானன்றித்தாமாகவே வழு
வார். அவரே தம்மைவறியாரடைந்தவழி முகமலர்ச்சியும்உள்ளன
கொடுத்தலும் இகழாமையும்இன்சொற்சொல்லுதலும் ஆகியஇநான்
குமுடையார் அவர்கள்வறுமையுற்றவழியுந்தம்மொழுக்கங்குன்று
ந்தொழில்களைச் செய்யார்.

(மானம்; என்பது-எஞ்ஞான்றுந் தன்னிலைமையிற்றாழாமையு
ந்தெய்வத்தாற் றாழ்வுவந்துழிஉயிர்வாழாமையுமாம்.) என்றால்குடி
யிற்பிறந்தார்க்கு நிறைந்தசெல்வமுள்ளதாயவழியாவர் மாட்டும்பணிவு

? மாறுகொள்ளாமையாவது-உண்பான்பகுதியோடு மாறுகொள்
ளாமையும் காலவியல்போடு மாறுகொள்ளாமையும் சுவைவீரியங்க
ளாற் றம்முண்மாறுகொள்ளாமையுமாம். அவையாவன-முறையே
வாதபித்தஐயங்களினுயபகுதிக்கு அடாதவற்றைச் செய்வனவாதலு
ம் பெரும்பொழுது சிறுபொழுது என்னுங்காலவேறுபாடுகளுள் ஒ
ன்றற்காவன பிறிதொன்றற்காகாமையும் தேனுநெய்யுந்தம்முளொத்
து நஞ்சாதல்போலவனவுமாம்.

‖ ஆதுரன்அளவாவது பகுதி - பருவம்-வேதனை- வலிகளினளவாம். பிணியளவாவதுசாத்தியம்- அசாத்தியம் யாப்பியம்-என்னு
ஞ்சாதிவேறுபாடும் தொடக்கம் - நடுவு-ஈறு - என்னும் அதன்பருவ
வேறுபாடும் வன்மைமென்மைகளு முதலாயினவாம். இவற்றுள்-
சாத்தியம்-தீர்க்கத்தக்கது. அசாத்தியம் தீர்க்கத்தகாதது யாப்பியம்
பெரும்பான்மைதீர்க்கத்தக்கதும் சிறுபான்மை தீர்க்கத்தகாததுமெ
னக்கொள்ளத்தக்கது. காலவளவாவது-மேற்சொல்லியனவாம்.

வேண்டும் குறைந்தநல்குரவுஉளதாயவழிபணியாமைவேண்டும் ‖ தங்குடிப்பிறப்புத்தாழவருஞ் செய்கைகளைச் செய்யாதவழி அவைதாம்அமையாதசிறப்பினை யுடையவே யெனினுந்தமதுமானத்தை முறுக்கவல்ல அச்செயல்களை யொழித்தல்வேண்டும் தமதுவசியாகிய அம்மானம் ஊழின்வலியால் அழியுமெனில் தன்மயிர்த்திரளின் ஒருமயிர்நீங்கினும் உயிர்வாழாத கவரிமாவை யொத்திருத்தல் வேண்டும். (பெருமை, என்பது-பெரியாரதுதன்மை) என்றால்ஒருவன்உயர்ந்தகுடியின்கட்பிறந்து அருநூல்களையாராய்ந்து செல்வத்திற் சிறந்தானேனும், அளவிறந்தஈகை-ஒப்புரவு முதலியவைகளாற் பிறராற்செயற்கரியசெய்து பிறர்குற்றங்கூறாமலுந்தருக்காமலுமிருந்துதனதுநெறியிற் பிறழாமல். தன்னைத்தான் காத்துக்கொண்டொழுகானெனில்அவனுக்குப் பெருமையில்லையாம். (சான்றாண்மை, என்பது-பலகுணங்களானு நிறைந்து அவற்றையாளுந்தன்மை) என்றால்சுற்றத்தார் மேலேயன்றிப் பிறர்மேலுமுளதாய அன்புயாவர்மாட்டும் ஒப்புரவுசெய்தல் பழையார்மேற்கண்ணோடல் பழிபாவங்களி னுணல் முதலியநற்குணங்களால் நிறைந்தசான்றோர்கள். தமக்கின்னாதனவற்றைச்செய்தார்க்கும் இனியவற்றையே செய்வர் ஒருகருமத்தைச்செய்து முடிக்கப்புகின் அதற்குத்துணையாவாரைத்தாழ்ந்துகூட்டிக்கொள்ளுவர். கடலுங்கரையுமில்லாமற் காலந்திரிந்தாலுந்தாந்திரியார். தம்மினுயர்ந்தார் மாட்டுக்கொள்ளுந் தோல்வியை இழிந்தார்மாட்டுங்கொள்ளுவர் (பண்புடைமை, என்பது - பெருமை சான்றாண்மைகளிற் றாம்வழுவாதுநின்றே எல்லாரியல்புகளு மறிந்து ஒத்தொழுகல்.) என்றால், உலகத்தோடமைந்த குடியின்கண்பிறத்தலும்பிறர்மேலன்புடையாதலும் யாவர்மாட்டும் எளியசெவ்வியராதலும் அறத்தினும் நீதியினும்வழுவாதிருத்தலும் ஆகிய இப்பண்புகள்சான்றமக்களது பண்பாகும். இதனையுடையவர் ஒருவனைவிளையாட்டின் கண்ணுமிகழார் பகையிடத்தும் அதனைப் புரியார் அத்தன்மையரது நற்குணத்தையேஉலகத்தார்கொண்டாடாநிற்பர். அவர்பாலேஎல்லாப்பயனுங் கோடற்கேற்ற பெருஞ்செல்வமுண்டாகும் (நன்றியில்செல்வம், என்பது ஈட்டியார்க்கும்பிறர்க்கும் பயன்படுதலில்லாதசெல்வத்தினியல்பு) என்றால் தன்மனையகலமெல்லாம் நிறைதற்கேதுவாயபெரும்பொருளை ஈட்டிவைத்தும் உலோபத்தால் அதனை

‖ செல்வக்காலை அஃதுயர்ச்சிசெய்யத் தாந்தாழ்தலும், அல்லாற்காலை அதுதாழ்வுசெய்யத்தாமுயர்தலும் வேண்டுமென்பதாம்.

யுண்ணுதவனும்பிறர்க் கீயாதவனும் உயிரோடிருந்தானாயினும் இறந் தவனோடொப்பான் அன்றியும் அவன்செத்தபின்பு அதனைத் தீயார் கொண்டுபோய்ப் பயன்பெறுவ ரல்லது அக்காலத்து அவனென்செ ய்யவல்லன். ஆதலால் அறனும் இன்பமுஞ் செய்துகொள்ளானுக் குப்பொருளினை ஈட்டலுந்துன்பமேயாம்.

(நாணுடைமை, என்பது மேற்சொல்லிய சால்புபண்புமுதலி யகுணங்களாலுயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதலு டையராந்தன்மை.) என்றால்இழிந்தகருமங்காரணமாக நாணுவதே எய்தற்கரிய நாணென்று சொல்லப்படும். அஃதன்றி மனமொழி மெய்கள் ஒடுக்கத்தான்வருவனவெல்லாம் அழகிய நுதலினையுடைய குலமகளிர்நாண்களாம். ஆதலால் நன்மக்களாயினோர் தமக்கேமமா க நாணினைக்கொள்வதன்றி அகன்றஞாலத்தைக் கொள்ளவும்விரும் பார். அந்நாணொன்றினால் தமதுபிறப்பு - கல்வி - குணம் - செயல்- இன்பம் - என்பவைகளை வளர்ப்பார். மேலும் அவர் நாண்சிதை யாமற்பொருட்டு உயிரைநீப்பரேயன்றி உயிர் சிதையாமறபொருட்டு நாணினைநீக்கார், (குடிசெயல்வகை, என்பது - ஒருவன்தான்பிறந்த குடியை உயரச்செய்தலின்திறம்.) என்றால் தன்குடிசெய்தற்பொருந ட்டுத் தொடங்கியகருமமுற்றுதாயின் யானெண்ணிய கருமத்தை முடித்தே விடுவேனென்னு முயற்சியும் அறிவும் என்றுசொல்ல ப்பட்ட இரண்டினுள்ளுங்கெடாது உயர்ந்தவனே தன்குடியினை உ யரச்செய்வானவன் அச்செயலைநோக்காது காலத்தைநோக்கி மடியி னைச்செய்துகொண்டு * மானத்தையுங்கருதுவனாயின் அதனைக்கெடு த்தோனவன். ஆதலால் தன்குடிஒருபற்றின்றி வீழாநிற்குங்கால த்துப் பற்றுவனகொடுத்து அதைத்தாங்கவல்லவனே நல்லஆண்ம கனாகும் (உழவு, என்பது - சிறுபான்மைவாணிகர்க்கும் பெரும்பா ன்மை வேளாளர்க்கும் உரித்தாயஉழுதற்றொழில்) என்றால் அந்த ணர்-அரசர்-வணிகர். வேளாளர்-என்னு நால்வகை வருணத்தாருள் முன்னிருவரும் உழுவித்துண்ணலாகும் பின்னிருவர் உழுவித்தும்- உழுதும் உண்ணலாகும் ஆதலால்யாவரும் உண்ணும்வகை உழுத லைச்செய்து அதனாற்றுமும் உண்டுவாழ்கின்றாரோ தமக்குரியராய்

* காலத்தைநோக்கி மடிசெய்தலாவது வெயில் மழை பனியென் ன உடைமைநோக்கிப் பின்னர்ச்செய்து மென்றொழிந்திருத்தல் ்கருதுதலாவதுஇக்குடியிலுள்ளார் யாவருமின்பமுறஇக்கால பமுறுவேன் யானேவென்று உட்கோடல்.

வாழ்கின்றவர். அவரே தம்மை இரப்பார்க்கு அவர்வேண்டியதொன்றனைக் கரவாதுகொடுப்பவர் மற்றையரெல்லாம் தாமும் மக்கட்பிறப்பினராயிருந்தும் பிறரைத்தொழுது அவர் சிலகொடுப்பத் தம்முயிரோம்பி அவர்பின்செல்வதற்குரியர் அன்றியும்உழுதலால்வரும்மெய்வருத்தநோக்கிப் பிறதொழில்களைச்செய்து திரிந்துபொருளெய்தினும் முடிவில்தம்முணவின்பொருட்டு உழுவார்கட்செல்லவேண்டுதலின் எத்தொழிலினும் முதற்றன்மைத்தாயது உழவேயாம் (நல்குரவு, என்பது நுகரப்படுவனயாவுமில்லாமை) என்றால் ஒருவனுக்குவறுமைபோல இன்னாதுவறுமையேயன்றிப் பிறிதில்லை அவ்வறுமையானது இளிவந்தசொற்பிறவாத குடிப்பிறந்தார் மாட்டேயும் அதுபிறத்தற்கேதுவாகிய சோர்வினையுண்டாக்கும் தன்னாற்பற்றப்பட்டாருடைய பழையகுடிவரவினையும் செயலினையும் அதற்கேற்றசொல்லினையும் ஒருங்கேகெடுக்கும் இரத்தல்முதலியஎல்லாந்துன்பங்களையும் 0 விளைவிக்கும் அதனாற்றன்னையீன்றதாயானும் பிறனைக்கருதுமாறுபோலக் கருதிநோக்கப்படும். ஆதலால் அதுவந்துழி இறத்தலேநன்றாம் (இரவு, என்பது - மேற்கூறிய இறத்தலைவிலக்குவதாயமானந்தீராவிரவு) என்றால் இவ்வுலகத்துள் இரத்தற்கேற்புடையராயசிலர் தம்மைக்குறிப்பினுணர்ந்து மொழியாமுன்னங்கொடுக்கவல்ல ஈவார்மாட்டிரத்தலால் தங்கள்ஒழுக்கமும் மானமுங்குன்றுவகைத் தங்கநெயினைத்துறத்தலின்றிவாழ்ந்திருக்கின்றனர். மேலும் ஒருவன்தானியற்றுங்கொடையின்கண் அளவிற்சிறந்தானாயினும் அவன்பாற்சென்று ஒன்றனை இரந்துகோடலை விரும்புவாரில்வழி அவன்மாட்டு என்னபுகழுண்டாமாதலால் ஈவாருக்கு இரப்பாரில்லாது புகழில்லை (இரவச்சம். என்பது மானந்தீரவருமிரவிற்கஞ்சுதல்) என்றால் தமக்குள்ளதுகரவாது இவர்வரப்பெற்றேமென்று உண்மகிழ்ந்து கொடுக்குங்கண்போலச் சிறந்தாரேனும் அவர்மாட்டு ஒருவன் மானங்கெடத்தந்நாவினால் அறத்தைக்குறித்தேனுமிரவாதுவிற்றல் அவ்வறத்தாற்பயனெய்தலிற் கோடிமடங்குநன்றாம். ஆதலால் நுகரவேண்டுவனவின்றி நல்கூர்ந்தவழியும் பிறர்பாற்சென்றிரத்தலையுடம்படாதஅமைதி எல்லாவுலகும் ஒருங்கியைந்தாலுங்கொள்

0 எல்லாத்துன்பங்களையுமென்றது செல்வர்கடைநோக்கிச்சேறற்றுன்பமும் அவரைக்காண்டற்றுன்பமும் கண்டான்மறுத்துழிநிகழுந் துன்பமும்மறுத்தவழி அவர் கொடுத்தது வாங்கற்றுன்பமும் அதுகொடுவந்துநுகர்வன கூட்டற்றுன்பமுமுதலாயின.

ளாத பெருமையுடைத்தென்றறிந்தவர்கள் தமது நெறியாயமுயற்சி
கொடுவந்து தந்ததுசெறிவின்றித் தெளிந்தநீர்போலும் ஆடுபுற்கை
யாயினும் அதனைஅமிழ்தத்தோடொக்கநினைத்து மனமுவப்பர். (க
யமை, என்பது - அறம்பொருளிரண்டனுள்ளும் இதுகாறுங்கூறப்
பட்டகுணங்களுள் யாதுமிலராயகீழாரதுதன்மை) என்றால் ஒருவ
ன்தனதுசெல்வத்தாற்பட்டுந்-துகிலுமுடுத்தலையும் பாலோடடிசிலு
ண்டலையுங்கண்டு அவற்றைப்பொறாது அவன்மாட்டுவடுவில்லையாக
வும் உண்டாக்கவல்லவன்கயவனாம். அவன்அரசனால்ஏதம்வருமெ
ன்றஞ்சுமச்சத்தானும் தன்னால் அவாவப்படும்பொருள்அதனானுண்
டாகுமென்னு மாசையானுமேயன்றித் தன்னியல்பினால் ஆசாரம்பு
ரியான் ஒருவனுற்றான்கேட்டமறைச்சொற்களை இடந்தோறுந்தாங்கி
க்கொண்டுசென்று பிறர்க்குச் சொல்லுவான். தன்னிற்சுருங்கிப்ப
ட்டியாயொழுகுவாரைக்கண்டானாயின் அவ்வொழுக்கத்தின்கண் அ
வரிற்றான்மேம்பட்டு அதனாற்றன்மிகுதிகாட்டி இறுமாப்பன்நானு
ண்டுபூசியகையைத் தெறித்தல்வேண்டுமென்று மெலியராயுள்ளார்
இரந்தாலுந்தெரியான் இவ்வுலகத்துள் அவன் எற்றிற்குரியனென்
னில் உணவின்மைமுதலிய எதனாலேனும் தன்னையொருவன்பற்றுற்
றக்கால் அதுவேபற்றுக்கோடாகவிரைந்து தன்னைப்பிறற்கு விற்றற்
குரியனேயன்றி வேறெத்தொழிற்கும் உரியனல்லன்.

இவ்வாறு அரசநீதியை அறத்தாற்றினாற்செய்து அகிலத்தைக்
காத்துப் பொருளீட்டவல்லதிறத்தினையெல்லாம் தக்கனுக்குமுக்கல
முனிவர் உபதேசித்தபின்னர் அத்தக்கன் அவையனைத்தையுஞ்செ
விக்கமுதாகக்கேட்டு வாசனையூட்டிய தாம்பூலாதிகளை வைத்து சாஷ்
டாங்கமாகநமஸ்கரித்தெழுந்து பிராமணர்முதலான பெரியோர்கட்கு
அளவற்றதானங்களைநடாத்தி ஆதுலர்க்குச்சாலை - ஓதுவார்க்குணவு
அறுசமயத்தார்க்குண்டி - பசுவுக்குவாயுறை-சிறைச்சோறு-ஐயம்-பி
ன்பண்டநல்கல் அறவைச்சோறு-மகப்பெறுவித்தல்- மகவுவளர்த்த
ல்-மகப்பால்வார்த்தல் அறவைப்பிணஞ்சுடுதல் அறவைத்தூரியம்-சு
ண்ணம் நோய்மருந்து வண்ணார்- நாவிதர்-கண்ணாடி-காதோலை-கண்
மருந்து தலைக்கெண்ணெய்-பெண்போகம் - பிறர்துயர்காத்தல் தண்
ணீர்ப்பந்தல்-மடம்-தடம்-சோலை-ஆவுரிஞ்சுதறி-விலங்கிற்குணவு-ஏ
விடுத்தல்-விலைகொடுத்துயிர்காத்தல்- கன்னிகாதானம்-என்கின்ற
இரண்டறங்களையுமியற்றி அளவற்றதேவாலயங்கட்குத்திரு
பணிகளை நடப்பித்து உமாதேவி - சரஸ்வதி - இலக்

குமிமுதலிய சத்தியாலயங்கட்கும்மங்கிலியம் ஆடையாபரணாதிகளை வ
ரிசைதந்து ஆதிசைவப் பிராமணர்க்கெல்லாம் ஆகமவிதிப்படி பூ
சனைபுரிந்து அமைச்சர்முதலாயினோர்க்குத் தேர் - கரி - பதாதி நில
ம் முதலியவைகளை வெகுமதிசெய்து சிவாலயங்கட்கெல்லாந் திரு
விழாக்கள் நடப்பித்து ஆகாயமுகட்டை யளாவத்தக்க கோபுரங்க
ளோடும் ஓராலயமெழுப்பி அதிற் கணேசமூர்த்தியைப் பிரதிட்
டைசெய்து முக்கல்முனிவரால் விதித்தவிதியின்படித் தினந்தோ
றும் பூசனைகளை நடாத்தி வயிற்றிற்சுமக்காது பெற்றதாயாகிய சுல
பையின் பாதத்தையும் சுமந்து பெற்றதாகிய கமலையின் பா
தத்தையும் இடைவிடாதுபணிந்து எத்திக்கினுஞ்சத்துருக்களி ன
ல்லாதபடி இவ்வுலகத்தையெல்லாந் தன்னொருகுடைநீழலிலிருத்தி
நீதிநெறி தவறாமல் தேவேந்திரனைப்போலச் சகலபோகங்களையுமனு
பவித்து அரசாட்சி செய்து எல்லாஉயிர்களையுமாதரித்து வந்தான்.
அக்காலத்தில் அத்தக்கனுடைய தந்தையாகியுங் கருநாடதேயத்திற்
கரசனாகியுமிருக்கின்ற வல்லவராசனானவன் தனது குமாரன் சகல
வியாதிகளுநீங்கப்பெற்று நல்லகீர்த்தியோடும் விதற்பதேயத்தையா
ண்டுகொண் டிருக்கிறானென்று கேள்வியுற்றுத்தனது சேனாசமூகத்
தோடும் அங்குவந்து புதல்வனைக்கண்டு அளவளாவி மிகுந்தமகிழ்
ச்சியோடுங் கலந்திருந்தான். மற்றையருஞ்சந்தோஷமாகச் சேர்ந்
து வாழ்ந்திருந்தார்கள். பின்னர் வீரசேனனென்றும் ஓரரசன்
சொப்பனத்தில் விநாயகக்கடவுளெழுந்தருளி உனதுகுமாரத்தி முற்
சனனத்திற்செய்திருக்கின்ற பூஜாபலத்தினால் அவளைத்தக்கன்விவா
கஞ் செய்துகொள்ளுவான் அவ்வாறே நீ நடந்துகொள்ளக் கடவை
யென்று திருவாய்மலர்ந்தருள அவ்வரசன்கண்விழித்து ஆனந்தம
டைந்து கணேசமூர்த்தியினுடைய உத்தரவின்படி தன்குமாரத்தி
யை அத்தக்கனுக்கு விவாகஞ்செய்து கொடுத்தான். அதன்பின்னர்
விநாயகமூர்த்தியினுடைய திருவருளினால் அவனுக்குப் பிரகற்பா
னுபிறந்தான் அவனுக்குக் கட்கதரன்பிறந்தான், அவனுக்குச்சுபால
ன்பிறந்தான் அவனுக்கு எதாகரன்பிறந்தான். அவனுக்குவபுத்திர
த்தன்பிறந்தான் அவனுக்குச்சித்திரசேனன்பிறந்தான் அவனுக்கு வீ
மனாகிய நீபிறந்தாய் தக்கன்முதலாகஉன்தந்தைவரையிலிருந்த யாவ
ர்களும் விநாயகக்கடவுளுடைய பாதாரவிந்தங்களிற் குறைவற்ற அ
ன்போடும் பூசைசெய்து வந்தார்களாதலால் இனிநீயும் அவ்வாறேபூ
சைசெய்துவந்தால் உனதிட்டமெல்லாம் உடனேசித்தியாகுமென்று

சொல்லிப்பிரமனுதியராலுங் காண்டற்கரிய அவ்விநாயகமூர்த்தியை ப்பூசனைசெய்யவேண்டிய விதியையுங்கேளென்று விசுவாமித்திரமுனிவர் சொல்வதாயினர். அரசனே-விநாயகமூர்த்தியினுடைய கருணையுண்டாக்கத்தக்க ஏகாட்சரமந்திரமே பாவங்களனைத்தையும் விலக்கி அவ்வவர்கள் கருதியவரங்களை இம்மைமறுமைகளை தந்துகாக்கத்தக்கது. அம்மேலானமனுவையுனக் குபதேசிக்கின்றோம், நீஸ்நானஞ்செய்து விரைவில்வரக் கடவையென்ன அவ்வாறே வீமராசன் ஸ்நானஞ்செய்துவர விசுவாமித்திரமுனிவர் ஓமாதி கிரியைகளைச் செய்து கணேசமூர்த்தியினுடைய ஏகாக்ஷர மந்திரத்தை யுபதேசித்து அதை அநுட்டிக்குமுறைமையையுஞ்சொல்லி உனது பட்டணத்தைச் சேர்ந்து முன்னர் தக்கனாற்பிரதிட்டைசெய்துவைத்த விநாயகாலயத்திலிருந்து தினந்தோறுஞ் செபஞ்செய்து வருவாயென்று மிகுந்தகருணையோடுஞ்சொல்ல வீமராசன் அவ்விசுவாமித்திரமுனிவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தன்மனைவியோடும் அவ்வனத்தைப்பிரிந்து நகரத்தெல்லையைச்சார்ந்தான்.

இப்பால்மீளவும் அரசன் வருகின்றதை அவன் அமைச்சர்களறிந்து பட்டத்துயானையையுஞ்சொர்ணச்சிவிகையினையு மலங்கரித்துச் சகலபரிசனங்களும் புடைசூழ்ந்து வரும்படி எதிர்கொண்டுசென்று அரசனைக்கண்டு தீர்க்கதண்டன்செய்து பிரிந்திருந்ததாய் தந்தையரைக்கண்ட இளம்பிள்ளைகள்போல அதிகமகிழ்ச்சிபொங்கவிருந்தார்கள். பின்னர் அரசன் தனதுபட்டத்துயானைமீது ஆரோகணித்துத் தன்மனைவியைச் சிவிகையிலிருக்கச்செய்து சகல வாத்தியங்களுங் கோஷிக்கும்படியாகப் பற்பலவரிசைகளோடும் பட்டணத்துள் வந்து அரண்மனைக்குட்பிரவேசித்து அந்தணர்முதலாயினோர்க்கு அளவற்றதிரவியங்களைத் தானஞ்செய்து தன்னைத்தரிசிக்கவந்த சகலசனங்கட்குந் தனதுகிருபையைவழங்கி அமைச்சர்களைநோக்கி நீங்கள்முன்போலவே அரசுரிமையைநடாத்தி வாருங்களென்று கட்டளையிட்டு தக்கனாற் பிரதிட்டைசெய்திருக்கின்ற ஆலயத்திற்சென்று அங்கு மூர்த்திகரித்திருகின்ற விநாயகக்கடவுளைத்தியானித்து வேதாகமவிதிப்படி பூசனைசெய்து சகலமும் விநாயகர்ஸ்வரூபமாக மனதிலெண்ணி விசுவாமித்திரமுனிவராலுபதேசிக்கப்பெற்ற ஏகாக்ஷரமந்திரத்தைவிடாமற் செபித்து வருகின்றநாளையில் விநாயகமூர்த்திக்கருணைசுரந்து வீமராசன்கண்டு தரிசிக்கும்படியாக அவனெதிராகத்தோன்றியருளினர். உடனே அவ்வரசன் சுவா

மியைக்கண்டு சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்துகர்த்தனேதேவரீருடைய பாதார விந்தங்களில் இடைவிடாதபத்தியும் ஒருசிறந்த புத்திரனும் முடிவில் முத்தியும் அடியேற்கருள வேண்டுமென்று தோத்திரஞ் செய்தலும் விநாயகமூர்த்தி வீமராஜனைப்பார்த்து அன்பனே நீகருதியவாறே உனக்கு நம்மிடத் தன்பையும் சொர்ன்னரூபம் பெற்றிருக்கின்ற புத்திரனையுந்தந்தோம்இனிஉனதுஅந்தியகாலில்முத்தியினையுங் கொடுப்போமென்று திருவாய்மலர்ந்து நீ உன்னரண்மனைக்குச் செல்லக்கடவையென்று விடைகொடுத்துத்தமதுதிருவுருவத்தை கரந்தருளினர்.

இப்பால் வீமராசன் அரண்மனைக்குவந்து சிவபிரானையும் விநாயகமூர்த்தியையும் இடைவிடாமற் பூசனைபுரிந்து அந்தணர் முதலாயினோர்க்கு ஆடையாபரணாதிகளைத் தானஞ்செய்து ஆனந்தசாகரத்தின் மூழ்கியிருந்தான் உடனே கணேசமூர்த்தியினுடைய பெருங் கருணையால் அவ்வரசன் மனைவியாகிய சாருகாசினிவயிற்றிற் கருப்பமுண்டாகிச் சொர்ன்னமலையே ஓருருவங்கொண்டுவந்ததுபோலச் சகலரும் அற்புதங்கொள்ளத்தக்கபுத்திரன்உற்பவித்தான்.அதனால்வீமராசன் அதிகமகிழ்ச்சிகொண்டு புத்திரனுண்டானதற்கு நடத்தவேண்டியசடங்குகளைக் கிரமப்படிநடப்பித்து அப்புத்திரன்உருக்குமம் போன்ற ஒளியுள்ள சரீரத்தினனாதலால் பெரியோர்கள் வாக்கியத்தின்படி உருக்குமாங்கதனென்னு நாமகரணந்தரித்து அவனுக்குப்பிள்ளைமைப் பருவஞ்சென்றபின்னர் அவனைக்கபிலமுனிவர்சமுகத்திற்கொண்டுபோய்விட்டான், அதுமுதல் உருக்குமாங்கதனென்பவன் கபிலமுனிவருடைய திருவடிகளுக்குப்பத்தி செய்துவந்தான். அதனால் சகல வித்தைகளும் அவனுக்கு விருத்தியாகிவரத் தந்தை ஆனந்தங்கொண்டு விநாயகமூர்த்தியினுடைய ஏகாக்ஷரமந்திரத்தை உபதேசஞ்செய்து அதையநுட்டிக்கு முறைமையையுஞ்சொன்னன் பின்னர் அவ்வுருக்குமாங்கதன் அதைச்செபஞ்செய்து கணேசமூர்த்தியிடத்தில் தனது தந்தையினும்மிக்க அன்புடையவனாகிச் சதாகாலமும் அவரை ஆராதித்துக் கொண்டிருந்தான். அதைவீமராசன்தெரிந்து தனது அரசுரிமையை அவன் பால் ஒப்பு வித்தற்கு எண்ண முற்று கொலுச் சபையில் வந்து சிங்கா தனத்திலிருந்து கணித சாஸ்திரிகளைக் கூவி நமது குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யத் தக்கநாளை ஆராய்ந்துரைப்பீர்க ளென்னஅவர்கள் அவ்வரச குமாரனுக் கேற்ற திதிவார நட்சத்திர யோக கரண

கிரக ஓரை முதலான நிலைகள் நன்றாகச் சோதித் துணர்ந்து ஓர் சுபதினத்தை நியமித்து அதுவே நன்முகூர்த்த மென் றறிக்கையிட்டார்கள். பின்னர் அரசன் அமைச்சர்களை நோக்கி. பட்டாபிஷேகத்திற்குரிய பதார்த்தங்களையெல்லாம் இன்மைக்குமுன் சேகரிக்கக் கடவீர்களென்று கட்டளையிட்டுத் தனதுகுலகுருவையடைந்து இருகரங்களையுங்கூப்பி சுவாமீ நமது குமாரனுக்கு மகுடாபிஷேகஞ் செய்ய யத்தனித்திருக்கின்றேன் ஆதலால் அதற்குரிய பொருள்களை அடியேற்கு உணர்த்தியருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான். அவ்வாசிரியர் மனமகிழ்ந்து அதற்குரிய எல்லாப்பொருள்களையும் ஓர் நறுக்கோலையிற் பொறித்தளித்து, இதனையுஞ்சொல்லுவார் அரசனே மகுடாபிஷேகஞ்செய்யத்தக்க தானம்-புண்ணியபூமி சிவசந்நிதானம் - நதிதீரம்- நந்தவனம்-தன்னில் என்னும் இவ்வைந்தில் ஒன்றாகியிருத்தல்வேண்டும். அதிலுங்கீழ்த்திசை வடதிசை ஈசானத்திசை- என்னும் இம்முத்திசைகளில் ஒன்றாகியிருத்தல்வேண்டும். அவ்விடத்தில் ஐந்துமுதல் ஐம்பத்தைந்துமுழம் அகற்சியுள்ளதாய் முப்பத்தாறுதூண்களோடு ஓர் பூசாமண்டபமும் ஓர் அலங்காரமண்டபமுஞ் சமைத்தல்வேண்டும். அன்றியும் மணி பொன்-வெள்ளி-தாம்பிரம்-தருப்பை-யாகத்திற்குரிய - மரங்கள்-பாலுள்கு மரங்கள்-என்னுமிவைகளின் ஒன்றால் அரசுவீற்றிருத்தற்கோர் பீடமும் அபிஷேகஞ்செய்தற்கோர்பீடமும் அமைத்தல்வேண்டும் அப்பீடங்கள் ஒருமுழம் உயர்ந்து ஒன்றரைமுழம் அகன்று, முன்னும்பின்னும் இரண்டுபடிகளைக்கொண்டுநான்குபாதங்களோடும்இருத்தல்வேண்டும் மேற்கூறிய அலங்காரமண்டபத்தில்ஆறுமுழம்அகன்றுஇரண்டுமுழம் உயர்ந்திருக்கின்ற இரண்டுவேதிகைகள் செய்தல்வேண்டும். ஆதலால்இந்தக்கிரமத்தின்படி மேற்கூறியமண்டபங்களைத் தகுதியானநிலத்திலுந் திக்கிலும் பொருந்த நிருமிப்பித்து இரண்டுபீடங்களையும் வேதிகைகளையும்விரைவில்நிறைவேற்றக் கடவையென்றார்.

இவ்வாறு ஆசிரியர்கூறியமொழிகளை வீமராசன்கேட்டுக் கம்மியர்களைக்கூவி அவர்கட்கு நவரத்தினங்களையுஞ் சொர்ணங்களையுங் கொடுத்துஇரண்டு பீடங்கள் செய்துகொண்டுவரக் கடவீர்களென்று கட்டளையிட்டு அவற்றைச்செய்யத்தக்கமுறைமையையுங்கூறிப் பின்னுஞ்
...ான் நமது நகரத்தினது மதிலுக்குட்பட்ட நிலத்தில் கிழ
...ஐம்பத்தைந்துமுழம் எல்லையுள்ளதாய் முப்பத்தாறு

தூண்களோடு ஓர்பூசாமண்டபமும் அலங்காரமண்டபமுஞ் சமைத்து அவ்வலங்காரமண்டபத்தில் இரண்டுவேதிகைகளைச்செய்து முடிக்கக்கடவீர்களென்று கட்டளையிட்டான். உடனேஅக்கம்மியர்கள் புத்தியென்று விடைபெற்றுச் செம்பொன்னையுருக்கிஇரண்டுபீடங்களைவார்த்து அவைகளில் இரத்தினங்களைப்பதித்துப் படிகளைச்சேர்த்து வெள்ளியாற் சிம்பக்கால்களை யியற்றிப்பின்னர் அரசன் கட்டளையிட்ட விடத்திற்சென்று நிலத்தைத்தோண்டி அதில் இடிகொள்ளாதபடி மணல்சொரிந்து அடியில் நீலக்கற்களைப்பரப்பி இடையிற்பவளங்களைச் சேர்த்து அதன்மேல் மரகதரத்நங்களைப் பதித்துக்குறடுகளாக்கி - அக்குறட்டுகளின்மேல் கோமேதகத்தாலாகிய போதிகைகட்டைகளைத் தாங்கும்பதுமராகத் தூண்களைநிறுத்திபுட்பராகத்தால்உத்திரமிட்டு அதன்மேல் வச்சிரப்பலகைகளைப்பரப்பி வைடூரியத்தினாற கொடுங்கைகளையிருத்திஅதிற்சந்திரகாந்தத்தினாலியாளிமுகங்கள் சமைத்துமுத்துமாலைகளைத் தொங்கவிட்டு பளிங்குக் கற்களினாற்சுவரெழுப்பி நாற்றிசைகளினும்நான்குவாயில்களைவிடுத்துஆகாயத்தை யளாவியிருக்கத்தக்கதான மண்டபங்களாக்கித் தூண்கடோறுங் குலைவாழை மரங்களையும் கமுக மரங்களையும் நிறுத்தி கன்னற்சோலைகளைநட்டு விதானங்களைத்தூக்கி இடைஇடையிற்றூண்டாவிளக்குகளைத் தொங்கவிட்டு அரும்புமாலைகளையும் மலர்மாலைகளையுங் கட்டி ஒளிமிகுந்த கண்ணாடிவகைகளைப்பூட்டு நாரத்தை முதலியகனிவர்க்கங்களைக் கோத்து நாட்டிப்பற்பல விசித்திரங்களான ஓவியங்களைத்தீட்டி நவரத்னமயமாயிராநின்ற தோரணங்களைச்சூட்டி அம்மண்டபங்களைச்சூழச் சந்திரமண்டலத்தை யளாவுந்தக்கதான பந்தர்களைச்சமைத்து இரண்டுவேதிகைகளையும் முடித்தவுடன்முன்னியற்றப்பட்டிருக்கின்ற பீடங்களைக்கொண்டு அரசன்சமுகத்தில் வைத்து தேவரீர் அடியேங்கட் காக்கியாபித்த வண்ணஞ் சிவபிரானும் கண்டு களிக்கத்தக்க இரண்டுமண்டபங்களைக் குறைவற முடித்திருக்கின்றனமென்று அறிக்கையிட்டார்கள், அதை அரசன்கேட்டு மனமகிழ்ந்துசொர்னம் வஸ்திராபரணமுதலிய திரவியங்களை அவர்கள் வேண்டுமட்டும்வெகுமானஞ்செய்து விடைகொடுத்தவுடன் அச்செய்தியை ஆசிரியர் தெரிந்துபூசாமண்டபத்தை யடைந்துஅதிற்பதின் மூன்று வீதிகளுண்டாகும்படி குறுக்கினும் நெடுக்கினும் பதினான்கு நூல்களைவிடுத்து நூற்றறுபத்தொன்பதுவீடுகளாக்கி அவைகளினடுவே இருக்கின்றவீட்டில் சிவபிரான் உமாதேவியோடும் எழுந்தருளத்தக்

கதாக நான்கு முழமுள்ள ஓர் இரத்தினவேதிகையை யிருத்தி அ
தைச்சூழவிருக்கின்ற எட்டுவீடுகளில்-அனந்தர்-சூக்ஷ்மர்-சிவோத்த
மர்-ஏகநேத்திரர்-ஏகருத்திரர்-திரிமூர்த்தி-ஸ்ரீகண்டர்-சிகண்டி-என்
கின்ற-அஷ்டவித்தியேஸ்வரர்க்கும்- அதைச்சூழவிருக்கின்ற பதினாறு
வீடுகளில் - நந்தி-மாகாளர்-பிருங்கி-விநாயகர்-வ்ருஷபர்-ஸ்கந்தர்-
தேவி-சண்டேஸ்வரர்-இந்திரன் - அக்கினி யமன்-நிருதி- வருணன்-
வாயு-குபேரன்-ஈசானன்-என்கிற சோடசதாதுக்களுக்கு மாகத்தனி
த்தனி வேதிகைகளையமைத்து அதையடுத்திருக்கின்ற இருபத்துநா
ன்குவீடுகளை யாவரும்உலாவும்படியான வீதியாகவிடுத்துநாற்புறங்
களினும் நடுவேயிருக்கின்ற மும்மூன்றுவீடுகளை வாயில்களாக்கிம
ற்ற நூற்றெட்டுவீடுகளில் சம்புருத்திரர்-விபூதிருத்திரர்-கணருத்தி
ர்-ஆத்தியாட்சருத்திரர்-க்ரியாட்சருத்திரர்- த்ரிதிசவந்திகருத்திரர்-ச
ம்வீரஹாரருத்திரர்-பிரபஞ்சருத்திரர் விசட்சணருத்திரர்- அனந்தரு
த்திரர்-பாலருத்திரர்-வீரருத்திரர்-பாதாளருத்திரர் -வ்ருஷபதாவச
ருத்திரர்-சௌந்தர்யருத்திரர்-க்ராசணருத்திரர்-சர்வருத்திரர் -ஸ்மசா
னருத்திரர்-நீலலோகிதருத்திரர்-வைலோகிதருத்திரர்-கபாலீசருத்தி
ரர்-அஜருத்திரர்-ஈசானருத்திரர்-விஜயருத்திரர் -புத்தருத்திரர் - ப
வோற்பவருத்திரர்-வச்சிரதேகருத்திரர் - பரமார்த்தனருத்திரர் விபு
ருத்திரர் - சஹஸ்ரருத்திரர் - பிஞகருத்திரர் - த்ரிதசாதிபருத்திரர்
அக்கினிருத்திரர் - உதாதிசிருத்திரர் - பிங்கலருத்திரர் -கண்டருத்தி
ரர் - ஆதிருத்திரர் - ஹரருத்திரர் - ஈவாலருத்திரர் - தஹனருத்
திரர் - ஹவ்விய ருத்திரர் - பப்ருருத்திரர் - பஸ்மாந்தகருத்திரர்-
க்ஷயாந்தக ருத்திரர் - விதாத்ருருத்திரர் - தாத்ருருத்திரர் - கர்த
ருருத்திரர் - ஸ்ரிதகாமருத்திரர் - சர்வவியோக்தி ருத்திரர் - வி
யோமருத்திரர் - தர்மருத்திரர் - விசாலருத்திரர் -சமயுக்தருத்திரர்
நைரிதிருத்திரர் - வருணருத்திரர் - ஹதருத்திரர் - த்வாத்ருருஷ்ட-
ருத்திரர் - பயானருத்திரர்- ஊர்த்வசேஷருத்திரர் - விருபாக்ஷருத்
திரர் - தாம்ரருத்திரர் - லோகிதருத்திரர் - தௌஷ்டராகருத்திரர்
பாலருத்திரர்-அதிபாலருத்திரர் பாசஹஸ்தருத்திரர்- ஜயபத்ரருத்தி
ரர்-தீர்க்கபாகுருத்திரர்-த்பாஜக்மகருத்திரர்-சுஜமருத்திரர்-அப்கா
வருத்திரர்-சீக்ரருத்திரர்-லயருத்திரர்-வாயோகருத்திரர்-சூக்ஷ்மருத்
ர்-தீட்சண்யருத்திரர் பயாந்தகருத்திரர் பஞ்சசிகருத்திரர் - கபர்த்
. நிதீசருத்திரர்-ருபவந்தயருத்திரர் - தாவ்யருத்திரர்-சௌ
கருத்திரர்-சடாதரருத்திரர்-காமருத்திரர்-பரசாதருத்

திரர். லக்ஷ்மீசருத்திரர்-ப்ரகாசருத்திரர்-வீர்யேசருத்திரர் - எக்யேசருத்திரர் ஜேஷ்டருத்திரர்-வேதாபருத்திரர்-வித்தியாதரருத்திரர் - பூதாவேசருத்திரர்-லோகருத்திரர்-பார்வதீருத்திரர்-பரமேஸ்வரருத்திரர்-உமாபதிருத்திரர்-ஈஸ்வரருத்திரர்-சதாசிவருத்திரர்-மஹாவீரருத்திரர்-கிராதருத்திரர்-அர்த்தநாரீஸ்வரருத்திரர்-ஜலவிகருணருத்திரர்-சாஸ்விதருத்திரர்-மஹேஸ்வரருத்திரர்-மஹாருத்திரர்-என்கின்ற அஷ்டாசதருத்திரர்கட்கும் வெவ்வேறுவேதிகைகளைநிறுத்திமேல்விதிக்கப்பட்ட விதிமுற்றினும்முறையே நவகுண்டங்களையுமமைத்தனர்.

அச்சமயத்தில் வீமராசன் அவரையடைந்து சுவாமீ தேவரீர் முன்னர்பொறித்தருளிய பத்திரிகையின்படி எல்லாப் பொருள்களையும் இங்ஙனம் அழைப்பித்திருக்கின்றேனென்று அறிக்கையிட அவர் அப்பொருள்களையெல்லாம் பார்வையிட்டு அங்கிருக்கின்றவர்களைநோக்கிச் சிவபிரான் கும்பத்திற்கு மூன்றிழையும், உமாதேவிகும்பத்திற்கு இரண்டிழையும் ஏனையோர் கும்பங்கட்கெல்லாம் ஒவ்வோர்இழையுமாக நூல்சுற்றிச்சமிதைமுதலானவைகளை வேறுவேறு ஆராய்ந்து வைக்கக் கட்டளையிட்டுத் தாமுந் தருப்பைமுதலானவைகளை ஆராய்ந்து பாலிகைகளில் மணல் சொரிந்து முளைவிதைத்து மற்றுமுள்ள கருமங்களை முடித்துக்கொண்டிருந்தனர். அவர் அவ்வாறிருக்க முன்னர் அரசனேவப்பட்ட அமைச்சர்கள் மற்றப்பரிசனங்களைநோக்கி அவ்வவர்கட்குரிய பணிகளைக்கட்டளையிட அவ்வாறே அவர்களெல்லாந் தங்கடங்கள் தொழில்களை நிறைவேற்றுவதானார்கள். உடனே வள்ளுவனானவன் உன்னதவுடுக்குவாதிகளை முடித்துத்தனது முரசினோடு யானைமீதேறி எங்கும் நீக்கமற்று நிறைந்திருக்கின்ற தேவதேவோத்தமர்வாழ்க சகல வேதாகமங்களும்வாழ்க வீமராசரும் அவர்கிளைகளும்வாழ்க அவரது நீதிதவறாத செங்கோல்வாழ்க எல்லாவுலகங்களுங் குறைவின்றிவாழ்க இந்நகரமுழுவதுந் தழைத்தோங்கிவாழ்க என்றுமுரசறைந்து பின்னுஞ்சொல்லுவான் இந்நகரத்துள்ள எல்லாச்சனங்கட்கும் அறிவிப்பதியாதெனில் கலைமகள்-சயமகள்-என்னுமிரண்டுமங்கையர் முன்னமேகாணியாட்சியாகக்கொண்டிருக்கின்ற உருக்குமாங்கதராசருடையபுயங்களின்மீது நிலமகள்-திருமகள்-என்னுமிவ்விருவர்களையும் நாளையதினத்திற் புணர்த்தப்போகின்றனராதலால் யாவரும் நகரத்தை அலங்கரிக்கவேண்டியது முன்னிலும்விசேஷமான தருமங்களை யாவரும்நடத்தவேண்டியது பொருளில்லாதவர்கட்கெல்லாம் மகாராசாவினுடைய

நிதிப்பொக்கிசத்தைத் திறந்துவிட்டிருக்கின்றது அதில் அவ்வளவைக்குவேண்டுமட்டுமெடுத்துக்கொண்டு நிறைவேற்றவேண்டியதுபொருளுள்ளவர்களாயின் அதனைத்தங்களால்வெறுக்கப்பட்ட தெய்வத்தினையொப்பமதித்து ஒழிந்துவிடவேண்டியது யாவரும்இனியபோசனாதிகளைநுகர்ந்து குளிர்ந்தசந்தனாதிகளைப்பூசி ஆடையாபரணாதிகளைத்தரித்துஒருவரோடொருவர்இனியவார்த்தைகளோடுஅளவளாவி எல்லாத்தேவர்கட்கும் பூசனைகளைச்செய்யவேண்டியது என்றிவ்வாறுசொல்லித் தன்னிருக்கையைச்சேர்ந்தனன். அவையனைத்தையும் அந்நகரத்தார்மிக்க அன்போடுகேட்டு அளவற்ற கருமங்களைச்செய்து நகரமுழுவதும் அலங்கரித்துத் தங்கடங்கள்குமாரர்க்கே அரசுரிமைவந்ததுபோல உள்ளமும் உடலும் பூரித்திருந்தார்கள். இப்பால்சேலத்தனுவனுடையஏவலினால் யானைப்பாகர்கட்கெல்லாம் இறைவனான ஆதோரணனென்பவன் அரசனுடைய பட்டத்துயானையைக் குளிப்பாட்டித் திருமுகமெழுதி நெற்றிப்பட்டமணிந்து அளவற்ற ஒப்பனைகளைச்செய்துமுடித்தனன். ரதசாரதிகட்கெல்லாந் தலைவனானவலவனென்பவன் அரசனுடையரதத்திற்கொடிகளையுயர்த்தி ஆடையாபரணாதிகளையணிந்து பலலக்ஷணங்கள்வாய்ந்த அசுவங்களைப்பூட்டி வாளாயுதம்-கொடுமரம்-பகழி-முதலான பலவாயுதங்களை நிரப்பினன். குதிரைப்பாகர்கட்கெல்லாம் முதன்மையான வாதுலனென்பவன் எல்லாக்குற்றங்களுமகன்று பலநற்குணங்களைவாய்ந்து பகைவரதுஉள்ளங்களைப்பேதிக்கவல்ல அரசனது பட்டத்துக்குதிரையைக் குளிப்பாட்டி ஒளிமிகுந்த ஆபரணங்களைப்பூட்டிக் காதடியிலிருக்கின்ற கேசங்களைப்பின்னிப் பலவிதசிங்காரங்களைச்செய்து நிறைவேற்றினன். சாரணர்கொண்டுசென்ற திருமுகத்தைப் பிறதேயங்களிலுள்ள அரசர்முதலாயினோர்வாங்கிவாசித்து அளவற்ற அலங்காரங்களோடு தங்கள்தங்கள் மனைமக்கள் சுற்றத்தினருடன் வந்துசேர்ந்தனர். தோரணங்களாற் புனைதல்செய்யப்பட்டிருக்கின்ற மாடவீதிகளில் ஓர்பால்வாரணமுழக்கமும் ஓர்பால்தேரணிமுழக்கமும் ஓர்பால்சேனைகள்முழக்கமும் ஓர்பால் ஆரணமுழக்கமும் ஓர்பால் ஆ[illegible]வின்முழக்கமுமாகியிருந்தன. சிலர்புனலிற்குளித்து விளையாடுவார்களும் சிலர்பொழிலிற்சென்று விளையாடுவார்களும் சிலர் மதுவுண்டுகளிப்பார்களும் சிலர் வாதாடிக்கெலிப்பார்களும் சிலர் [illegible]ர்களும் சிலர் வேறுபணிகளாக்குவார்களுமாகியிருந்தார். அந்நகரத்துள்ளோரும் பிறநகரிலிருந்துவந்திருக்கி

ன்றவர்களும் அளவற்றஆனந்தத்தின்மூழ்கினவர்களாயிருக்க மூன்
னர்கணிதர்களால் ஏற்படுத்தியிருக்கின்ற நாள்சமீபித்தலும் ஆசிரிய
ர்பூசாமண்டபத்திற்கெழுந்து சந்தனம்-புஷ்பம்-அக்ஷதை-பால்-தயி
ர்-முதலியவைகளாற் சகலதேவர்களையும்பூசித்து அவர்கட்குப்பலிபி
ண்ட-முதலியவைகளையுங்கொடுத்து யாவரும் இப்பூசாமுகத்தில்எழு
ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து முன்புயாகரால் அலங்கரிக்க
ப்பட்டிருக்கின்ற -கரி-பரி-தேர்-பண்டக்கலம் என்னுமிவைகட்குமு
றைமைப்படிப் பூசனைசெய்து அந்தணர்-முனிவர்-இரவலர்- முதலாயி
னோர்க்கு அன்னமளித்து அன்றிரவில் உருக்குமாங்கதனை யழைத்
து அவன்கரத்திற்பொற்கங்கணம்பூணர்ந்து நூதனமாக இயற்றப்பட்
டிருக்கின்றவஸ்திராபரணங்களை யணிவித்து பூசைசெய்யத்தனித்த
வராய் பலவகை வாத்தியங்கள்முழங்க பாவையர்கள் நிர்த்தஞ்செய்ய
முனிவர்கள் மந்திரங்கணிக்க அந்தணர் வேதங்களையோத கேட்ட
பொருள்களைச் சிலர் எடுத்துநீட்ட இவ்வித ஆடம்பரங்களோடு மு
ன்னோர் சுவர்த்தலத்திற் சிற்பர்களாற் சமைக்கப்பட்டிருக்கின்ற சித்தி
ரவுருவாகிய விநாயகமூர்த்தியைப் பத்தியோடு பூசனைசெய்து பல
வித உணவுகளை நிவேதித்து பரமகருணாநிதியாகிய கணேசமூர்த்
தியே யாவரியற்றப்போகின்ற வினைகளை இடையூறின்றி நிறைவே
ற்றி யருளவேண்டுமென்று பிரார்த்து முன்னர் சிவபிரானுக்கமை
த்திருக்கின்ற வேதிகையின்மீது ஆறுபாரக்கால் நெல்பரப்பி அதி
ற்பாதியளவு அரிசியும் அதிற்பாதியளவு எள்ளும் அதிற்காற் கூ
று ஒன்றாய்க் கலந்திருக்கின்ற நவதானியங்களும் பெய்து அ
தன்மீது சிவகும்பத்தைத்தாபித்து சகல மங்கலவாத்தியங்களோடு
பொற்குடங்களில் யானையின்மீதுகொண்டுவந்த திவ்வியதீர்த்தங்க
ளை ஆடையில்வடித்து அதில்முப்பத்திரண்டுபடி மேற்படி கும்பத்
திற்பூரித்து சொர்ணம் நவரத்தினம் கோட்டம் கற்பூரம் அகில் சந்த
னம் பஞ்சகௌவியம் வெட்டிவேர்விரைகள் மலர்கள்கனிகள்கொடி
கள் என்னுமிவைகளை உள்ளேசொரிந்து அதன்மீது மாவிலைநாரி
கேளம் குருப்பைமுடி முதலானவைகளை வைத்துமேற்கூறியநெல்மு
தலிய அடிப்பரப்பளவிலும் ஈரளவிலும் பாதிபாதியளவு அதற்கு
வாமபாகத்திலிருக்கின்ற சத்திகும்பத்திற்கும் அவைகளிற்பாதியள
வு மற்றக்கும்பங்கட்குமமைத்து எல்லாக்கும்பங்களையும் அவ்வவ்விட
ங்களிற்றாபித்து மேற்கூறிய பொன்முதலியவஸ்துக்களைச்சொரிந்து
மாவிலைமுதலியவைகளையும்வைத்து கும்பங்கட்கெல்லாம் இரண்டி

ரண்டுகலைகளைவெவ்வேறாகஉடுத்தி வித்தியேஸ்வரர் கும்பங்களெட்
டினுள் பொன் வெள்ளி செம்பு இரும்பு காரீயம் வெள்ளீயம் பித்த
ளை வெண்கலம்என்கின்ற இவ்வெண்வகைப் பொருள்களையும் ஒவ்
வொன்றாகச்சேர்த்து அவற்றைச்சூழவிருக்கின்ற பதினாறுகும்பங்க
ளுள் அகில் கந்தகம் அரிதாரம் மாட்சிகம் மனசிலை இரதம் வெள்ளை
அப்பிரகம் மஞ்சள் அப்பிரகம் கௌரி காஞ்சனம் சாதிலிங்கம்சிந்தூ
ரம் துத்தம்* பொன்விமலை வெள்ளிவிமலை காந்தமென்னும் இப்பதி
னாறுபொருள்களோடு சோதிமரம்சோதிக்கொடி சோதிப்புல் பார்சி
ணைத் பணை சீவை வினச்சுரி சமங்கை விசையை சடை சகதேவை பூர
ணை கேசை அஷ்டை சதாவரி சிவபத்திரி என்னும் இப்பதினாறையு
மிட்டு இந்திரதிசைத்துவாரத்தின் இருமருங்கினுமடுத்த பன்னிரண்
டுகும்பங்களுள்பலாசு கருங்காலி ஆம்பிரம் கல்லால் கடவிரம் வன்
னி ஆல் வாகை பிப்பிலம் அத்தி நாரத்தை மாதளை என்னும்இப்பன்
னிரண்டுபொருள்களின் பட்டைகளைச்சொரிந்து அக்கினிதிசையிலி
ருக்கின்ற ஒன்பதுகும்பங்களுள் ஆற்றுமண் ஆலிலைமண்புற்றுமண்
இபக்கோடுபட்டமண் கடல்மண் மடுமண் புண்ணியதலத்துமண்
மலைமண் அரசிலைமண் என்னும் இவ்வொன்பதினையுந்தனித்தனிஆ
ராய்ந்துபெய்து யமதிசைத்துவாரத்தின் இருமருங்கினுமடுத்த பன்
னிரண்டு கும்பங்களுள் கழுநீர் நீலம் வெண்டாமரை செந்தாமரை
மகிழ் அலரி பாதிரி குரவம் மல்லிகை பலாசு நந்தியாவட்டம் சண்
பகம் என்னும் இப்பன்னிரண்டு மலர்களையிட்டு நிருதிதிசையிலிரு
க்கின்ற ஒன்பது கும்பங்களுள் அரைத்தசந்தனம் வெட்டிவேர் புனு
கு குங்குமம் கஸ்தூரி தக்கோலம் அகில் சாபத்திரி இலவங்கம் என்
னும் இவ்வொன்பது பொருள்களைப்பெய்து வருணதிசைத்துவாரத்
தின் இருமருங்கினுமுள்ள பன்னிரண்டு கும்பங்களுள் மூங்கிலரிசி
கோதுமையரிசி யவையரிசி நாயுருவியரிசி தினையரிசி சாமையரிசி
வாகரிசி உளுந்து குளநெல் எள் பயறு கடுகு என்னும் இப்பன்னி
ரண்டையுஞ் சுத்திசெய்திட்டு வாயுதிசையிலிருக்கின்ற ஒன்பது கும்
பங்களுள் இலக்குமி சங்கபுட்பி விண்டுகாந்தி அஞ்சலி துளசி சக
தேவி இந்திரவல்லி சூரியகாந்தி பன்மினிஎன்னும் இவ்வொன்பதி
னையும்பெய்து குபேரதிசைத்துவாரம் இருமருங்கினுமுள்ள பன்
னிரண்டுகும்பங்களுள் பால் தயிர் நெய் கோசலம் கோமயம் இளநீ
காளங்கனிரசம் நாரத்தங்கனிரசம் வில்வக்கனிரசம் மாங்கனிர
க்கனிரசம் பலாக்கனிரசம் என்னும் இப்பன்னிரண்டை...

யும் விடுத்து ஈசானதிசையிலிருக்கின்ற ஒன்பது கும்பங்களினும் எண்டிசையினும் இடை இடை மும்மூன்றாகவைத்திருக்கின்ற இருபத்துநான்கு கும்பங்களினும் வேறுபடுவன வில்லையாதலால் அவைகளுள் முன்னர் விட்டிருக்கின்றகந்தநீரோடுநிறுத்தி சிவகும்பம் அமைத்திருக்கின்ற நடுப்பத்தை மகமேருவாகவும் அதோடு அதனைச்சூழ்ந்திருக்கின்ற இருபத்தைந்து பதங்களை இளாவிரதகண்டமாகவும் வீதியைவானமாகவும் மற்றப்பதவரிசைகளையெல்லாம் ஏனைய பர்வதங்கள் அவற்றிற்பதங்கள் அவைகளைச்சூழ்ந்த கண்டங்களாகவுங்கொண்டு அம்மண்டபத்தை நாவலந்தீவாகத் தியானித்து முன்னர்மேருவாகத்தியானித்தபதத்தை அம்மேருவின் அடிநடுமுடியாகவும் அதனருகில் இரண்டு வரிசையாகச் சூழ்ந்திருக்கின்றபதங்களை அம்மேருவின் கொடிமுடிகளாகவும் பாவித்து சிவம் சத்தி வித்தியேஸ்வரர் தாதுக்கள் உருத்திரர்முதலிய எல்லாத்தேவர்களையும் புட்பமுதலிய வைகளைக்கொண்டு வரிசைக்கிரமமாகப் பூசித்து சிவத்தையும் சத்தியையும் ஏகாதசம் மிருத்தியஞ்சம் மூலம்என்னும் இம்மந்திரங்களா லருச்சித்து ஏனையோரையெல்லாம் அவ்வவர்கட்குரிய மந்திரங்களால் வழிபட்டு உண்வாதிகளையூட்டித் தூபதீபாதிகளைக் காட்டி ஆடல் பாடலாதிகளைக் கிரமமாக நடப்பித்து பின்னர் நவகுண்டங்க ளமைத்திருக்கின்ற வீதிக்கெழுந்து மதியுருவம்போன்ற குண்டத்தையடுத்து சுத்திமுதலானவைகளைச்செய்து அதில் அக்கினியைத்தாபித்து பலாச்சமிதை முதலிய உபகரணங்களைக்கொண்டு ஓமஞ்செய்யத்தொடங்கினவராய் மற்றக்கிழக்காதி திசைகளி லிருக்கின்ற எட்டுக்குண்டங்கட்குத் தன்னையொத்த ஆசிரியர்களைக்கூவி அவர்கட்குக் காதணிமுதலியவைகளைத்தந்து மந்திராக்கினியையு மளித்துச்செலுத்தினர். அவர்களும் அக்கிழக்காதிகுண்டங்களில் தனித்தனிசென்று அத்தி வன்னி ஆல் கருங்காலி அரசு மாயூரம் கல்லால் கூவிளம் என்னு மிவைகளின் சமிதைகளை முறையேகொண்டு மந்திரபூர்வகமாக அக்கினிகளையெழுப்பி ஓமாதிகளைநடாத்தி ஆகுதி கொடுத்தனர்.

இப்பால் முதலாசிரியரானவர் வலஞ்சுழித்தெழுகின்றதீயினையுடையதமது குண்டத்தருகிலிருந்து மூலமந்திரத்தால் நூறும்ஏனையமந்திரங்களால் பப்பத்துமாகக்கணித்து அடிக்கடி அவிசொரிந்து முடிவில் அனைத்தையுமெடுத்து ஆகுதிகொடுத்துஉருக்கமாங்கதனை நோக்கிச் அரண்மனையிற்சென்று சித்தசுத்தியோடும் உறங்குவாயெ

ன்று கட்டளையிட்டனுப்பிவிடுந்தபின்னர்நித்திய நியமாதிகளைமுடித்
துப் பூசாமண்டபத்திற் சென்று இராசகுமாரனை யழைப்பித்துஅவ
னதுநற்கனவினைக் கேட்டுமனமகிழ்ந்து இப்பால் முடிக்கவேண்டிய
தீக்ஷையைக்குறித்து எல்லர்க்குண்டங்கட்கும் நூறு நூறு ஆகுதிக
ள்கொடுத்து சகலவாத்தியங்களையு முழக்குவித்து அவன்செவியின்ம
ந்திரஉபதேசஞ்செய்து கரத்திற்புட்பங்களைத்தந்துகும்பங்கட்குங்கு
ண்டங்கட்குங்கிரமமாக அருச்சனைபுரிவித்து வலம்வரச்சொல்லி சா
ஷ்டாங்கநமஸ்காரஞ்செய்வித்து அலங்காரமண்டபத்தி லழைத்துக்
கொண்டுசென்று முன்னர்கம்மியர்களா லியற்றப்பட்டிருக்கின்ற பீ
டங்கட்கும் வேதிகைகட்கும் மிருத்தஞ்சயமந்திரத்தால் அருச்சனை
புரிந்துஅம்மண்டபத்தின்னடுவேயோர்வேதிகையையிருத்தி அதன்மே
ல் செந்நெல்முதலானவைகளைப்பரப்பி அதன்மேல் வெள்ளேறு சி
ங்கம் புலி கலை என்னும் இவற்றின் தோல்களைவிரித்து அதன்மேல்
ஓர்பீடத்தைவைத்து அதன்மேல் சகஸ்ரதளத்தோடுங்கூடி விரிந்
திருக்கின்ற சொர்னகமலத்தையிணக்கி அதன்மேல் வஸ்திரம் விரி
த்து வாள் கவிகை கொடிமுதலிய சின்னங்களை இருமருங்கினும்வை
த்து மற்றொருபீடத்தை அதற்கு வலப்புறத்திலிருத்தி அதனை மந்தி
ரபூர்வகமாகச் சுத்திசெய்து சிலமங்கையர் மகுடம் ஆரம் வஸ்திரம்
முதலிய அரசவுறுப்புக்களைப்படலிகையிலேந்திவர அவைகளை அ
ப்பீடத்தின்மேல்வைத்து கும்பசலத்தினாற் புரோக்ஷித்து எதிரிற்றி
ரையிட்டு அத்திரைக்கப்பால் மற்றொருவேதிகையைவைத்து அதன்
மீது கனகமுதலியபொருள்களை நிறைத்துவைத்திருக்கின்றசொர்ன
கும்பங்களையும் சகலதானியங்களையும் அளவற்ற ஆபரணங்களையும்
நிரப்பி அதர்வணம் உருத்திரமென்றுசொல்லப்பட்ட வேறுவேறா
யுள்ள பலமந்திரங்களையகற்றி மகாரோகினி குபேரவிருத்தையம் இர
ணியவருணம் கூமாண்டம்முதலிய மந்திரங்களைமுன்னதாகக் கணி
த்து முடிவில் மூலமாகிய மிருத்தஞ்சய மந்திரத்தையோதி இப்பா
ல் அபிஷேகஞ்செய்யவெழுந்து உருக்குமாங்கதனைக் கிழக்குதிசை மு
கமாகப் பீடத்திலிருத்தி பலவகை வாத்தியங்கள் சத்திக்க வேதவோ
சைமுழங்க மங்கலவாழ்த்துவிம்ம அவர்காட்டிய கும்பங்களைச் சில
ரெடுத்துநீட்ட வீமராசனுக்கும் சாருகாசினிக்கும் அளவற்ற மகிழ்ச்சி
பொங்கச்சகலதேயத்து மன்னர்களுங் களிப்பெய்தியார்ப்பரிக்க இ
டம்பரங்களோடு சகஸ்திரதாரைகள் விட்டிருக்கின்ற பொ
ரத்திலேந்தி எண்ணிறந்த தேவர்களையும் முனிவர்

களையும் அவ்வவர்கட்குரிய மாதர்களையும்மனதிற்றியானித்து அவர்களைநேரில்வந்து அபிஷேகஞ்செய்வதாகப் பாவித்து எல்லாக் கும்பங்களையும் மந்திரபூர்வகமாகவெடுத்து மகுடாபிஷேகஞ் செய்தனர் தேவர்கள்முதலாயினோர்வந்து அபிஷேகித்ததாக மனதிற் பாவித்தபடியால் திரிமூர்த்திகள் அச்சுவினித்தேவர் மருத்துவர் வசுக்கள் உருத்திரர் முதலியதேவர்களும் உமாதேவி திருமகள் சரஸ்வதி அதிதி சுவாகாதேவிமுதலிய இவர்களோடுகணமுதல் ஆணுராகச்சொல்லப்பட்ட தெய்வமாதர்களும் தடாகம் நதி சமுத்திரம்முதலிய உருவங்களாயிருக்கின்ற ஸ்திரீகளும் துருவாசன் புலகன் புலத்தியன் சாபாலி மார்க்கண்டன் கண்ணுவன் கவுதமன் பிருகு பரத்துவாசன் கபிலன் முதலாயுள்ளமுனிவர்களும் அருந்ததி முதலாயுள்ள இருடியர்பத்தினிகளும் அவ்வரசகுமாரனுக்கு அபிஷேகஞ்செய்தவராகியிருந்தார்கள். பின்னர் உருக்குமாங்கதன் ஈரம்புலர்த்தி இடையிற்கிழிபடாது இரண்டிரண்டாகி யிருக்கின்ற ஆடையினையுடுத்தி மகுடமுதலிய கலன்களையணிந்து சந்தனக்கலவைபூசிமாலைமுதலியவணிகளைத்தரித்து சிங்காதனத்தின்மீ தாரோகணித்தனன். உடனேசிலர் ஆலவட்டமசைத்தார்கள். சிலர்கீதங்களிசைத்தார்கள். சிலர்சந்திரவட்டக்குடைபிடித்தார்கள் சிலர்விருதுகள்படித்தார்கள். சிலர்மங்கலவாழ்த்து பேசினார்கள். சிலர்கவரிகளெடுத்து வீசினார்கள். அச்சமயத்தில் அங்கிருந்தவர்கள் ஜெயோவென்று திசையை நீக்க உருக்குமாங்கதனானவன் தனக்கெதிரில் வேதிகையின்மீது பரப்பியிருக்கின்ற எல்லாப் பொருள்களையுங் கன்றோடிருக்கின்ற பசுவினையும் வெள்ளேற்றினையும் இரதமுதலியமங்கலவஸ்துக்களையுங் கண்டுதரிசித்தனன். தமர்களாயினோர் பொன்னாழிமுதலிய ஆபரணங்களைக்கையுறைதந்தார்கள். பிறதேயத்தரசர்களெல்லாந் திறைதந்துவணங்கிநின்றார்கள்.

இப்பால் உருக்குமாங்கதன் ஆசிரியரிடத்தில் விடைபெற்று அவ்விடத்தினின்றுமெழுந்து ஆதோரணன்கொண்டுவந்தஆனையின்மீதாரோகணித்து ஓர்பால்கவிகைகவரி கொடிமுதலியசின்னங்கள்நெருங்கிவர ஓர்பால்குடமுழாபேரிகைமுதலியவாத்தியங்கள்அண்டங்களதிரமுழங்கஓர்பால்பலதேயத்துமன்னவர்கள்தனித்தனிவரிசையெடுத்துவர ஓர்பால் ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகளுமார்ப்பரிக்க, இவ்விதசம்பிரமங்களோடு தேவேந்திரனைப் போலஉலாப்போந்து தனது அரண்மனைவாயிலுக்கெதிரில்இறங்கி அங்கமை

த்திருக்கின்ற பொற்பலகையின்மீது நின்றனன். உடனே அருகிரு ந்தமாதர்கள் அவன்பாதத்திற் பாலைச்சொரிந்து நீராற்கழுவிமெல்லி யஆடையாற்றுடைத்து பூரணகும்பம் நீராஞ்சனம் மணிவிளக்குமு ளைப்பாலிகைமுதலிய மங்கலப்பொருள்களைக் கரத்திலேந்தி நீர்த்தா ரையொழுக்கி மும்முறைவலம்வந்து பலரத்தினங்களால் இழைத்தி ருக்கின்ற பாதுகையை எதிரில்வைத்தார்கள். அதை உருக்குமாங் கதன் பாதத்திற்சூடி அரண்மனைபுகுந்தனன். பின்பு ஆசிரியர் அ வனைப் பூசாமண்டபத்திற்கு அழைத்துக்கொண்டு சென்றுமுடிவிற் செய்யத்தக்கசாந்திகளைச்செய்துஎல்லாத்தேவர்களையும்மனதிற்றியா னித்து எதிரேபயபத்தியோடும் நின்று புட்பாஞ்சலிகொண்டு அபி மகுடாபிஷேகஞ்செய்ய வந்திருந்ததேவர்கள் முதலியயாவர்க்கும் வி டைகொடுத்தனர். இப்பால்உருக்குமாங்கதனெழுந்து அரண்மனை புகுந்து ஓமாதிகளைச்செய்த அவ்வாசிரியரைப்பூசித்து அவரவர்கிர ம்பத்தக்கதாகத் தட்சணைகொடுத்துமுனிவர்கள் அந்தணர்வறியோ ர்முதலியயாவர்க்கும்பலதானங்களைச் செய்துஞாதியர்-குரவர்-வேற்ற ரசர்-அமைச்சர்-பாவலர்-நாவலர்,படைவீரர் முதலாயினோர்க்குத்துகி ல்-பூண்-துரகம்-வேழம்-இரதம்- முதலானவைகளை மேகங்களுங்கண் டுநாணத்தக்கதாகப் பொழிந்து உலகமுழுவதுந் திங்கள்மும்மாரிபெ ய்துதழைக்கும்படியாகத் தனதரசாட்சியை நடாத்திவந்தனன். பின் னர் வீமராசன் நமதுபுயச்சுமை யொழிந்ததென்று மனமகிழ்ந்து ச தாகாலமுங் கணேசமூர்த்தியை ஆராதித்துக்கொண்டிருந்தான்.

அ-வது-வீமனுபாசித்த படலம்

முற்றிற்று.

—*—

ஒன்பதாவது.

## தேவேந்திரனுபாசித்தபடலம்.

வாகைவேற்படைவீமன் மாமுகத்தனைவந்தித்
தோகைமேவியபுதல்வனைப் பயந்தமையுரைத்தாம்
நாகர்போற்றவிண்ணாட்டினிதரசுவீற்றிருக்கும்
பாகசாதனன்போற்றியதன்மையைப்பகர்வாம்.

ஓ சவுனகாதி முனிவர்களே கணேசமூர்த்தியை வீமராசன் அ க்காப் புத்திரப்பேற்றினையடைந்த சரித்திரஞ்சொன்னோம் இ ந்திரனநுட்டித்தமுறைமையைச் சொல்லுவோங் கேட்

ரீராக. இவ்வாறு மகுடாபிஷேகஞ்செய்துகொண்ட உருக்குமாங்கதராசனென்பவன் தன் தந்தையுபதேசித்த ஏகாட்சரமந்திரத்தை இடைவிடாது செபஞ்செய்துவருந்தோறுங் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளில் மிக்கபேரன்புடையவனாகிச் சதாகாலமும் அவரைப்பூசைசெய்துகொண்டு சத்துருக்களையெல்லாஞ்செயஞ்செய்து இலக்குமி-சரஸ்வதிபூமிதேவி-என்னுமிவர்கள்களிக்கும்படியாகத்தன் ஆணையைப்பலதிக்குகளினுஞ்செலுத்திப்பழமையாயுள்ளவேதப்பிராமணர்கள்-உயர்ந்தராசர்கள்-நீதியையுடையஅநேகநிருபர்கள்-சகல கலைக்கியானங்களினும் வல்லவர்கள் ஆகிய இவர்களெல்லாம் இருமருங்கினுஞ் சூழ்ந்திருக்கப் பூமியை யாளுகின்ற சிற்றரசர்களெல்லாந் திறைகொணர்ந்து நிற்க, அதிதிகள் - முனிவர்கள் - தபோதனர்கள் - பெரியோர்கள் - முதலாயினோர் ஆசீர்வதிக்க மந்திரியர் - புரோகிதர் - சேனாதிபர் - தூதர் - சாரணர் - முதலான துணைவர்கள்பக்கங்களில் நெருங்க, குற்றமற்ற சேனைகள் கூட்டங் கூட்டமாய்வளைதடி வாள் உடைவாள் - களாஞ்சிகள் - முதலிய படைகளைக்கொண்டுதலைவாயிலிலுலாவ, சிலகணிகையர்வெள்ளியசாமரைகள் வீச, சிலகணிகையர்கட்டியங்கூற, இத்தன்மைத்தாகியவலங்காரத்தோடு சிறந்த சிங்காதனத்தில் வீற்றிருந்து செங்கோல்முறைவழுவாமல் சகலசீவராசிகட்கும் இன்பமுண்டாகத்தக்கதாய் இராச்சியபரிபாலனஞ்செய்து வருகின்றகாலத்தில் சிலஜனங்கள் அவ்வுருக்குமாங்கதராசன் சமுகத்தில்வந்துபணிந்து ஓ சர்வஜனோபகார சக்கிரேஸ்வரனே காட்டுமிருகங்கள் கூட்டமாய்வந்துநாட்டுப்பயிர்களைவெட்டியழிக்கின்றதென்றுமுறையிட்டார்கள். அதையவ்வரசன்கேட்டு மனமிரங்கிவேட்டையாடிவருவேமென்றெழுந்து பலபடைக்கூட்டங்களையும் வலைஞர்களையுமழைத்துக்கொண்டு சகலபரிசனங்களோடுங் காட்டிற்சென்று சிங்கம் புலி யானை கரடி முதலியமிருகங்களைக்கொன்று பின்னர் தான் தனியேசென்று தனக்கெதிர்ப்பட்டுவருகின்றசெந்நாய் கலைமான் புள்ளிமான் முதலியவைகளை வதஞ்செய்துவருகையில் அதிகதாகங்கொண்டவனாகி இளைப்புற்று ஓர் கானகத்துள் நுழைந்து அங்கு கவிமகாமுனிவர் வாசஞ்செய்கின்ற ஆசிரமத்தையடைந்து, அவ்விடத்தில் அவர்பத்தினியாகிய முகுந்தையென்பவள் உல்லாசமாய்த்தனியே உலாவல்செய்திருக்கக்கண்டு, அவளருகிற்சென்று, அன்னையே- அடியேன் தாகநீங்குமாறு நீர்தரல்வேண்டுமென்று மிகுந்த வணக்கத்தோடும் பிரார்த்தித்தான். இவ்வாறுபிரார்த்தித்தஅரசனைமு

குந்தைகண்டவுடன் அவன் வடிவின் பேரழகினுக்காவலுற்று அதி
கவிரகதாபங்கொண்டு மிக்கவிளைப்போடுநீர்தேடிவந்தமெலிவையுங்
கருதாது தன்மனதினுண்டானவிரகத்தினை யவ்வரசனுக்கு அறிவி
ப்பவளாகி இதனைச்சொல்லுவதாயினள். ஓ சர்வாலங்கார சோபி
தனாகியமகாராசனே உன்னைப்போலழகின்மிகுத்தவர்களைத் தேவர்
கூட்டத்தினுங்கண்டதில்லை. உன்திருமேனியிற் சகல லட்சணங்க
ளுநிறைந்திருக்கின்றமையால் உன்னைக்கண்டபாவையர்களில் யாவ
ர்மோகத்தாற் சோர்வுறார்கள். ஓர் காரிகையானவள் மற்றெவ்வ
ணபுருடனைக்கண்டு ஆவல்கொள்ளுவாளாயின் உடனேயவனோடுகூ
டினாலல்லது அவள்விரகமொழியுமோ. முன்னர்யாவரையும்வதை
க்கும்படி ஆலகாலவிடத்தைத் தன்னிடத்துண்டாக்கிய திருப்பாற்க
டலானதுமீட்டு நல்லமுதத்தையீன்று யாவரையும் பிழைப்பித்தது
போல உனதுபேரழகினாலுண்டாகிய விரகத்தீயானது எனதுதன
ங்கள்குழையும்படி உனதோள்களைக்கூடிச்சுகித்தாலல்லது தீர்வதில்
லையென்றுசொல்லித் தன்துகில்சோரவுங் கூந்தலவிழவும் முத்தார
ங்கள்பொறியவுங் கைவளைகள்கழலவுமான அலங்கோலத்தோடு அ
வ்வரசனுக்கெதிரில்நின்றாள். இவ்வாறு இம்பக்குமியுங்கண்டு மயங்
கத்தக்க மிக்கஅழகினைவாய்ந்த அம்முகுந்தையானவள் தானேவலு
விற்கூடவேண்டுமென்றிரந்தும் உருக்குமாங்கதராசன் மனங்கலங்கா
தவனாகி அம்முகுந்தையைநோக்கித், தாயே - நீ அந்தணர்குலத்திற்
பிறந்து ஓர் அருந்தவருக்குவாய்க்கப்பட்டவள் யானோ அரசகுலத்தி
ற்பிறந்து இவ்வுலகத்தையரசாட்சிசெய்திருப்பவன். அன்றியும்யா
ன்விநாயகமூர்த்தியைத்தொழுகின்ற அன்பனாகும் என்மனதுஎக்கா
லத்தும் பரஸ்திரீகமனஞ்செயவதில்லை பெண்களாயினோர் தங்கடங்
கள் கணவரோடு சற்றுநேரங்கூடியிருக்கினும் அதுவே மேலானபெ
ருஞ்சுகத்தைக்கொடுக்கும் அவ்வாறின்றி அன்னியபுருடரோடு கூடு
வாராயின் அஃது உடனே அச்சத்தையுண்டாக்குவதினால் அவர்கட்
கென்னசுகமுண்டாகும். மேலும் இம்மையிற் சொல்லுக்கடங்காத
துயரங்களைப்பெற்று மறுமையில் அளவற்றநரகவேதனையிலழுந்திவ
ருந்துவார்கள். இறந்தபின்பல்லவோ நரகவேதனைகாணப்போகின்
றோமெனக் கருதுவையாயின் நீ கொண்ட நெறிதப்பிய காரியத்தால்
இப்போதே எங்கும் அவதூறுசொற்களுண்டாவதன்றி உன்கணவ
னுக்குரிய பெருமிதத்திற்குங் குறைவுவருமாதலால் இனியுன்மன
தையடக்கி உனக்குண்டாயிருக்கின்ற விரகதாபத்தையொழித்துவிடு

வையென்று பரிவாகச்சொல்லினன். அவைகளனைத்தையும் அம்முகுந்தைகேட்டு இவ்வரசன் மனமானது எவ்வளவேனுங் கலங்குதலில்லாமற் கல்லுக்கொப்பாகவிருப்பதன்றி கண்டிப்பானசொற்களையும் பேசுகின்றானென்று மனம்வருந்திச்சரியல்லவென்று அவ்வரசன்கரத்தைநெருங்கிப்பிடித்து அன்பனே - ஸ்திரீகளாயினோர்க்கு இக்கிரேதாயுகத்திலுந் திரேதாயுகத்திலுந் தாங்களெவ்வழியிற்சென்று புருடர்களைக்கூடுவதான சுதந்தரத்தைப் பிரமதேவனளித்திருக்கின்றானாதலால் ஓர்கணவனைப்பெற்றிருக்கின்ற மங்கையர் மற்றொருகணவனையுங்கூடவேண்டுமென்று உடன்படுவாராயின் அவர்கட்கென்ன பாவமிருக்கின்றது மேற்கூறியயுகதர்மத்திற்கு விலக்காக நீயேவலுவிலென்னைக்கூடவருவையாயின் இவ்விதபழிபாதகங்களை நினைக்கவேண்டுவதேயன்றிக் இரமப்படியானே யுன்னைக்கூடவேண்டுமென்றிச்சையுற்றால் அதனாலுனக்கென்ன பழிபாதகங்கள்நேரும். இனிமேலுந் தடைசொல்லி யென்னைக்கூடாமற்போவையாயின் நீறாகும்படியுன்னை எரித்துவிடுவேன். அல்லது உன்னழகனைத்துங்குலைந்து நகரத்தைவிட்டுக் காட்டிற்றிரியும்படிச் சபித்துவிடுவேன் இதனைத்தீர்க்காலோசனைசெய்யக்கடவையென்றுசொல்லி அவ்வரசன் மேலேவிழுந்து மார்பைத்தழுவினாள். உடனே அவ்வரசன்பயந்து இம்மாதின் செயல் நன்றுநன்றென்றுநகைத்துத் தனதுபுயங்களால் அவளைநிலத்தில்விழவுதறி துன்மார்க்கியே பெருகிவருகின்றவெள்ளமும் அணைக்கடங்கிநிற்கும் அக்கினிச்சர்ப்பமுதலிய தீயசெந்துக்களும் ஓர்தடைக்கஞ்சியிருக்கும் அறிவில்லார்க்குண்டானகாமமானது அவருளடங்காது பள்ளங்கண்டுபாய்கின்ற புனலுக்கொப்பாமென்று சான்றோர்கள்சொல்லுவர் அதுபோலவேநீயும் இத்துஷ்டநடத்தைக்கு அஞ்சாது உடன்பட்டனை உன்செய்கை இத்தன்மையதென்று முன்னறிந்திருப்பேனாயின் யானிங்கொருபோதும்வரத்துணியேன் நீமகாதவசிரேஷ்டருடைய பத்தினியென்று என்தாகந்தணியுமாறு தண்ணீர்கேட்டவெனக்கு நரகத்தில்விழத்தகவல்ல மகாபாதகமான காரியங்களை நடாத்தினை. உன்னை இப்போதே யெனது வாளுக்கிரையாக்கிவிடுவேன், ஆனால் இருடிபத்தினியென்றஞ்சி விட்டுவிட்டேனென்றுசொல்லி அவ்விடத்தைவிட்டுத்திரும்பினான். பின்னர் முகுந்தையானவள் கோபங்கொண்டு அரசனே-என்கற்புக்குலையும்படியிங்குவந்தனை வந்த நீஎனக்கொருசுகமுங்கொடுத்தாயில்லை யாதலால் உன்சரீரத்திற் குஷ்டரோகமுண்டாகக்கடவதென்று சபித்தனள்.

அதையவ்வுருக்குமாங்கதராசன் கேட்டு இவளிச்சித்தது கிடையா மற கோபங்கொண்டிருக்கின்றாள் இவளிட்டசாபத்திற்குத் தீர்வுகேட்கினுஞ்சொல்லாள்; ஆயினும் நிலைகெட்டமனத்தையுடைய அப்பாதகிமுகத்தைமீளவும் பார்க்கலாகாதென்று திரும்பாமற்போய்விட்டான். உடனே அவளிட்ட சாபத்தினாற்சரீரமெங்கும் வெண்குட்டரோகமுண்டாக அதனையவ்வரசன்கண்டு மிகுந்த துயரடைந்து விநாயக மூர்த்தியைமனதில்நினைத்து கர்த்தனே-தேவரீர் பணிவிடைகளில் அடியேன்மனதறிந்து யாதொரு குற்றமுஞ்செய்ததில்லையே தேவரீர் பாதபதுமங்களையடைந்த அடியார்களிடத்தில் கணப்போதேனுந்திருவருள் நீங்குவதுண்டோ, தேவரீர்கிருபையடியேனிடத்தும் உண்டாயிருக்குமாயின் இவ்விதப்பொல்லாத்தீங்கும் என்னைச்சேரவல்லதோ அடியேனறியாமற்செய்தவினைகள் யாதாயினுமிருந்தால் அவைகளைத் தேவரீர்பொறுத்தருளல் கடமையன்றோ துஷ்டஜனநிக்கிரக சிஷ்டஜனபரிபாலகரென்று வேதங்களெல்லாந் தேவரீரைத்துதிப்பதுமெய்மையல்லவோ யான்முகுந்தைகொண்டமோகத்தை நிராகரித்துவந்ததுதருமமாயிருக்க அப்பாதகியிட்டகொடுஞ்சாபத்தால் அடியேற்கு இத்தன்மைத்தான வியாதியுண்டாகலாமா தேவர்களுங்கண்டு நாணத்தக்கபேரொளிவாயந்தவென்துசரீரமானது பெற்றவளும்இகழத்தக்க வெண்குட்டநோய்கொண்டதே இனிஇவ்வுடலை இக்காட்டிற்றானேமாய்த்துவிடுவதல்லது இவ்வியாதியோடுமெனது நகரத்திற்சென்று எவ்வாறு அரசாக்ஷிசெய்ய வல்லேனென்றேயோ ஈதென்னகொடுமையென்று துயரப்பட்டு இளைப்பாகி அவ்வனத்திற்றானே ஓராலமரத்துகீழலிருந்தான். இவ்வரசனோடுமேவேட்டைக்குவந்தபரிசனங்களெல்லாந் தங்களரசனைத்தேடி எங்குங்காணாதவர்களாகி மதிமயங்கி மீளவுநகரத்திற்போய்ச்சேர்ந்தார்கள். இப்பால் உருக்குமாங்கதராசனடைந்த வெண்குஷ்டரோகத்தைப்பார்க்கச் சகியாதவனைப்போலச் சூரியனுமவன்தன்தேரைச்செலுத்திமேற்றிசைக்கடலிலமறைந்துபோயினன். உடனேஅவ்வரசனைநகரத்துள்ளோர்வந்து காண்பாராயின் மிக்கநாணமுற்று வருந்துவனென்றிரங்கியதுபோல எங்கும் இருட்கூட்டங்கள்பரந்துவிட்டன. இதுகாறும் நம்மெளியோரிடத்தும் வாசஞ்செய்யாதபடி வஞ்சித்துவந்தஇவ்வரசனின்றநமதுபகைதீர வெல்வோமெனக்கருதினாற்போலப் பசிப்பு-என்கின்றமூன்றுதுன்பங்களும் அவனைநெருங்கின இவ்வாறு உண்டியில்லாமலும் உறக்கமில்லா

மலும் என்றுமடையாத துயரங்களையடைந்திருக்கின்ற அவ்வரசன் துன்பத்தை இன்றுயாம் நீக்கிரக்ஷிப்போமென்று வந்தவன்போல, முன்னர் மேற்றிசைக்கடலில்வருந்தி மறைந்தசூரியனானவன் மீளவு ங்கீழ்த்திசைக்கடலி லுதயமாகிவந்தான் பின்னர் அவ்வுருக்குமாங்க தராசன் காலைக்கடனைமுடித்துத் தன்னிதயாலயத்திற்கணேசமூர்த்தி யைத்தியானித்துப் பூசைசெய்துகொண்டிருந்தான் அச்சமயத்தில் ஆகாயமார்க்கமாக நாரதமுனிவர்செல்லக்கண்டு ஓஓ சுவாமிகளே ஓ ஓ தெய்வமுனியே ஓ ஓ மகதியாழ்த்தலைவரோ ஓ ஓ திருமான்முதலா யினோர் துன்பத்தைநீக்குகின்றவரோ தேவரீர்திருவடிகட்கடியேன்அ டைக்கலமடைக்கலம். ஓஓ கிருபாமூர்த்தியே அடியேன் வீமராச னுடையபுத்திரன் என்பெயர் உருக்குமாங்கதன் சுவாமிகள் இங்ஙன மெழுந்தருளி அடியேன்படுகின்றதுன்பங்களைநீக்கி ரக்ஷிக்கவேண் டுமென்றுமிக்கவுருக்கத்தோடு பலமுறைதுதித்து ஓலமிடலுந்தமது ஞானநோக்கினாற் சகலமுமறியவல்ல நாரதமுனிவரானவர் தாம்கரு திச்செல்கின்றகாரியத்தைவிடுத்துக் கனைக்கின்றகன்றைநோக்கிக் க தறிவருகின்ற பசுவைப்போல ஞெரேலென்று நிலத்திலிறங்கி அரச னெதிரில்வந்தருளினார்.

அவ்வரசனவரைச் சாஷ்டாங்கமாகவிழுந்து வணங் கி, சுவாமீ - அடியேன் இக்கானகத்தைநோக்கி வேட்டையாடவந்த விடத்தில் மிக்கதாகமுண்டாயது அதனால் இளைப்பாகி நீரிருக்குமிட த்தைத்தேடிச்செல்லுகையில் அங்கோராசிரமத்தில் இருடிபத்தினி யாகிய முகுந்தையென்பவள் எனக்கெதிர்ப்பட அவளை நீர்தரக்கே ட்டேன் உடனே அவள்விரகநோய்கொண்டு என்னை வலுவிற்பற்ற யானதற்கிணங்காமையால் என்னைச்சபித்து இக்கொடியநோயையா னடையச்செய்தனள். இப்பாவிந்நோயோடும் எனதுநகரத்திற்குச் செல்ல மனமில்லாமல் உயிரைவிடவுநினைத்தேன். அரியதவங்களை ச்செய்து அடியேனைப்பெற்ற தாய்தந்தையர்நிமித்தம் எனதுயிரைக் காத்துவைத்திருக்கின்றேன். அடியேன் தினந்தோறும் ஆராதித் துவந்த கணேசமூர்த்தியினதுகிருபையினாலே இத்தருணத்தில் தே வரீரெனதுகண்ணெதிரில்வரப்பெற்றேன். அன்றியும் என்னைத்து ன்பப்படுத்துகின்ற இந்நோயைச்சுவாமிகளால் நீக்கிக்கொள்ளத்தக் பாக்கியத்தையடைந்தேனாதலால் இத்தினமே வீமராசனுக்குப் புத் திரசந்தானமுண்டானதினமாயது இனியடியேற்கு இவ்வியாதிநீங் கும்படியானமார்க்கத்தை யருளிரட்சிக்கவேண்டுமென்று பிரார்த்தி த்தலும் அவ்வரசனைநாரதமுனிவர் கிருபையோடும்பார்த்து அன்ப

னே உன்துகுடைகீழலிற்றங்கியிருக்கின்ற விதற்பதேயத்தில்யானவ்ரும்பேர்த், கந்தர்ப்பமென்னுநகரத்தில் ஓரற்புதத்தைக்கண்டேன். அஃதுயாதெனில் அந்நகரத்தில் விநாயகமூர்த்தி ஆலயமொன்றிருக்கின்றது அவ்வாலயத்தில் மூர்த்திகரித்திருக்கின்ற சிந்தாமணிவிநாயகரைப் பலபேர்பூசனைசெய்து அவ்வவர்களிஷ்டகாமியார்த்தங்களைப் பெறுகின்றார்கள். அவ்வாலயத்தெதிரில் கணேசகுண்டமென்று ஒருதீர்த்தமிருக்கின்றது. அதன்மகிமையைத் தெய்வலோகத்தாரும் அறிந்திருக்கின்றனர். அன்றியும் ஒருசூத்திரன்குஷ்டநோயினுற்றுன்புற்றுத் தீர்த்தயாத்திரையாகச் செல்லுகையில் அத்தடாகத்தையடைந்து ஸ்நானஞ்செய்தெழுந்தான். உடனே அவனுடைய குஷ்டநோய்நீங்கியதன்றிச் சகலவினைகளும் நீங்கப்பெற்று விநாயகமூர்த்தியினுடைய சாரூபத்தையடைந்து அவர்றுளாற் றேவகணங்கள்கொண்டுவந்தவிமானத்திலேறிக் கணேசலோகத்திற்போய்ச் சேர்ந்தான். ஆதலால் நீயுமவ்விடத்திற்சென்று அக்கணேச குண்டத்தில் ஸ்நானஞ்செய்து அங்கெழுந்தருளியிருக்கின்ற விநாயகமூர்த்தியைப்பூசித்துத் தானதருமங்களை இயற்றுவையாயின் இக்குஷ்டவியாதி யுன்னைவிட்டொழிந்துபோகும். இவ்வியாதி அவ்விநாயகமூர்த்தியாற் றீரவேண்டுவதல்லது, இப்பிரபஞ்சத்துள்ள ஓடதிகளெல்லாம்புசித்தாலும் யானை - குதிரை - தேர்முதலிய பலதானங்களைச்செய்தாலுந் தீர்வதில்லையென்றனர். இவ்வாறுநாரதமுனிவர்சொன்னதையெல்லாம் உருக்குமாங்கதராசன் செவிகுளிரக்கேட்டு ஆனந்தங்கொண்டு மீளவும்பணிந்தெழுந்துசுவாமீபெய்கின்றமழைக்குங் காய்கின்றசுடர்க்கும் வீசுகின்ற காற்றுக்குங் கைம்மாறு செய்ய வல்லவர்கள் யாவரிருக்கின்றார்கள். அதுபோல இப்பிரபஞ்சத்துள்ள உயிர்களை யெல்லாம் பிழைக்கும்படியெழுந்தருளிய தேவரீர்க்கு யான்செய்யத்தக்க கைம்மாறென்னவிருக்கின்றது. கதம்பவனத்திலெழுந்தருளி யிருக்கின்ற விநாயகமூர்த்தியை யாவர் பிரதிட்டை செய்து பூசித்தவர்கள் அந்த விவரத்தையும் அடியேன்மீது கிருபைபுரிந்து கோபஞ்செய்யாமற் றிருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று இரத்தலும் நாரதமுனிவர் மனதிரங்கி இதனைச் சொல்லுவதாயினர்.

அரசனே - முன்னொருகாலத்தில் இந்திரனென்பவன் தேவர்களெல்லாந் தொழும்படியாக ரத்நசிம்மாதனத்தி லிருந்து அரசுசெய்துவருகின்றசமயத்தில் நாமங்குச்சென்றோம். நம்மையவ் விந்திரன் எதிர்கொண்டு பணிந்து ஓராதனத்திலிருத்திப் பற்பல உபசார

ங்களைச்செய்து சுவாமி தேவரீர் சகலபுவனங்களிலுஞ் சஞ்சரிக்கின்றமையால் யாதாயினும் ஓரதிசயமுண்டாயின் அதனைக் கிருபைசெய்யவேண்டுமென்றுகேட்டான். அதற்குயாம்சொன்னதாவது இந்திரனே-யான் பூவுலகத்திற்குப்போயிருந்தேன் அங்கு கௌதமமுனிவர் பத்தினியாகிய அகலிகையைக்கண்டேன் அவளழகினுக்கொப்பாக இவ் வுலகத்தில் யாவரையுங்காணேன் இலக்குமி-இந்திராணி-இரதி-அனசூயை-திதி - திலோத்தமை-அதிதி-என்கின்ற இம்மாதர்களுடைய அழகும் அவளழகுக்கு எதிர்நிற்க மாட்டாது, திரிபுரசங்காரமூர்த்தியாகிய சிவபெருமானுடைய திவ்வியசரணாரவிந்தங்களையே இடைவிடாது தியானிக்கின்ற என்மனமும் அவளைக்கண்டவுடன் விருப்பங்கொள்ளுமாயின் இப்பிரபஞ்சத்தில் அவளைக்கண்டு விரும்பாதவர்கள் ஒருவருமிருக்கமாட்டார்களென்றுசொல்லி அவ்விடத்தினின்றும் நீங்கினேம். பின்னரவ் விந்திரனுக்கு அகலிகையின்மீது விரகமுண்டாகி அழலிற்பட்ட மெழுகுபோலமனமுருகி உடனே அவள்கணவராகிய கௌதம முனிவர் வடிவங்கொண்டு அவர் ஆதிகாலையில் ஸ்நானஞ்செய்யச்செல்கின்ற சமயம்பார்த்து அகலிகையிடத்திற்குவந்து என்பிராணநாயகியே விரைவிற்கலவிசெய்ய அமளியிடக்கடவையென்றுசொன்னான். அதையவ்வகலிகைகேட்டு, சுவாமி எக்காலத்துந்தவறுதவொழுக்கத்தினையுடைய மகாதவசிரேஷ்டராகியதேவரீர் இத்தினம் இவ்வகைத்தான அற்பகாரியத்திற்கு உடன்பட்டதென்னகாரணம். ஸ்நானஞ்செய்து நியமநிட்டைகளை முடித்து முறைமைப்படி சிவபூசைசெய்யுங்காலத்தில் மிக்கபழுதான காமப்பொருளையிச்சிப்பதுந்தக்கதுதானோ. அப்படித்தகாதகாரியத்தைத்தக்கதாக இத்தினந்தேவரீர்க்குத்தோற்றியது எந்தக்காரணத்தால் அதை அடியாட்கு விளம்பியருளவேண்டுமென்னலும்வஞ்சவடிவங்கொண்டுவந்திருக்கின்ற தேவேந்திரன்சொல்லுவான் எனதன்பிற்குரிய வனிதாரத்நமே - யான்காலையில் நீராடச்செல்லுகையில் அங்கோர்மாதுவஸ்திரமில்லாமல் ஸ்நானஞ்செய்துகொண்டிருந்தனள். யானவளழகைக்கண்டவுடனே எனதுமனம்பேதித்தது. உடனே மிகுந்த விரகதாபங்கொண்டு செய்யவேண்டியநியமங்களில் மனதைச்செலுத்தச் சக்தியில்லாமல் வந்துவிட்டேன். இனியெனது உயிர்வாழ்வதும் அரிதாகஇருக்கின்றது விரைவில் என்னுடன் கலவிசெய்து சுகந்தருவாயாக. இதைத்தடுத்திடுவையாயின் உனது உயிரழியுமாறு சபித்துவிடுவேனென்றான். இவையனைத்தையு மகலி

கைகேட்டு மாறுவடிவங்கொண்டுவந்திருக்கின்ற மகாபாதகனைத் தன்கணவனென்றேநினைத்து, அக்கினிசாட்சியாகத் தங்கள்கரத்தைப் பற்றிய காதலன்கருத்தெவ்வாறோ அவ்வாறேநடந்துகொள்வது பெண்களுக்குரியகடமையாதலால் அத்தருமத்தின்படியவளிசைந்து அமளியைச்சமீபித்தனள்.

இப்பால் இந்திரன் மனமகிழ்ந்து பெண்ணரசியே - உனது கடைக்கண் பார்வையால் என்னுயிர் பிழைத்திருக்கப் பெற்றேனென்று குலாவி அருகிற்சென்று சொர்ணத்தாற் செய்து நவரத்தினங்கள் பதித்திருக்கின்ற சப்பிரகூட மஞ்சத்தின் மீதேறி பூங்கொத்தினையொத்த அம்மெல்லியலைத் தனதுகரத்தாற்பற்றிச் சமீபத்திலிருக்கவைத்து அவள் முகாரவிந்தத்திற் புன்னகையரும்பவும் மேகலாபரணங்கள்ப்ரகாசிக்கவும் பவளத்துண்டத்தையொத்த கனிவாயிதழ்துடிக்கவுந் தேமல்நிரம்பிய தனங்கள்வளர்ந்தோங்கிவிம்மவும் மேலணிந்திருக்கின்றகச்சானது நெகிழ்ந்துகிழியவும் இடைதுவண்டுவருந்தவுமாகப் பலவித சரசசல்லாபங்களைச்செய்து தனதுகரங்களால் இரண்டுபயோதரங்களையும்வருடி ஆடையைநெகிழ்த்தெறிந்து பொலிவுற்றிருக்கின்ற நிதம்பத்தைத்தடவிப் பூமாலைகளணிந்திருக்கின்றகூந்தலானது அவிழ்ந்துசோரும்படியாக லதாவேஷ்டிதம்-விருக்ஷாதிருடம்-திலதண்டுலம்-க்ஷீரநீரம்-ஊருப்பிரகூடம்-சகேருபசிலேஷம்-ஸ்தனம்-லலாடிகம்-என்கின்ற () எண்வகையாலிங்கனங்களைநடாத்தி நுதலைநீவி - முகத்தின்முத்தமிட்டு உச்சி - கொங்கைகளின்நடு - சகனம் முதுகு-கன்னம்-பிடர்-நெற்றி-தொடை என்னும்-இவ்வெட்டிடத்தில்-சங்கோசம்-பக்கத்தம் பிரசுரிதகம்-மூஷ்டி-கீலம் கத்திரிகை-சந்தங்கிசம்-வித்தை-என்கின்ற ✻ எண்வகைத்தாடனங்களைச்செய்து கண்-கபோலம்-கொங்கை- நெற்றி-கைம்மூலம்-நிதம்பம்

() இவைமுறையே- கொடிபோலச்சுற்றித்தழுவுதல், மரத்தைப் போலேறித்தழுவுதல், எள்ளும் அரிசியும்போலக்கலந்துதழுவுதல், பாலுநீரும்போல ஒன்றுபடத்தழுவுதல், தொடையால் நெருக்கித்தழுவுதல், குறிகள்சேரத்தழுவுதல், கொங்கை யழுந்தத் தழுவுதல், நெற்றி பொருந்தத் தழுவுதல், எனக்கொள்க.

✻ இவைமுறையே-கைவிரல்குவித்துத்தட்டல், குட்டுதல், அகங்கையாற்றட்டல், மையக்குத்துதல், தர்ச்சனியானூன்றல், தர்ச்சனியும் மத்தியமத்தாலும் நெருக்கல், மேற்படிவிரல்களை மடக்கிக் கொறடுபோலப் பிடித்தல், தர்ச்சனியாற்றுருவுதல், எனக்

- வாயிதழ் - உந்தி-என்கின்ற -எட்டிடத்தினுஞ் சும்பனமியற்றி அர்த்தசந்திரன்-மண்டலம்-புலிநகம்-மயூரபதம்-முயலடி உற்பலம் என்கின்ற அறுவகை ‖ நகக்குறிகளையிட்டு மூஷகம்- அநுச்சூனகம்-பிரவாளமணி - பிந்து - மணிபிந்துமாலை - கோலசர்விதம் என்கின்ற அறுவகைதந்தக் ※ குறிகளையமைத்து பெருவிரல் - புறந்தாள்-பரடு முழந்தாள்-அல்குல்-நாபி-மார்பு-முலை-கைம்மூலம்- கழுத்து கபோலம்-வாய்-கண்-நெற்றி-உச்சி-என்னும், பதினைந்திடங்களிலும் அமுதநிலையாராய்ந்து தேகபரவசனாகிக் கிரீடிக்கு முன்னிலையில் அவ்வகலிகையுஞ் சரீரபுளகாங்கிதமுற்றவளாய் அவனிரண்டு தோள்களினுந்தனது கொங்கைகளழுந்தத்தழுவி மனமுருகி இன்பவமுதத்தினைத்தருவதுபோல அடிக்கடித்தனது கொவ்வைக்கனியையொத்தசெவ்விதழுறலைத்தந்து சங்கவளையல்கள் நெறியவும் பாதசாலங்கள்கலீர்கலீரொன்று சத்திக்கவுங் கண்கள்சிவப்பேறவும், அதரம்வெளுப்புறவும்நெற்றியில் வியர்வையரும்பவுங் கண்டத்தில் மயில்-புறா-அன்னம்-காடை-வண்டு-குயில் கோழி-செம்போத்து-என்கின்றஎண்விதப்புட்குரல்களையுங் காட்டிக்கற்பகதருவைப் பின்னிக் கொண்டிருக்கின்ற காமவல்லிக்கொடிபோல அவ்விந்திரனைச் சரீரத்தோடு சரீரமாகவணைத்துக் காமநீரூற்றெடுக்கத்தக்கதாகப் பலசுரதகலைகளைநடாத்திவந்தனள்.

உடனே இந்திரன் பேரானந்தக்களிப்பின்மூழ்கி உத்தானி

‖ இவைமுறையே - கழுத்தினிடத்துங் கொங்கையினிடத்தும் வளைவாகப்பதித்தல், கடிதடத்தில் எதிர்க்கெதிராகச்சேர்த்துப்பதித்தல், மேற் கூறியமூன்றிடத்தும் நுனிவளைவாகப் பதித்தல், கொங்கையி னடிப்புறத்திலொன்றும் மேற்புறத்தில் மற்றையநாலும் நேர்கைபொருந்தப்பதித்தல், கொங்கைகளின் முகட்டிடத்து ஐந்தும்விளங்கும்படிபதித்தல், கொங்கையின்மீதும் அல்குலினும் பின்புறத்தினும் மூங்கிலிலையைப்போலப் பதித்தல், எனக்கொள்க.

※ இவைமுறையே-அதரத்தில்சிவப்புறப்பதித்தல்,கபோலத்தினிடத்தும் அதரத்தினிடத்தும் வடுப்படாமற்பதித்தல், கபோலத்தினிடத்துபல்லுமிதழும் பொருந்தப்பதித்தல், அதரத்தில் பல்லைதைக்கும்படிபதித்தல்-கைம்மூலம்-நெற்றி-மார்பு-தொடை இவ்விடங்களில் அழுந்தும்படிபதித்தல்-தனங்களின்மேல் மன்மதன் வெற்றியையெழுதிவைத்ததுபோல ஒழுங்காகப்பதித்தல் எனக்கொள்க.

தம் திரியக்கு ஆசிதகம்-ஸ்திதம்-ஆனமிதம்-என்கின்ற 0 ஐவகைக்கரணங்களோடு கந்துகநிலை - பன்னகநிலை- குக்குடநிலை- வெருகுநிலை- வியாக்கிரமநிலை * முதலிய பலநிலைகளையும் புரிந்து சிந்தையோடு சிந்தையும் ஆகத்தோடு ஆகமும் ஆவியோடு ஆவியும் ஒன்றுபடக்கலந்து எக்காலத்துமறியாத பெரும்போகவாரிதியின் மூழ்கித்தனது எண்ணத்தின்படி நிறைவேற்றினவனுய் அளவளாவிய மனக்களிப்பினேடும் அவ்வகலிகையைப்பார்த்துகடலிற்பிறவாதுண்டான அமுதமே கரும்பிற்பிறவாதுதித்த சர்க்கரையேபுட்பத்திற்பிறவாதெழுந்த செந்தேனே உனக்குமெனக்கும் உடலமென்றுனதன்றி உயிருமொன்றாய்விட்டது. மகாதபோபலங்களால் உன்னைக்கிடைக்கப்பெற்றவெனக்கு இனிமேற்பெறத்தக்கதென்னவிருக்கின்றதென்று புகழ்தலும்அவ்விந்திரனேடு முறுவலரும்பவும் விழிகள்முகுளிப்பவுந் தேகபரவசங்கொண்டு பற்பலலீலாவிநோதங்களை நடாத்தியவிளைப்போடு சப்பிரகூடமஞ்சத்திற் சிறிதுதலைசாய்த்திருந்த அகலிகையானவள்அவ்வசனங்களைக்கேட்டு மின்னற்கொடிபோலநடுங்கிஇடைதளர்ந்து மெல்லெனவெழுந்து துகிலையுடுத்து மஞ்சத்தினின்று மிரங்கிமிகவுமச்சங்கொண்டு இவனது வடிவமாத்திரம் நம்முனிவரைப்போலிருப்பதன்றி இவன்சரீரத் துண்டானவாசனையும் இவன்செய்தகலவித்தொழில்களும் இவன்பேசுகின்ற வார்த்தைகளும் வேறுபட்டிருக்கின்றனவாதலால் இவன்நம்மோடு கலவிசெய்யும் பொருட்டுக் கள்ளவேடங்கொண்டுவந்த தேவேந்திரனேயென்று நிச்சயித்துப் புருவத்தைநெரித்துக்கோபித்து எனதுமுனிபுங்கவரைப்போல மாறுவேடங்கொண்டவந்தநீயார் உள்ளத்தைப்பேசாவிடிற் சபித்துவிடுவேனென்றுசொன்னுள் அதனைத்தேவேந்திரன்கேட்டு நாமின்னவனென்றுஅறிவிப்போமாயின் இவள்மிகவுஞ்சந்தோஷங்கொண்டு நமக்கிச்சையுண்டாகுங் காலத்தெல்லாந்தடையின்றிக் கூடுவளெனக்கருதிப்பின்னர்நேர்ந்திடுந் துன்பத்தைஎண்ணுமல் மிக்கஅன்போடு தனது நிசவடிவைக்கொண்டு அவளைநிராகரின்று பெண்ணரசியேயானஉம்பருலகத்திற் கதிபதியாகிய தேவேந்திரன் யான் உனதழகின்வளமைகளைக்கேட்டு அத்தெய்வலோகவரசினையும் இந்திராணிபோகத்

0 இவை முறையேமல்லாத்தல் குறுக்கு அல்லது ஒருக்கணித்தல் உட்காத்தல் நிற்றல்-குனிதல்-எனக்கொள்க.

* இவைமுறையே-குதிரை-பாம்பு-கோழி-பூனை-புலி- எனப்படும். இவற்றைச்சித்திரகரண மென்றுங் கூறுவர்.

தினையும் வெறுத்துஇலக்குமி சரஸ்வதி முதலாயினோர் வனப்பினை யுமதியாமல், உன்னையேயிச்சித்துவந்தேன் எனதெண்ணத்தின்படி யே நீயுமிசைந்தனையாதலால்இதினம் நாமிருவரும் புணர்ந்துபோ கசாகரத்தின்மூழ்கினோம்நம்முயிருமுடலும் இரண்டறக்கலந்துவிட் டன். இனிமேலென்னை வேருகநினைப்பையேற் குற்றமாகும் இத் தினத்தில் பஞ்சபுட்பபாணங்களை என்மீதுபிரயோகித்தமன்மதனான வன் இன்னும்பிரயோகிக்கின்ற போதெல்லாம் உனதுகிருபா நோக் கம்பாலித்தருளி என்னைமுற்றினும் பாதுகாக்கவேண்டு மென்றுஇ ரந்தான்.

இவ்வயனைத்தையும் அகலிகை கேட்டுக் கோபங்கொண்டு எ னதுபிராணநாயகனைப் போலவஞ்சவடிவங்கொண்டுவந்தபாவிசந்தி ரனுக்குற்ற களங்கத்தினைப்போல என்மரபுக்கு எக்காலமும்மாறுக்க ளங்கத்தை யுண்டாக்கி எனதுகற்பையுமழித்து என்கணவருடைய உள்ளத்தையுங் கொதிக்கச்செய்துஎன்னைப்பலவிதத்தினுங்கெடுத்தா யே இதற்கென்னசெய்வே னென்றுசொல்லிப்பயந்து பரிதாபித்திரு க்கின்றசமயத்தில் சூரியோதயத்திற்கு முன்னதாகவெழுந்து ஸ்நான ஞ்செய்யப்போயிருந்த கௌதமமுனிவரானவர் சகலநியமாதிகளையு முடித்துக்கொண்டு மீளவுந்தம தாசிரமத்தில்வந்துதலைவாய்தலின் றுமனைவியைக்கூவித் தண்ணீர்கொண்டுவருவதாகக் கட்டளையிட்ட னர். உடனே அகலிகையானவள் நடுநடுங்கிப்பழையஒழுக்கங்களி ல்லாமலுஞ் சுசிகரமில்லாமலுந் தண்ணீர்கொண்டுவந்துகொடுத்தலு ங்கௌதம முனிவர் அவளிருக்கும் அசுத்தகோலங்களைப் பார்த்துப் பெண்ணே உன்வதனம்வேறு பட்டிருக்கின்ற காரணமென்னஇத்தி னத்தில் வழக்கம்போல ஆதனமிட வில்லை விளாவிற்சலங்கொண்டுவ ரவில்லை இனியவசனங்களைப்பேச வில்லை உன்சரீரஞ்சுசியில்லை நீமு ன்னிருந்தமாதாகவுந் தோற்றவில்லைஆதலால் நடந்தவிசேடங்களைஉ ண்மையாகச் சொல்லக்கடவையென்றார். அதற்கவ்வகலிகைஉள்ள ங்கலங்கி உடலம் நடுங்கித் தன்காதலனைச் சாஷ்டாங்கமாகப் பணிந் தெழுந்து நாணங்கொண்டு தலைகுனிந்துமுகங்கோட்டி நிலங்கீறிமதி மயங்கி உரைகுழறி சுவாமி-தேவேந்திரன்தேவரீருடையவடிவங்கொ ண்டுவந்து மாறுபாடுபேசி என்னைக்கலவிசெய்ய வழைத்தலும்அடி யேன்சுவாமிகளே யென்றுநினைத்துக் கலந்துவிட்டே னென்றனள். இதைக்கௌதம முனிவர்கேட்டலும்மகாகோபவேசங்கொண்டுஇரு புருவங்களையு நெரித்துக் கண்கள் சிவக்கப்பார்த்து உனக்குநமதுட

வின்தன்மையும் நமதுகுறியின்பேதமும்நாமியற்றுங்கல்வித்தொழிலும்இத்தன்மையதென்றுதெரியாமற் போயதாநீசிறிதும்அச்சமின்றிப்பரபுருடனையிச்சித்துச்சுகித்தனையாதலால் நீசிலையுருவாகக்கடவதென்றுசபித்தனர்.

உடனே காட்டைப்பற்றிய கனலைப்போல அம்முனிவரிட்ட சாபமேவிட்டு வருவதை அகலிகைகண்டு கண்களில் நீர்த்தாரைகள் சிந்தும்படியாகக் கணவனைப்பார்த்து சுவாமி யான்தெரியாமற்செய்தகுற்றத்தை யாவரும்அறியாமுன்னமேதேவரீர்க் கறிக்கையிட்டேனாதலால்தேவரீர்கிருபைபுரிந்து அடியேன்செய்தகுற்றமும் தேவரீரிட்டசாபமுந்திரும்படியாக அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்கம்முனிவர் சிறிதுஇரங்கிப் பெண்ணே இட்சுவாகுவம்சத்தில்மகாவிஷ்ணுவானவர் ஸ்ரீராமமூர்த்தியாகஅவதரிக்கப்போகின்றார். அக்காலத்தில் அவர்பாதமானது உன்மீதுபடும் பட்டவுடன் உன்சாபம்நீங்கி எதாப்ரகாரம் நம்மிடத்துவந்து வாழ்ந்திருப்பாயென்று சாபத்தீர்வுகூறினர். பின்னர் அகலிகை சிலையுருவாகியிருந்தனள். இப்பாற் கௌதமமுனிவர் வந்ததுமுதல் நடந்தகாரியங்களனைத்தையும்மறைவிலிருந்துகேட்ட தேவேந்திரனானவன்மனங்கலங்கிமுட்டையிற்கட்டுண்டிருக்கின்றகருவைப் போலப்போக்கிடங்காணமல் ஐயோ கடலின் மூழ்கினாலும் மலையிலொளித்தாலுங் காமத்தீயானது உடலைப்பற்றியிருக்கின்ற உயிரை அங்கும்வந்து சுடுவதுபோல நாமெங்கோடியொளித்தாலும் இந்தமுனிபுங்கவருடையகோபம்நீறுக்கிவிடுமே ஆஅ என்னகாரியத்தினைச்செய்தோம் இனி என்னபழிசம்பவிக்கவிருக்கின்றதோவென்று பயந்து ஈனவுடலங்கொண்ட பூனைவடிவங்கொண்டு வெளியிற்செல்லப்புறப்படவும் மதிமயங்கிச்செல்கின்ற அப்பூனையைக் கௌதமமுனிவர்கண்டு இவ்வுருவங்கொண்டவன் தேவேந்திரனேஎன்று நிச்சயித்து இற்புலியே நீயார் போகாதேயென்று தடுத்தனர். உடனே தேவேந்திரன் தனதுசுவுருவத்தைக்காட்டி மேலானதன்பராக்கிரமமெல்லாம் இழந்துநின்றான். அவ்வாறு நிற்பவனைக் கௌதமமுனிவர்கண்டு அடா தூர்த்தனே உன்னை இப்போதே நீறுக்கிவிடுவேன் நீதேவர்கட்கெல்லாம்அரசனானையாலேஅத்தேவர்முகத்தைப்பார்த்து உன்னைவிட்டுவிட்டேன் ஆயினும் ஒருபெண்குறியை இச்சித்துவந்தவுனக்கு உடல்முழுதும் பெண்குறியாகக்கடவதென்று சபித்தனர். உடனே அனிந்த ... ட்ட கடுங்காற்றைப்போலக் கௌதமமுனிவரிட்ட சாபமா

ளது தேவேந்திரனை நெருங்கலும் செத்தசவத்திற்கொப்பானவனாகி க், கீழேவிழுந்து தனக்குநேரிட்டஆபத்தை நினைக்குந்தோறு மனந்துவன்றுதாங்கற்கரியதுயரத்தையடைந்து ஐயையோ இதுவரையிற் கற்றகல்வியும் அரக்கர்குலங்களைச் சயித்தடைந்தசெல்வமும் தேவலோகத்தையாள்கின்ற அரசாட்சியும் மற்றுமுண்டான சகலசம்பத்துகளுங் காமமென்னுங் கடுந்தீயிற்பட்டு எரிந்துவிட்டன போலாயதேயென்று மனமழிந்து உடலுருகிக் கதறிக்கதறி ஓவென்றழுது தெய்வமே பெண்களாயினோர் தங்கட்கிருக்கின்ற ஒருகுறியையமறைக்குநிமித்தம் மிகவுநீட்சியுள்ள ஆடையினையுடுத்திருந்தும் ஓர்காலத்து ஆடவர்கூட்டத்துள் வருவதற்கிலச்சையுறுவார்களே அத்தன்மைத்தானபெண்குறிகள் நம்முடன்முழுவதும் அளவற்றதாகநிறைந்து விட்டனவே அவற்றினையெல்லாம் எவ்வாறுமறைத்து ஒருவனெதிரில் உலாவப்போகின்றேமென்றுகலங்கி அவ்விடத்தினின்றுநீங்கி ஓர்மடுவிற்புகுந்து அதிலிருக்கின்ற தாமரைநாளத்திலொளித்துக்கொண்டனன்.

உருக்குமாங்கதராசனே இத்தேவேந்திரன்செய்தகுற்றத்தாற் றன்சரீரமுழுவதும் அளவற்றயோனிகளையடைந்திருப்பதைப்பார்க்கின் இப்பூவுலகத்தில் அனந்தபாதகங்களைச்செய்து ஒருபெண்சனனமெடுப்பதென்றும் அளவற்றபெண்சனனமெடுப்பது ஒருபிறன்மனைவயிச்சித்தபாதகத்தாலென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள். அத்தன்மையாகவே நம்பத்தக்கதாயிருக்கின்றது. எழில்வாய்ந்த இந்திராணிமுதலியதேவஸ்திரீகள் அனந்தம்பெயர்கள் இருக்க, இவ்வாறிருடிபத்தினியாலல்லவா அவ்விந்திரன் தன்மாட்சிமையனைத்து மழியப்பெற்று ஒளித்துக்கொள்வதாயினான். பெற்றதைச்சிறிதாகவெறுத்துப் பெறாததைப்பெரிதாகவெண்ணி விரும்புகின்ற ஆசைவத்தின்மையை யாவர்சொல்லவல்லவர்கள். மங்கையரைக்கூடுவதாலுண்டாகியபோகத்தையுஞ் சிலஅறிவீனர்கள் இன்பமெனச்சொல்லுகின்றார்கள். அத்தின்பமேயாயின் தேவர்கட்கெல்லாந்தலைமைபெற்ற இந்திரனுக்கும் ஒருபெண்ணிச்சையால் இத்தன்மைத்தான துன்பத்தினைக்கொடுக்குமோ. கணேசமூர்த்தியினுடைய சரணாரவிந்தங்களைத்தியானிக்கின்ற இன்பமேயின்பமல்லது வேறொன்றையுமின்பமெனக் கருதப்படவேண்டா. இந்திரன்செயலிவ்வாறிருக்கத் தேவர்களெல்லாம்வழக்கப்படியவ்விந்திரனைத்தொழுவதற்கு அவன்கொலுச்சபையிற்சென்றார்கள். அங்கு அத்தேவர்கள் அ

வனைக் காணுதவர்களாகி அந்தப்புரத்தில் இந்திராணியோடுமிருக்கி
ன்றவனுகவேண்டுமென்றுயோசித்து நெடுநேரங் காத்திருந்தார்கள்.
பின்னும் அவன்வாராமையால் அவ்விந்திராணியை நேரிற்சென்றுக
ண்டு அவனங்கில்லையென்பதை அவளாலறிந்துகொண்டு மிகவும்அ
ச்சமுற்றுப் பூவுலகத்திற்சென்று கடல்-மலை-காடு-நாடு- முதலியபல
விடங்களினுந் தேடிக்காணுமல் சத்தியலோகமுதலிய பலலோகங்க
ளையடைந்து ஆங்காங்கு அளவற்றவிடங்களிற் றேடியுங்காணுதவர்க
ளாகி மிகுந்ததுயரங்கொண்டிருக்கின்றகாலத்தில், ஒருநாள் அவர்க
ளெல்லாம் பொன்னுலகத்திற்சென்று அங்குவீற்றிருக்கின்ற பிரகஸ்
பதிதேவரையழைத்துக்கொண்டு நம்மிடத்துவந்து நமக்குச்சாஷ்டா
ங்கமாகநமஸ்காரஞ்செய்து சுவாமி தேவேந்திரனை எவ்வுலகத்தினு
ஞ்சென்றுதேடினேம் அவனெங்கு எவ்வாருயினனே அதனையறிகி
லேம் அவன்வரலாற்றைச சர்வஞ்ஞமூர்த்தியாகிய தேவரீரே திருவா
ய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தலும் யாமத்தேவேந்திர
ன்படுகின்ற துன்பங்களனைத்தையும் விவரமாகச்சொன்னேம். அ
வைகளையத்தேவர்கள்கேட்டவுடன் மனவருத்தங்கொண்டு ஓஓஇனி
அவ்வரசாட்சியை யாவரேற்றுக்கொண்டு இந்திராணியைக்காக்கவல்
லவர்கள். யாவரும்வழிபடத்தக்க கீர்த்தியினைப்பெற்ற இந்திரனுக்
கு இதுதக்கடைத்தைதானே. இதற்கினியென்னசெய்வோமென்று
ஆலோசித்து யாவர்சாபங்கொடுத்தவரோ அவரோ அச்சாபத்தைக்கிரு
பைசுரந்து தீர்க்கவேண்டுவதல்லதுமற்றையர் ஏதேதுசெய்யினுந்தீர்
தலரிதாகும். அக்கௌதமமுனிவரோ தம்முடையபத்தினியையுஞ்
சிலையுருவாகச்சபித்தனர். பின்னர் அவள்பட்டதுன்பத்திற்கிரங்கி
ச் சாபத்தீர்வுங்கூறியருளினர். இந்திரனைமாத்திரம் இன்னுஞ் சா
பத்தோடு வதையவிட்டிருக்கின்றனராதலால் நாமனைவரும் அவரா
சிரமத்தையடைந்து அந்தமுனிபுங்கவரைக்கண்டு மிக்கவந்தனைகள்
செய்து இரந்துபிரார்த்திப்போம் வாருங்களென்றுநம்மையுமழைத்
தார்கள். யாமும்பிரகஸ்பதிதேவரும் அவர்களோடுசென்றேம். பி
ன்னரத்தேவர்கள கௌதமமுனிவரைக்கண்டு அவர்பாதாரவிந்தங்க
ளை வேதாகமவிதிப்படி பூசனைபுரிந்து புஷ்பங்களாலருச்சித்து சாஷ்
டாங்கநமஸ்காரஞ்செய்து எதிர்நின்று உள்ளமுமுடலும் உருகும்ப
டியாக ஓவென்றலறிஓலமிட்டு அளவற்றதோத்திரங்களைச்செய்வதா
கள். ஓ சர்வஞ்ஞமூர்த்தியே மேரு இமயமுதலான அஷ்ட
ங்களுடைய கனங்களை யளவிட்டாலுங் கடற்கரையிலுள்ள

புண்ணியமணலை யளவிட்டாலும் ஆகாயத்திலிருக்கின்ற உடுக்கூட்டங்களை யளவிட்டாலும் வானிலிருந் தொழுகுகின்ற வருஷதாரைகளை யளவிட்டாலும் சுத்தசாட்குண்ணிய சொரூபியாகிய தேவரீர் பெருமையினை யாவரால் அளவிடக்கூடும். அகத்தியமுனிவர் சமுத்திரத்தையுண்டருளினார் விசுவாமித்திரமுனிவர் வெவ்வேறுலகங்களைச்சிருட்டித்தருளினார் சிவனமுனிவர் இந்திரனை வச்சிராயுதத்தோடசை வற்றிருக்கத்தம்பித்தருளினார் வாலகில்லியர்வேறோரிந்திரனைப் படைத்தருளினர் இத்தன்மைத்தாகிய அளவற்றவல்லபங்களைத் தவமுதிர்ச்சியினாற் பெறத்தக்க முனிபுங்கவர்களாகிய உங்களைத்தரிசித்தாலும்பரிசித்தாலும்உங்களோடு வசனித்தாலும் சகலதீவினைகளுமொழியுமென்பதற்குளென்ன சந்தேகமிருக்கின்றது. சுவாமீ பிறருக்குபகாரஞ்செய்கின்றதே தேவரீர்க்குச் சுபாவகுணமாகவிருக்கின்றதாதலால் தேவரீரையடுத்தவர்கள் யாவராயினும் அவர்களைத் தடையின்றிப் பாதுகாப்பீரெனக்கருதிஎங்களரசன் பொருட்டுத்தேவரீர்திருவடிகளில் அடைக்கலம்புகுந்தோம் அடியேங்கட்குத்தேவரீரையன்றி வேறொருகதியில்லையென்று அம்முனிவருக்குஇரக்கமுண்டாகத்தக்க இன் சொற்களாலிரந்துதுதித்தார்கள்.

இவ்வாறு விண்ணப்பஞ் செய்துகொண்ட தேவர்களைக்கௌதமமுனிவர்பார்த்து ஞானநோக்கினாற் சகலகாரியங்களையும் அறியவல்லதேவசமூகங்களே, நீங்கள்மிக்கமனவாட்டத்துடனே இங்குவந்தகாரணமென்ன உங்கட்கு நம்மாலாகத்தக்க காரியங்கள்ஏதேனுமுண்டாயிருக்குமாயிற் சொல்லுங்களென்று கிருபைசெய்தலுந்தேவர்களெல்லா மனக்களிப்படைந்து நம்முடைய துயரங்கண்முழுவதுநீங்கப்பெற்றோமென்று ஆனந்தித்து ஓ சர்வவல்லமையுள்ளபுண்ணியமூர்த்தியே பூரணசந்திரனைக்கண்ட கடல்போலத் தேவரீர் திருமுகவிசாலத்தைக்கண்டு களிப்புற்ற அடியேங்கட்கு இனியொரு குறைவுண்டாமோ முன்னொருபோது மகாதேவர்மன்மதனை எரித்தவாறுபோலத் தேவரீர்க்குத் தீங்கினைச்செய்த தேவேந்திரனையமனுக்கிரையாகும்படி சாம்பராக்காதுவிட்டது அடியேங்கள் பொருட்டல்லவா. ஆதலால் சுவாமிகளெவ்வாறு நினைத்ததோ அவ்வாறே அடியேங்கண்மீது கிருபைவைத்து இந்திரன் தேவலோகத்திலிருந்து குறும்பினையடக்கி அரசாளும்படியாக அவன்ஏற்றிருக்கின்ற சாபத்தை நீக்கியருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் அவையனைத்தையுங்கௌதமமுனிவர்கேட்டு ஓ விபுதர்களே அறிவில்லாதவன்-வஞ்சகன்- துஷ்

டன்-ஆசாரவீனன்-தன்னுயிரைப்போல மன்னுயிர்களையு நினைத்தா தரிக்காதவன் கொடியநெஞ்சையுடையவன் இவர்முதலான மகாபா விகளைவாக்கால் வசனித்தலுமாகாதுமனத்தால்நினைத்தலுங்கூடாது ஆயினும் ஒருபாதகன் மீதுபலபேர்கூடித்தயவுவைத்தாராயின் அவ னுடனே புநிதனாகுவன். அதுபோல நீங்களெல்லோரும் பெரு ம்பாதகனாகிய தேவேந்திரன்மீது கிருபைவைத்திருப்பதினாலே அ வனும் இனிப் புனிதனே யாகுவனென்றுசொல்லிப் பிரகஸ்பதி தே வரைப்பார்த்துஓதெய்வமந்திரியேசிருட்டி முதலியமுத்தொழில்களை யும்பிரமன்முதலிய முத்தேவர்களாயிருந்து நடாத்துகின்ற விநாயக மூர்த்தியினுடைய சடாக்ஷரமந்திரத்தை உமதுவல்வினைகளைவாட்டு மாறு உபதேசிக்கின்றோம் நீர் அம்மனுவைத்தேவேந்திரனுக்குஉப தேசஞ்செய்யும்அதனால் அவன் சரீரத்திலுண்டாயிருக்கின்றபெண் குறிகள்மாறிக்கண்களாகும்பின்னும்அவன்செய்திருக்கின்றபாதகங்க ள் அனைத்து நீங்குமென்று அச்சடாக்ஷரமந்திரத்தைத் தீட்சைமு றையோடும் உபதேசித்து, அதையனுட்டிக்கு முறைமையையு மரு ளிச்செய்தார். பின்னர்பிரகஸ்பதி தேவராணந்தங்கொண்டுகௌத மமுனிவரை மற்றைய தேவர்களோடுஞ் சாஷ்டாங்கமாகப் பணிந்து விடைபெற்று அவ்விடத்தினின்று நீங்கினார்.

வாராய் உருக்குமாங்கதராசனே தன்னை விழைந்தோர்க் கெல் லாம் பலவரங்களைத்தந்து பாதுகாக்கவல்ல தேவேந்திரன்செய்தனுந் தீமையை, இவ்வாறளவற்ற தேவர்களொருமித்துப் பலமுயற்சிகளை க்கொண்டுவாட்டுவார்களாயின் இப்பூவுலகத்துள்ளவர்களாய்நாடோ றுமிடைவிடாது செய்துவருகின்ற பாவங்கள் எழுவகைப்பிறவிகளி லும்விடாது வருத்துமேயன்றி எவ்வாறு நீங்கப்போகின்றது இப் பால்கௌதமமுனிவருடைய அருள்பெற்ற பிரகஸ்பதிதேவருமற் றைத்தேவர்களும் முன்னர்யான் அறிவித்திருக்கின்ற வண்ணமே தேவேந்திரன் ஒளித்திருக்கின்றவிடத்தைக் காணுங் கருத்துடையவ ர்களாய் மகமேருச் சாரலைப்படுத்த மடுக்கரையிற் சென்று ஓஓ தைத் தியகுலகாலரே ஓஓ மருத்கணத்தலைவரே வெளியில்வாரும்வெளியில் வாரும் உம்மைச்சபித்த முனிபுங்கவரிடத்துயாங்கள் அனைவருஞ்செ ன்று பணிந்து உமக்கவர்கருணையைப்பெற்று வந்தோம் நாரதமகாமு னி எம்மோடு வந்திருக்கின்றனர். அவ்வளவு செய்தகுற்ற த்திலொளிக்காமல் வெளிவிட்டால், அநேகவகைகளால் வெ ளைப் பெரியோர்கள் விலக்கியிருக்கின்றார்கள். அதை

களைவெளிவிடாமன்மறைத்தால் மாறுததுன்பத்தினையடைவார்கள். ஓ மேகவாகனரே இங்குவந்திருப்பவருள் நாரதமுனிவர்மகாபெரியவர், நீர்செய்தகுற்றத்தை யவரிடத்தில் விண்ணப்பஞ் செய்வீராயின் அது தீரத்தக்கமார்க்கத்தை அவரேசொல்லுவார். முன்னர்சிவபிரானுடையதிருக்கல்யாண மகோற்சவத்தில் உமாதேவினுடையகாற்பெருவிரன்மீதிச்சை வைத்துப் பாவத்தையும்நாணத்தையும் பரித்துழன்றபிரமனுனவன் மீட்டுமவைகள்நீங்குமாறு அச்சிவ பிரானுடைய திருவருளையேபெற்று நீக்கிக்கொண்டது உமக்குத்தெரியாததா ஆகலால்நீர் உமது மனக்கவலையைவிட்டு வெளியில்வருவீரென்று கூவினார்கள். இவையனைத்தையுந் தேவேந்திரன்கேட்டுத், தாமரைநாளத்தினின்று வெளிப்பட்டான். உடனேதேவர்கள் அவன்சரீரத்திலிருகின்ற பெண்குறிகளைப்பார்த்துச் சிலர் இவைகளையாம்பார்ப்பது மகாபாவமென்று நினைத்துக் கண்களைமூடிக் கொண்டார்கள். சிலர் தலைகளைக்கவிழ்த்துக் கொண்டார்கள் சிலர் நாசியைப்பிடித்துக் கொண்டார்கள். பின்னர் தேவேந்திரனுனவன் தான்செய்தகுற்றங்களையெல்லாம் வெளிவிட்டுப் பிரகஸ்பதிதேவராற் சடாக்ஷரமந்திரத்தை முறைமையோடும்உபதேசிக்கப்பெற்றுச் சந்திரனைக்கண்டசெவ்வாம்பன் மலரைப்போல முகமலர்ந்து ஆனந்த மாயினன். அச்சடாக்ஷரமந்திரந் தன்செவியி லேறியவுடன் முன்னர்கௌதமமுனியிட்டசாபமானது உடனே எவ்வாறுபற்றிக்கொண்டதோ - அவ்வாறேமகாதீவரத்தோடும் அப்பெண்குறிகளெல்லாங் கண்களாய்விட்டன. யாமும்மற்ற முனீஸ்வரர்களும் பலஆசீர்வசனங்களைச் சொன்னேம். தேவர்கள்புட்பவருஷம் பொழிந்தார்கள். அரம்பையர்நிருத்தஞ்செய்தார்கள். கின்னரர்கீதம்பாடினார்கள், ஆகாயத்தில்அந்தரதுந்துமிமுழங்கியது.

இப்பால் அவ்விந்திரனை மற்றைத் தேவர்க ளெல்லாந் தீர்க்க தண்டன் செய்து இதுகாறும் உம்மைப் பிரிந்ததினாற் சந்திரனில்லாத இரவு போலவுந் தாயில்லாத சேய்போலவு மானோமென்று துதித்தார்கள். பின்னர் தேவேந்திரன் மிக்கமனக்களிப்போடு வந்திருக்கின்ற முனிவர்களை யெல்லாம் பார்த்து ஓதவசிரேஷ்டர்களே உங்கள் மகத்துவங்களைச் சுருதபவுந்திரர்கள் அறியவேண்டுவதல்லது மற்றொன்போலிகளால் அறியப்படுவனவோ அளவற்றதேவர்களொன்றாய்க்கூடினும் உங்களில் ஒருவருக்கொப்பாவர்களோ சகலபெருமைகளும்வாய்ந்திருக்கின்ற மாணுக்கர்நீங்களே

யென்று துதித்து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து பின்புதேவர்களை ப்பார்த்து அன்பிற்சிறந்த மித்திரர்களே மகாமகத்துவமுள்ள கௌதமமுனியிட்டசாபம் என்னைவிட்டு நீங்கும்படியாக ஏதேதுமுயற்சி செய்தீர்களோ ஒன்றுந்தேர்ந்திலேன். முன்னர் எனக்கியல்பாகவிருந்த இரண்டுகண்களும் இருளடையும்படியாக மிக்க வொளிபொருந்திய ஆயிரங்கண்களைத் தந்தீர்கள். உங்களாற் சகல நன்மைகளையும் பெற்றேன். நீங்களென்பொருட்டாகச் செய்தவுதவிக்கு யான்செய்யத்தக்க கைம்மாறென்னவிருக்கின்றது. இனிவிநாயகமூர்த்தியையநுட்டித்து அவர்கிருபைபெற்று உய்யுமாறு ஓர் திவ்வியக்ஷேத்திரத்திலிருந்து சிறந்த தவங்களைச் செய்து பின்னர் எதாப்பிரகாரம் எனது சொர்க்கலோகத்தை யடைந்து அரசாக்ஷிசெய்வதேயன்றி யானிப்போதுவருவதில்லைநீங்கள்யாவரும் அங்குச்சென்றுவாசஞ்செய்திருங்கள் சிலர்மாத்திரங் கற்பகவிருக்ஷத்தினிடத்திருந்து நமது தவத்திற்கு வேண்டியதிரவியங்களைக்கொண்டுவந்து கொடுக்கக்கடவீர்களென்று கட்டளையிட்டு யாவர்க்கும் விடைகொடுத்தனன். அவ்வாறேயாவருஞ்சென்றபின்னர் தேவேந்திரன் கதம்பவனத்திற்சென்று அங்கோர் தடாகக்கரையிலிருந்து அதிற்றேவர்களாற் கொணர்ந்து தருகின்ற ஆகாயகங்கையைக்கலந்து அதன்கரையின்மீதுமிக்க வொளிபொருந்திய பளிங்குக்கற்களினால் ஓராலயமெழுப்பி அவ்வாலயத்தில்வேதாகமவிதிப்படி விநாயகமூர்த்தியைப் பிரதிட்டைசெய்து சகலபதார்த்தங்களுடன் பிரதிதினம்பூசனைபுரிந்து ஐம்புலாதிகளையும் அடக்கி ஓராதனத்திலிருந்து இருவிழிகளையும் நாசிநுனியில் நிறுத்திக் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளைச்சிந்தித்துப் பத்தியோடு சடாக்ஷரமந்திரத்தைத் தியானித்துச் சுத்தபவித்திரமான உள்ளத்தையுடையவனும் ஆகாரமில்லாமல் ஆயிரவருடந்தவஞ்செய்தான் இவ்வாறுசெய்துவருகின்றதவத்திற்கு விநாயகமூர்த்தி அருள்சுரந்து வெள்ளியதிருமேனியுந் திசைமுழுவதும் விழுங்கத்தக்க பிரகாசமும்யானைவதனமும் உருத்திராக்கமாலிகையேந்தியிருக்கின்ற துதிக்கரமும் நான்குபுயங்களுந்-தண்டை-சதங்கை-சிலம்பு- முதலியவையணிந்திருக்கின்ற இரண்டு பாதபதுமங்களும் அரைஞாணும் புயகவசமும் மார்பின் முப்புரிநூலும் முத்துமாலை-இரத்தினமாலை-குண்டலம்- கிரீடம்-முதலான அளவற்ற அலங்காரத்துடன்சிங்கவாகனமூர்ந்துதேவேந்திரனெதிரிற் பிரத்தியட்சமாயினர். உடனே இந்திரனானவன் அன்புமச்சமுங்கொண்டு இருகரங்களையுஞ் சிரமேற்குவித்துத் துண்

ணென்று ஆசனம்விட்டெழுந்து இரண்டுகால்-இரண்டுகை - இரண்டுதோள்-நெற்றி-மார்பு-என்கின்ற அட்டாங்கங்களும் பூமியிற் பொருந்தவிழ்ந்து மீட்டுமெழுந்து சரீரமுழுவதும் புளகாங்கிதங்கொண்டு கூத்தாடி வலம்வந்து ஆனந்தக்கண்ணீர்சொரிந்து துதிப்பதாயினன்.

அறிவால்விளங்குமொளியாகியெங்கு
மசைவற்றுநின்றநிறைவாய்க்
குறியாதியின்பமுதலீறிலாத
குறைவற்றவின்பமயமாய்ச்
செறிவானநீரினிழல்போலநின்ற
திறலோயையானும்வளேவேன்
வெறுஞானமான திருமேனிகொண்டென்
விழிகாணமுன்னர்வரலால்.

இருண்மூழ்குகண்ணின்மலகேவலத்தி
னிதமின்றிநின்றவுயிர்கட்
குருவாதிமூன்றுமுனமுய்த்தவற்றி
னுளதாம்விகாரவகையா
லிருவேறுகன்மமிசைவித்தருத்து
மிறையோயையானுமொழிவேன்
வெருண்மாயைநீத்ததிருமேனிகொண்டென்
விழிகாணமுன்னர்வரலால்.

வாதங்கடந்துபலமாயைகன்ம
வகையுங்கடந்தவைசெயு
மேதங்கடந்துபொருளொன்றுமின்றி
யெழுகின்றமம்மருயிரின்
போதங்கடந்துதுரியங்கடந்த
பொருளோயையானுமுணர்வேன்
வேதங்கடந்ததிருமேனிகொண்டென்
விழிகாணமுன்னர்வரலால்.

இவ்வாறு தோத்திரங்களைச்செய்து மனமுருகிநிற்கின்றதேவேந்திரனை விநாயகக்கடவுள் கிருபையோடுபார்த்து ஓ சுராதிபனே நீ இங்கிருந்துசெய்த செபதபமுதலானவைகட்கு யாஞ்சந்தோஷித்தோம். உனக்குவேண்டியவரங்களைக் கேளென்று திருவாய்மலர்ந்தருளலும் தேவேந்திரனைவன் ஆனந்தபரவசங்கொண்டு ஓ சகலபுவனுதாரகர்த்தனே உயர்ந்த ஞானயோகத்தை யநுட்டிக்கத்தக்க பரிபக்குவமெவர்களோ அவர்கள் இதயத்திலொன்றுபட்டிருப்பது தேவரீருடைய பாதபங்கயம் அதனை அடியேற்கருளாது வேள்விப்பயனு

கிய சுவர்க்கலோகவரசாட்சியை யருள்செய்தீர். அந்தச்சுவர்க்கலோக வரசாக்ஷியையும் ஓரிடையூறில்லாமல் சகலபோகங்களோடும் புகழ் பெற்றுள்வதற்கு முன்னொருகாலத்திற் பிரமதேவர் சடாக்ஷரமந்திரத்தை யுபதேசித்து அதையனுட்டிக்குமுறைமையையுங்கூறி இதை மறப்பையாயின் உனது சுவர்க்கலோகவரசாட்சி நிலைபெற்றிராதென்று வற்புறுத்திக்கூறினார். பின்னரதனைமறந்து அளவற்ற பின்முகளைச்செய்தகாரணத்தால் மிக்கதுன்பங்களையெல்லா மநுபவித்தேன். மீளவுமதைப் பிரகஸ்பதிதேவராலும் உபதேசிக்கப்பெற்று அத்துன்பங்க ளனைத்தினும்நீங்கி ஆயிரங்கண்களையுடையவனாயினேன். அன்றியும் அம்மந்திரத்தை இடைவிடாதநுட்டித்தபேற்றினால் மனவாக்குக் காயமென்னு மூக்கரணத்தாலும் அறிதற்கரிய தேவரீரை அடியேன்முன்புபிரத்தியக்ஷமாகவரப்பெற்றேன். இனிமுடியாதகாரியம் அடியேற்கென்னவிருக்கின்றது. தேவரீர் திருவடிகளுக் கன்பியற்றிருப்பதே சகலகாரியங்கட்கும் இடையூறுவருவதற்குக் காரணமாதலால் தேவரீர் திருவடிகளில் அடியேற்கு மாறாதபத்தியை யருளல்வேண்டும். இத்தலத்தில் அடியேன்பூசித்த தேவரீர் திருவுருவத்திற்குச் சிந்தாமணிவிநாயகரென்றும் இத்தலத்திற்குச் சிந்தாமணிநகரமென்றும் இத்தடாகத்திற்குச் சிந்தாமணிதீர்த்தமென்றுந் திருநாமமிருக்கவேண்டும். மேலும் இவ்வூரைக்கதம்பநகரமென்றுங் கூறல்வேண்டும். இக்கதம்பநகரத்தில் வசிக்கின்றயாவருஞ் சிந்தாமணிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தேவரீர்திருவுருவமாகிய சிந்தாமணிவிநாயகரைத்தரிசிப்பார்களாயின் அவர்கட்குக்கிடைத்தற்கரிய நான்குபுருஷார்த்தங்களுங் கிடைத்தல்வேண்டுமென்று பிரார்த்திக்கக் கணேசமூர்த்தியவ்வாறே அநுக்கிரகஞ்செய்து தமதுதிருவுருவத்தைக்கரந்தருளினார். தேவேந்திரனுந்தன் மனக்குறைவுகளற்றுச் சிந்தாமணிவிநாயகரை மீளவும்பூசித்துச் சடாக்ஷரமந்திரத்தையநுட்டித்துவிடைபெற்றுத் தனது சொர்க்கலோகத்திற்சென்று ஓரிடையூறுமின்றி அரசாக்ஷியைநடாத்திவந்தனன். நீயும் அவ்விநாயகமூர்த்தியைச் சரணடைந்து பூசிப்பையாயின் இப்பிணியொன்றுமேநீங்குவதன்றிப் பலவரங்களையும்பெறுவாய்போவென்று நாதமுனிவர் உருக்குமாங்கதராசனுக்குச்சொன்னார்.

கூ-வது-தேவேந்திரனுபாசித்தபடலம்

முற்றிற்று.

—※—

பத்தாவது

## உருக்குமாங்கதன் உபாசித்தபடலம்.

பெருக்கமார்கஜமுகத்தனைப்பிறங்குகற்பகத்
தருக்கண்வாழ்பவன் றுதித்தமைசாற்றினம்வீமன்
றிருக்குமாரனைத்திசைமுழுவதுமாசியற்றும்
உருக்குமாங்கதனுற்றுபாசித்தமையுரைப்பாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே விநாயகமூர்த்தியைத் தேவேந்திரன் பூசித்துப் பலவரங்களைப்பெற்ற சரித்திரத்தைச்சொன்னோம். இப்பால் உருக்குமாங்கதராசன் அனுட்டித்ததிறத்தைச்சொல்லுவோம் கேட்பீராக. இவ்வாறுநாரதமுனிவர்சொல்லி அங்கிருந்துநீங்குவதற்குமுன்னமே முன்னர் உருக்குமாங்கதராசனைக்காணமல் நகர்த்திற்குச்சென்றபரிசனங்களெல்லாம் மலை-காடு- முதலியவிடங்கள்தோறுந் தேடிக்காணதவர்களாகி அவன்நாரதமுனிவரோடுஞ் சம்பாஷித்திருந்த வனத்திற்குவந்து தங்களரசன் குஷ்டநோயுடனிருக்கக்கண்டு மனமெலிந்து ஓ சார்வபௌமா - மானேடு வேட்டையாடிச்சென்ற வுமக்கு இந்நோய்வந்த காரணமென்னவென்றுகேட்டார்கள். அவர்கட்கு அவ்வரசன் நடந்தகாரியங்களனைத்தையும் விவரமாகச்சொல்லி அவ்விடத்தினின்றுநீங்கிக் கதம்பநகரஞ்சேர்ந்து சிந்தாமணிவிநாயகரைத்தரிசித்துச் சகலவினைகளையு மொழிக்கத்தக்க சிந்தாமணி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தான் - உடனே அவன் சரீரத்தைப்பற்றிய குஷ்டநோய்நீங்கிமுன்னரிருந்த உருக்குமரூபம்உண்டாயது பின்னரவ்வரசன் அளவற்றஆனந்தங்கொண்டு மீளவுஞ் சிந்தாமணிவிநாயகரையடைந்துபூசித்து அந்தணர்களைக்கூவி அளவற்றதிரவியங்களைத்தானஞ்செய்துகொண்டிருக்கையில் சிலதேவகணங்கள் அந்தரமார்க்கமாக வொருதெய்வவிமானங்கொண்டுவந்து அவ்வரசனுக்கெதிரில்நிறுத்தி ஓ புண்ணியசீலனே நீ இக்கணேசகுண்டமாகிய சிந்தாமணிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிந்தாமணிவிநாயகரைப் பூசனைசெய்தபேற்றினல் உனக்குண்டாகியமேன்மையை யாவராலுரைக்கப்படும். நீ இவ்விமானத்தின்மீதாரோகணித்து எம்மோடுங் கணேசலோகத்திற்கு வருவையென்ன. அதையவ்வரசன்கேட்டு அத்

தேவகணத்தலைவரைச் சாஷ்டாங்கமாகவணங்கிச் சின்மய சிற்குண அகண்டாகாரசச்சிதானந்தராகியுந் தம்மையடைந்தோர்களைத் தன்மயமாக்குகின்ற முதல்வராகியுங் காரணாதீதராகியுமிருக்கின்ற விநாயகக்கடவுளுடைய பெருங்கருணைக்கு யானெவ்வளவுபாத்திரன். யானென்னதவங்களைச்செய்தேன் என்மனமெவ்வளவுபக்குவமாயிற்று. என்பிறவி எவ்வளவுயோக்கியம். என்பத்தியெவ்வளவு அச்சோ யான்முன்புசெய்திருக்கின்ற தபோபலத்தினாலும் இத்திவ்வியதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தமகிமையினாலும் அடியேன் உம்முடையதரிசனத்தை யெளிதிற்கிடைக்கப்பெற்றேன் ஆயினும் விமராசனுஞ் சாருகாசினியும் அளவற்றதவங்களைச்செய்து என்னையீன்றார்களாதலால் அவர்களை விடுத்து யான்மாத்திரமெவ்வாறுவருவதென்று சொன்னான். அவையனைத்தையுந் தேவகணத்தலைவர்கேட்டுமிக்கசந்தோஷங்கொண்டு ஓ சுசனபரிபாலகனே · நீயுனது தாய்தந்தையரைநினைத்து இத்தீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்து தர்ப்பணம்புரிவையாயின் அவர்களுமுன்னுடன் வருவார்களென்றுசொல்ல அதையுருக்குமாங்கதராசன்கேட்டு மனக்களிப்படைந்து ஓர்தருப்பையைமுடிந்து அம்முடிந்ததருப்பையைத் தாய்தந்தை முதலாயினோரைநினைத்து ஸ்நானஞ்செய்வித்துத் தானுமடுக்கரைமீதேறிவந்து தனக்குவழிகாட்டியாட்கொண்டருளிய நாரதமுனிவரைப்பணிந்து தன்னையைப்போக்கியருளிய அத்தீர்த்தத்தையுந்துதித்துநின்மலசொரூபத்தையடைந்தான். அவ்வரசனுடனிருந்தமற்றையர்களும்ஸ்நானஞ்செய்துதெய்வரூபம்பெற்றார்கள். அரசன்மீளவுஞ் சிந்தாமணிவிநாயகரைப்பூசித்துத் தன்சேனைகளோடும் விமானத்திலேறித்தனதுகவுண்டின்னியநகரிற்சென்று தான்ஸ்நானஞ்செய்தபலனைத் தாய்தந்தைமுதலாயினோர்க்குத் தத்தஞ்செய்தான். மற்றசேனைகளும் அவ்வாறேதங்கடங்கள் சுற்றத்தினர்கட்குத் தத்தஞ்செய்தார்கள். விநாயகமூர்த்தியினுடைய திருவருளால் உடனே அவர்கட்கு வெவ்வேறு விமானங்கள்வந்தன. பின்னர் வீமராசன்முதலாயினோர் அவ்விமானங்களைப் பணிந்து அவைகளிலேறிக்கொண்டு உருக்குமாங்கதராசனோடும் விநாயகலோகத்திற் போய்ச்சேர்ந்தார்கள்.

க0-வது-உருக்குமாங்கதனுபாசித்தபடலம்

முற்றிற்று.

---*---

உ

# பதினோராவது

## கிருச்சமதர் உபாசித்தபடலம்.

சுருக்கமில்தவத்தந்தணீர் தும்பிமாமுகனை
யுருக்குமாங்கதன்போற்றியதன்மையையுரைத்தாம்
கிருச்சமாமதமுனிவரன்றுதித்துக்கேடறுசீர்ப்
பெருக்கமேவியதன்மையைப்பேசுதுமன்றே.

ஓ சவுனகாதிமுனிவர்களே விநாயகமூர்த்தியை உருக்குமாங்கதராசன்பூசித்து முத்தியடைந்த திறத்தினைச்சொன்னோம். இப்பால் கிருச்சமதமுனிவர் உபாசித்தவரலாற்றினைச் சொல்லுவோங்கேட்பீராக முன்னர் முகுந்தையிட்டசாபத்தோடு உருக்குமாங்கதராசன் அவ்விடம்விட்டு நீங்கியபின்னர் அம்முகுந்தைக்கு விரகதாபமேவிட்டு அவ்வரசனையே நினைந்து நினைந்து அனலெற்பட்ட மெழுகையொத்தவளாகி உள்ளங்கரைந்து உடல்நெகிழ்ந்து காமாக்கினியைச் சகிக்கமாட்டாது நந்தவனங்களிற்சென்று உலாவுவாள். குளிர்ந்ததடாகங்கள் எங்கிருக்கின்றனவென்று தேடுவாள். ஒன்றோடொன்று கலவிசெய்கின்றமான் கூட்டங்களைக்கண்டுவாடுவாள். வேய்ங்குழலோசையைக்கேட்டு ஊடுவாள் மந்தமாருதம்வீச நடுநடுங்கிஓ தென்றலே நீ தீயோடுகலந்துவந்தகாரணமென்னென்று கோபிப்பாள். பசுவின்கழுத்திலசைகின்ற மணியோசையைக்கேட்டு ஐயோ என்னுயிர்ச்சிந்துகின்றதே ஈதென்னகாலன்வருகின்ற ஓசைதானோவென்று கலங்குவாள். கடலோசையைக்கேட்டு ஓபயோததியே-பிறர்க்குத்தீமைசெய்கின்ற சிறியார்களைப்போல என்னைவருத்துகின்றஆயக்குழலோசையோடு நீயுமெனக்குப் பெருந்துன்பத்தை மூட்டுகின்றனையே, இஃதுனக்கு முறைமைதானோ, உன்னுண்மையை யறிக்கவல்ல குறுமுனிவர்குன்றி விருப்பதையறிந்திலையோவென்றுகுழறுவாள். ஓர்வட்டமாகிய பலகையின்மீதுஉருக்குமாங்கதராசன் உருவத்தையெல்லாம்வரைந்துதன் கரங்களைக்கொண்டணைவாள். இரண்டுதனங்களையு மதன்மீது பொருத்திமுயங்குவாள். முகத்தோடுமுகத்தைவைத்துமுத்தமிடுவாள் மீளவும்வருந்திமாலையைப்போலத்துவளுவாள். இனியென்னசெய்வேனென்றுமெலிந்து பெருமூச்சுவிடுவாள் பூஞ்சோலையிலுள்ள தளிர்களெல்லாந்தன்சரீரவெம்மை

யாற்றியக்து மேல்விழுவதினால் அவைகள்பட்ட விடமெங்குங்கொப்புள்கொண்டு, தன்னிருவிழிகளினுநீரைச்சொரிவாள். சரீரவெம்மையைச் சகிக்கமாட்டாதுவிழுந்ததுபோல் மேகலையொதுங்கும்படியாகவீழ்வாள். இவ்வித அலங்கோலத்துடன் முகுந்தையானவள் தன்னாலுஞ் சொல்லுதற்கரிய பெருந்துன்பத்தின்மூழ்கி, வலிகுறைந்துஅறிவழிந்துநிலத்தின்முடியைச்சாய்த்துச்சோர்வுற்றுத்தன்வசமற்றவளாகி இருந்தனள். இவையனைத்தையுந் தேவேந்திரன்அறிந்துதானவளைச்சேர வெண்ணினவனாகி அடியிற்பாதகாப்பும் கணைக்காலில்வீரவண்டையமும் விரலிற்கவசமும் கரத்தில் நாணேற்றி யிருக்கின்றவில்லும் மார்பில்மலர்மாலையும் தோளில் அம்புபெய்தூணியுமுடையவனாய்ப் பொற்சரடாற்கட்டப்பட்டிருக்கின்றமயிர்முடியோடுமன்மதசரங்களான் மருண்டிருக்கின்றமுகுந்தையினது கொங்கையிலணியப்பட்டகச்சும் அவளது நெஞ்சமுங்கழலும்படியாக உருக்குமாங்கத ராசனே யென்று சொல்லும்படி அவன் சரீரத்துள்ள கோலத்தை யெல்லாங் கொண்டு பெருக்கென்றெழுந்து அவளருகிற் சென்றான். அவனைக்கண்டவுடனே முகுந்தையானவள் மனமகிழ்ந்துமுன்னர்தடுத்துச் சென்றஉருக்குமாங்கதனேமீட்டும்வந்தானென்றுகருதித் தானும்பொருக்கென்றெழுந்தாள். உடனேவஞ்சவடிவினனாகிய தேவேந்திரன்மனங்களித்து அவளோடு நயவார்த்தைகளைப்பேசித்தனது மார்பிலணிந் திருக்கின்ற சந்தனமெல்லாம் அவளிராண்டுதனங்களாற் கலையும்படியாகத் தழுவி, அடிக்கடியவளது செவ்விதழூறலையுண்டு பலவிதசுரதகலைகளை நடாத்தி வருகின்ற சமயத்தில்முகுந்தையென்பவள் தன்னறிவுமயங்கி அவன் மார்பிற் றனதுகொங்கைச்சுவடு பொருந்தும்படியாக வணைத்து தேகபரவசங் கொண்டு காமவாரியைக் கரைகாணமாட்டாதவளாய் யானுனக்கு என்னகைம்மாறுசெய்யவல்லேனென்று பலமுறையவனைப்புகழ்ந்துசரசசல்லாபமாய்க் கலந்தனள். தேவேந்திரன் அவளன்பிற்குமனப்பூரிப்படைந்துநகக்குறி-பற்குறி-தாடனம்-சும்பனம்-முதலியபலலீலைகளை மாறி மாறி நடாத்தி அவள்மிடற்றிலெண்வகைப் புட்குரலோசைகளையுமுண்டாக்கி மன்மதன் பொழிகின்ற பாணவருஷங்களை மடக்கி அவன்கருப்புவில்லையு மொடித்து இன்னுமவனோடு போர்செய்யாதவண்ணம் அவனைத்துரத்திவிட்டான். பின்னர்முகுந்தையானவள்த
ணக்கின்படி நிறைவேறியகலவிக்கு மனமகிழ்ந்து கணவரா
ருக்குப்பணிவிடையபடிவலச்செய்யச்சென்றனள். இந்தி

ரனுந்தனது பொய்வேடத்தைப்போக்கிச் சுவர்க்கலோகத்தைச் சேர்ந்தனன்.

உடனே முகுந்தைவயிற்றிற் கருவுண்டாகிப் பத்தாந்திங்களிற் கருங்கடலுச்சியிலுதயமாகின்ற சூரியனைப்போல அண்டங்களெல்லாம் நடுங்கும்படியானபேரொலியோடும் ஒருபுத்திரன்பிறந்தனன். அப்புத்திரனைக்கவிமுனிவர்கண்டு மனமகிழ்ச்சியடைந்து இந்திரனுக்குப்பிறந்த புத்திரனென்றறியாமல் தமதுகரத்திலேந்தித் தேவர்கட்கெல்லாம் அவிற்பாகமுதலியவைகளைக்கொடுத்துச் சாதக்கருமாதிகளையுஞ் சிறப்பெய்தநடாத்தினர். இப்பால் அப்புதல்வனுக்குந் துயிலாதிகளைத்தவிர்த்து பரிமளமிகுந்த கஸ்தூரிமஞ்சண்முதலியவைகளாற் புனலாட்டி அகிற்சந்தனப்புகையினையூட்டி இரத்தினாபரணங்களைப்பூட்டி நுதலிற்றிலதந்தீட்டி தீட்டி வீட்டி முலைப்பாலூட்டிப் பெண்கள்கிரீட்டியான முகுந்தையானவள் சகலசெல்வத்துடன் போற்றிவருகின்றநாளையில் கவிமுனிவர் அப்புதல்வன்பிறந்த பன்னிரண்டாநாள் கிருச்சமதனென்னு நாமகரணந்தரித்து ஆறாவதுவயதில் உபநயனச்சடங்கினைமுடித்து வேதாகமாதிகளையுங்கற்பித்தனர். அவ்வாறேகிருச்சமதர் சகலவித்தைகளையுந் தந்தையாற்றெளிந்து ஒருகாற்சொன்னவுடன் ஒருங்குணருமுத்தியினராகி வினையென்னும் விருக்கத்தை வேருடன்கெல்லவல்ல வெற்றிப்படைக்கொப்பாகியிருந்தனர். பின்னர் கவிமுனிவரானவர் அப்புதல்வன் ஒழுக்கமுதலிய நன்னெறிகளிற் பிறழாதிருக்கின்ற பெற்றியினைக்கண்டு மிக்கமனமகிழ்ச்சியடைந்து கணானாந்துவாவென்னு மந்திரத்தையுபதேசித்துக் குழந்தாய் இம்மநுவையனுட்டிப்போடு செபித்துவருவையாயின் உனக்குக் கணேசமூர்த்தியினுடைய திருவருளுண்டாகுமென்றுசொன்னார். கிருச்சமதருமனமகிழ்ந்து பிரதிதினம் நித்தியநியமாதிகளைமுடித்து விநாயகக்கடவுளை மனநிற்றியாணித்து அம்மந்திரத்தையன்போடுசெபித்து சாபாநுக் கிரகசாமார்த்தியராகி ஜகப்ரசித்தியாய்விளங்கியிருக்கின்றநாளையில் மகதநாட்டில் சகலருக்குந்தாய்க்கொப்பானவனாகியுங் கொடையிற்கொண்டலை வென்றவனாகியுமிருக்கின்றசூரனென்னும்பெயரினையுடைய ஓர் அரசனிருந்தான். அவ்வரசனானவன் தனக்கு உடலுமுயிரும்போலிருந்து வழிபடத்தக்க அம்பிகையென்னுமனைவியோடும் பிரகஸ்பதிதேவனுஞ் சுக்கிரபகவானுங்கண்டு நாணத்தக்கபுத்தியினையுடைய அமைச்சர்களோடு மிருந்து அரசாட்சிசெய்துவருங்காலத்தில் அவ்வரசனுடைய பிதாவுந் தச் சிரா

ர்த்தத்தினம்வர அதைக்குறித்து வசிஷ்டர் அத்திரிமுதலான முனிவ
ர்களை வரவழைத்தான். அம்முனிவர்களோடு கிருச்சமதமுனிவரு
ஞ் சென்றார். பின்னர் அம்முனிவர்கூட்டத்துள் அத்திரிமுனிவ
ருக்குங் கிருச்சமதமுனிவருக்குங் கலைக்கியானப்பிரசங்கங்களில் ஒ
ருவர்க்கொருவர் வாதுநேரிட்டுப் போர்செய்வதானார்கள். அவரு
ள் கிருச்சமதமுனிவனை அத்திரிமுனிவர் வெல்லமாட்டாதிளைத்
துக் கொல்லத்தக்க கோபத்தோடு நெருப்பெழுந்து பறக்கும்படி
யாகக் கண்களை நெரித்துக் கிருச்சமதமுனிவனைப் பார்த்து நீ
மகாயோக்கியனைப்போற் பேசுகிறாய் உன்பிறப்பையும் பெருமை
யையும் நெருப்பிற்கொண்டுபோய்ச்சுடு எங்களைப்போல நீயுமோ
ர்முனிபுத்திரனாகிவாதாடவந்தாய் நீ உருக்குமாங்கதராசனுக்குப் பி
றந்தகதை யொருவருக்குந்தெரியாததோ நீ இச்சபையிலிருக்கத்தகா
து உனக்கு எங்களோடு கூடசரியானமரியாதையுநடக்கக்கூடாது இந்
நிமிடத்தெழுந்து வெளியிற் செல்லக்கடவையென்று கையால்மறித்
துமறித்துச் சொல்லுகின்றதைக் கிருச்சமதமுனிவர்கேட்டு மிகுந்த
கோபங்கொண்டு கண்சிவந்து இதழ்துடித்துப்புருவநெரித்து ஆங்கி
ருப்போரெல்லாம் அஞ்சிநடுங்கும்படியாகத் திரிலோகத்தையு மெரி
ப்பவர்போலக் கொதித்தெழுந்து வசிட்டர் முதலானமுனிவர் கூட்
டங்களுக்கெதிராகநின்று என்னோடுசரியாகப் பிரசங்கித்துவெல்வத
ற்குச்சத்தியற்றஅவமானத்தால் என்னை உருக்குமாங்கதராசன் புத்
திரனென்று அவமதிப்பாகப்பேசினீர்கள் யான்தவசிரேஷ்டராகிய
கவிமுனிவருடையபுத்திரனேயானால் இச்சபையிற் கூடியிருக்கின்ற
உங்களையெல்லாம் இமைப்பொழுதிற்சாம்பராக்கித்தேவர்களெல்லா
ங்கொண்டாடத்தக்க புகழையடையக்கடவேனென்று சொல்லி அவ்
விடத்தினின்றுந் துணுக்கென்றகன்று அதிகவேகத்துடன்சென்று
தணியாதகோபத்தோடு தன்றாயாகிய முகுந்தையையடுத்து ஓ து
ர்த்தாய்என்முன்னர்வா என்தந்தையார் நடந்தகாரியத்தை எனக்கு
ள்ளபடி சொல்லக்கடவையென்றார். உடனே முகுந்தையானவள்
நடுநடுங்கி மகனே யானுன்னிட்டப்படிநடந்த உண்மையைச்சொல்லு
கின்றேன் நீ அவசரப்படாமற்கேள் ஓர்நாள் உருக்குமாங்கதராசன்
மிருகவேட்டையாடிவருகையில் மிக்கதாகத்தோடும் இங்குவந்தென்
னைத் தண்ணீர் கேட்டான் இவ்வுலகமெங்கணும் காணற்கரிய அவ
ரழகையான்கண்டவுடன் எனதுமனமுருகியது. பெண்பிள்
குவிரகமுண்டானபோது தங்களிச்சையின்வண்ண நடந்து

கொள்ளும்படிசாஸ்திரங்களில் விதித்திருக்கின்றமையால் அவனுடன்கூடியுன்னைப்பெற்றேன் இதுவேசத்திய உண்மையென்றுசொல்லலும் தவத்தின்மலைக்கொப்பானவராகிய கிருச்சமதமுனிவர் முன்னரடைந்த கோபாக்கினியின்மீது மற்றொருகோபாக்கினியைச் சொரிந்ததுபோல மனம்வெந்து நீவனத்திற் பறவைகளுண்ணும் இலந்தைமரமாகக்கடவதென்றுசபித்தனர். பின்னைரொடுங்கின்றமுகுந்தையானவள் தன்னைச்சபித்த புத்திரனைப்பார்த்து நீ சகலசாஸ்திரங்களினும்வல்லவனாகியிருந்தும் பெற்றதாயென்று சற்றுங்கருதாமல் என்னைநடுக்கஞ்செய்தாய் ஆதலால் இனி உனதுமனமு நடுங்கும்படியாகக்கொடிய குணத்தோடும் ஓர் புத்திரன் உனக்குண்டாகக்கடவதென்று சபித்துஉடனேகாட்டிலந்தைமரமாயினாள்.

இப்பால்கிருச்சமதமுனிவர் தாம் இராசபுத்திரனென்பதைக்குறித்துமனம்வெட்கி இவ்வித அவமானத்துடன் உயிரைவைத்திருப்பதைவிட இச்சரீரத்தையொடுக்கிமாய்வதே நன்மையென்றெண்ணமுற்றிருக்கையில் அவர்மனங்குளிரும்படியாக (நீ தேவேந்திரனுடையபுத்திரன்) என்று ஒரு அசரீரிவாக்கு ஆகாயத்திலுண்டாயது. அவ்வாக்கினைக்கிருச்சமதமுனிவர்கேட்டுத்தமது சிந்தையைச்சிறிது தேற்றிக்கொண்டு முன்னர் நம்மையவமானஞ்செய்தமுனிவராதியர் இப்போது நம்மைவணங்கத்தக்கவரங்களைப்பெற்று வருவோமென்றெண்ணமுற்று அவ்வனத்தைவிட்டுநீங்கி மற்றொருவனத்தையடைந்து அதில்மல்லிகைமுல்லை இருவாட்சி மாதவிமுதலிய பலபுட்பக்கொடிகளாற் பந்தலிடப்பட்டிருக்கின்ற பொழிலையும் தாமரைஅல்லி நீலோற்பலமுதலிய பலபுட்பவருக்கங்களணிந்த தடாகங்களையுங்கண்டு வேதவோசைகளோடு பலவேள்விகளை நடாத்துகின்றமுனிவர்கூட்டங்களையும் கிரீடாதிபதிகளாகிய தேவர்சமூகங்களையுமடைந்து தீர்க்கதெண்டன்செய்தனர், அவர்கள் இக்கிருச்சமதமுனிவருடைய நல்வரவையேற்று இங்ஙனமிருமென்று கட்டளையிட அதற்கவர்மனமகிழ்ந்து அவ்வனத்தில் ஓர் பக்கத்திலிருந்து வலத்தாட்பெருவிரலைநிலத்திலூன்றி ஐம்புலன்களையுமடக்கி கணேசமூர்த்தியினுடைய திருவுருவத்தைமனதிற்றியானித்து தமதுதந்தையுபதேசித்த மந்திரத்தைச்செபித்து தேவவருடத்தில் ஆயிரம்வருடத்திற் கொருகால் கண்களைவிழித்துமீளவுமூடிக்கொள்ளுவார், இவ்வாறு பதினாயிரவருடம்வரையிற்றவஞ்செய்தலும்அந்தத்தபாக்கினியானது திரிலோகத்திலுஞ்சென்று சகலரையுந்தீய்த்துவருத்தியது. பின்னர்ம

னவாக்குக்காயங்களா லெட்டுதற்கரிய பேரொளியாகியும் பரிபூரண
மாகியும் யானென்தென்னும் போதத்தையொழித்த மெய்ஞ்ஞானி
யருள்ளத்தில் எக்காலத்தும்பிரியா விடையாயிருக்கின்ற விநாயகமூ
ர்த்தியானவர் கோடிசூரியோதயத்திற்கொப்பான காந்தியை யுடைய
திருமேனியுந் தாமரைப்பூமாலிகையைத் தரித்திருக்கின்ற மார்பும்
பரிமளமிகுந்த குங்குமகற்பூர முதலியவைகளைச்சேர்த்துப் பனிநீர்
விட்டரைத்த சந்தனம்பூசியிருக்கின்ற பத்துப்புயங்களும் இடைவி
டாது அசைகின்றசெவிகளும் மதம்பொழிகின்ற யானைவதனமும் இ
ளம்பிறையையொத்த ஒற்றைக்கோடும்விளங்க இருமருங்கினுஞ் சி
த்திபுத்திகள்வாசஞ்செய்யுந் திருக்கோலத்தோடு வெள்ளைநிறமுள்ள
சிங்கவாகனமூர்ந்து சந்திரனொளியெல்லாஞ் சூரியனொளியில்மாய்வ
துபோலக் கிருச்சமதருடைய தபாக்கினியொளியெல்லாந் தமதுதி
ருமேனியொளியின் மழுங்கும்படியாக அவரெதிரிற் பிரத்தியட்சமா
யினர். உடனே கிருச்சமதமுனிவர்மருண்டு சுவாமியினுடைய பே
ரொளியாற்றிருமேனியெழில்தோற்றுமற்கண்கூசி மதிமயங்கி நமது
தவத்திற்குச்சேதோ ஒருவிக்கினம் வந்ததென்றெண்ணி விநாயகமூர்
த்தியை மனதிற்றியானித்து சுவாமி இவ்விக்கினத்தைவிலக்கி அரு
ளென்றவ மீடேறும்படியனுக்கிரகிக்கவேண்டுமென்றுபிரார்த்திக்கு
ர் முகக்கண்கூசும்படிஎழுந்தருளியகணேசமூர்த்தியானவர் அதற்கு
க்கருணைகூர்ந்துஞானமென்னும் அகக்கண்ணையளித்தருளினன். பி
ன்னர் கவலையுற்றிருந்த கிருச்சமதமுனிவர் மனமகிழ்ந்து மிக்கபய
த்தியோடுமெழுந்து சுவாமியைக் கண்குளிரப்பார்த்து, சாஷ்டாங்க
மாகவணங்கி விநாயகக்கடவுளே நம்மீதுகிருபைசுரந்து, வேதங்க
ளுங் காணுதற்கரிய தமது திருமேனியோடு மெழுந்தருளினரென்று
தேர்ந்து உள்ளமுருகி ஆனந்தக்கண்ணீர் சொரிந்துதுதிப்பதாயினர்.

நித்தியமாய் நின்மலமாய் நிற்குணமாய் நீடொளியாய்த்
தத்துவமாய்த் தத்துவத்துக்கப்பாலாயப்பாலு
மத்துவிதமானவரும் பொருளேயடியேன்
சித்தமுவப்பத்திருக்காட்சிதந்தனையே.

தண்ணார்மதியந்தயங்குஞ்சடாதாரி
யுண்ணாரமுதேயுலவாசுகக்கடலே
விண்ணோரறியாதவித்தகா நீயடியேன்
கண்ணாரக்காணுமாகாட்சிகொடுத்தனையே.

ஆக்கமேயாக்கியளியாதளித்தெவையும்
போக்காமேபோக்கிமலம்பொன்றுவித்துமொன்றுனுந்
காதுநின்றதனிமுதலே நீயடியேன்
ாரக்கூறுமாவந்தெதிரேநின்றனையே.

இவ்வாறு தோத்திரஞ்செய்த கிருச்சமத முனிவர்மீது கணேச மூர்த்தி கிருபாநோக்கம் பாலித்து சிரகம்பிதஞ்செய்து, அன்பனே-உன்தவத்தை மெச்சினேம், உனக்குவேண்டிய வரங்களைக்கேள் தருகின்றேமென்று திருவாய்மலர்ந்தனர். உடனே-கிருச்சமதமுனிவர்இருகாங்களையுங் கூப்பி, சுவாமி-யாவர்க்குங்காண்டல் கருதல் - உரைத்தல்-என்னு மிம்மூன்றினும் அரிதாகியிருக்கின்றதேவரீரை,அடியேன்காணவுங்கருதவுந்துதிக்கவும் எளிதிற்கிடைக்கப்பெற்றேன் இன்னுமிதைவிட வேண்டத்தக்கதென்ன விருக்கின்றது. ஆயினும்-சுவாமிகளே அடியேனைக் கேட்டுக்கொள்ளுமாறு அருளிச்செய்ததால், இனிஅடியேன் வேண்டத்தக்க தியாதெனில், எண்பத்து நான்கு நூறுயிரம்யோனி பேதங்களாயுள்ள பிறவிகளுள் மானுடப்பிறவியரிது. அம்மானுடத்துள், நால்வகை வருணங்களி லிசைந்திடுவதரிது. அந்நால்வகை வருணங்களுள், அந்தணராயுதித்தல் அரிது.அவ்வந்தணருள்,அறிவுடையவராகியிருத்தலரிது .அவ்வறிவுடையோரிடத்தில் சித்தசுத்தி பெற்றிருத்தலரிது. அச்சித்தசுத்தியுடையோரில், பொன்-மண்-பெண்-என்கின்றமூவாசைகளையுமொழித்துசிவஞானசித்தியைப்பெற்றிருப்பதரிது. அத்தன்மைத்தான சிவஞானசித்தியானது தேவரீர்திருவடிகளிற்செய்கின்ற நிரந்தரபத்தியால் வரவேண்டுவதல்லது வேள்வி-தவந்தானமாதிய எவ்வகைத்திறத்தினாலும், மற்றெவ்வகை முயற்சியாலும் வருவதன்று. ஆதலால்-தேவரீர் திருவடிகளில் அடியேற்குமாறாத பத்தியை யருளல்வேண்டும். இத்தலத்தில் எக்காலத்துந்தேவரீ ரெழுந்தருளியிருந்து, தேவர்கள்முதலிய யாவர்கட்கும்அவ்வவர்கள் கருதிய வரங்களை யளித்தருளவேண்டும். இவ்வனத்திற்குப் புட்பகவனமென்றும்,இந்நகரத்திற்குப் புட்பகநகரமென்றும் பெயருண்டாகவேண்டும். இவைகளன்றியும் அடியேனைத்தேவர்கள் - முனிவர்கள்-சித்தர்கள்-சாத்தியர்கள்-அசுரர்கள்-முதலானயாவர்களும் வழிபட்டு. அடியேனுணையைக்கடவாமல் நடந்துகொள்ளும்படியான வாமுங்கொடுத்தருளவேண்டுமென்றார். அதற்குக்கணேசமூர்த்தி கருணைபுரிந்து. அன்பனே-இந்நகரமானது இக்கிரேதாயுகத்திற் புட்பகநகரமென்றும், திரேதாயுகத்தில் மணிபூரகநகரமென்றும், துவாபரயுகத்தில் பாணகநகாமென்றும், கலியுகத்தில் பத்திரீகநகரமென்றும், பெயர்பெற்றிருக்கும். நீ கருதியமற்றவாங்களு முனக்களித்தோம். இனிநமதனுக்கிரகத்தால், தனக்கொருவர் நிகரில்லாதபராக்கிரமசாலியாகியும், சிவபிரா

ன்தவிர மற்றயாவராலுமறியாத் வரத்தையுடையவனுகியும், நமது திருவடிகட் கன்பனுகியு மிராநின்ற ஒருபுத்திர னுனக்குண்டாவான் உனக்கு மூவுலகத்தாரும் புகழத்தக்க கீர்த்தியுண்டாகும். இன்னுமு னக்குவேண்டுங் காரியங்களெல்லாங்கூடவேண்டில் நம்மைமுன்னதாகப்பூசித்து அவைகளைப் பெறக்கடவையாக ஓர்காரியத்தைச் சித்திபெறக் கருதுகின்றவர்கள், முதலில் நம்மைக்கருதிப் பூசிப்பார்களாயின், உடனே அவர்கள் தீவினைகளினின்றுநீங்கி அதனையெளிதிலடையைவார்கள். நம்மைத்தொழாதபேர்கட்கு எல்லாவிடையூறுகளும் பொல்லாவினைகளு முண்டாகுமென்றருளிச்செய்து, தமது திருவுருவைக்கரந்தருளினுர். இப்பால்கிருச்சமதமுனிவர் அவ்விடத்திலேயாலயஞ் சமைத்துஅதில் விநாயகமூர்த்தியைப் பிரதிட்டை செய்து அம்மூர்த்திக்கு வரதகணபதியென்னுந் திருநாமந்தரித்து ஓர் தீர்த்தமுண்டாக்கி அத்தீர்த்தத்தால் அவ்வரத கணபதிக்குத் திருமஞ்சனமாட்டிச், சதாகாலமும் பூசனைசெய்து கொண்டிருந்தார். கணேசமூர்த்திக்கு அபிஷேகித்ததினுல் அத்தீர்த்தத்திற்குக் கணேச தீர்த்தமென்னும் பெயருண்டாயது. அந்நகரங்கணேசமூர்த்தியினுடைய கிருபையால் விளங்கியதாற் கணேசநகரமென்றும் யாவர்க்கும் பலசித்திகளைத் தருவதால் சித்திநகரமென்றும்பெயர்பெற்றது. இவ்வன்றியும் அளவற்றசித்தர்கள்-முனிவர்கள் தேவர்கள்முதலாயினேர் அச்சித்திநகரத்தையடைந்து அங்கெழுந்தருளியிருக்கின்ற சித்திவிநாயகனைத் தரிசித்து அவ்வவர்கள் இஷ்டகாமியார்த் தங்களைப் பெற்றிருக்கின்றுர்கள்.

கக-வது-கிருச்சமதர்-உபாசித்தபடலம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது.

## திரிபுரன் உபாசித்தபடலம்.

அரியமாதவத் தந்தணீரானைமாமுகனை
ஒருமைசேர்கிருச்சமதர் போற்றியதிறமுரைத்தாம்
உரைசெயுந்திரிபுவனமுமுற்றினிதாள்வான்
திரிபுரன்னுபாசித்ததோர்திறமுரைசெய்வாம்.

---

சௌனகாதி முனிவர்களே விநாயகமூர்த்தியைக் கிருச்சமதமுசித்துப் பலவரங்களைப்பெற்ற பேற்றினைச்சொன்னேம்

இப்பால் திரிபுர னுபாசித்த திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீராக. கணேச மூர்த்தி கொடுத்தருளிய வரத்தினாற் கிருச்சமத முனிவர் சகலமுனிவர் களுந் தேவர்களுந் தம்மைத் தொழு தெழுந்து ஏவல்செய்யத் தக்க மாட்சிமையோடு யாகாதிகட்கெல்லாம் உபாத்தியாயராகித் தினந்தோறும் வரத கணபதியைப் பூசனைசெய்து தமது தந்தையா லுபதேசிக்கப் பெற்ற மந்திரத்தைஇடை விடாதுசெபித்துப் பஞ்சேந்திரி யங்களையு மடக்கித் தவஞ் செய்து வருகின்ற நாளையில் ஒருநாள் நெடுநேரம் யோகத்தி லிருந்து கண்களை விழித்துப் பார்த்தனர். அந்த வேகமுள்ள பார்வையி னின்றுஞ் சொர்க்கமத்திய பாதலமுதலிய சகலலோகங்களு நடுங்கும்படியாகப் பிரளயகாலத்தி லுண்டாகின்ற இடியைப்போலவார்ப்பரித்துமகாபராக்கிரமத்தோடு முன்னர் விநாயகமூர்த்தி தந்தருளியிருக்கின்ற வரத்தின்படிபலியென்னும் பெயரினையுடைய ஒருவனனுதித்தனன். அவன் சிவந்த நிறமும் மிகுந்த அழகும் ஒளிவீசுகின்ற கிரீடமும் நவரத்நகுண்டலமும் புயகவசமும் அரைநாணும் இன்னுமிவைமுதலான அளவற்ற அலங்காரங்களோடு சூரிய காந்தியு மழுங்கத் தக்க பிரகாசத்தினை யுடையவனா யிருப்பதைத் தவசிரேஷ்ட ராகிய கிருச்சமதமுனிவர்கண்டு நடு நடுங்கிப் பயந்து இவன்யாவனென்று மயங்கி மீளவுங் கணேசமூர்த்தியினுடைய பெருங்கருணையால் நமக்குப் புதல்வனாகவந்தவனென்றுதெளிந்து அவனைப்பார்த்து அப்பா-நீயாரெங்கிருந்து வந்தனையென்றுவினாவினர். அதற்கு அப்பலியென்பவன்சொல்லுவான் அண்ணலேதாங்களென்னை இன்னவனென்றறியாதிருப்பது மிகவும் ஆச்சரியமாகவிருக்கின்றது தேவரீர்விழித்தருளியபார்வையின் மகிமையாலல்லவா யானுண்டாயினேன் யான்தேவரீர்புத்திரன் எனக்குத்தாய்தந்தைமுதலியயாவருந் தேவரீரேயாகும், என்னைச்சிலநாள்வரையிற் றேவரீர் பாதுகாத்துவிடல்வேண்டும், பின்னர் இம்மூவுலகங்களையும்வென்று சயங்கொள்ளுவேன் அப்போதெனதுபராக்கிரமங்களையெல்லாந் தேவரீரே அறியப்போகின்றீரென்றுசொன்னான். அவையனைத்தையுங் கிருச்சமதமுனிவர்கேட்டு நடுக்கமுற்று இதனை வெளிவிடலாகாதென்று தம்முள் மறைத்துக்கொண்டு அவனைப்பார்த்துச்சொல்லுவார். மைந்தனே- ஆதிமத்தியாந்தரகிதமாகியும் அகண்டாகாரவஸ்துவாகியுமிருந்து எங்குந்தானாகவிளங்குகின்ற சோதிஸ்வரூபராகிய விநாயகமூர்த்தியினுடையமந்திரத்தை யுனக்குபதேசிக்கின்றோம் அந்தப் புராதனமந்திரத்தைச் செபித்துவருவையாயின்உனக்குச் சகலசித்திகளுங்கைகூடுமென்று

சொல்லிக் கணுருந்துவாவென்னு மந்திரத்தை ஆகமவிதிப்படி உபதேசித்து அதைய நுட்டிக்கு முறைமையையுஞ்சொன்னார். இப்பால் பலியென்பவன் பேருவகையில்மூழ்கினவனாய்க் கிருச்சமதமுனிவருடைய திருவடிகளைப்பணிந்து துதிசெய்து அவ்வனத்திற்றனேமற்றொருசாகையிலிருந்து அவரைப்போலவேதானுமொருகாலை நிலத்திலூன்றிப் பஞ்சேந்திரியங்களையு மொருவழிப்படுத்தி சுழிமுனை-இடை-பிங்கலை-காந்தாரி-அத்தி - சிங்குவை - அலம்புடை-புருடன்-குரு-சங்கினி () என்னுந் தசநாடிகட்கும் உற்பத்திஸ்தானமாகிய மூலாதாரத்தினின்றுந் தேகமத்தியமாகிய இதயகமலத்தில் பிரிதிவி தத்துவமுதல் நாததத்துவமீறாக ஓராதனங்கற்பித்து அவ்வாதனத்தில் சோதிமயமானகணேசசொரூபத்தைப் பிரதிட்டைசெய்து அந்தசொரூபத்தில் விநாயகமூர்த்தியை ஆவாகனஞ்செய்து அம்மூர்த்திக்குஅருளென்னுந் திருமஞ்சனத்தையாட்டிச் சாந்தமென்னுஞ் சந்தனத்தைச்சாத்தி ஞானம்-மோனம்-தானம்-தவம் - தருமம்-மனவூக்கம்-கல்வி-கேள்வி-என்கின்ற அட்டபுட்பங்களைக்கொண் டருச்சித்து, அன்னமயம்-பிராணமயம்-மனோமயம் - விஞ்ஞானமயம் ஆனந்தமயம் ※ என்கின்ற பஞ்சவிதான்னங்களையும் நிவேதித்து அகங்காரமென்கின்றதூபங்கொடுத்து அபிமானமென்கின்ற தீபங்காட்டி சிற்சத்தி-பராசத்தி-இச்சாசத்தி-ஞானசத்தி-கிரியாசத்தி-என்கின்ற ?

() அவையாவன, சுழிமுனை - ஆதாரமாறினு மூடுருவிநிற்பது. இடை பிங்கலை-இரண்டுங் கத்திரிகைக்கால்போற்பின்னிநிற்பன. காந்தாரி-நாபியிற்றோன்றிச் சத்தமேழுக்கு மேழுநாடியாய்க்கண்டத்துறுவது. அத்திசிங்குவை - இரண்டும்பத்துநாடியுற்றுக் கண்ணினிற்பன. அலம்புடை-புருடன்-இரண்டுஞ்செவியினூற்றிருபதுநரம்புற்றிருப்பன. குரு-நாபியுறைந்துகுய்யம்பற்றிநிற்பது. சங்கினி-உபத்தத்தைப்பற்றியிருப்பது,

※ அவையாவன உடல் அன்னமயம் கருமேந்திரியமும் பிராணனும்பிராணமயம் கருமேந்திரியமும்மனமும் மனோமயம் ஞானேந்திரியமும் புத்தியும் விஞ்ஞானமயம்அவித்தை யானந்தமயம் இவையேபஞ்சகோசம்.

? அவையாவன, உயிர்க்கொளியாகநிற்பதுசிற்சத்தி.பிராணன்முதலிய வாயுவாகநிற்பது பராசத்தி. பஞ்சபூதமாகநிற்பதுஇச்சாசத்தி. ஐம்பொறியுணர்ச்சியாகநிற்பது ஞானசத்தி. மற்றைவினைத்துணையா ◌ரியாசித்தி.

தருவது மெய்யேயானால்மூவுலகங்களு மடியேன்வசமாகவேண்டும். இந்திரன்முதலிய தேவர்களெல்லாங்கைகட்டி வாய்புதைத்து அடியேன் வாய்தலிற்காத்திருந்து யானிடுகின்ற ஏவல்களைத் தட்டாமல் நடத்திவருவதான அரசாட்சிவேண்டும். எந்தப்பொருளை எந்தெந்தவேளையில்நினைத்தாலும், அந்தப்பொருள்கள் அந்தந்தவேளையில் அடியேற்கு எளிதிற்கிடைக்கவேண்டும். தேவரீர் திருவடிகளில் அடியேற்கு மாறாதபத்திவேண்டும் என்சரீரவந்தத்தில் அடியேற்கு முத்தியுண்டாக வேண்டுமென்று பிரார்த்தித்தான். இவையனைத்தையுங் கணேசமூர்த்தி கேட்டுச் சிறியவனே நீ கருதியவரங்களனைத்தையுங்கொடுத்தோம். மூவுலகத்தாரு முன்னேவல்புரிந்து சேவிப்பார்கள்- இவைகளன்றியும் கரும்பொன் வெண்பொன் பசும்பொன்என்கின்றமூன்றுலோகத்தாலாகிய மூவிதக்கோட்டைகளை உனக்களித்தோம். அவைகட்குப்பெயர் திரிபுரமென்றுசொல்லப்படும். உன்னை யுலகத்தாரெல்லாந் திரிபுரனென்றழைக்கக்கடவர்கள். காமதகனராகிய கங்காசடாதரமூர்த்தியின் கணையாலன்றி மற்றையாவராலும் உனக்குமுடிவில்லை. நீ நினைத்தவிடத்திலுனக்கு முன்னதாகவே அத்திரிபுரங்கள்கூடநடக்கும். பின்னர்சகலமுஞ்சிவபெருமான்விடுகின்ற கணையாலழிந்துவிடும். உடனேஉனக்கு முத்தியுண்டாகுமென்றுதிருவாய்மலர்ந்து, தமது திருவுருவைக்கரந்தருளினார். இவ்வாறு விநாயகக்கடவுள் அவனுக்குக்கொடுத்தருளியவரங்களையெல்லாந் தேவர்கள் கேட்டு நடுநடுங்கித் துக்கசாகரத்தின்மூழ்கினார்கள். இப்பாற் பலியென்பவன் தந்தையாகியகிருச்சமதமுனிவரைக்கண்டு பணிந்து, தான்பெற்றுவந்த வரங்களனைத்தையுஞ்சொல்லி மூவுலகத்தினுஞ்சென்று போர்செய்வதானஎண்ணத்தோடு அப்புட்பகவனத்தில் வாசஞ்செய்திருந்தான்.

கேட்டீர்களோசவுனகாதிமுனிவர்களே, பின்னர் அப்பலியென்பவன் புட்பகவனத்தி லிருக்கின்ற கணேசபுரத்தில் யாவரும் அதிசயிக்கத்தக்கதாகக் கண்டகச்சிலைகளினால் ஓராலயஞ்சமைத்து அவ்வாலயத்தையலங்கரித்துத் தானெவ்வாறு கணேச மூர்த்தியைத் தரிசித்தானோ அவ்வாறே அக்கண்டகச்சிலையினால் ஒருதிருவுருவங் கண்டு அத்திருவுருவத்தை அவ்வாலயத்திற்பிரதிட்டைசெய்து தினந்தோறுமாராதித்துக்கொண்டிருந்தான். இவ்வாறுசிலநாள்கழிந்தபின்னர் பூலோகத்துள்ளவரசர்களையெல்லாம் வெல்வதற்கு வெளிக்கொண்டுசென்று அளவற்ற யுத்தங்களை நடத்திச் சகலவேந்தர்களை

ஞ்சநீராஞ்சனங்களைச்சுத்தி தன்தந்தையா லுபதே
ணசமந்திரத்தைச்செபித்துத் தியானத்திலிருந்து
முதலானவைகளை நீத்துப் பதினாயிரவருடந்தவ
வன்செய்கின்ற கொடியதபாக்கினியானது எங்கு
ற் தேவர்களெல்லாநடுங்கிவருந்தினார்கள். உடனே
விநாயகமூர்த்திகிருபைகூர்ந்து கோடிசூரியப்பிரகா
னெதிரிற்பிரத்தியட்சமாயினார். பலியென்பவனச்
மஞ்சாமல்கண்களைவிழித்துப்பார்த்து ஒருகரத்திற்
ஒருகரத்திற் கழு முள்ளும் ஒருகரத்திற் கனிச்சி
கரத்தில் மோதகமுந்தாங்கிய வலக்கரத்தோடு ம
யு மனங்குளிரத்தரிசித்து அடியற்ற மரம்போலநில
ஷ்டாங்கமாகவணங்கி அனந்தமுறைதோத்திரஞ்செ
ரணந்தரித்த கணேசமூர்த்தியே இமைப்போதிற்ச
மெரித்து நீறுக்கவல்லகடவுளே அடியேனிடத்தி
தேவரீர் பெருங்கருணைவைத்தாளவேண்டும் அடி
ய்தாலும் அதனைத்தேவரீர் மன்னிக்கவேண்டுமெ
ன். கணேசமூர்த்தி அதனைக்கேட்டுக் கிருபைகூர
ரமனாதி முனிவர்களாலும் இருக்காதிவேதங்களா
கரிய நாம் உன்மீது வைத்த பேரன்பினால் நீசெய்த
ட்டுண்டு இங்ஙனம்வந்து உனக்குத்தரிசனந்தே
வேண்டியவரங்களைக்கேள் தருகின்றோமென்று
ளலும் பலியென்பவன்மனமகிழ்ந்து ஓ - சர்வபரிபூ
ஓ-மெய்ஞ்ஞானப்பேரொளியே சோமன் சூரியன்
ன்ற இம்மூவரும் இவ்வுலகத்துள்ள இருளை நீக்குவ
றி நின்றதேவரீர் திருமேனியின்பிரகாசரேணுவினாலெ
ண்டங்களும் யாதொருகுறைவுபாடின்றி நடந்துவரு
ருவடிகளினசைவினாலல்லவா சகலமுந் தேவரீர்செ
முதலிய அளவற்றசாஸ்திரங்களு முறையிடுகின்றன
னமடியேற்குக்கிடைத்தபோதே எல்லாவரங்களுங்
கிடைத்தன. தேவரீர்திருக்காட்சியால் அடியேன் எ
யாத பெரும்பேறுடையவனாயினேன். அடியேனை
ம் பெரும்பேறுடையவராயினார் யாங்களியற்றியதவ
றது எதுமறியாதசிறியேன் தேவரீருடைய பெருமை
றுரைக்கமாட்டுவேன். சுவாமி - தேவரீ

யும்வென்று அவர்கட்கெல்லாந்தன்னைக் கீழ்ப்பணிந்து ஏவல்செய்து வரும்படியாகக்கட்டளையிட்டுத் தன்னினங்களையெல்லாம் விண்குடியேற்றிப் பாதலலோகத்திற்சென்று அங்கரசாள்கின்ற நாகேந்திரன்முதலான சகலவீரர்களையுஞ்செயித்து அவ்விடத்துள்ளமாணிக்கமுதலியசெல்வங்களையெல்லாங்கைக்கொண்டு மீட்டும்பூலோகத்திற்குவந்தான். உடனே அந்தந்த தீபாந்தரங்களிலுள்ள அவுணர்களெல்லாம்வந்து தீர்க்கதண்டன்செய்து துதிக்க அவர்கட்கெல்லாங் கிருபைபுரிந்து அவ்வவர்கட்குவேண்டிய செல்வங்களையுங்கொடுத்துப் பின்னர் அவர்களோடு பூலோகத்தினின்றும் பாதலலோகத்தினின்றும் வந்திருக்கின்றசேனைகளையு மழைத்துக்கொண்டு செயபேரிகைமுழக்குவித்து வேல்-மழு-வாள்-கேடயமுதலான அளவற்ற ஆயுதங்களைச்சேகரஞ்செய்து அவுணசேனைகளெல்லாம் அமாவாசையிருளைப்போலத் தன்னைப்புடைசூழ்ந்துவர ஞெரேலென்று சொர்க்கலோகத்திற்சென்று கற்பகச்சோலையிற்புகுந்து அங்கிருக்கின்றதேவர்களையெல்லாமொடுக்கி அச்சோலையினையுநாசஞ்செய்தான். இப்பால் இவன்வரவைத் தேவதூதர்களறிந்து இந்திரனுக்கறிவிக்கவிட்டார்கள். உடனே அப்பலியென்பவனுந் தனதுவரவை இந்திரனுக்கறிவிக்குமாறு தூதர்களையனுப்ப அவர்களவ்வாறேசென்று இந்திரனைக்கண்டு ஓசுராதிபரே - எங்களரசராகிய பலியென்பவர் இங்குவந்திருக்கின்றனர். நீரவரிடத்திற்கு விரைந்துவந்து அவரைப்பத்தியோடும்பணிதல்செய்யக்கடவீர். அப்படிவாராதிருப்பீராயின் உம்மை இப்பொன்னுலகவரசாட்சியினின்றுநீக்கி யமலோகத்திற்சேர்ப்பதாக யோசித்திருக்கின்றார். உமக்கவரோடு யுத்தஞ்செய்ய வலியிருக்குமாயின் இந்நிமிடத்தி லுமக்குள்ள சேனைகளோடு வெளிக்கொண்டுவாரும் இல்லாவிட்டால் யாங்கள் முற்கூறியபடி அவரிடத்தில்வந்து சரணடையும். இதற்கென்னவுத்தரவுசொல்கின்றீரென்று கேட்டார்கள் இதனைக்கேட்டலுந்தேவேந்திரன்அதிககோபாவேசங்கொண்டு தனதுகரத்தைத்தூணிற்றாக்கி நீங்கள்சொன்ன வார்த்தை நன்றாயிருக்கின்றதென்றுநகைத்துத் தாமரைமலர் பூத்தகாடுபோலக் கண்களிலெல்லாஞ் சிவப்புற்று இனிமுடிவெய்துங்காரணமறியாதவனாகி இதோவந்துயுத்தஞ்செய்து யாவரையும் அதப்படுத்துகிறேனென்றெழுந்து வந்தவர்கட்கு விடைகொடுத்தனுப்பித்தனதுசேனைகளெல்லாம் யுத்தத்திற்கு ஆயத்தமாகிவர நகரமுழுவதுமுரசறைவித்தான். முன்னர்பலிவிடுத்ததூதர்கள் மீட்டுந்திரும்பிவந்

து தங்களாசனைப்பணிந்து ஓசக்கிரோஸ்வராயாங்கள் தேவேந்திரனிடத்திற்சென்று அவன்கருத்தை யாராயுமளவில் அவன் யுத்தத்திற்கே எதிர்பார்த்திருக்கின்றனனென்றலும் அழலில் நெய்சொரிந்தது போலப் பலியானவன்கோபங்கொண்டு இந்திரன்வரவை எதிர்பார்த்திருந்தனன். இப்பால் தேவேந்திரனவன் முடி-குடை-கவரி-தோட்டி-முரசு - சக்கரம் - யானை - கொடி-மதில்-தோரணம்-நீர்க்குடம்-பூமாலை-சங்கு-கடல்-மகரம்-ஆமை-இணைக்கயல்- சிங்கம்-தீபம்-இடபம்-ஆசனம்-என்கிற இருபத்தோருசின்னங்களோடுபதாதி-சேனாமுகம் - குமுதம் - கணகம்-வாகினி-பிரளயம்- சமுத்திரம்-சங்கம்-அனிகம்-அக்குரோணி * என்கிறபதின்வகைச்சேனைத்தொகைகளுங்கிரமப்படிவிளங்க மந்திரியர் கருமாதிக்காரர் - சுற்றத்தார் - கடைக்காப்பாளர்- நகரமாக்கள் - படைத்தலைவர் இவுளிமறவர் - யானைவீரர் - என்கின்ற எண்வகைத் துணைவர் களும் அவ்வவர்களாயுதங்களோடு புடைசூழ்ந்துவரச் சத்தசாகரங்களுமுடைந்து பெருகியது போன்ற பேரொலியோடு அரண்மனைவாய் தலைவிட்டு நீங்கித்தனது ஐராவணத்திலாரோகணித்து ஒளிவீசுகின்ற வச்சிராயுதத்தைத்தாங்கி அளவற்றதேவர் கூட்டங்களாசி கூறிவரவும் செயபேரிகைமுதலிய வாத்தியங்கள் முழங்கவு மாகப் பகைவனாகியபலியென்பவனைத்தேடிச் சென்றனன், பலியானவன் தேவேந்திரன் வரவைப்பார்த்து அவனையோர் திரணமாகமதித்துத் தானுந்தன் சேனைகளோடு அவனெதிரிற் சென்றான்; பின்னர் புண்ணியமும் பாவமும் ஒன்றாய்க் கலந்தது போலத் தேவ சேனைகளோடு அவுணசேனைக ளொன்றாய்க்கலந்து போர்செய்யும் போது அவுணசேனைகட்குச்சிறிது வலிகுன்றியது, அதனைப் பலியென்பவன் பார்த்துப் புண்ணில்வேல்பாய்ந்ததுபோலப் பொங்கி மனம்பொறுதவனாகி விழிகளில் அனற்பொறிகளெழும்பத் தக்கதாகக் கொதித்துப் புகையுண்டாகும்படிபெருமூச்செறிந்து திசைகளெல்லா மதிர நகைத்துப் புருவம்நெற்றியி லேறக்

---

* அவையாவன், யானை-க-தேர்-க குதிரை-ரு-காலாள்-ரு-இவை கூடியதுபதாதி, பதாதிமும்மடிகொண்டது சேனாமுகம், சேனாமுகமும்மடிகொண்டதுகுமுதம், குமுதமும்மடிகொண்டதுகணகம், கணகமும்மடிகொண்டதுவாகினி, வாகினிமும்மடிகொண்டதுபிரளயம், பிரளயமும்மடிகொண்டதுசமுத்திரம் சமுத்திரமும்மடிகொண்டதுசங்கம், சங்கமும்மடிகொண்டது அனிகம், அனிகமும்மடி கொண்டது அக்குரோணி.

கோபித்து வடவாமுகாக்கினிபோலச் சீறிக் குதிரைமீதேறித்
தேவர்களுடைய படைக்கூட்டங்களிற்புகுந்து யாவரையுஞ்சின்னபி
ன்னமாகவாட்டுவதாயினன். உடனே-தேவர்சேனைகளெல்லாந் தி
கைத்துப் பலகாயங்களோடுவருந்திமனந்தாபரிக்கமாட்டாது நாற்றி
சைகளினுமோடிப்பதுங்கினார்கள். சிலர் ஆயுதத்தோடு கையறுப
ட்டவர்களும் சிலர்மாலையோடுமார்பு பிளக்கப்பட்டவர்களும் சிலர்
கழலோடு கால்முறியப் பட்டவர்களும் சிலர் மகுடத்தோடு சிரமு
ருளப்பட்டவர்களும் சிலர் குடரோடு ஈரல்சரியப்பட்டவர்களுஞ்சில
ர் வலியோடு வாகழியப்பட்டவர்களுமானார்கள். இவ்வாறுதேவசே
னைகளெல்லாம் அவுணராசனால் மடிந்துபோவதை இந்திரன்பார்த்
துமனம்பொறாமல் அழற்பொறிபறக்கும்படியாகவிழித்து ஆலகால
விடத்தைப்போலச்சீறி மதம்பொழிகின்ற தனது அயிராவதத்தை
ச் சண்டமாருதத்தினும் அதிகவேகமாகச்செலுத்தி அவுணசேனைக
ளையெல்லாங்கண்டதுண்டமாகவெட்டி எறிவதாயினன். அதனைப்
பலியென்பவன்கண்டு அண்டகடாகங்களெல்லாம் நடுங்கும்படியா
கநெறநெறென்று பற்களைக்கடித்து விடநாகத்தினைப்போற்சீறிவீரா
வேசங்கொண்டு கரத்திலிருக்கின்றவில்லைவளைத்துக் குணத்தொனி
செய்து குரூரமாகியபாணவருஷங்களைப்பொழிந்து தோமரம்-குந்த
ம்-நேமி பாசம்-வாள்-முசலம்-தண்டம்-முதலான ஆயுதங்களை நேரு
க்கு நேராகவிடுத்து ஆகாயத்திலிருக்கின்ற உடுக்கூட்டங்களெல்லா
முதிரும்படியாகச்சத்தித்துத் தேவசேனைகளையெல்லாம் அதப்படுத்
திக்கொண்டிருக்கின்றசமயத்தில் இந்திரனென்பவன் தனது அயிராவ
தத்தை அதிகவேகத்துடன் நடாத்திவந்து அதன்மத்தகத்தைப்பலி
யென்பவனேறிநடத்துகின்ற குதிரையின்முன்னங்காலானது மடிந்
தொடியும்படியாகத்தாக்கினன். உடனேபலியானவன் தன்வாளா
யுதத்தைவீசி இந்திரனை யவ்வயிராவதத்தினின்றுங் கீழேவிழும்ப
டியாகத்தள்ளித் தன்குதிரையைத்தாழ்த்தி அவன்வச்சிராயுதத்தை
க்கைக்கொண்டு அதனால் அயிராவதத்தினுடைய மத்தகத்தில்மோ
தி அதன்வீரத்தையெல்லாங் குன்றச்செய்தனன். பின்னர் தேவே
ந்திரனிமைக்குமுன்னமெழுந்துநெடுமூச்செறிந்துமிகுந்தகோபாவே
சத்துடன் அப்பலியின்மேற்பாய்ந்து அவன் தலைபிளவுபடும்படியா
கத்தன்கையால் பலங்கொண்டமட்டும்மோதுதலும் பலியானவன்மூ
ர்ச்சையாகவீழ்ந்து மீளவுந்தெளிந்தெழுந்து இந்திரனுடையமார்பிற்
பாய்ந்துமோதினன். உடனே இந்திரனுமூர்ச்சித்தவனாகிச் சிறிது

தெளிவுற்றெழுந்து பலியைப்பார்த்து நீ உன்னாயுதங்களைவிடுத்து என்னோடு மல்லயுத்தஞ்செய்து பிழைக்கவல்லையோவென்றுசொல்ல, அதற்கு அவ்வவுணராசன் சொல்லுவான் ஓ இந்திரனே - விட்டிற்பூச்சியினுடைய சிறகின்காற்றினாலேயா வடவாமுகாக்கினியவியும், மதயானையைப்போன்றவெனக்கு நீதோற்றனை ஆயினும்-அஞ்சவேண்டாம் உனதுபெருமைகெடாது இன்னுஞ்சிறிதுகாலம் வாழவேண்டுவையாயின் உனக்குப்பூலோகவரசாட்சியைத்தந்தேன்அங்ஙனஞ்சென்று உன்னகங்காரத்தையெல்லாமொடுக்கிஉன்கிளைஞர்களோடிருந்துவாழக்கடவையென்றனன். அதனை இந்திரன்கேட்டுச்சரீரங்குலுங்கநகைத்து ஓ-பலியே - இன்னும்யுத்தஞ்செய்ய அழைக்கின்றேனென்றுபயந்தநீ இவ்வார்த்தையைப்பேசித் தப்பித்துக்கொள்கின்றாய் இந்நிமிடத்திலுன்சரீரத்தைச் சின்னபின்னமாக்கிப் பருந்துகட்கிரையாக்குகின்றேனென்று தன்புசங்களைத் தட்டினான். அதனைக்கேட்டபலியானவன்அதிகஉருத்திராவேசங்கொண்டுதன்குதிரையைவிட்டிறங்கி உதிரவெள்ளம் ஓடும்படியாக அவ்விந்திரனோடு அளவற்றமல்லயுத்தங்களைச்செய்து இமைப்போதில் அவன்கால்களைப்பிடித்து ஆகாயத்திற்றூக்கிக் கிறுகிறென்றுசுழற்றிவீசினான். அவ்வேகத்தோடு இந்திரனானவன்மெலிந்து இமயவரைச்சாரலில்வீழ்ந்துமூர்ச்சித்து உயிர்போனவனை யொப்பக்கிடந்தனன். இக்காரணத்தை இந்திராணிகேள்வியுற்று நிலத்தில்வீழ்ந்துபுரண்டு அம்மவோ - அம்மவோ - வென்றழுதுசோர்வுற்று மற்றைத்தேவர்களோடுங்கூடித் தன்காதலன்மூர்ச்சையாய்வீழ்ந்துகிடக்கின்ற பர்வதச்சாரலையடைந்து பற்பலசைத்தியோபசாரங்களால் அவன்மூர்ச்சையைத்தெளிவித்து சஞ்சிதம்-பிராரத்துவம்-ஆகாமியம் * என்னுமிம்மூன்றினால்வருகின்றகாரியங்களை யார்தடுக்கவல்லவரென்று பலதேறுதல்களைச்சொல்லி அவ்விமையகிரியினுடைய குகைகளிலே அத்தேவேந்திரனோடு தானும் ஒளித்துக்கொண்டிருந்தாள். இப்பால்பலியென்பவன் யுத்தகளத்தைவிடுத்து இந்திரனுடைய அயிராவதத்திலேறிச் செயபேரிகைமுழக்குவித்து அவனரண்மனையிற்சென்று மிகுந்தஆனந்தத்தோடு சிங்காதனத்திலிருந்து சுவர்க்கலோகத்திலிருக்கின்றகுடிகளெல்லாந் தனதாணைக்கடங்கிநடந்துகொள்ளக்கடவதெ

---

* அவையாவன - முன்செனனத்திலனுபவித்து மிகுந்த வினைக்குறைசஞ்சிதம். அதனை இந்தச்செனனத்திலனுபவிப்பதுபிராரத்துவம். இந்தச்செனனத்திலேறுகின்ற வினைகள்ஆகாமியம்.

ன்று எங்குமுரசறைவித்து அரம்பைமாதரை நாட்டியஞ்செய்வித்து கின்னரர்களை வீணைவாசிப்பித்துச் சகலபோகங்களையுந் தனதுபஞ்சேந்திரியங்கட்குவிருந்தூட்டி அரசாட்சிசெய்துகொண்டிருந்தான். இவ்வாறுசின்னாள்கழிந்தபின்னர் அப்பலியானவன் பிரமன்வாழ்கின்ற சத்தியலோகத்திற்செல்ல பிரமன் அவன்வரவையறிந்துபயந்து அவ்வுலகத்தை விடுத்து வைகுந்தத்திற்சென்றான். அவ்வைகுந்தத்தில்வாழ்கின்றவிண்டுவும் அவ்வவுணன் கொடுமைகளைக்கேட்டுநடுநடுங்கி அப்பிரமனைத்தன்னுடனழைத்துக்கொண்டு இந்திரன்முதலாயினோரொளித்திருக்கின்ற இமையபர்வதச்சாரலையடைந்தார். பின்னர் சத்தியலோகத்திற்சென்றபலியானவன் அங்குபிரமனில்லாததைக்கண்டு அவ்வுலகத்தைத்தன்வசமாக்கி அவ்விடத்தினின்றுநீங்கி வைகுந்தத்திற்சென்று அங்குவிண்டுவில்லாததைக்கண்டு அதனையுந்தன்வயப்படுத்தி மீளவும்பூவுலகத்திற்குவந்து தனக்கு அளவற்ற வரங்களைத்தந்தருளிய விநாயகமூர்த்தியைப்பூசித்து சுவாமி - முன்னரடியேற்குத் தேவரீர்வரமாகத்தந்த மூன்றுகோட்டைகளாகிய திரிபுரங்களை இப்போதனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். உடனேகரும்பொன்- வெண்பொன்-பசும்பொன்-என்னும் இம்மூன்றினாலாகிய திரிபுரங்கள் ஒவ்வொன்றுநூறுயோசனையுயாமும் நூறுயோசனைவிசாலமுமாக அளவற்றசெல்வங்களோடு ஆகாயத்திலுண்டாயின.

அத்திரிபுரங்களில், கற்பகவிருக்ஷம் - காமதேனு-சங்கநிதி-பதுமநிதிமுதலாகியபொருள்களோடு, அளவற்ற அற்புதசம்பத்துகளுநிரம்பியிருந்தன. சொர்க்கம் சத்தியம் வைகுந்தம் என்னும் இம்மூன்றுலகங்கள் அப்பலியின்வசமாயினபோதே, அவைகட்குத்தாழ்ந்த மற்றலோகங்களெல்லாம் அவன்வசமாய்விட்டன. அப்பலியானவன் சிவபெருமானால் முத்தியடையுங்காலத்தன்றி, மற்றெக்காலத்தினுமழிவின்மையாயிருக்கின்ற மூன்றெயில்களும். அவன்செல்லுமிடங்கடோறுஞ் சொல்லுதலால்,நடைசெய்யும்படியான சீவதேகங்கட்கொப்பாகியிருந்தன. அத்திரிபுரங்களானது யாவரும் விரும்பியபோகங்களைவரையாது கொடுத்துவருவதினாற் காமதேனு-கற்பகம்-சிந்தாமணி யென்னும் இம்மூன்றுநிதிகளையொத்திருந்தன. இப்பாற் பலியென்பவன் திரிபுரனென்னு நாமம்பெற்றவனாய், அளவற்ற ஆனந்தத்தில் மூழ்கித் தானடைந்த அத்திரிபுரங்களில் இரும்பாலாகிய புரத்திற்குச் சுக்கிலமென்றும், வெள்ளியாலாகிய புரத்திற்கு

ச் சுபிலமென்றும், பொன்னுலாகிய புரத்திற்குச் சுவிர்த்தி யென்று ம் நாமங்களிட்டுச், சுகிலம்பாதலலோகமாகவும், சுபிலம்மத்தியலோகமாகவும், சுவிர்த்தி சொர்க்கலோகமாகவும் ஏற்படுத்தி விநாயகக்கடவுளை அன்புடன்றியானித்துத், தன்மனத்தால் மூன்றுபுத்திரர்களையுண்டாக்கி அம்மூவருக்கு வச்சிரதமிஷ்டிரன்-வீமகாயன் - காளகூடன்-என்று நாமகரணந்தரித்து சுகிலமென்னு மிரும்புக்கோட்டையை வச்சிரதமிஷ்டிரனென்பவனுக்கும், சுபிலமென்னும் வெள்ளிக்கோட்டையை வீமகாயனென்பவனுக்கும், சுவிர்த்தியென்னும் பொன்கோட்டையைக்காளகூடனென்பவனுக்குங் கொடுத்து இம்மூவர்கட்குந் தானதிகாரியாயிருந்து, தன்னுணையின்படி யவர்களை நடாத்திவந்தான். மேற்கூறியமுப்புரங்களானது ஆயிரம் வருடத்திற்கொருகால் அவ்விடம்விட்டு மற்றோரிடத்திற் பெயர்வதும், தனக்குள்ளிருந்து அரசுசெய்கின்றவர்கள் ஏதேதுவேண்டினும் அவைகளையெல்லாந் தடையில்லாமற்கொடுத்து வருவதும், அவர்களெவ்வெவ்விடங்களிற் செல்ல நினைக்கினும் அவ்வவ்விடங்களிற் சென்றியங்குவதுந், தம்மடியிலகப்பட்ட உலகங்களையெல்லாமழித்து வெற்றிகொள்வதுமாகியிருந்தன. இப்பால் திரிபுரன் வங்காளமென்னுநகரைச்சேர்ந்து, தன்மனத்தால் மீளவும் இரண்டுபுத்திரர்களை யுண்டாக்கி, அவர்கட்குச்சண்டனென்றும் பிரசண்டனென்று நாமகரணந்தரித்து சண்டனென்பவனைச் சத்தியலோகத்தையும், பிரசண்டனென்பவனை வைகுந்தத்தையும் அரசாக்ஷிசெய்யவிடுத்துப், பின்னர் ஒருமனைவியைக்கூடி அவளால்மதனென்னும் பெயரினையுடைய ஒருபுத்திரனைப்பெற்றுச், சகலலோகங்களினுந் தனதாணையைச்செலுத்தி, அளவற்றபோகபாக்கியங்களை யநுபவித்துத், தனதுகீர்த்தியானது அட்டதிசைகளினும் பரவத்தக்கதாக நல்லநீதியைச்செலுத்தி இடைவிடாமல் விநாயகபூசையுஞ் சிவபூசையுஞ் செய்துகொண்டு அநேககாலம் அரசாட்சிசெய்துவந்தான்.

கஉ-வது-திரிபுரனுபாசித்த படலம்

முற்றிற்று.

—*—

உ

பதின்மூன்றாவது.

## தேவர்கள் உபாசித்தபடலம்.

திருத்தமார்தவத்தினைங்கைச் செல்வனைத்திரிபுரன்வந்
தருத்தியினுபாசித்தேத்து மஃதுரைசெய்தாம்நேர்ந்த
வருத்தமதகல்வான்வேழ மாமுகவாதன்றன்னைக்
கருத்தினோடமரர்போற்றுங் கவினினிதுரைப்பாமன்றே.

ஓ சவுனகாதிமுனிவர்களே, விநாயகமூர்த்தியைத்திரிபுரன் பூசித்து வரங்களைப்பெற்ற வரலாற்றினைச்சொன்னோம், இப்பால் அத்திரிபுரனழியுமாறு தேவர்களெல்லாம் பூசித்துவரம்பெற்ற சரித்திரத்தைச்சொல்லுவோங் கேட்பீராக இவ்வாறு திரிபுரனெனவன் சகலலோகங்களினுந் தனதாணையைச்செலுத்தி அரசுசெய்து வருகின்றகாலத்தில், இமயகிரியின்குகைகளிலொளித்து வேறொரு புகலிடமின்லாமல் துயரமுற்றிருக்கின்றதேவர்களிடத்தில், ஒருநாள் நாரதமகாமுனிவர்சென்றார். அவரைத் தேவர்களெல்லாங்கண்டு சேவித்துப்போற்றி விண்ணப்பஞ்செய்தலாவது, சுவாமி - கொடியவனாகிய திரிபுரன் சகலவெற்றிகளையுமடைந்து, மூவுலகங்களையுந் தன்வசமாக்கிக்கொண்டான். அவனால் யாங்களனைவரும் அலைப்புண்டு, மனநொந்து, நாளுக்குநாள் மெலிவினையடைந்தோம். அவன்யாவரால் வரம்பெற்றனன், இப்பால் அவன்யாவரால் அழிவான் இனி அடியேங்கள் செய்யவேண்டியகடப்பாடியாது, அதனைத்தேவரீர் கிருபைபுரிந்து திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குச்சகலகாரியங்களையுந் தமதுஞானநோக்கினால் அறியத்தக்கநாரதமகாமுனிவர்சொல்லுவார், ஓ தேவர்களே - அத்திரிபுரன் விநாயகக்கடவுளைப்பூசனைசெய்து, அவரால் அளவற்றவரங்களைப்பெற்று சகலமகிமைகளையும் அடைந்திருக்கிறான் அவனும், அவனரசுசெய்கின்றதிரிபுரங்களும், சிவபெருமானுடையபாணத்தாலழியவேண்டும். அப்படியவரால் அழிவதற்கும் விநாயகக்கடவுளுடைய அநுக்கிரகம்வேண்டும். ஆதலால் நீங்கள்யாவரும் விநாயகக்கடவுளைப்பூசைசெய்யக் கடவீர்களென்றுசொல்ல. அதற்கு அத்தேவர்கள் மனம

கிழ்ந்து, மீளவும்பணிந்தெழுந்து, சுவாமி- கணேசமூர்த்தியையாரா திக்கத்தக்கமுறைமை இவ்வாறென்று அடியேங்களறிந்திலேம், அத னையுந் தேவரீரேயநுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். நாரதமுனிவர் அதனைக்கேட்டுக்கிருபைசுரந்து, நீங்கள் கருதியவண் ணமேசெய்கின்றோம், யாவரும் ஸ்நானஞ்செய்து அநுட்டானமுத லியவைகளை முடித்துவரக்கடவீர்களென்று கட்டளையிட்டார். அ வ்வாறே அவ்வவர்கள் முடித்துக்கொண்டுவந்தபின்னர், விநாயகக்க டவுளுடைய ஏகாட்சரமந்திரத்தையுபதேசித்து, அதையநுட்டிக்கு முறைமையையுஞ்சொல்லி, அவர்களைவிட்டுப் பிரிந்தனர். இப்பா ல் தேவர்களனைவரும் ஒருதாளைநிலத்திலூன்றி, விநாயகமூர்த்தியி னுடைய திருவுருவத்தைமனதிற்றியானித்து, ஏகாக்ஷரமந்திரத்தை ச்செபித்து, அளவற்றநாள் தவஞ்செய்துகொண்டிருக்கையில், ஒரு நாள்தம்மையடைந்த அன்பினரை அவரினுஞ்சிறந்தஅன்போடுஆத ரிக்கின்றவராயும், யான்செய்யுங் குற்றங்களையெல்லாங் குணமாகக் கொண்டுகாப்பவராயும், வன்மையான நெஞ்சினர் முன்பு ஒருகால த்தும்வாராத உத்தமராகியுமிராநின்ற கணேசமூர்த்தியானவர், கிரு பைசுரந்து, சொர்னகிரீடமும். அதில் மூன்றாம்பிறையும், நவரத் நகுண்டலமும்-புயகவசமும்-அரைநாணும்-மருப்பிற்சுற்றியிருக்கின் ற துதிக்கரமும்-பாசம்-அங்குசம்-மழு - தாமரைப்பூவென்னுமிவைக ளைத்தரித்திருக்கின்ற நான்குதிருக்கரமும், அளவற்றபேரொளியோ டுநிறைந்ததிருமேனியுமான கோலத்துடன், அவர்களெதிரிற்பிரத்தி யக்ஷமாயினர். உடனே அத்தேவர்களெல்லாம் எதிரிற்காக்ஷிதந்தரு ளியசுவாமிகளைக்கண்டு, சூரியனை எதிர்வரக்கண்டதாமரைமலர்போ லமுகமலர்ந்து, அன்பும் அச்சமுங்கொண்டு, சாஷ்டாங்கமாகச்சே வித்தெழுந்து, இருகரங்களையுஞ்சிரமேற்கூப்பி, விழிகளிலானந்தநீ ர்த்தாரைகளைச்சொரிந்து, தோத்திரஞ்செய்வதானார்கள்.

தத்துவாதீதபோற்றி தத்துவப்பொருளேபோற்றி
தத்துவமுதலேபோற்றி தத்துவசொரூபபோற்றி
தத்துவத்தியன்றதாத்து விதங்களுமானாய்போற்றி
தத்துவவறிவுக்கெட்டாத் தயங்குபேரறிவேபோற்றி.
உடலினுக்குயிரேபோல வுயிர்க்குயிரானாய்போற்றி
யுடலுயிர்க்கறிவுநல்கி யுடலினைக்கழிப்பாய்போற்றி
யுடலுயிரெனப்பினீங்கா வொற்றுமைப்பொருளேபோற்றி
யுடனுறையுயிர்க்குமெட்டா வொளிர்பெருஞ்சோதிபோற்றி

விரவுதத்துவத்தினீங்கி மேலெனநின்றவாவி
வரமுறவுருவுகொண்டுவந்தருள்குரவபோற்றி
பரவுமைந்தொழிலைநீக்கி யுயிரினைப்பணிப்பாய்போற்றி
துரியத்தினுயிரைவாங்குஞ் சுடர்ப்பெருங்கடலேபோற்றி
பத்தர்கள்வழங்கநின்ற பலவுங்கைக்கொள்வாய்போற்றி
புத்திகள்போகத்தார்க்குப் புணர்த்தருள்போகிபோற்றி
முத்தியையோகத்தார்க்கு முடித்தருள்யோகிபோற்றி
யெத்தொழிலவர்க்குமந்தப் பயனருளிறைவபோற்றி
வேண்டியவடியார்க்கெல்லாம் விக்கினங்கெடுப்பாய்போற்றி
வேண்டிவந்தனைசெயார்க்கு விக்கினங்கொடுப்பாய்போற்றி
வேண்டுவார்வேண்டிற்றெல்லாம் விளைத்தருள்விமலபோற்றி
மாண்டதுட்டர்களைக்கொல்லு மறமிகுமள்ளபோற்றி

இவ்வாறுசெய்த தோத்திரங்கட்கெல்லாம், விநாயகமூர்த்திசெவிகொடுத்தருளி, அத்தேவர்களைக்கிருபையோடுபார்த்து, நீங்கள்கருதியவரங்களைக்கேளுங்களென்றுதிருவாய்மலர்ந்தருளலும்,தேவர்கள்மீட்டும் பணிந்தெழுந்து, ஓசகலபுவனாதாரஸ்வரூபியே, அடியேங்கள்படுகிற துயரங்களனைத்துந்தேவரீர்க்குத்தெரியாதனவல்லவே, திரிபுரனுக்குத் தேவரீர்கொடுத்தருளிய வரத்தால், திரிலோகங்களையுந்தன்வயப்படுத்தி, எங்களையெல்லாம் பலதுன்பங்களில்மூழ்கச்செய்தனன்; ஆதலால் அத்திரிபுரனை யழைத்து, அடியேங்களை யெல்லாங் காத்துரட்சிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குக்கணேசமூர்த்திகிருபைகூர்ந்து. அமரர்களே-உங்கள்சிறுமைகளையுந், திரிபுரன்பெருமைகளையும் அறிப்பதற்கு, ஓருபாயஞ் செய்கின்றோம், அதுகாறும்நீங்களனைவரும் விரைந்து சென்று, சிவபெருமானையடையக் கடவீர்களென்று திருவாய்மலர்ந்து, அத்தேவர்கட்கெல்லாம் விடைகொடுத்துப், பின்னர்பிராமணவடிவங்கொண்டு, தமதுதேவியோடும் பலமுனிபுங்கவர்கள் புடைசூழ்ந்துவரும்படியாகத், திரிபுரன்வாழ்கின்றவங்காளமென்னுநகரத்தினையடைந்து அவனரண்மனையிற்சென்றார். திரிபுரன்அவ்வேதியனைக் கண்டவுடனே, சிம்மாதனத்தை விட்டிறங்கி, எதிர்சென்று, சாஷ்டாங்கமாகச்சேவித்துமிக்க அன்புடனழைத்துக்கொண்டுவந்து ஓர்சிறந்தஆதனத்திலிருக்கச்செய்து சுவாமி-தேவரீர்யார் அடிமையால் தேவரீர்க் காகவேண்டியகாரியம்யாது அதனைத்திருவாய் மலர்ந்தருளல்வேண்டும் திரிலோகங்களும் எனதாணையிற் கட்டுண்டிருக்கின்றமையால்எனக்கெ

ய்தாத காரியமொன்றுமில்லை தேவரீர்க்குயாதுவேண்டினும் இங்கிமி டத்திற் றருவேனென்று சொன்னான். அதற்குஅந்தணராகி வந்தக ணேசமூர்த்திசொல்லுவார் திரிபுரனே-நம்மையாவருங் கலாதரனென் றுசொல்லுவார்கள். யாமோவிண்டுலோகமுதலிய சகலலோகங்களி ன்அலங்காரங்களை யெல்லாம்பார்த்துக்கொண்டு திரிகின்றசித்தராகும். நீதி-யாகம்-புகழ்-செல்வம்-அழகு-ஆயுதவல்லபம்-பராக்கிரமம்-தேசுமுதலிய சிறப்புக்களினாலும் விநாயகக்கடவுளைத் தினந்தோறும்ஆராதித்து வருகின்ற பத்தியினாலும் சத்துருக்களாயினோர்கண்டு நடுங்கி வணக்கங்கொள்ளதக்க வீரத்தன்மையை யுடையவனாதலால் உன்னைக்காணவேண்டி இங்ஙனமெழுந்தருளினோம். நீமூவருலகங்களை யளிக்கினும் வேண்டேம். உனதரசாட்சியை யளிக்கினும் வேண்டேம். நீ ஒருவர் கருதிவந்தபொருளைக் கரவாதளிக்குங்கடப்பாட்டினை யுடையனாயின்கைலாயத்திலொருவிநாயகமூர்த்தியிருக்கின்றது. அம்மூர்த்திக்குரிய திருநாமஞ் சிந்தாமணிவிநாயகரென்பர். அவ்விநாயகரை உமாபரமேஸ்வரி மணாளராகிய சிவபெருமானவர் நாடோறும் ஆகமவிதிப்படி யாராதித்துவருகின்றனர். அத்தன்மைத்தான மேலானமூர்த்தியை நமக்கெவ்விதத் தேனும் வருவித்துத் தரல்வேண்டு மென்றார். அதற்குத் திரிபுரன் மனமகிழ்ந்து ஓ வேதபாரகரே-தேவரீர் இச்சித்தமூர்த்தி கைலாசபதியிடத்திருப்பதாக மனந்தளரவேண்டாம். அக்கைலாசபதியே விண்டுமுதலிய சகலதேவர்களுந் தம்மைப்புடைசூழ்ந்து வரும்படியாக அம்மூர்த்தியை இங்கிமிடத்திற் கொண்டுவந்து தேவரீர்முன்புவைக்கும்படி செய்கின்றேன். அடியேன் பராக்கிரமத்தைத் தேவரீர் பார்த்தருளுமென்று சொல்லி ஆடையாபரண முதலான திரவியங்களைக் கொடுத்து சாஷ்டாங்கமாகப்பணிந் தெழுந்துசுவாமி-அச்சிந்தாமணி விநாயக மூர்த்தியை யானழைப்பித்துத் தருகிற பரியந்தம் தேவரீரிங்ஙனமிருந்து வசித்தருள வேண்டு மென்றுபிரார்த்தித்தான். இவையனைத்தையுங் கணேசமூர்த்தி கேட்டருளிப்புன்னகைகொண்டு திரிபுரனே - நீ அம்மூர்த்தியை வரவழைக்கின்றபரியந்தம்இங்கரத்தின்சமீபத்தில் வாசஞ்செய்கின்றோம். நீ யதற்குரிய முயற்சிகளை விரைவில்நடத்தக்கடவையென்று திருவாய்மலர்ந்து-ஆசீர்வாதஞ்செ ... எழுந்தருளினர் இப்பால் திரிபுரனென்பவன் ஒற்றர்களைவரவழை ... கைலாயத்திற்சென்று பரமசிவனைப் பணிந்துஎங்களரச ன்தேவரீர்பூசிக்கின்றசிந்தாமணிவிநாயகரைவாங்கிவரு

வதாகக்கட்டளையிட்டான். அதனையெம்மிடத்திற்றால்வேண்டும்தரா மற்றடைசெய்வீராயின் அவனே நேரில்வந்து பலாத்காரமாய் வாங்கிக்கொண்டுபோவான். அக்காலத்தில் நீர்துயரப்படவேண்டுவதாகநேருமென்று கண்டிப்பாகச் சொல்லி அம்மூர்த்தியை விரைவில் வாங்கிவரக்கடவீர்களென்றுகட்டளையிட்டான். அவ்வொற்றர்களும் அவ்வாறேசென்றார்கள்.

௧௩-வது-தேவர்களுபாசித்தபடலம்
முற்றிற்று.

பதினான்காவது
## விமலர்உபாசித்தபடலம்.

அமலமாதவத் தீரைங்கரத்தனை
யமரர்போற்றிய தன்மையறைந்தனம்
கமலனாரணன் காண்டற்கரியவோர்
விமலர்போற்றிய வண்ணம்விளம்புவாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே திரிபுரனையழிக்குமாறு தேவர்கள்கணேசமூர்த்தியைப் பூசித்துவரம்பெற்ற வரலாற்றினைச்சொன்னோம் இப்பால்அத்திரிபுரனழிவின்பொருட்டுச் சிவபெருமானுபாசித்ததிறத்தினைச்சொல்லுவோங்கேட்பீராக. முன்னர் விநாயகமூர்த்தியால்வரம்பெற்றகன்ற தேவர்களெல்லாம் பின்னர்சிவபெருமானுடைய திருவருளைப் பெறவேண்டினவர்களாய் நாம் அவரைச் சரணடைந்தவுடன் நம்மீதிரக்கமுண்டாக்கத்தக்கது எதுவென்றாலோசித்துச் சூரியசந்திரர்களைத் திகிரிகளாகவும், இருதுக்களை உட்பரப்புகளாகவும் சமயங்களை உள்ளிடமாகவும் பிரகிருதியாகின்றமாயையைமுகப்பாகவும் விநாடிமுதலிய காலங்களை மச்சாகவும் பூவுலகத்தைத்தட்டாகவும் சொர்க்கலோகத்தை ஆதனமாகவும் கலைகளை முளைகளாகவும் மந்திரகிரியைமேல் வட்டமாகவும் இமயகிரியைக் கொடிஞ்சியாகவும் உதயகிரியைக் கூம்புகளாகவும் மற்றப்பர்வதங்களையெல்லாந் தூண்களாகவும் தத்துவங்களைக் குடமாகவும் மேகங்களைச்சுற்றுமரங்களாகவும் கன்மேந்திரிய ஞானேந்திரியங்களை ஆபரணங்களாகவும் அண்டங்களை மாலைகளாகவும் புராணசாத்திரங்களை மணிவடங்களாகவும்நட்சத்திரங்களை விதானங்களாகவும் சமுத்திரங்களையலங்கா





ரவஸ்திரங்களாகவும் மருத்துவர்களைப் படிகளாகவும் கங்கை முதலி
யதெய்வநதிகளைச் சாமரைகளாகவும் மற்றையநதிகளை யெல்லாம் ப
தாகைகளாகவும் திதிவாரமுதலிய நாள்களைநடக்கின்ற வேகமாகவு
ஞ்சோடித்துசந்திரசடாதர மூர்த்தியாகிய சிவபெருமானுள்ளங்களி
க்கத்தக்க ஓரிரதத்தையுண்டாக்கி அந்தரதத்திற்கு வேதங்களைக்குதி
ரைகளாக்கி, வசுக்களை யக்குதிரைகட்குவடிகயிறுகளாகத்தொடுத்து,
கன்மகாண்டம் ஞானகாண்டமென்னும் இரண்டுவேதமார்க்கங்களை
யும் நுகத்தடியாகப்பூட்டி உபநிடதங்களையெல்லாங் குதிரைகட்குஆ
பரணமாகத்தரித்து பிரணவமென்னுஞ்சவுக்கைக்கொண்டுபிரமனை
ச்சாரத்தியஞ்செய்வித்து. மகமேருவைவில்லாக்வும் வாசுகியைநா
ணாகவும்விண்டுவைப்பாணமாகவும் யமனை அலகாகவும் வாயுவைஇ
றகாகவும் வடவாமுகாக்கினியைக்கூராகவும் புரிந்துமுன்னோர்தாங்க
ள்செய்திருக்கின்றஇரதத்தோடுஇவ்வில் முதலியவாயுதங்களைக்கொ
ண்டு கைலாயபர்வதத்தைச் சேர்ந்துரதத்தைவெளியில்நிறுத்தித்தா
ங்களனைவருஞ் சிவபிரான் சந்நிதானத்திற்சென்று அவர்திருவடிக
ளிற் பலபுட்பங்களாலருச்சித்து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, ப
லமுறைதுதித்து இதனை விண்ணப்பஞ்செய்வதாயினார்கள்.

ஆணவமலத்திற்கட்டுண்டிருந்தசகல ஆன்மகோடிகட்குந்நுக
ரணபுவனபோகங்களைத்தந்துமுடிவில் முத்தியிற்சேர்க்கவல்லதயா
பரமூர்த்தியே திரிபுரனென்பவனால்யாங்களெல்லோருமிக்க துன்ப
த்தினையனுபவிக்கின்றோம் சுவாமிகளவனையழிக்கவேண்டியநிமித்த
மெழுந்தருளுவதற்கு ஓரிரதஞ்செய்துகொண்டுவந்தோம் அதன்மீ
துசுவாமிகள் கிருபாநோக்கஞ் சாதித்தருளவேண்டுமென்று பிரார்
த்தித்தலும் அதற்குச்சிவபெருமான் செவிகொடுத்துப் பார்வதிதே
வியாரோடுமெழுந்தருளிக்கோபுரவாயிலுக்கு வெளியில்வந்து அந்த
ரதத்தைத்தமதுகண்களிக்கநோக்கி அதிகசந்தோஷங்கொண்டு, அந்
தேவர்களைப்பார்த்து இனியுங்கள்துயரத்தினைநீக்கி ஆனந்தமுற்றிரு
ங்கள், உங்கட்குத் தீமைவிளைவிக்கின்ற திரிபுரனை அனைக்கணப்
போதிலெரித்து யாவர்க்குஞ்சுகத்தினைத்தருவோமென்று திருவாய்
மலர்ந்து மீளவுங்கோயிலுட் புகுந்தருளினர். அச்சமயத்தில் மூ
னர் திரிபுரனேவியதூதர்கள்வந்து தீர்க்கதண்டன்செய்து அவ
ன்சொல்லவாக்கியாபித்தவண்ணஞ் சொன்னார்கள். அவையனைத்
தையுஞ் சிவபெருமான்கேட்டுப் புன்னகைகொண்டு உங்களரசனை
துவரச்சொல்லுங்களென்று விடைகொடுத்தனுப்பிப் பி

ன்னர் தனித்திருந்து திரிபுரனை நாசஞ்செய்யு முபாயத்தினைக்கருதி
விழிகளைமூடிக்கொண்டு விநாயகமூர்த்தியை மனதிற்றியானித்து
ஏகாட்சரமந்திரத்தைச்செபித்துத் தவத்திலிருந்து இதனைத்துதிப்ப
தாயினர். சர்வேஸ்வரராகியும் சகலமு மறியவல்ல தத்துவராகியு
ம், மகாதவத்தினையுடைய தேவர்கட்கெல்லாம் அநுக்கிரகஞ்செய்ய
வல்ல இறைவராகியும் எக்காலத்தும் அநாதியாகியுமிருக்கின்ற க
ணேசமூர்த்தியே உம்மைநம்பியிருக்கின்றவெனக்கு உமதுசுயரூப
த்தைக் காட்டியருளல்வேண்டும். விண்டுமுதலிய தேவர்களெல்லா
ந் திரிபுரனுக்குபயந்து இதுவரையிற் பலதுன்பங்களோடு மகமேரு
ச்சாரலிலுள்ள பலகுகைகளி லொளித்துக்கொண்டிருந்தார்கள். அ
டைந்தோரை யாதரிக்கவல்ல ஐங்கரக்கடவுளே உமதுதிருவருளால்
சகலத்தையு மளிக்கத்தக்கவராகிய அத்தேவர்களெல்லாந் தங்கடங்
கள் பதவிகளையடையுமாறுபான் திரிபுரங்களையழிக்கத்தக்க உபாய
த்தினை யருளவேண்டும். பஞ்சபூதங்களு முமதாணையால் அசைகி
ன்றன சகலலோகங்களும் உம்மிடத்தில் அடங்கியிருக்கின்றன மே
லும் இவ்வுலகத்தார் தங்கள்தங்கள்கன்மாதிகளாற் செய்கின்றவெல்
லாக்காரியங்கட்கும் உட்சாக்ஷியாயிருந்து பிரகாசிக்கின்றகர்த்தர்நீ
ரேயாதலால் மாயையென்னும் படலத்தால்மறைப்புண்டுசமுசார
மென்னுங்காட்டிற்சிக்கியிருக்கின்ற வான்மாக்களெல்லாஞ் சரீரங்க
ள்தோறுமிகுந்ததவங்கள்செய்து பரிசுத்தஞானத்தாலும்மைத்தியா
னித்து ஆனந்தமடைகின்றார்கள். மகாதவங்களைச்செய்து யோகத்
திலிருப்பவர்களுடையவுள்ளத்திற் பிரகாசிக்கின்றசோதியும் அகப்
பற்றுபுறப்பற்றென்னு மிரண்டினையும் விலக்கி, உம்மைச்சதாகால
முந் தியானித்துத் தரிசனஞ்செய்யவல்ல ஞானிகட்கு எங்கும் பரிபூ
ரணமாகியிருக்கின்ற பேரொளியும் நீரேயன்றி மற்றையாவரிருக்கி
ன்றார்களென்று துதித்துப்பிரார்த்தித்தனர்.

உடனேவிநாயகமூர்த்திக்குக்கிருபைசுரந்து அச்சிவபிரான் மு
கத்தினின்று ஐந்துமுகங்களுந் தரித்ததிருமேனியோடுதோன்றி எ
திராகநின்றனர். உடனே சிவபிரான் அவரைப்பார்த்துமனங்களி
த்து ஐயனே நீரெங்ஙனமிருந்தெழுந்தருளினீர் உமதுதிருநாமமியா
து. அதனைத்திருவாய் மலரவேண்டுமென்று கேட்டருளினர். அத
ற்கவ்விநாயகர்கிருபைசுரந்து ஓ நீலகண்டமூர்த்தியே இரவும்பகலு
முக்குணங்களோடும் விளையாடுகின்ற என்னை நீரன்புடன்கருதி அ
ளவற்றநாள் தவஞ்செய்தீராதலால் மூவுலகத்துள்ள உயிர்களையெல்

லாங் காத்தற்பொருட்டு உமதுமுகாரவிந்தத்தினின்றுந் தோன்றிவந் தனம். நமதுநாமங் கணேசராகும். உமக்குவேண்டியவரங்களை க்கேட்பீராயின். அவைகளை இங்கிமிட்த்திற் றருகின்றோமென்று திருவாய்மலர்ந்தருளினர். பின்னர் சிவபெருமான் மனக்களிப்ப டைந்து ஓ கணேசமூர்த்தியே தேவர்களெல்லாந் திரிபுரனுடைய ஆக்கினைகட்கஞ்சி வருந்துகின்றார்களாதலால் அவர்கள்வருத்தங்க ளை நீக்குமாறுயான் அத்திரிபுரனைச் சங்கரிக்கவேண்டும் அதற்கே ற்ற சத்தியெனக்குண்டாகும்படி நான்குவேதங்கட்கு முதன்மையா யிருக்கின்ற உமதுமந்திரத்தைப் பீஜாக்ஷரத்துடனே உபதேசித்த ருளவேண்டுமென்று பிரார்த்தித்தார். அதற்குக்கணேசமூர்த்தியா னவர் கிருபைசுரந்து தமதுமந்திரத்தையும் அதன் பீசாக்ஷரத்தை யும் விவரமாக உபதேசித்து ஓ காலகாலரே நீர் அத்திரிபுரனை யழி க்கும்படியாகக் கணைவிடுக்கின்றபோது யானுரைத்தமந்திரத்தை நா லுருசெபிக்கவேண்டும். மீளவும் அக்கணையை ஆக்கிரஷிக்கும்போ து மூன்றுருசெபிக்கவேண்டுமென்று திருவாய்மலர்ந்தனர். இ வையனைத்தையுஞ் சிவபெருமான்செவிகுளிரக்கேட்டு ஆனந்தமாகி ப்பலவாறுதுதித்து ஓ கிருபாமூர்த்தியே நீர் இம்மகா மந்திரத்தையு டையவராதலால் சகலதேவகணங்கட்கும் முதல்வராயினீர். உம க்குக்கணேசமூர்த்தியென்னுந் திருநாமமுண்டாயது. யாவரும்வே தாகமபுராணசாஸ்திரங்களையோதுதற் காரம்பிக்கின்றபோதுமுதலி லும்மைத்துதிசெய்யக்கடவர்கள் வைதிகநெறி சைவநெறியென்னும் இவைகளிலுள்ளோர்களும் உம்மையேமுதலில் அநுட்டிக்கக்கடவ ர்கள். விண்டுமுதல் மனிதரீறாகவுள்ள சகல சீவர்களும் உம்மை யேமுதலில்அநுட்டித்து வசியமுதலிய சகலகாரியங்களையும் அடை யக்கடவர்கள். உம்மைக்கருதாது ஆரம்பிக்கின்றகாரிய மற்பமாயி னும் அஃதுசற்றுங் கைகூடாமற்போகக்கடவது. சைவர்களாயி னும் வைணவர்களாயினும் உம்மைப்பணியார்களாயின் அவர்கள் ம காபாவிகளாகக்கடவதென்றுசொல்லி அங்குவந்திருக்கின்றதேவர்க ளையழைப்பித்து ஓ விண்ணுலகவாசிகளே பாவனைகட்கெட்டாத ப ரிபூரணராகிய கணேசமூர்த்தியானவர் நமது பாவனைக்கருள்சுரந்து இதோ எழுந்தருளியிருக்கின்றனர். அவரை நீங்களனைவரும்பூசி த்துப் பரிமளமிகுந்த புட்பமாலைகளைச்சாத்தி சகஸ்திரநாமங்களால ருச்சிப்பீர்களாயின் உங்கள் துயரங்களையெல்லாம் ஒருநொடிப்போ திற் பொடிபடுத்திரட்சிப்பாரென்று திருவாய்மலர்ந்தனர். அதை

விண்டுமுதலிய சகலதேவர்களுஞ் செவிக்கமுதாகக்கேட்டு அவ்வாறே கணேசமூர்த்தியையாகமவிதிப்படி பூசித்து சகஸ்திரநாமங்களாலருச்சித்தார்கள். அவர்கட்கு விநாயகக்கடவுளனுக்கிரகஞ்செய்து தமதுதிருவுருவத்தைக்கரந்தருளினார். இப்பால் சிவபெருமானிடத்தில் விடைபெற்றகன்றதூதர்கள் திரிபுரனிடத்திற்சென்று தீர்க்கதெண்டன்செய்து ஓ ராசராசேஸ்வரா தேவரீரிட்டகட்டளையின்படி யாங்கள் கைலாசபதியினிடத்திற்சென்று சிந்தாமணிவிநாயகனைக் கேட்டோம். அதற்கவர்சிம்புள்போலக்கோபித்துத் தேவரீரையுத்தத்திற்குவரச்சொல்லி விடைகொடுத்தனரென்றார்கள்.

அதனைத்திரிபுரன்கேட்டு நகைசெய்துகன்றவப்பயனுக்கு முடிவெய்துங்காலமேரிட்டவனாகிச் சிவபிரானோடியுத்தஞ்செய்யக்கருதிசண்டன்பிரசண்டமுதலிய அவுணவீரர்களையுந் திரிபுராதிகளையும்வருவதாகஉத்தரவுசெய்தான். அவ்வாறே அவர்கள்வருதலும் நீங்களனைவரும் விரைவில்யுத்தத்திற்கு ஆயத்தமாயிருங்களென்றுசொல்லி அவ்வவர்கட்குச்செய்யத்தக்க சிறப்புகளையுநடாத்தினான். இவ்வாறுதிரிபுரன் படையெடுப்பதைச்சிவபெருமான்கேள்வியுற்று, நந்திதேவரையழைத்து நமது சேனைகளையெல்லாம் விரைவில்வரவழைக்கக்கடவையென்று கட்டளையிட்டனர். அவ்வாறேநந்திதேவரெங்குமுரசறைவிக்க அதனைச்சகலசேனைகளுங்கேட்டு சர்வாயுதபாணிகளாய்வந்து செயவுச்சாகத்துடன் கோபுரவாயிலுக்கெதிரேநின்றார்கள். திரிபுரனுந்தன்னவுணசேனைகளோடு வந்துசேர்ந்தனன். பின்னர்நந்திதேவர் சிவபிரானிடத்திற்சென்றுவணங்கி சுவாமி சகலசேனைகளுந் தங்கடங்கள்படைகளோடு கோபுரவாயிலுக்கெதிரில்வந்திருக்கின்றார்கள். பிரமதேவனுந் தேரைநடத்திக்கொண்டு வந்திருக்கின்றானென்று விண்ணப்பஞ்செய்தலும் சிவபிரான்தேவர்கள் துயரத்தைநீக்கி யாட்கொள்ளுங்கருத்தினராய்த் தமதுதேவியாரோடுஞெரேலென்றெழுந்து திருவடித்தாமரைகளிற் பாதுகைகளைச்சூட்டிச், சகலகணங்களுஞ் சயசயவென்றுபோற்றிவரக் கோபுரவாயிலுக்குவெளியில்வந்து தேவர்கள் அலங்கரித்திருக்கின்ற ரதத்திலாரோகணித்தனர். உடனேவெற்றிச்சங்குமுழங்கின தேவர்களெல்லாந்தேருருவாகிவந்த மாட்சிமைக்கொப்பச் சோடசகலைகளோடுநிறைந்தசந்திரனை மேலேமுடித்ததுபோலச் சிவகணங்கள்கிரணக்கற்றைகளைவீசுகின்ற வெள்ளைக்குடைபிடித்தார்கள். இதுகாறுங்கலைமான் பின்னர் கிடந்தலைந்திருந்தநாம் இப்போது சிவபெருமானெதி

ரிலிருக்கப்பெற்றேமேயென்கின்ற களிப்பினேடுமெழுந்தாடுவதைப்போலச் சிலகணங்கள்வெண்சாமரைகளைவீசினர்கள். நமதுகர்த்தர்சத்தசாகரங்கட்கும் ஒப்புசொல்லக்கூடாத பெருங்கருணையையுடையவராதலால் ஒருவேளை திரிபுரன்மீதிரங்கிக்கொல்லாமல் விட்டுவிடுவரென்றுகருதிக் கோபத்தீயைச்சிறுகச்சிறுக மூட்டுவிப்பவர்போலச் சிலகணங்கள்சாந்தாற்றிகளைஎடுத்தசைத்தார்கள். சிவபெருமானுடையதேரில் அலங்காரவஸ்திரங்களாகக்கட்டியிருக்கின்ற சமுத்திரங்களினின்றும் அலைகளெழுந்துவீசுகின்றதைப்போலச் சிலகணங்கள் வெள்ளைப்பாவாடைகளைவீசினர்கள். திரிபுரனைநாசஞ்செய்யுமாறு நமதுசிவபிரானெழுந்தருளியதால் இனிநமது பாதலலோகத்தைத் தடையின்றியடையலாமென்னுங்களிப்பினேடு நாகராசர்களெழுந்தாடுவதைப்போலச் சிலகணங்கள்ஆலவட்டங்களையசைத்தார்கள். சிவபிரானுடைய ஒரேகணையால் திரிபுரங்களு மழியப்போகின்றமையால் நாமிப்போதே அவைகளினெழிலைக்காணுவோமென்று மேலெழுந்ததுபோலச்சிலகணங்கள் இடபமுத்திரையிட்ட பலவெற்றிக்கொடிகளை ஆகாயமளாவவெடுத்தார்கள். சிலகணங்கள் படகம் - ஆகுளி-சல்லரி - பணை-கிணை-குடமுழா-குடப்பறை-கரடிகை-முரசம்-துடி-தடாரி-தண்ணுமை-துந்துமி-தக்கை-மொந்தை-தொண்டகம்-இடக்கை-தகுணிதம்- பம்பை-தூரியம்-பாண்டில்-படவிகை-பணிலம்-யாழ்-வங்கியம்-காகளம்-பீலி-முதலிய அளவற்றவாத்தியங்களைமுழக்கினர்கள்சிலகணங்கள் கழுக்கடை-முசுண்டி-சக்கரம்-பிண்டி-பாலம்-கம்பம்-கொடுவாள் முசலம்-கப்பணம்-வேல்-மழு-வச்சிரம் கேடகம்-வாள்-வில்-அம்பு கலப்பை-ஈர்வாள்-கணை-குளிரி-சலாகை பாசம்-அங்குசம்-சூலம்-குந்தம் - சுரிகை-புள்ளம்-ஈட்டி-தண்டம் முதலாகிய அளவற்ற ஆயுதங்களேந்தாங்கிஆரவாரித்தார்கள். எழுபத்தெண்ணாயிரங்கோடி பூதவெள்ளங்கள்புடைசூழும்படி இலக்கவீரர்விநாயகக்கடவுளைமனதிற்றியானித்துத் தமதுரதத்தின்மீதேறினர். எண்ணாயிரங்கோடிபூதவெள்ளங்கள் புடைசூழும்படி, வீரபத்திரக்கடவுளானவர் மற்றொருரதத்திலேறினர். நாலாயிரங்கோடி தேவசாரதவெள்ளங்கள் புடைசூழும்படி, பன்னிருபுயாசலங்களையுடைய சண்முகக்கடவுளானவர் மயில்வாகனத்திலேறினர். முப்பத்துமுக்கோடி தேவர்களோடு அளவற்ற விஞ்சையர்முதலாயினேர்கள்புடைசூழும்படி தேவேந்திரன் வெள்ளையானையின்மீதேறினன். கண்டன்-நந்தி-மாகாளன்- குண்டோதரன்-கோகர்ணன்-கெ

ஜகர்னன்-முதலிய அளவற்றசேனைத்தலைவர்கள். தங்கள்தங்களுடைய பூதவெள்ளங்களோடுஞ்சென்று சிவபெருமானுடைய தேரைப்புடைசூழ்ந்தார்கள். உடனே - தூளிபடலங்களாகாயவெளியைமறைக்கும்படியெழுந்தன. அவையெப்படிக்கிருந்தனவென்றால், சிவபெருமானுடைய தேருருளைகளும் பரிகளிலர்களாகிய பூதகணங்களுடையபாதங்களும் பூமியின்மீது சாரும் புண்ணியபலத்தால், அப்பூமியானது அணுவடிவங்களாகச் சென்று சொர்க்கமேறுவதுபோலவும் சகலதேவர்களும் இரதமாகத்திரண்டு நம்மிடத்து வந்தனராதலால் நாமும் அவரிடத்திற் செல்லலாமெனக்கருதி ஆவலோடெழுவதுபோலவு மிருந்தன.

மேலும் இந்தவிதமாகிய அளவற்றசேனைகளெல்லாஞ் சத்தசாகரங்களை யொத்தும், இச்சேனைகள்செய்கின்ற வாச்சிய முழக்கமெல்லாம் அக்கடல்களிலுண்டாகின்ற ஓசையையொத்தும் இச்சேனைகளில் விளங்குகின்றகொடைகளும் பீலிக்குஞ்சங்களும் அக்கடல்களி லுண்டாகின்ற நுரையும் பாசடையு மொத்தும் இச்சேனைகளேந்தியிருக்கின்ற ஆயுதங்களும் வேலாயுதங்களும் அக்கடல்களில்மேய்கின்ற மீன்களையொத்தும் இச்சேனைகள் பிடித்திருக்கின்ற கேடகங்களெல்லாம் அக்கடல்களி லுலர்வுகின்ற ஆமைகளையொத்தும் இச்சேனைகளினடுவே விளங்குகின்ற பதாகைகளெல்லாம்அக்கடல்களி லெழுகின்றஅலைகளையொத்தும்இச்சேனைகளாலெழுகின்ற தூளிபடலங்களெல்லாம் அக்கடல்களை யுண்ண வந்தமேகங்களையொத்தும்தேவர்கள்சொரிகின்றபுட்பவருஷங்களெல்லாம்அம்மேகங்கள் சொரிகின்ற சகலவருஷங்களை யொத்து மிருந்தன. அன்றியுஞ்சிவபெருமானு ரோகணித்திருக்கின்ற ரதமானது, கடலிற் செல்கின்ற மரக்கலத்தைப்போலவும் அந்தரதத்தின் கொடிஞ்சிகளிலுயர்த்தியிருக்கின்ற கொடிகளிலுள்ள இடபமுத்திரைகளெல்லாம் அம்மரக்கலத்தையோட்டுகின்ற மாலுமிகளைப் போலவும் பக்கங்களிற் புடைசூழ்ந்திருக்கின்ற சிறுரதங்களெல்லாம் அம்மரக்கலத்தைநெருங்கியிருக்கின்ற தெப்பங்களைப் போலவுமிருந்தன. இவ்வாறுசகலசேனைகளும்புடைசூழ்ந்து நெருங்கியபின்னர் பிரமதேவனானவன் அத்தேரிற்கட்டியிருக்கின்ற வேதப்பரிகளைத்தூண்டி இமயமலையானதுமற்றமலைகளெல்லாந் தன்னைப்புடைசூழ வெழுந்து செல்வதுபோலமற்றவீரர்களுடைய பரிகளும் ரதங்களும் பின்னிடத்தக்கதாக மனோவேகத்தினும் அதிகவேகமாகச் செலுத்தித்திரிபுரனுடைய சேனை

கட்கெதிரே கொண்டுவந்துநிறுத்தினன். திரிபுரன் அச்சேனைகளி னுடம்பரங்களைக்கண்டு சற்று நடுங்காதவனுகி மேகத்தைப்போலக்க ர்ச்சித்துத் தனது அவுணசேனைகளையெல்லா மழைத்துக்கொண்டுகு மாரர்கட்குந் திரிபுராதிகட்குந் தங்கள் தங்கள் படைகளோடுதனித்த னியே யுத்தஞ்செய்யக்கட்டளையிட்டுத் தானுந்தேரிலேறி அதனைவா யுவேகத்தினும் விரைவாகநடத்திச் சிவபிரானுடையரதத்திற்கெதிரா கக்கொண்டுவந்து நிறுத்தினன். அந்தக்கர்த்தன்பார்த்து தம்மிட த்திருக்கின்ற சத்தவீரர்களுடைய கர்வத்தையழிக்கு நிமித்த மோம ற்றையாது காரணமோ ஓர் நிமைப்போதிற் றிரிபுரன்முதலியசகல ரையுநீறுக்கத்தக்கதெய்வப்படைகள் தம்மிடத்திலிருந்தும்அவனே டியுத்தஞ்செய்யுங் கருத்தினராய்க் கணேசமூர்த்தியை மனதிற்றியா னித்து மேருவில்லைத் தமது திருக்கரத்திற் பிடித்தருளினர். அவு ணர் பெருமானுகிய திரிபுரனும் அக்கணேசமூர்த்தியைத் தியானித் துத்தனது வில்லைக்கையி லேந்தினன். பின்னரிருவருந்தும்பைமா லைசூடிக்கொண்டு விற்களில் நாணேற்றி உடல்குழைய வளைத்துவிர லாற் றெறித்துத் தொனிசெய்தார்கள். தொனிசெய்தமாத்திரத்தில் அஷ்டகுலா சலங்களு நடுங்கின சத்த சாகரங்களுந் தளும்பின பூமி களெல்லாம் பிளந்தன அண்டங்க ளெல்லாங் கிழிந்தன. விருக்ஷ ங்களெல்லாம் விழுந்தன. பறவைக ளெல்லாமடிந்தன. சர்ப்பங் களெல்லாங் கலங்கின. உடுக்களெல்லா முதிர்ந்தன. அஷ்டதிசை களுமழிந்தன தெய்வலோக மனைத்துந் திடுக்குற்றன. நாகலோக மனைத்து நடுக்குற்றன.

இவ்வாறு மாறி மாறி நாணைத்தெறித்துத்தொனிசெய்து இருவர் கைகளு மோயாமல் அளவற்ற அம்புமாரிகளை ஒருவர்மீ தொருவர் சொரிந்தார்கள், சுப்பிரமணியரோடு பிரசண்டனெதிர்த்தான். நந் திதேவரோடு சண்டனெதிர்த்தான். இந்திரனேடுதிரிபுரன்மந்திரி யெதிர்த்தான். சயந்தனேடு மதனென்பவ னெதிர்த்தான். புட்பத ந்தனேடு காலகூடனென்பவன் தனதுபொன்கோட்டையைச் செலு த்திக்கொண்டு வந்தெதிர்த்தான். வீரபத்திரருடனேவச்சிரதமிஷ் டிரனென்பவன் தனது இருப்புக் கோட்டையைச் செலுத்திக்கொ ண்டு வந்தெதிர்த்தான். இலக்கருடனே வீமகாயனென்பவன் தன து வெள்ளிக் கோட்டையைச் செலுத்திக்கொண்டுவந்துஎதிர்த்தான் புருசுண்டியுடனே மற்றவீரர்களெல்லா மெதிர்த்தார்கள். கண்ட ன்முதலியபடைத்தலைவர்களோடுதிரிபுரன்படைத்தலைவர்களெதிர்த்

தார்கள். இவ்வாறுஒருவரோடொருவர் கைகலந்து போர்செய்யுஞ் சமயத்தில் பூதவீரர்களெல்லாம் அவுணவீரர்களோடெதிர்த்து வாள்களைவீசுவார்களும் கணைகளைவிடுவார்களும் வேலாயுதங்களையெறிவார்களும் யானைக்கூட்டங்களையெல்லாம் அவைகளை நடத்துகின்ற பாகரோடுவிழும்படியாக வெதிர்ப்பார்களும் இரதங்களையெல்லாமுறிப்பார்களும் குதிரைகளையெல்லாமடிப்பார்களும் பதாதிகளையெல்லாங்கண்டதுண்டமாகச் சிதைப்பார்களும் ஆகியிருந்தார்கள். அவுணவீரர்களும் அப்பூதவீரர்கள்செய்யும்போரினைபார்த்து விழிகளில் தீப்பொறிகள்சிதறத்தக்கதாகக்கோபித்து அளவற்றதேர்ப்பாகர்களையுஞ்சின்னபின்னமாக்கிச் செயவுச்சாகத்துடன் ஆர்ப்பரித்துக்கொடிதூக்குவார்களும் பலபாணவருஷங்களைப் பிரயோகித்து அவ்வவர்கள்விற்களைஒடித்துத் தள்ளுவார்களும் தங்களைத்தாங்கள்புகழ்ந்து வெஞ்சினத்தோடு பேசுவார்களுமாகியிருந்தார்கள். இவ்வண்ணமாக இருதிறப்படைகளும் ஒருவரோடொருவர்கலந்து போர்புரியுங்காலையில் சிலர்தாளறுந்தவரானார்கள். சிலர் இடையொடிந்தவரானார்கள். சிலர் குடல்சரிந்தவரானார்கள். சிலர்தலைகிழிந்தவரானார்கள். சிலர்வலியுற்றவரானார்கள். சிலர் நகையற்றவரானார்கள். சிலர் கைகுறைந்தவரானார்கள். சிலர்தோள்முறிந்தவரானார்கள். சிலர் முடிவிழுந்தவரானார்கள். சிலர் மொழியிழந்தவரானார்கள். சிலருக்கு ரிணங்கள்சொரிந்தன. சிலருக்குத் தசைகள்சரிந்தன. சிலருக்கு ஈழைகளுதிர்ந்தன. சிலருக்குக்கண்டமொடிந்தன சிலருக்குச்செவிகளறுந்தன சிலருக்குவிழிகள்பிதுங்கின சிலருக்கு ஈரலொதுங்கின சிலருக்குவீரமொழிந்தன அளவற்றகவந்தங்களாடல்செய்தன அளவற்றபேய்கள் பாடல்செய்தன அளவற்றபருந்துகள் கூட்டங்கூடின அளவற்றநாய்நரிகள்ஓட்டஞ்செய்தன இவ்வாறளங்கும் உதிரவெள்ளத்தோடுநிறைந்திருக்கின்ற யுத்தகளமானது எவ்வாறிருந்ததெனில் பூமிதேவியானவள் அளவற்றபிணங்களையேந்திக்கொண்டு நிருத்தமாடுவதைப்போலிருந்தது இவ்வண்ணம் பூதப்படைகள் அவுணப்படைகளையெல்லாம் அதப்படுத்துகையில் தாருகன்சிங்கமுகன் சூரபன்மனென்னுமூவருமே ஒருருவாகத்தடித்துவந்தவனைப்போன்ற மகாபராக்கிரமசாலியாகிய பிரசண்டனனவன் தன்படைவீரர்களையெல்லாங் கூட்டிக்கொண்டு சுப்பிரமணியக்கடவுளையெதிர்க்க உடனேசுப்பிரமணியக்கடவுளானவர்தமதுமயில்வாகனத்தைவட்டமாயோட்டிவில்லினாணேற்றிவளைத்துக்கடையுகத்தி

ற்பெய்கின்றமேகம்போலளவற்ற பாணவருஷங்களைப்பொழிந்து அரைக்கணப்போதில் அப்பாதகனுடைய சேனைகளெல்லாமடித்து அவன்விடுகின்றகணைகளெல்லாம் நிலத்துக்கிரையாக்கி அவன்வில்முதலிய படைகளையுந் தேரையும் பொடியாகச்செய்து தேவர்களெல்லா நடுங்கச்செய்கின்ற அவன்மாயைகளனைத்தையு நாசஞ்செய்துதமது ஐந்துபாணங்களால் அவனுயிரைநாசமாக்கினார். பிரளயகாலத்திலுண்டாகின்ற பிரசண்டமாருதத்திற்கொப்பான சண்டனென்பவனை நந்திதேவரெதிர்த்து அவன்படைகளையெல்லாங் கண்டதுண்டமாக்கி ஓர் நொடிப்போதில் அவன்செய்கின்ற போரையெல்லாங் குன்றச்செய்து தமது மூன்றுபாணங்களைவிட்டு அவனுயிரைக்கொன்றார், பறவையைப்போலத் தனது பொன்கோட்டையோடு மெழுந்து ஆகாயமார்க்கமாய்ப்பறந்து போர்செய்கின்றகாலகூடனைப் புட்பதந்தரெதிர்த்து அவன்விடுகின்ற பாணங்களையெல்லாம்விலக்கித்தமதுதேரையும் அந்தரமார்க்கமாகச்செலுத்தி ஐந்துபாணத்தால் அவனுயிரைப்பொடிபடுத்தினார் வெள்ளிக்கோட்டையோடு விரைந்துவந்துபோர்செய்கின்றவீமகாயனை இலக்கரென்பவரெதிர்த்து அவனோடும் அளவற்றயுத்தங்களைச்செய்து அவன்படைகளையெல்லாம் அதப்படுத்திப்பின்னர் அவனுடலிலிருந்து உதிரவெள்ளம்பெருகும்படியாகத் தமது நாலுபாணங்களை விட்டுநாசமாக்கினார், இரும்புக்கோட்டையைச்செலுத்திப் போர்செய்யவந்த வச்சிரதமிட்டிரனை வீரபத்திரக்கடவுளெதிர்த்து இனிமேமது யுத்தமில்லையென்று அவுணசேனைகளெல்லாங் கலங்கும்படியாகத் தமதுதேரை அவனுக்குநேராகச்செலுத்தி நாலுபாணங்களை விடுத்து அவனுயிரைப்பானஞ்செய்தனர் இந்திரனைவன்திரிபுரன்மந்திரியோடெதிர்த்து அளவற்ற போர்களைச்செய்து அவன்படைகளையெல்லாங்கொன்று தனதுவச்சிராயுதத்தால் அவன்சிரசையறுத்தெறிந்து வெற்றிமாலை சூடிக்கொண்டனன். சயந்தனைவன் மதனென்பவனையெதிர்த்து அவன்விடுகின்ற படைகளையெல்லாமுறித்துச் சேனைகளனைத்தையுஞ் சின்னபின்னப்படுத்தித் தனதுவாளினலவன் சிரமுருளும்படிவெட்டினான். புருசுண்டியென்பவர்மற்றையவீரர்களையுங்கண்டன்முதலியசேனைத்தலைவர்கள் திரிபுரன்சேனைத்தலைவர்களையுமெதிர்த்துப்போர்செய்து அவர்சரீரங்களையெல்லாங்கழுகுபருந்து முதலானவைகட்கு விருந்தாட்டினார்கள்.

இப்பால் மகமேருவைவில்லாகவுடைய எமதுகர்த்தரானவர்திரிபுரனேந்தியிருக்கின்ற வில்லைத்துண்ட துண்டமாக்கி அவனைப்புடைசூழ்ந்திருந்த அவுணவீரர்களையெல்லாம் அரைக்கணத்தில் நாசஞ்செய்தனர், உடனே திரிபுரன் மற்றொருவில்லையெடுத்துவளைத்து அண்டகடாகங்களு மதிரும்படியாகச் சத்தித்துத் திருமாலை இடபமாகவூர்ந்தருளிய சிவபெருமானுடையரதத்தின்மீது ஒரு நொடிப்போதில்நூறு ஆயிரம் பதினாயிரம் கோடியென்னுங்கணக்கினு மளவுபடாத அளவற்றபாணங்களைப்பொழிந்தனன். அவைகளையெல்லாமெமதுகடவுளானவர் இமைப்போதில்விலக்கித் தமதுமேருவில்லிலளவற்ற கணைகளைத்தொடுத்து அப்பாதகனுடைய கிரீடம் கவசம் வில் தூணி தேர் உதவித்தேர் முதலான எல்லாச் செருக்கையும் பொடியாக்கித் தும்சப்படுத்தினார் பின்னர் திரிபுரனானவன் வேனிற்காலத்து ஒதியமரம்போல ஆயுதமுதலான சகலவாதரவுகளு மற்றுமிக்கநாணத்தோடு நின்றான். இப்படி நிற்கின்றவனை என்னையடிமையாகவுடைய சிவபெருமான்பார்த்து திரிபுரனே இன்னும் எம்மோடுசெய்யத்தக்க யுத்தங்கள் யாதேனுமிருக்குமாயின் அதனை அப்பாற்சென்றுயோசித்து விரைவில்வந்து செய்யக்கடவையென்றுதிருவாய்மலர்ந்தனர். அச்சமயத்தில் திரிபுரனானவன் தனது மைந்தர்முதலிய அளவற்றசேனைகள் மடிந்தார்களென்று கேள்விப்பட்டு ஊழிக்காலத்திலுண்டாகின்ற வடவானலத்தைப்போலக் கொதித்துப் பெருமூச்செறிந்து தனது கிலேசங்களையெல்லாம்போக்கி வீராவேசங்கொண்டு முப்புரங்களையும் வருவதாகநினைத்தனன். அப்படி நினைக்குமுன்னமே அவைகள்விரைந்துவர அம்மூன்றினு மூன்றுபேர்களாக வடிவெடுத்துப்புகுந்து சிவபெருமானுக்கெதிராகச் செலுத்திக்கொண்டுபோவான். மீட்டும் அவைகளோடெழுந்து ஆகாயத்திற் பறப்பான் அங்கிருந்து சமுத்திரங்களிற்குதிப்பான் அவ்விடம்விட்டு, அட்டதிசைகள் தோறும் பாய்வான் அவைகளினின்றுபூமியிற்பாய்வான் பூமியிலிருந்து பாதலத்திற்பாய்வான் மீளவுமெழுந்து வந்து மாற்றாருடைய மனத்திலுங்கண்ணிலும் பாய்வான், இவ்வாறு எங்கும்பாய்ந்துவருகின்ற கொடுமையினாலே பதினாலுலோகங்களும் பயந்தன அண்டகடாகங்க ளெல்லா நடுங்கின தேவர்களெல்லாங் கலங்கினார்கள் சொர்க்கலோக நாகலோகமுதலிய அளவற்றலோகங்களெல்லா மதிர்ந்தன சிவபெருமானுந் தமது தேரைநடாத்திக்கொண்டு அவன்பாய்கின்ற விடங்கள்தோறுந் தாமும் பாய்

ந்து அவன்செய்கின்ற மாயைகளையெல்லாமாய்த்து அளவற்றநாள்யுத்தஞ் செய்துகொண்டிருந்தனர் இவ்வண்ணம் நெடுநாள் வரையிலெமது கர்த்தன்போர் புரிந்திருப்பதைத் தேவர்களெல்லாம் பார்த்து மனந்துவண்டு யாவருமொன்றாகக்கூடி ஐயோ நமது சிவபெருமான்தம்மை வணங்கிப்பிரார்த்தித்தவர்கட்கு இமைப்போதிற்றமதுதிருமேனியைக்கேட்கினுங்கொடுத்தருளுகின்றவ ராதலால்ஒருவேளை இத்திரிபுரன்பணிந்துஇன்னும்பலவரங்களைக்கேட்பானாயின்அவைகளைக்கொடுத்தாலுங் கொடுப்பாரோ வென்றுபயந்து யாவருங் கர்த்தனிடத்தில் வந்து சாஷ்டாங்கமாகச் சேவித்து ஓ தீனதயாளுவே நொடிக்கு முன்னே சகல லோகங்களையு நீறு செய்யத்தக்க சுவாமிகள் இத்திரி புரனுடனே நெடுநாள் தமதருமைத் திருக்கரத்தி லாயுதங்களைச் சுமந்து யுத்தஞ்செய்யத் திருவுளங் கொண்டிருப்பதைப்பார்க்கின் ஈதொரு திருவிளையாட் டேயன்றி வேறில்லை சுவாமிகள்திருமேனியை யிடைவிடாது தரிசிப்பதனாலே அவனு மகாதவத்தினை யுடையவ னாயினன் சுவாமிகளவனோடு நீடித்து யுத்தஞ்செய்வதைப்பார்த்து யாங்கள் சகித்திரோம் சுவாமிகளடியேங்கண்மீது கிருபை வைத்து விரைவில் அவனைச்சங்கரித்து யாங்களெல்லாங்கண்டு தரிசிக்கும் படியாகத் தமது திருமேனியில் வாகைமாலைதரித்தருள வேண்டு மென்று பிராத்தித்தார்கள். இடப்பாகத் தமர்ந்திருக்கின்ற உமாதேவி யாரும் அவ்வாறே விண்ணப்பஞ் செய்துகொண்டனர். அதற்குச் சிவபிரான் ஈஸ்வரியைப் பார்த்து பெண்ணே முன்னொரு காலத்தில் நீகாணும் படியாகக் காளியோடுவாதுக்காடினது போல இத்திரிபுர னுடைய பராக்கிரமத்தினை நீகாணும் பொருட்டு இதுகாறு மவனோடு யுத்தஞ் செய்தனம், இனி அவனையும் அவன் திரிபுரங்களையும் யாமழிக்கின்றதைப் பார்க்கக் கடவையென்றுதிருவாய்மலர்ந்து கணேசமந்திரத்தைஉச்சரித்து,தமதுதிருக்கரத்தில் முத்தலைச்சூலத்தையெடுத்தனர். உடனே யாவருந்திரிபுரமும்பலியும்வெந்து நீறானதைக்கண்டார்களேயன்றி, அச்சூலமிவ்வாறுசென்றதென்று ஒருவருங்கண்டதில்லை.

இப்பால் சிவபிரான்செய்த யுத்தவலங்காரத்தை அந்தரவாசிகளாயிருந்து தரிசித்தமுனிவர்கண்முதலாயினோர் அளவற்றகளிப்படைந்து இத்திரிபுரன்தேவர்களைவென்ற வெற்றிகொள்ளவல்லபராக்கிரமசாலியேயாயினும் தன்னின்மிக்காரோடு மெதிர்க்கச்செல்வது முறைமைதானோ ஆயினும் யோகியர்க்குயோகியாகியும் போகியர்க்

குப்போகியாகியுமிருந்து சகலசீவராசிகளையுநடிப்பிக்கவல்ல ஏகநா
யகனாகிய நமதுசிவபெருமானே இத்தன்மைத்தான போரினைச்செய்
து காட்டாராயின்போர்முகத்தினின்று யூகமாதிகளைக்கிரமப்படிவகு
த்து விதியோடியுத்தஞ்செய்வதற்கு யாவர்க்கும்விளங்காதாகையால்
அவற்றினைநமதுகர்த்தனால் விளக்கிக்காட்டுமாறு, இத்திரிபுரமொரு
முன்னிலையாகவிருந்தனவென்று துதித்தார்கள். சிவகணங்களெ
ல்லாமாரவாரித்துச் சந்தோஷித்தார்கள். தேவர்கள்புஷ்பவருஷஞ்
சொரிந்தார்கள். பிரமன்விண்டுமுதலாயினோர்நமது துன்பமின்று
நீங்கியதென்று ஆனந்தசாகரத்தின்மூழ்கினார்கள். சிவபெருமான்
விட்டசூலமானதுமீட்டுந் திரும்புவதன்முன்னர் திரிபுரன்கர்த்தன்
திருவடிகளில்வந்து அயிக்கியமாயினன். அன்றுமுதல் யெமதுகர்
த்தனைத் திரிபுராரியென்னுநாமத்தால் யாவருந்துதிப்பதாயினார்கள்.
அமர்க்களத்தில்மடிந்த பூதகணங்கள்மீது சிவபிரான்கடைக்கண்பா
ர்வைசெய்தலும் அவைகளனைத்துமெழுந்துவந்து கர்த்தன்றிருவடி
களில் சாஷ்டாங்கமாகச்சேவித்தன. பின்னர் கர்த்தன்மீட்டுங்கை
லாயவரையைச்சேர்ந்து தம்மைத்தொழுகின்ற அடியவர்கட்கெல்லா
ந்திருவருள்சுரந்துகொண்டிருந்தனர். திரிபுரனைத்தகனஞ்செய்ததி
னத்தில் விண்டுமுதலியதேவர்களெல்லாஞ் சிவபெருமானுக்குத் தி
ருவிழாநடத்தித் தங்கள்தங்கள் பதவிகளைச்சேர்ந்தார்கள். திரிபுர
ன்முத்தியடைந்தது புரட்டாசிமாதப்பூரணையாதலால்அத்தினத்தை
யாவரும் பாகுளியென்றுவழங்குகின்றார்கள். வருடந்தோறுமத்தி
னத்தில் யாவரேனுஞ்சிவபிரானுக்குத் திருவிழாச்செய்தாலும் அவ்
வவர்கள் சத்திக்கேற்றவண்ணம் அருச்சனைமுதலானவைகளைநடாத்
தினாலும் நெய்யாலாயினுந் தயிலத்தாயினுந் திருவிளக்கேற்றிவைத்
தாலும் அவர்களை எக்காலத்தினுந் தீவினையணுகாது. இவ்வாறொ
ரு சிவபுண்ணியமேனுஞ்செய்யாராயின் திரிபுரனற்றேவர்களெவ்வ
ளவுதுன்பமடைந்தார்களோ அவ்வளவு துன்பத்தையடைவார்கள்.
இதனைச் சத்தியமாகஎண்ணக்கடவீர்கள். அன்றியும் அத்தினத்திற்
பிராதக்காலையிலெழுந்து நித்தியநியமங்களைமுடித்துச் சிவபெருமா
னையன்போடுபூசிப்பார்களாயின் அவர்கட்கு முற்பிறவியிற் செய்த
பாவங்களெல்லாமொழியும் உச்சிகாலத்தி லாராதிப்பார்களாயின் அ
ம்முற்பிறவியினோடு இம்மையிற்செய்த பாவங்களெல்லாமொழியும்
மாலைக்காலத்தில் வந்திப்பார்களாயின் ஏழுபிறவிகள்தோறுஞ் செய்

து முற்றிய பாவங்களெல்லாமொழிவதன்றி அவ்வவர்களிச்சித்த சகலபொருள்களும்வந்து கைகூடும்.

கசு - வது - விமலருபாசித்தபடலம்

முற்றிற்று.

—*—

## பதினேந்தாவது

## உமையம்மையுபாசித்தபடலம்.

சமூலமேவிய திரிபுராவழிதரத்கவத்தீர்
விமலரத்திமாமுகனைப் போற்றியவிதமிங்
கமைவினேதிஎம் சதுர்த்தியின் விரதநன்கறிந்தே
யுமையவள்தொழுதேத்திய திறத்தினையுரைப்பாம்.

ஓசவுனகாதிமுனிவர்களே சிவபெருமான் விநாயக மூர்த்தியை வந்தித்துத் திரிபுரதகனஞ்செய்த வரலாற்றினைச் சொன்னேம் இப்பால் உமையம்மையுபாசித்த திறத்தினைச் சொல்லுவோங்கேட்பீராக. முன்னொருகாலத்தில்பிரமன் குமாரர்களில்ஒருவனாகிய தக்கனென்பவன் அரியதவங்களைச்செய்து சகலலோகநாயகியாகிய உமாதேவி தனக்குப் புத்திரியாகிவரவும் தேவர்கண்முதலாயினோர் தனதாணையைக்கடவாமல் நடந்துகொள்ளவும் இன்னு மிவைமுதலிய அளவற்றவரங்களைப்பெற்றுச்சகலசெல்வங்களையும் அநுபவித்து மிகவும் பிரசித்தனாகி வாழ்கின்றநாளையில் உமாதேவி தனக்குப் புத்திரியாகிவர அவ்வம்மனைச்சிவபிரானுக்குத் திருக்கல்யாணஞ்செய்துகொடுத்துப் பின்னரொருநாள் கைலாயத்திற்சென்று கர்த்தன் சந்நிதானத்தை யடைந்தபோது மருமகனாகியசிவபெருமான் தன்னைக்கண்டவுடனெழுந்து மரியாதைசெய்யவில்லையென்னுங்கோபத்தோடு அவ்விடத்தினின்றுநீங்கித் தன்னரண்மனையைச்சேர்ந்து கர்த்தனை நிந்தித்து அவரினுந்தானுயர்வடையவேண்டுமென்னுங் கருத்தினோடு விண்டுவாதி சகலதேவர்களையும் வரவழைத்து அவர்கள் முன்னிலையில் ஒருயாகத்தைநடத்துவதானான். அதனை யெளை தன்னையாகிய பார்வதியார்கேட்டுச் சிவபெருமானிடத்தில் விடைபெற்றுச் சென்று தம் குரவர்களாகிய தக்கனையும் வேதவல்லியையுங்கண்டு வந்திக்க அதற்கவர்கள் சற்றும்போற்றுதல்செய்யாது நிந்தனைசெய்தார்கள். உடனே உமாதேவிக்கு அதிககோபமுண்டாகி இந்தயாகசாலை பேய்வினையாடுஞ் சுடலையாகக்கடவதென்று சபித்து மீட்டுங் கைலாயவரை

யைச்சேர்ந்து தக்கன்செய்துவருங்கொடுமை யிவ்வாறென்று சிவபி ரானுக்கறிவித்தலும் அவருக்குக்கோபமுண்டாகி அக்கோபாக்கினி யினின்றும்வீரபத்திரக்கடவுள்தோன்ற அவ்வாக்கர்த்தன்பார்த்தரு ளி நீரிங்கிமிடத்திற்சென்று; தக்கன்மகத்தை யழித்துவருவீரென்று கட்டளையிட அவர்அவ்வாறேசென்றுஅங்குவந்திருக்கின்ற சகலரையு நாசஞ்செய்துமீட்டுந்திரும்பியமாத்திரத்தில் சிவபிரானுக்குக்கிருபை சுரந்து யாகத்திலிறந்தவர்களெல்லாம் பிழைப்பித்து இனிதுஷ்கி ருத்தியங்கட் குடன்படாதிர்களென்று கட்டளையிட்டு அவ்வவர்கள் பதவிகளிற்செல்ல விடைகொடுத்துப் பின்னர்தக்கனருகில்வந்து அ வன்தம்மை நிந்தைசெய்தவனாதலால் அதற்கோர்அபராத அடையா ளமாக ஆட்டுத்தலையை யவனுடலிற்பொருத்தி யெழுந்திருக்கும்படி ச்செய்தார். இப்பால் பார்வதிதேவியார் அவையனைத்தையும் பார் த்துச் சிறிதுகோபந்தணிந்து நமதுநாயகரைநிந்தித்ததக்கனுக்கு நாம் புத்திரியானோமென்றுஉலகம்பழிக்குமாதலால் அப்பாதகனால்வளர் க்கலுற்ற சரீரத்தைவைக்கலாகாதென்று மனவருத்தமுற்று தமது யோகாக்கினியினாற்றேகத்தைவிடுத்து பர்வதராசனுடையதபோபல த்தினாலும் மேனைசெய்ததருமவிருத்தியினாலும் அவர்கட்குக்குமாரி யாகத் திருவவதாரஞ்செய்து நாளுக்குநாள் வளர்பிறைபோலவளர்ந் துபந்துகழங்குஊஞ்சல்முதலியதிருவிளையாடல்களைச்செய்து பற்ப லவேதாகம சாஸ்திரங்களைப்பயின்றுவருங்காலத்தில்சிவபெருமான் கங்கையைக் கல்யாணஞ்செய்து கொள்வதன்முன்னர் தம்மைச்செய் துகொள்ளவேண்டுமென்னுங் கருத்தினோடு தந்தையாகிய பர்வதரா சனையடைந்து தமதெண்ணத்தை யறிவித்து, இதுநிறைவேறத்தக்க ஓர்விரதத்தை யுணர்த்தவேண்டுமென்று வினவ அதனையம்மலையர சன் கேட்டலு மனமகிழ்ந்து அதற்குத்தக்கபடி ஓர்விரதத்தையாரா ய்ந்துணர்ந்து இதனைச் சொல்லுவதாயினன். தாயேமிக்கசிறப்பை யுடையதும் விரைவில்நற்பயன்களையளிப்பதும் இந்திரன்சாபத்தை நீக்கியதும் பிரமனாதியர்க்குஞ்சிருட்டியாதி தொழில்களைத் தந்ததும் சகலவிடர்களையு நீக்கத்தக்கதும் சகலதுன்பங்களையும் போக்கத்தக் கதும் சகலபகைகளையு மொழிக்கத்தக்கதும் சகலபொருள்களையு ம ளிக்கத்தக்கதும் இன்னுமிவைமுதலானஅளவற்றமகிமைகளையுடை ய ஒரு விரதமிருக்கின்றது. அவ்விரதம் தேவதேவோத்தம ராகியு ம்மூவர்முதல்வராகியும்முத்தொழிற்காரணராகியு மிருக்கின்றயானை முகக்கடவுளுடையசதுர்த்திவிரதமாகும். இத்தன்மைத்தாகியமே





லாவ்விரதத்தை யனுட்டிப்பீராயின் நீர் கருதியவண்ணம் உடனே சித்திக்குமாதலால் அதனையனுட்டிக்கு முறைமையையுஞ் சொல்லுவேன் கேட்பீராக:

ஆவணிமாதம் பூர்வபட்சத்தில் வருகின்ற சதுர்த்தி தினத்தில் அவ்விரதத்தை யாரம்பிக்கவேண்டும். அவ்வண்ண மாரம்பிப்பவர்கள் அத்தினம் அதிகாலையிலெழுந்து ஸ்நானஞ்செய்து நித்தியவனுட்டானங்களை நிறைவேற்றி அபிடேகத்திற்குரிய திரவியங்களையும் அருச்சித்தற்கேற்ற மலர்களையும் நிவேதனத்திற்குத்தக்க பதார்த்தங்களையும் தூபதீபங்கட்கு வேண்டும்பொருள்களையுஞ் சேகரித்து ஓர் பூசாமண்டபத்தை யழகுபொருந்தச்சமைத்து பரிசுத்தமானவிடத்தில் மிருத்திகை யெடுத்துவந்து அதில்வேர்கள் செல்லுமுதலியசெந்துக்கள் கல்லுகள் என்னுமிக்குற்றங்களில்லாமல் சோதித்து அதனைப்பிசைந்து சிற்பசாத்தாத்திற் கூறியிருக்கின்ற முறைமைப்படி விநாயகமூர்த்தியினுடைய திருவுருவஞ் சமைக்க வேண்டும். இதுவன்றியும் பொன்னினிலொருதிருவுருவமுஞ் சமைக்கவேண்டும். செய்யச்சத்தியில்லாதவர்களாயின் ஒருபலம் அரைப்பலம் காற்பலமென்னுமிவ்வித அளவிலேனுஞ் சமைத்தல்வேண்டும் பின்னர் ஆசிரியருத்தரவின்படி சுத்தகங்கையில் ஸ்நானஞ்செய்து திருவெண்ணீறணிந்து சிரம்கண்டம் மார்பு கரம் செவி என்னு மிவ்விடங்களில் உருத்திராக்ஷகண்டிகை தரித்து மேற்சொன்ன பூசாமண்டபத்திற்குவந்து தண்டுலம்பரப்பி அதன்மேல் இழைசுற்றி நீர்நிரப்பியிருக்கின்ற பொற்கும்பத்தை வைத்து முன்னர் சமைத்திருக்கின்ற மிருத்திகைமூர்த்தியையும் பொன்மூர்த்தியையும் அதனருகிலெழுந்தருளச் செய்து ஆகமவிதிப்படி பூசித்து ஒன்று இரண்டு நான்கு ஐந்து ஆறு எட்டு பத்து பன்னிரண்டு இருபத்தெட்டென்னு மெழுத்துக்களுள்ள மந்திரங்களுள், ஒருமந்திரத்தைச்செபிக்கவேண்டும். இவற்றுள் ஒன்று இரண்டு நான்கு என்னுமெழுத்துக்களுள்ள மந்திரங்களை இலக்ஷ உரு செபிக்கவேண்டும். அதற்குக்கூடாமையாயின் அவ்வெண்ணிற் பாதியுருவேனுஞ் செபிக்கவேண்டும். ஐந்து ஆறு எட்டு பத்து பன்னிரண்டு என்னு மெழுத்துக்களுள் மந்திரங்களை நூறாயிரமுருசெபிக்க வேண்டும். அதற்குக் கூடாமையாயின் பதினாயிரமுருவேனுஞ் செபிக்கவேண்டும். இருபத்தெட்டெழுத்துள்ளமந்திரத்துக் குறைவில்லாமற்பதினாயிரம் உருசெபிக்கவேண்டும். இவ்வாறெக்குங்காலையில் பத்துக்கொருகால் தருப்பணஞ் செய்யவே

ண்டும் பத்துத்தருப்பணத்திற் கொருகால் ஒரு ஓமஞ்செய்ய வேண்டும் பத்துஓமத்திற்கொருகால் அறுசுவை பதார்த்தங்களோடு அன்னதானஞ்செய்யவேண்டும் இந்தக்கிரமமாகப் பூஜைசெய்து நிறைவேறுங்காலத்தில் பொன்பூமி முதலானவைகளைத் தானஞ்செய்யவேண்டும் அடுத்தமாதஞ் சுக்கிலபக்ஷ சதுர்த்திவரையில் நாள்தோறுமேற்சொல்லிய முறைமைப்படி பூசைசெய்து மிருத்திகையினால் செய்யப்பட்ட விநாயகமூர்த்தியை நிருத்தகீதவாத்தியங்களோடு மெழுந்தருளச்செய்து மடுவிலாவது தடாகத்திலாவது நதியிலாவது வைத்துவிடவேண்டும்.

இவ்வாறு பூசைசெய்கின்ற முப்பதுநாளும் ஆகார நித்திரையில்லாமல் சத்தாதிவிஷயங்களை நிக்கிரகித்து முப்பத்தோராநாள் விருந்து ஒக்கல் அதிதிகள் பரதேசிகள்முதலானவர்களோடு போசனஞ்செய்யவேண்டும் முப்பதுநாளும்ஆகாரமின்றியிருக்கச்சத்தியில்லாதவர்கள் இவ்விரதத்தையாரம்பிக்குமுதல் நாளிலாவது அவ்வாறிருந்து மறுநாள்தொட்டு அவிசு பழம் பால் இவைகளிலொன்றைப்புசித்துக்கொண்டு விரதமனுட்டிக்கவேண்டும். முப்பதுநாள்அநுட்டிக்கமாட்டாதவர்கள் ஆரம்பித்தஒருநாள் மாத்திரமாவதுஆகாரமுதலியவைகளை நிக்கிரகித்து மேற்சொன்ன முறைப்படி யநுட்டிக்க வேண்டும். தானஞ்செய்யு முறைமையில் அவ்வவர்கள் செல்வத்திற்குத்தக்கபடி செய்யவேண்டும். எவ்விதத்தேனும் இருபத்தொருபேருக்கு அன்னதானஞ் செய்துவரல்வேண்டும். அன்றியும்ஒருருவத்திற் பூசிப்பவர்கள் தனதான்னியபுத்திரசம்பத்துண்டாகி அநேகபந்துவர்க்கங்களோடும்வாழ்ந்திருப்பார்கள். இரண்டுருவங்களிற்பூசிப்பவர்கள் தங்கள்கருத்தின்படி அளவற்றகாரியங்களெல்லாஞ்சித்தியாகப்பெறுவார்கள். மூன்றுருவங்களிற் பூசிப்பவர்கள் நவரத்நங்களுமலைபோலக்குவிந்திருக்கப்பெறுவார்கள். நான்குருவங்களிற்பூசிப்பவர்கள்தருமமுதலிய நான்குபுருஷார்த்தங்களுங் கிடைக்கப்பெறுவார்கள். ஐந்துருவங்களிற்பூசிப்பவர்கள் சார்வபௌமராகவாழ்வார்கள்; ஆறுருவங்களிற்பூசிப்பவர்கள் சிருட்டியாதிமுத்தொழில்கட்குந் தலைவராவார்கள், ஏழு எட்டு ஒன்பது என்னுமிவ்வுருவங்களிற்பூசிப்பவர்கள் சர்வஞ்ஞத்துவமுடையவராவார்கள் பத்துவடிவங்களிற்பூசிப்பவர்கள் நிகழ்காலம் இறந்தகாலம் எதிர்காலம் என்னுந்திரிகாலஞானத்தையுடையவராவார்கள், இந்தப் பத்துருவங்களிற்செய்யும் பூசாபலத்தினால் சனகாதிமுனிவர்களும் விண்டுவாதிதேவர்களும் அளவற்றஅதிகாரங்களைப்பெற்றார்கள், பதினொருருவங்களிற்

பூசிப்பவர்கள் ஏகாதசருத்திரர்கட்கு மதிகாரியாவர்கள், பன்னிரண்டுருவங்களிற்பூசிப்பவர்கள் சகலதுன்பங்களுந்தொலையப்பெறுவார்கள். பன்னிரண்டுமுதல் நூற்றெட்டுருவங்கள்வரையிற் பூசிப்பவர்கள் ஒன்றுக்கொன்றுமேலான பயன்களையெல்லாங் கிடைக்கப்பெறுவார்கள். ஆயிரவுருவங்களிற்பூசிப்பவர்கள் இம்மையில் மலவிருளினின்றுநீங்கி மெய்ஞ்ஞானசுகத்தைப்பெற்று வாழ்வதன்றி மறுமையில்மோட்சசாம்பிராச்சியத்தையடைந்துதங்களேழ்தலைமுறைகளிலுள்ளவர்களையு முத்தியிற்சேர்ப்பார்கள், மேலும் ஏழுமூர்த்திகளைமூன்றுநாள்பூசைசெய்தால் சகலபிணிகளும்இடர்களுந்தொலையும், ஒன்பதுநாள்பூசைசெய்தால் அனந்தசித்திகளுமுண்டாகும் ஐந்துவருடம்வரையிற்பூசித்தால் எல்லாப்பாதகங்களுந்தீரும் இடைவிடாது அந்தியகாலம்வரையிற்பூசித்தால்விநாயகமூர்த்தியினுடையசாயுச்சியபதவியையடைவார்கள், இவ்வாறு அவ்வவர்கள் சத்திக்கேற்றபடி எத்தனைமூர்த்திகளிற்பூசித்தாலும் அப்பூசனையில் மூலமந்திரம் ஏகாட்சரமந்திரம் சடாட்சரமந்திரம் என்னும் இம்மூன்றிலொன்றைச்செபித்து முடிவில் தருப்பணஞ்செய்து தம்பதிபூசையுஞ் செய்யவேண்டுமென்றுஞ் சொல்ல. அவையனைத்தையும் பார்வதிதேவியார்கேட்டு மனமகிழ்ந்து இவ்விரதத்தை முன்னர்யாவரனுட்டித் திருக்கின்றார்களென்று கேட்கப் பர்வதராசன்சொல்லுவான்.

தாயே-முன்னொருநாள் சகலதேவர்களும் புடைசூழ்ந்துவணங்கத்தக்கதாகச்சிவபெருமான் கைலாயத்திலெழுந்தருளி யிருக்கின்றபோது சுப்பிரமணியக்கடவுள் அச்சந்நிதானத்திற்குவந்து கர்த்தனைப்பலமுறைவந்தித்து, விண்ணப்பஞ்செய்ததாவது சுவாமி - அளவற்ற விரதங்களுள்மேலான விரதமாகவும் விரைவில்சகலபயன்களையு மளிக்கவல்லதாகவும் மிகவுஞ் செவ்வையானதாகவுமிருக்கின்ற ஓர் விரதத்தை அடியேற்குத்திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்ன அதற்குக்கர்த்தன் கிருபைசுரந்து மைந்தனே-சகலவிரதங்கட்கு மேலானது விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்திவிரதமாகும், அது வேண்டினைத்தகாரியங்களைவிரைவில்முடிக்கத்தக்கது அதுவே யாதினும் செவ்வையா யிருப்பதென்றுசொல்லலும், அதனைச்சண்முகக்கடவுள் கேட்டு-சுவாமி-ஒன்றிருக்கமற்றொன்றைத் தேவரீர்திருவாய்மலர்ந்தருளியது அடியேன் சிறுபிள்ளையென்றுநினைத்தோ, அல்ல

து அதுவேசத்தியந்தானே ஆதிமத்தியாந்தரகிதமாயிருக்கின்றதேவரீர் விரதங்கள் அளவற்றதாகவிருக்கின்றன அவற்றுளொன்றனை யநுக்கிரகஞ்செய்யாமல் விநாயக மூர்த்தியினுடைய விரதத்தையே மேலானதாகத்தெரிவித்தீர் அவ்விநாயகமூர்த்தி அடியேனுக்கு மூத்தவராயினும் தேவரீர்க்கவர்புத்திரரல்லவோ சகலபுவனாதாரசொரூபியாகிய தேவரீரினும் அவர்மேலானவராயிருக்கின் சுவாமிகளநுக்கிரகித்தவாறு அவர் விரதமும் மேலானதாகவேயிருக்கும் ஆதலால் அடியேன் மனத்திற்கொண்ட சந்தேகத்தை நிவிர்த்திசெய்தருளுமென்றுபணிந்து பிரார்த்தித்துக்கொண்டார். அதற்குச் சிவபெருமான்சந்தோஷித்து குழந்தாய் யாம்சொன்னது சத்தியமே யாகும் அஃதெவ்வாறெனில் ஒன்றாகியும்-பலவாகியும்-அருவாகியும்-உருவாகியும் எல்லாவுலகத்திலும் நீக்கமற்று நிறைந்திருக்கின்றதுவென்றுஞ் சோதிஸ்வரூபமே, யாமெல்லாம் உய்யும்படியாகவும் சகலபுவனங்களுந் தமது சரணபங்கயங்களைத் தொழுதுமுத்தியடையும் படியாகவும்பிரணவத்தினின்றுஞ் சுகளீகரித்து கணபதியென்னுந் திருநாமத்தை வகித்திருக்கின்றது. மேலும் அக்கணபதிமூர்த்தியே முன்னர்யாம் திரிபுரத்தை யெரிக்கத்தக்கமந்திரத்தை யெமக்குபதேசித்தவர். அவரேசிருட்டி திதி சங்காரமென்கின்ற முத்தொழில்களைப் பிரமன் விண்டு உருத்திரனாகிய எங்கண்மூவருக்கும் அருளிச்செய்தவர். இவ்வுலகத்தில் துஷ்டசனநிக்கிரகஞ் சிஷ்டசனபரிபாலனஞ் செய்யும் பொருட்டு அனந்தமுறை வேறு வேறு திருவவதாரங்களைக்கொண்டிருக்கின்றனர். மற்றோரவதாரத்தில் நமக்குப்புத்திரராக அவதரித்திருக்கின்றனர். யாங்களிருவரும் உடலுமுயிரும் போலமருவியிருத்தலினால் சகலவேதாகமபுராணங்கள்எங்களிருவோரையும்ஒன்றாகச்சொல்லுமேயன்றி வேறுபடுத்தாது. எங்களைத்தியானிக்கின்றபெரியோர்களும் அவ்வாறேதியானிப்பார்கள். ஆதலால்- அவ்விநாயகமூர்த்தியே மேலானமூர்த்தி. அவரது சதுர்த்திவிரதமேமேலான விரதம். அவ்விரதத்தை யனுட்டிப்பவர்கள் யாவரேயாயினும் அவர்கட்கு-மாயாசம்பிரதம்-தத்துவசம்பிரதம்- யோகினிசாலம்-மாலினிவித்தை-மகாசம்மோகனம்-மநோபேதம்-தந்திரபேதம்-குய்யதந்திரம்-கலாவாதம் - கலாசாரம்-குண்டிகாமதம்-அஞ்சனவித்தை- பாதுகை-பானபாத்திரம்-பரகாயப்பிரவேசம்-இரசவாதம்-பைபீலவாதம்-





சங்கிராமவிலக்கணம் () முதலியஎல்லாவித்தைகளுங்-கைகூடிவரும் அச்சதுர்த்திவிரதமன்றி சங்கடசதுர்த்தியென்று மற்றொருவிரதமுண்டு. அஃதெல்லா நன்மைகளையும் எளிதிற்றரவல்லதாகும். மைந்தனே- விநாயகக்கடவுளுடைய மகத்துவம் இத்தன்மைத்தாகும். மேலும்-அவருடைய சிறந்தவிரதங்களை யனுட்டிப்பதினாலும், அவருடைய திருவவதார மூர்த்திகளைப் பூசிப்பதினாலும், அவரது திருவுருவங்களை மனதிற் றியானிப்பதினாலும் அவர் திருவடிகளைத் துதிசெய்வதினாலும் அளவற்றபேர்கள் இருவினைகளினின்று நீங்கிமும்மலங்களையு மொழித்து, நான்குபயன்களையு மடைந்திருக்கின்றார்கள். என்றுசிவபெருமான் சுப்பிரமணியருக்குபதேசித்ததாக உமாதேவிக்குப் பர்வதராசன்சொன்னான்.

இப்பால் உமாபரமேஸ்வரியார் அவையனைத்தையுஞ் செவிகுளிரக்கேட்டுத், தந்தையாகிய பர்வதராசனைப்பார்த்து யானிவ்விரதத்தை அநுட்டிக்குமாறு வேண்டியதிரவியங்களையெல்லாஞ் சேகரிக்கவேண்டுமென்று திருவாய்மலர்ந்தருள அதனைப்பர்வதராசன்கேட்டு மனமகிழ்ந்து ஏவலாளர்களைக்கூவி அவ்வவர்கட்கு வேறுவேறுபணிகளையிட்டனன். உடனே அப்பணிகளைச்சிரமேற் கொண்டுசிலர்தெய்வலோகத்திற் சென்று கற்பகமலர்களும் பலவிதத்தளிர்களும் உண்டிகளுங் கொண்டுவந்தார்கள். சிலர்பற்பலதீபங்களிற்சென்று ஆங்காங்கிருக்கின்றஅளவற்ற அற்புதப்பொருள்களைக்கொண்டுவந்தார்

() இவற்றுள் மாயாசம்பிரதம், ஓரிடத்தில்ஊர்போலவனம்போலமலைபோல நதிபோலத் தோற்றுவித்தல். தத்துவசம்பிரதம், ஒருபூதத்தில் ஒருபூதந்தோற்றுவித்தல். யோகினிசாலம், மயானத்திலுபாசித்து யோகினிகளைக் காண்பித்தல். மாலினிவித்தை, சமுத்திரங்கடக்கச்செய்தல். மகாசம்மோகனம், விழித்திருக்கின்றவர்களைமெய்மறந்து நித்திரைகொள்ளச்செய்தல். மனோபேதம், மனத்தைப்பேதிக்கச்செய்தல். தந்திரபேதம், ஓரிடத்தும் வெளிப்படாத மந்திரத்தை வெளிப்படச் செய்தல். குய்யதந்திரம், வெளிப் பட்டதைமறைப்பித்தல். கலாவாதம், மன்மதவித்தை. கலாசாரம், வருணத்தைஅதிகரிக்கப்படுத்துதல். குண்டிகாமதம், குளிகையினாலே இளமை அடைதல். அஞ்சனவித்தை, மறைபட்டபொருளைக்காண்பித்தல். பாதுகை, செருப்பைத்தொட்டுநினைக்கில் நினைத்தஇடத்தில்விடுத்தல். பானபாத்திரம் ஒருகரகத்தில்நினைத்தபானமெல்லாந்தருதல், பாகாயப்பிரவே
ம் பிராணனில்லாத உடம்பிலே புகுதல். இரசவாதம் உலோகத்
தைப் பேதிக்கச்செய்தல். பைபீலவாதம், எறும்புகளின்பேச்சறிதல்.
லக்கணம். போர்வித்தைஎனவறிக.



கள். சிலர்பூவுலகத்திற்சென்று அனந்தபுதுமையான வஸ்துக்களைக் கொண்டுவந்தார்கள். சிலர்பாதலத்திற்சென்று அங்கிருக்கின்றமாணிக்கமுதலிய திரவியங்களைக் கொண்டுவந்தார்கள். சிலர்உவர்க்கடல்நீரொன்றுதவிரமற்றஎல்லாக்கடல்நீரோடு, சக்கரவாளகிரிக்குஅப்பாலிருக்கின்றபெரும்புறக்கடல்நீரையும் மகாபரிசுத்தத்தோடுகொண்டுவந்தார்கள். சிலர்கங்கைகாவிரிமுதலியஅளவற்றதீர்த்தங்களைமங்கலவாத்தியங்களோடும் கொண்டுவந்தார்கள். சிலர்பரிமளம்வீசுகின்றமலர் மொக்குகளும் இளந்தளிர்களும் அறுகுகளும் வன்னிமுதலிய பத்திரங்களுங்கொண்டுவந்து ஆராய்ந்து வைத்தார்கள். சிலர்கோத்தமாலை - கொத்துமாலை-தொடுத்தமாலை-சுருக்குமாலை-கட்டுமாலை-அரும்புமாலை-முதலாகியமாலைகளைச்செய்து பூக்குடலைகளில்நிரப்பினார்கள். சிலர்சொர்னத்தினல் ஓர்மண்டபஞ்சமைத்து அதில் நவரத்நங்களையிழைத்த பற்பல மணிமாலைகளாலும் மலர்மாலைகளாலும் அலங்கரித்தார்கள். சிலர் தூண்கள்தோறும் வாழைகமுகுகன்னல் இவைகளைநாட்டி அவைகளினுச்சியில் தாழைநாரத்தை தாதுமாதளையென்னு மிவற்றின்குலைகளோடு பற்பலபழவருக்கங்களையு மாலையாகக்கோத்துத் தொங்கவிட்டார்கள் சிலர்விதானங்களை உயரத்தூக்கி அழகிய தூண்கடோறுநவரத்நங்கள் நிறைத்திருப்பனபோலகொடிகளைக்கட்டினார்கள். சிலர் அக்கினிதேவனுக்குறைவிடமாகிய ஒமகுண்டத்தையமைத்தார்கள் சிலர் புழுகுசந்தனம் பனிநீராதிகளைக்கலந்து மெழுகிப், பரிமளப்புகைகளையூட்டினார்கள். சிலர்சுவர்கள்தோறும் வண்ணிறந்தசித்திரங்களை யெழுதினார்கள். சிலர்சாந்து கொண்டுமெழுகியிருக்கின்ற நிலத்தின்மீது கடுகுநெல் புட்பம் அறுகுமுதலியவைகளைநிரப்பினார்கள். சிலர் முத்து நீலம்பச்சை பொன்முதலியவைகளைப் பொடிசெய்தெடுத்துக்கோலங்களிட்டார்கள். சிலர் சொர்ணபாத்திரங்களைச்சுத்திசெய்து பரிசுத்தப்படுத்தியிருக்கின்ற இடங்கள்தோறும் விதிப்படிவைத்தார்கள்.

இவ்வாறுயாவர்களும் பணிசெய்திருக்கச் சகலபுவனேஸ்வரியாகிய பார்வதியார் தெய்வகங்கையிலாடிப் பூசாமண்டபத்தில் வந்து திருவெண்ணீறு உருத்திராக்கமுதலியவைகளையணிந்து சிரசாதிபாதம்வரையில் நியானஞ்செய்து ஆசமனம்புரிந்து பிராணயாமத்திலிருந்து பூதசுத்திமுதலானவைகளைநடாத்தி (ஏவங்குணவிசேஷணவிசிஷ்டாயாம், சுபதிதௌ, அஸ்மாகம்ஸகுடும்பானும், க்ஷேமஸ்தைர்யவிஜயாயுராரோக்யைஸ்வர்யாணு முத்தரோத்தராபிவ்ருத்யர்

த்தம், தர்மார்த்தகாமமோக்ஷசதுர்வித பலபுருஷார்த்தசித்யர்தம், ஸ்ரீசித்திவிநாயகதேவதாமுத்திஸ்ய, ஸ்ரீசித்திவிநாயகப்ரீத்யர்த்தம்கல்போக்தப்ரகாரேணத்யாநு வாஹநாதிஷோடசோபசார பூஜாங்கரிஷ்யே) என்றுசங்கற்பங்கூறி, சந்தனமரத்தாலாகிய ஓர்வேதிகையை வைத்து, அதன்மீது தண்டுலம்பரப்பியொர்ன்னவஸ்திரமொன்றைவிரித்து அதன்மீது இழைசுற்றி நீர்நிரப்பியிருக்கின்றபொற்கும்பத்தைஸ்தாபித்துஅதில் அத்தித்தளிர்-ஆலந்தளிர்-அரசந்தளிர்-மாந்தளிர்-நாவற்றளிர்-என்னும்ஐவகைத்தளிர்களோடுசுகந்தி-பொன்-மாகதம் மாணிக்கம்-முத்துஎன்னும்பஞ்சரத்நங்களையும்பெய்துஅதற்குச்சந்தனம் புஷ்பம் - அக்ஷதை-முதலானவைகளைத்தரித்து (கலசஸ்யமுகேவிஷ்ணுகண்டேருத்ரஸமாஸ்ரித-மூலேதத்ரஸ்திதோப்ரம்ஹ மத்யேமாத்ர கணாஸ்மிர்தா, குக்ஷௌதுசாகராஸர்வே-ஸப்தத்வீபாவசுந்தரா-ருக்வேதோதயசுர்வேத சாமவேதஅதர்வண அங்கைஸ்சஸஹிதாசர்வே-கலசாம்புஸமாஸ்ரித அயேந்துகணேசபூஜார்த்தம்- துரிதக்ஷயகாரக, கங்கேசயமுனேசைவ-கோதாவரிஸரஸ்வதி-நர்மதேசிந்துகாவேரி-ஜலேஸ்மின்ஸந்திங்குரு) என்று கும்பபூஜைசெய்து அக்கும்பத்திற்கு மேற்றிசையில்யந்திரமிட்டு அதன்மீது தெய்வகம்மியர்களால் சொர்ணத்தினாலும் பிருதிவியினாலும் செய்துவைத்திருக்கின்ற இரண்டுமூர்த்திகளில் சொர்ணமூர்த்தியை யெழுந்தருளச்செய்து நவரத்னங்களாலாகிய மற்றொருவேதிகையின்மீது பிருதிவிமூர்த்தியை யெழுந்தருளச்செய்து சங்குமுதலிய பூஜாகருவிகளைச்சுத்திசெய்து கங்கைமுதலிய தீர்த்தங்களைவைத்திருக்கின்ற பாத்திரங்களில்-குங்குமம்-பச்சைகற்பூரம்-புட்பம்-அறுகு முதலியவைகளோடு பற்பலபரிமளத்திரவியங்களையும் பெய்து, மணிவட்டிகைகளைப் பரப்பி அவைகளில் ஜலம்- அரிசி-பால்-தருப்பைநுனி-மலர்-வெண்கடுகு-நெல்-எள் - முதலிய திரவியங்களை விதிப்படியமைத்து அருக்கியம் பாத்தியம்-ஆசமனம்-என்னும் மூவகைநீர்களையும் மந்திரபூர்வகமாகஉண்டாக்கி கரத்திற்புஷ்பமும் அக்ஷதையுங்கொண்டு (த்யாயேத்கஜானனம்வேதம் - தப்தகாஞ்சனஸந்நிபம்-சதுர்ப்புஜம் மஹாகாயம் ஸர்வாபரணபூஷிதம், தண்டாக்ஷமாலாபரசு - பூர்ணமோதககாரிணம்-பாசாங்குசதரம்தேவம் - த்யாயேத்ஸித்திவிநாயகம், ஸ்ரீசித்[illegible]ாயகாயநமஃ-தியாணம்ஸமர்ப்பயாமி) என்றுசிந்தித்து (விநாயக[illegible]ந்து-கௌரீமலஸமுத்பவ- இமாம்க்ருதாம்மயாம்பூஜாம் க்[illegible]பக, ஸ்ரீகணநாயகாயநம-ஆவாஹனம்ஸமர்ப்பயாமி)

என்று ஸ்தாபனஞ்செய்து (மௌக்திகை புஷ்பராகஸ்ப - நாநாரத்நவிராசிதம்-திவ்யவிம்ஹாசனம் சாரு-ப்ரீத்யர்த்தம்ப்ரதிக்ருய்ஹதாம், ஸ்ரீவிநாயகாய்நம-ஆஸனம்ஸமர்ப்பயாமி) என்றுபீடமிட்டு (அர்க்யம்க்ருஹாண தேவேச-கணாதிபகஜானன-கந்ததூர்வாக்ஷதைர்யுக்தம்-கங்காஜலமிதம்சுபம், ஸ்ரீகஜாநனாயநம-அர்க்யம் ஸமர்ப்பயாமி, கௌரிபுத்ரநமஸ்தேஸ்து-சங்கரப்ரியநந்தன - பக்த்யா பாத்யம்மயாதத்தம்-க்ருஹாண்சுரசத்தம், ஸ்ரீகௌரீபுத்ராய்நம - பாத்யம்சமர்ப்பயாமி-அநாதநாதசர்வேசகீர்வாணசுரபூசித - நிர்மலம் கந்தஸம்யுக்தம் க்ருஹாணசமனம்விபோ ஸ்ரீஸர்வேசாயநம - ஆசமனீயம்ஸமர்ப்பயாமி) என்று அருக்கியம்பாத்தியம் ஆசமனங்கொடுத்து (ததிக்ஷீரஸமாயுக்தம்- மத்வாஜ்யேனஸமன்விதம் மதுபர்க்கம் க்ருஹாணேதம் கஜவக்த்ரநமோஸ்துதே, ஸ்ரீகஜவக்த்ராயநம - மதுபர்க்கநைவேத்யம்ஸமர்ப்பயாமி) என்று தேன்கலந்த பால்பழமுதலியவைகளைக் கொடுத்து (ஸ்நானம்பஞ்சாம்ருதைர்திவ்ய-குந்ஷ்வசுரஸத்தம-பக்த்யார்துப்யம் மயாதத்தம்- விக்நராஜநமோஸ்துதே, ஸ்ரீவிக்னராஜாயநம-பஞ்சாம்ருதஸ்நானம் ஸமர்ப்பயாமி, கங்காதிஸர்வதீர்த்தேப்யு-ஆனீதைர்நிர்மலைஸ்சுபை-வாஸிதைருதகைர்தேவ ஸ்னபயாமிகஜானன, ஸ்ரீகஜாநனாயநம-சுத்தோதகஸ்நானம்ஸமர்ப்பயாமி) என்று ஐயமுதத்தையும் கங்கைமுதலிய திவ்யதீர்த்தங்களையும் ஸ்நானஞ்செய்வித்து (ரக்தவஸ்த்ரம்த்வயம்தேவ - கௌரீபவபவப்ரபோக்ருஹாணேதம்மயாதத்தம்-விக்னராஜநமோஸ்துதே ஸ்ரீவிக்னராஜாயநம-வஸ்திரயுக்மம்ஸமர்ப்பயாமி) என்று இரண்டு பீதாம்பரங்களையுடுத்தி (உபவீதம்ப்ரம்மசூத்ரம் ப்ரம்ஹணாநிர்மிதம்புரா - நாகயக்ஞோபவீதேதம்க்ருஹாணகணநாயக, ஸ்ரீகணநாயகாயநம யக்ஞோபவீதம் ஸமர்ப்பயாமி) என்று பூணூல்தரித்து (சந்தனகருகர்ப்பூரம்ருகநாபிஸமன்விதம் - கந்தம்தாஸ்யாமிவிக்னேஸஸர்வாபீஷ்டப்ரதாயக ஸ்ரீவிக்னேஸாயநம கந்தாந்தாரையாமி) என்று திருமேனிமுழுவதுஞ் சந்தனத்தையப்பி) அக்ஷதான்தவளாம் சுப்ரான்-ஹரித்ராமிஸ்ரிதானபி-மயாஸமர்ப்பிதான்தேவ-க்ருஹாணத்விரதானன. ஸ்ரீ ஸர்வாபீஷ்டப்ரதாயகாயநம- அட்சதாம்ஸமர்ப்பயாமி) என்றுமஞ்சளரிசி-பொற்சுண்ணம் பூந்தாது- முதலியவைகளை அதன்மீதட்டி (சுகந்தீனி சுபுஷ்பாணிஜாதிகுந்தமுகானிஸ ஏகவிம்சதிபுஷ்பாணி-க்ருஹாணத்வம் விநாயக ஸ்ரீவிநாயகாயநம புஷ்பாணிபூஜையாமி) என்று மலர்களைச்சாத்தி.

ஓம் கணேசாயநமஃ பாதௌபூஜையாமி
ஓம் விக்கினராஜாயநம ஜானுநீபூஜையாமி
ஓம் ஆகுவாஹநாயநம ஊரும்பூஜையாமி
ஓம் ஏரம்பாயநம கடிம்பூஜையாமி
ஓம் தேவதேவாயநம நாபிம்பூஜையாமி
ஓம் லம்போதராயநம உதரம்பூஜையாமி
ஓம் கணநாயகாயநம இர்தயம்பூஜையாமி
ஓம் ஸ்தூலகண்டாயநம கண்டம்பூஜையாமி
ஓம் ஸ்கந்தாக்ரஜாயாநம ஸ்கந்தௌபூஜையாமி
ஓம் சதுர்ப்புஜாயநம புஜௌபூஜையாமி
ஓம் பரசுஹஸ்தாயநம அஸ்தான்பூஜையாமி
ஓம் கஜவக்திராயநம வக்த்ரம்பூஜையாமி
ஓம் விக்னஅந்திரேநம நேத்திரேபூஜையாமி
ஓம் சூர்ப்பகர்ணயநம கர்ணௌபூஜையாமி
ஓம் ஏகதந்தாய்நம தந்தம்பூஜையாமி
ஓம் குமாரகுருவேநம சிரம்பூஜையாமி
ஓம் சர்வேஸ்வராயநம சர்வாங்காநிபூஜையாமி

என்று-பாதம்-முழந்தாள் தொடை-நிதம்பம்-நாபி-வயிறு - இதயம்-கண்டம் கழுத்தடி-தோள்-உள்ளங்கை-நாசி-கண்-காது- தந்தம்-சிரம்-சர்வாங்கம்-என்னு மிப்பதினெ றிடங்களினும் அங்கபூஜை செய்து.

ஓம் சுமுகாயநம மாசிபத்ரம்பூஜையாமி
ஓம் கணதிபதயேநம் பிர்ங்கிராஜபத்ரம்பூஜையாமி
ஓம் உமாபுத்ராயநம வில்வபத்ரம்பூஜையாமி
ஓம் கஜானனயநம தூர்வபத்ரம்பூஜையாமி
ஓம் லம்போதராயநம் பத்ரீபத்ரம்பூஜையாமி
ஓம் அரசுனவேநம துத்தூரபத்ரம்பூஜையாமி
ஓம் கஜகர்ணயநம துளசிபத்ரம்பூஜையாமி
ஓம் குகாக்கிரசாயநம கரமஞ்சரிபத்ரம்பூஜையாமி
ஓம் ஏகதந்தாயநம புரஅதிபத்ரம்பூஜையாமி
ஓம் கஜவக்திராயநம சமிபத்ரம்பூஜையாமி
சுராக்ரகண்யாயநம தேவதாரபத்ரம்பூஜையாமி
ந்ராயநம மருவபத்ரம்பூஜையாமி
ம கரவீரபத்ரம்பூஜையாமி

ஓம் விநாயகாயநம — துருமோற்பலபத்ரம்பூஜையாமி
ஓம் கபிலாயநம — அர்க்கபத்திரம்பூஜையாமி
ஓம் பின்னதந்தாயநம — அர்ச்சுனபத்ரம்பூஜையாமி
ஓம் பத்னிஹீனாயநம — விஷ்ணுகிராந்திபத்ரம்பூஜையாமி
ஓம் வடவேநம — தாடிமபத்ரம்பூஜையாமி
ஓம் சூர்ப்பகர்ணயநம — ஜாசீபத்ரம்பூஜையாமி
ஓம் மூஷிகவாகனயநம — கண்டலேபத்ரம்பூஜையாமி
ஓம் சர்வசித்திப்ரதாயகாயநம — ஏகவிம்சதிபத்ராணிபூஜையாமி

என்று மாசிப்பத்திரம்-காசாரங்கனி-வில்வம் - அறுகு-இலந்தை ஊமத்தை-துளசி-நாயுருவி-சிறுவழுதி-வன்னி-மந்தாரை-மருவு- அலரி-கோங்கு-வெள்ளெருக்கு-மருதம்-விஷ்ணுகிராந்தி-மாதுளை - சாதிமல்லி-தாழை-என்னுமிவ் விருபத்தொரு பத்திரங்களால் அருச்சித்து.

ஓம் விநாயகாயநம
ஓம் விக்னராஜாயநம
ஓம் கணநாதாயநம
ஓம் கஜானனாயநம
ஓம் மகோதராயநம
ஓம் மகாதேவாயநம
ஓம் ஸ்னித்காஞ்சனஸமத்யுதயேநம
ஓம் ஏகதம்ஷ்ட்ரோத்கடாயநம
ஓம் தேவாயநம
ஓம் கஜவக்த்ராயநம
ஓம் மகாபலாயநம
ஓம் நாகயக்ஞோபவீதினேநம
ஓம் நாகாபரணபூஷிதாயநம
ஓம் ஸர்வார்த்தஸம்பதாதாராயநம
ஓம் கணாத்யக்ஷாயநம
ஓம் வரப்ரதாயநம
ஓம் ருத்ரஸ்யதன்யாயநம
ஓம் உதாராயநம
ஓம் நாயகாயநம
ஓம் ப்ரமதாதிபாயநம
ஓம் பத்மராகத்வதயேநம
ஓம் ஸோமாயநம
ஓம் ரக்தமால்யானுலேபனயநம
ஓம் அபலாயநம
ஓம் பாலரூபிணேநம
ஓம் சுமுகாயநம
ஓம் சூர்ப்பாயநம
ஓம் ப்ரபவேநம
ஓம் புண்யாயநம
ஓம் பூர்ணாயநம
ஓம் பூர்ணேநராயநம
ஓம் புண்யகீர்த்தயேநம
ஓம் புராதனாயநம
ஓம் பர்த்ரேநம
ஓம் சிவாயநம
ஓம் சாந்தாயநம
ஓம் ஜகந்நாதாயநம
ஓம் சாஸ்வதாயநம
ஓம் ஸ்வேதபரிதானாயநம
ஓம் த்ரயக்ஷாயநம
ஓம் கனகசுப்ராயநம
ஓம் சிவஸாம்யாயநம

ஓம் மகாதேஜஸேநம
ஓம் மகாபலபராக்ரமாய்நம
ஓம் ஸர்வக்ஞாயநம
ஓம் க்ஞானசம்பன்னாயநம
ஓம் ஸர்வாபரணபூஷிதாய்நம
ஓம் பாபாபனோதனாயநம
ஓம் சண்டவிக்ரமாயநம
ஓம் அலக்ஷ்மீமலநாசனாயநம
ஓம் குமாராயநம
ஓம் காரணாயநம
ஓம் காரிதாயநம
ஓம் ஸர்வசித்திப்ரதாய்காயநம
ஓம் விபவேநம
ஓம் ஈசாயநம
ஓம் ஈசபுத்ராயநம
ஓம் ஈஸ்பிதார்த்தப்ரதாய்கார்ய்நம
ஓம் ஸ்ரீதாயநம
ஓம் சுபாயநம
ஓம் ஏகதந்தாயநம
ஓம் ஏகவீராயநம
ஓம் அநேகதாயநம
ஓம் ஏகஸ்மைநம
ஓம் ஏகப்ரதேநம
ஓம் விஸ்வப்ரதேநம
ஓம் விஸ்வபூஜேநம
ஓம் விஸ்வஸ்மைநம
ஓம் விஸ்வக்ஞாயநம
ஓம் ஸர்வபாவனாயநம
ஓம் பாக்யதாயநம
ஓம் பவதாயநம
ஓம் பாகினேநம
ஓம் போக்தாயநம
ஓம் போகபாவனாயநம

ஓம் கவயேநம
ஓம் கார்யாயநம
ஓம் கர்ணாயநம
ஓம் கர்த்ரேயநம
ஓம் க்ரதவேநம
ஓம் க்ருதினேநம
ஓம் க்ருத்யவிதேநம
ஓம் அத்யுக்ராயநம
ஓம் காந்ததர்சிநேநம
ஓம் க்ருதாந்தகாயநம
ஓம் ஸ்துத்யாயநம
ஓம் ஸ்தோத்ரேநம
ஓம் ஸ்தோகாயநம
ஓம் ஸ்தோத்ராயநம
ஓம் த்ரயீமயாயநம
ஓம் வேதாயநம
ஓம் வேதாந்தக்ருதேநம
ஓம் வேத்யாயநம
ஓம் விதுஷாம்புத்திதாயநம
ஓம் புதாயநம
ஓம் ஓங்காராயநம
ஓம் ப்ரம்ஹவிதேநம
ஓம் ப்ராம்ஹணாயநம
ஓம் ப்ரம்ஹணேநம
ஓம் ப்ரம்ஹபராயநம
ஓம் பராயநம
ஓம் ஸர்வக்ஞாயநம
ஓம் ஸக்ததயேநம
ஓம் ஸர்வலோகவேத்யாயநம
ஓம் ஸர்வதாயநம
ஓம் சுபகாயநம
ஓம் அவ்யயாயநம
ஓம் சித்திவிநாயகாயநம

என்று அஷ்டோத்தரசததிவ்ய நாமபூஜைசெய்து,(தசாங்கம்குங்
'மூத்தமம்கணநாயக-க்ருஹணகணராஜேந்த்ர-விக்னஹா

ரின்னமோஸ்துதே, ஸ்ரீகணநாயகாயநம- தூபமாக்ராபயாமி-ஸர்வக்ஞசர்வலோகேச. ஸர்வபூதஹிதேரதா- க்ருஹாணமங்களம்தீபம்- ருத்ரப்ரியநமோஸ்துதே-ஸ்ரீசர்வக்ஞாயநம-தீபம்தர்சயாமி - நைவேத்யம்-ஷட்ரஸோபேதம். பலலட்டுசம்யுதம்-மோதகம் பரமான்யம்ச-நமஸ்தேவிக்னநாசன-ஸ்ரீவிக்னநாசனாயநம- நைவேத்யம் ஸமர்ப்பயாமி, தாம்பூலமூத்தமுந்தேவ-க்ருஹாணசுரபூசித-கற்பூரசூர்ணசம்யுக்தம் மயாதத்தமிதம் விபோ ஸ்ரீருத்ரப்ரயாயநம - தாம்பூலம் சமர்ப்பயாமி, ஸதாநந்தனதவிக்னேச புஷ்டலாணிதனுகிச - பூம்யாம்ஸ்திதானிபகவன். ஸ்வீகுருஷ்வவிநாயக, ஸ்ரீவிக்னேசாயநம - ஸ்வர்ணபுஷ்பம் சமர்ப்பயாமி.) என்றுதூபங்கொடுத்துத், தீபங்காட்டி. நைவேத்யஞ்செய்து, தாம்பூலமும் ஸ்வர்ணபுஷ்பமுங்கொடுத்து, (விக்னராஜநமஸ்துப்யம்-பாபக்ஞானபரஞ்சன புனரக்யம் ப்ரதாஸ்யாமி - க்ருஹாணசுரசத்தம - ஸ்ரீவிக்னராஜாயநம புனரர்க்யம் ஸமர்ப்பயாமி) என்றுஅர்க்யங்கொடுத்து.

ஓம் கணதிபாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் உமாபுத்ராயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் அகநாசாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் விநாயகாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் ஈஸ்வரபுத்ராயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் விக்னராஜாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் ஏகதந்தாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் இபவக்திராயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் ஆகுவாகனாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் குமாரகுருவேநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் சுமுகாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் சுராக்கிரகண்யாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் ஸ்தூலகண்டாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் குகாக்ரசாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் லம்போதராயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் பின்னதந்தாயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் விசாலாக்கினேநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் காமரூபியேநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் பாலசந்த்ராயநம தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி
ஓம் சர்வசித்திப்ரதாயகாயநமஏகவிம்சதிதூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி

என்று சந்தனத்திற்றோய்த்த இரண்டிரண்டு அறுகினால் இந்த
இருபத்தொரு திருநாமங்களையுஞ்சொல்லி அருச்சித்து(நமஸ்தேதே
வதேவேச - நமஸ்தேகணநாயக, நீராஞ்சனம் ப்ரயச்சாமி - ப்ரஸ
ன்னோபவமேப்ரபோ, ஸ்ரீதேவதேவாயநம - நீராஞ்சனம் ஸமர்ப்ப
யாமி) என்று ஆலத்திசுத்தி ( ஆகுவாகனதேவேச -விஸ்வவ்யாபின்
கஜானன-ப்ரதக்ஷிணம்-கரோமித்வாம் - மமத்வம் ஸங்கிதிம்குரு ஸ்ரீ
ஆகுவாஹனாயநம ப்ரதக்ஷிணம் சமர்ப்பயாமி ) என்று வலம்வந்து
(நமஸ்தேகஜவக்தராய-நமஸ்தேகணநாயக - நமஸ்தே தேவதேவேச
கௌரீபுத்ரநமோஸ்துதே, ஸ்ரீகௌரீபுத்ராயநம, நமஸ்காரம்ஸமர்ப்
பயாமி) என்றுதீர்க்கதண்டஞ்செய்து(தேவதானவகோடீர - மணிர
ஞ்சித பாதக-க்ஷமஸ்வதேவதேவேச-புத்ராக்னீர் திஞ்சதேஹிமே,
ஸ்ரீகஜவக்த்ராயநமஃ - ப்ரார்த்தனம் ஸமர்ப்பயாமி ) என்று பிரார்த்
தித்து (க்ருதவர்த்திஸஹஸ்த்ரேஸ்ச-கர்ப்பூர சகலஸ்ததா - நீராஞ்
சனம்மயாதத்தம் - க்ருஹாணவரதோபவ ஸ்ரீகணாதிபாயநம - நீராஞ்
சனம் ஸமர்ப்பயாமி ) என்று ஆலத்திசுத்தி ( தேவதேவ கணாத்யக்
ச - சுராசுரவரார்ச்சிதா - அவிக்னம் குருமேதேவ - ஸர்வ கார்யேஷு
துஸர்வதா - விநாயகநமஸ்தேஸ்து ஸததம்மோதுகப்ரய - அவிக்ன
ம் - குருமேதேவ - ஸர்வகார்யேஸ்துஸர்வதா ) என்று க்ஷமாபண
ஞ்செய்து ( ஏவங்குண விசேஷணவிசிஷ்டாயாம் சுபதிதௌ - ஸ்ரீ
சித்தி விநாயகமூர்த்திஸ்ய - ஸ்ரீசித்திவிநாயகப்ரீத்யர்த்தம். ஸ்ரீசித்திவி
நாயக பூஜாஞ்சோபாயனதானங் கரிஷ்யே ) என்று சங்கற்பங்கூறி
சந்தன புஷ்பாக்ஷதைகளைக்கொண்டுப்ராம்மணபூசைசெய்து (கணே
சாப்ரதிக்ருஹ்ணாதி - கணேசோவைத்தாதிச - கணேசஸ்தாரகோ
பாப்யாம் - கணேசாயநமோநம ) என்று வாயனதானஞ்செய்து இ
வ்வாறு எல்லாப்பூசனைகளையுங் குறைவறநடாத்திய பின்னர் ஒருபக்
கத்திலிருந்து விதிப்படியாசஞ்செய்துதியானாதிகளைமுடித்துக்கொ
ண்டு ஓர்மாதமளவும் ஐஞ்ஞூறக்கங்களை நீக்கு அநுட்டிப்பினீற்றினு
ளில் முன்போலவே எல்லாப்பூசனைகளையு நிறைவேற்றித் - தருப்ப
ண ஓமாதிகளைக் கிரமப்படி நடாத்தினார்கள்.

சிலசேடியர்கள் முத்துமாலைகளால் அலங்கரித்திருக்கின்றபங்க
லின்கீழ் கவரி - கொடைமுதலிய சின்னங்கள் விளங்கப் பலவித வா
த்தியவொலியோடு - நெய்ப்பொங்கல் - சுத்தப்பொங்கல் - தயிர்ச்
சாதம் - பாற்சோறு - மிளகோரை - கடுகோரை - இலவங்கோரை
- சர்க்கரைப்பொங்கல் - முதலாகிய சித்திரான்னங்

களும், உளுந்து - சீரகம் - பெருங்காய முதலியவைகளைக் கூட்டிப் பாகப்படுத்தியிருக்கின்ற பூசணிக்காய்க் குழம்பு, மற்றைய காய் கனி - பூ - தண்டு - இலை -கிழங்கு-இவைகளினால் வெவ்வேறாகச்செய்திருக்கின்ற குழம்புகளும், பலவிதப்பொரிக்கறிகளும், பலவிதத்துவட்டுக்கறிகளும், பலவித ஊறுகாய்களும், பலவிதத்துவையல்களும், பலவிதவறையல்களும். பருப்பு, பிட்டு மாவு பொரி முதலாகியபண்டங்களும் பலவிதச்சுண்டல்களும் வெல்லப் பச்சரிசியும் வறுத்தபருப்பும் சர்க்கரை-பயறு-எள்ளு-தேங்காய்முதலியவைகளோடு ஏலமுதலியவாசனை வஸ்துக்களையுங் கலந்து செய்திருக்கின்ற உண்டைகளும் வெவ்வேறுமோதகங்களும். அடை - முறுக்கு-பணியாரம்-அப்பம்-தேன்குழல்-பிட்டு-வடை-இலட்டுகம் - தோசை-முதலியசிற்றுண்டிகளும் மற்றவுணவுகளும், வெள்ளரிக்காய்முதலிய காய்வருக்கங்களும் தெங்கின் கனி பலாக்கனி மாங்கனிவாழைக்கனி முதலிய கனிவர்க்கங்களும்தேன் நெய் - பால் - தயிர்-மோர்-நீர்மோர் - முதலிய அமுதங்களும் - இளநீர்-வெந்நீர்-தண்ணீர்-சர்க்கரை நீர்-கரும்புநீர்-பழநீர்- முதலிய நீர்த்திரவங்களும், ஆகிய இவைகளையெல்லாம்வேறுவேறுதட்டுகள் தாம்பாளங்கள் கிண்ணங்கள் கரகங்கள் முதலிய பலவகைப்பாத்திரங்களில் அமைத்துக்கொண்டுவா அவைகளையெல்லாம் மந்திரபூர்வகமாக நிவேதனஞ்செய்து நீர்விளாவி பாத்தியநீராதிகளையுந்தந்து வாசனைத்திரவியங்கள்சேர்ந்த பாகடை நுகர்வித்து, அகில்-சந்தனம்-கருங்காலி-வில்வம்- அரிச்சுனம்-என்கின்ற பஞ்சதூபங்களைக்கொடுத்து நட்சத்ரதீபம்-ரததீபம் - குடதீபமுதலிய பலதீபங்களைக்காட்டி, கண்ணாடி-குடை-சாமரை-கொடி-ஆலவட்டம்-விசிறி - முதலியசின்னங்களைவழங்கி கணநாதவாவென்னு மனுவைச்சொல்லிமந்திரபுட்பஞ்சாத்தி சியசாதமந்திரத்தால் கற்பூரநீராஞ்சனஞ் சுழற்றி, வலம்வந்துதிருவடிகளில்வணங்கி அன்னதானம்-வஸ்திரதானம்- கன்னிகாதானம் கோதானம் பூதானம்-இரணியதானம்-உபயமுகிதானம்-மகிஷதானம்-அஸ்வதானம் - சுவேதாஸ்வதானம்-காலதானம்-காளாமுகிதானம்-மகமேருதானம்-கற்பகவிருட்சதானம்-வித்தியாதானம்-மகாதானம்- என்கின்றசோடசதானங்களைவழங்கி கணேசமூர்த்தியைத்தமது இதயகமலத்திலிருத்திபொன்னாற்செய்தமூர்த்தியையுங் கும்பத்தையும் பலதிரவியங்களோடு புரோகிதருக்களித்து பிரிதிவிமூர்த்தியைப்பலமங்கலவாத்தியங்களோடு மெழுந்தருளச்செய்து நதியிற்சலவாசமாகவைத்து மீட்டுந் தமது

அரண்மனையைசசேர்ந்து சுற்றத்தினரோடுமிருந்து போசனஞ்செய்து விநாயகமூர்த்தியினுடைய பேரருளைக்கொண்டு, சிவபெருமான் கங்கைக்குமுன்னர் தம்மைவிவாகஞ்செய்து கொள்ளப்பெற்று தமது மனக்கவலைகளை யொழித்திருந்தனர். குறைவற்ற கிருபாநிதியாகிய விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்தி விரதமகத்துவத்தைத் தெருட்டும் இச்சரித்திரத்தைச் சகலருங்கேட்டு மனமகிழும்படி பிரசங்கித்தபுண்ணியசீலர்களும் இச்சரித்திரமுழுவதும் ஆராய்ந்து ஆனந்தபரவசத்தராய்க்களித்தகுணசம்பன்னரும் இதனைவழுவின்றிவாசித்து இதன்பயன்களைத்தெரிந்து மனப்பூரிப்புடனிருக்கின்ற மேன்மக்களும் இப்பூவுலகின்கணிருக்கின்ற பரியந்தம் இலக்குமியையொத்தவனப்பும், அருந்ததியைநிகர்த்தகற்பும், பூமிதேவியை எதிர்த்தபொறுமையும் வாய்ந்தகன்னிகையை மணந்தின்புற்று நன்னெறிகளை யநுசரித்து அரும்புதல்வர்களைப்பயந்து, தனதான்யமுதலிய செல்வங்களையடைந்து அந்தியகாலத்தில்மோட்சமுங் கிடைக்கப்பெற்று நீடூழிகாலம் விநாயகமூர்த்தியினுடைய திருவடிநீழலிற்குடிகொண்டிருப்பார்கள்.

கரு-வது-உமையம்மையுபாசித்தபடலம்-முற்றிற்று.

—*—

பதினாறுவது
சர்த்தமனுபாசித்தபடலம்.

ஞானமேவியநற்றவத்தந்தணீரோனையா
ளானையானனத்தண்ணலையம்பிகையன்பி
னனவாறுபாசித்தமையறைந்தனமணிசேர்
மோனமாமொழிற்கர்த்தமன்றெருழுதிறமொழிவாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே, உமையம்மை விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்திவிரதத்தையநுட்டித்துச் சிவபிரானைத் திருமணஞ்செய்தருளிய முறைமையைச்சொன்னோம் இப்பால் கர்த்தமராசன் அநுட்டித்ததிறத்தைச் சொல்லுவோங்கேட்பீராக. இப்பூவுலகமுழுவதும் ஓரேகொடைநீழலிலிருத்தித் தனது ஆக்ஞாசக்கரத்தைத் திசையெங்கணுமுருட்டிச் சத்துருக்களையெல்லாஞ்செயிக்கத்தக்க புயபராக்கிரமத்தோடு சகலசீவராசிகளுக்கும் ஒருதுன்பமேனுமின்றி அரசாட்சியைநடாத்திவருகின்ற கர்த்தமனென்னுமொரு ராச

னிருந்தான். அவ்வரசனிடத்தில் ஒருநாள் பிருகுமகாமுனிவரெ
ழுந்தருளிவர அவரையவ்வரசன்பெருமகிழ்ச்சியோடெதிர்கொண்டு
வரவழைத்து ஆசனத்திலிருத்தி அன்புடன்பூசித்துகையுறைதந்துவி
சிறிகொண்டுவெயர்வையைமாற்றிக் குளிர்ந்தவுபசாரவார்த்தைகளைப்
பேசிஇளைப்பாற்றிப் பின்னர்மிக்கமுகமலர்ச்சியோடும் இதனைப்பே
சுவதாயினன். எல்லாத்தேவர்களும் ஏவலுக்கெதிர்பார்த்திருக்கத்தக்
கமகாபெருமையினையுடைய ஓதவசிரேஷ்டரே அடியேன்யாதொருவ
ருத்தமின்றி இவ்வுலகமுழுமையும் என்தொருகுடையில்நிறுத்திப்
பகைவர்களையெல்லாம்பகுதிதரவென்று அளவற்றசெல்வத்தை அ
னுபவிக்கின்றேனாதலால் இத்தன்மைத்தாகியசெல்வம் அடியேற்கு
ண்டானது எந்தவதுவினலோ அதனைத்தெரியச்சொல்லவேண்டுமெ
ன்று விண்ணப்பஞ்செய்துகொண்டான். அதனை அத்தவராஜசிகா
மணியாகிய பிருகுமுனிவர்கேட்டு அரசனே - நீ முற்சனனத்தில்
வைசியகுலத்தில் அவதரித்திருந்தனை. ஆயினும் அக்காலத்து நீ
அதிகசெல்வத்தையுடையவனாயிராததால் உனது குலகருமங்களைக்
கைவிட்டனை அதனல் உனதுசுற்றத்தாரெல்லாம் உன்னைவெறுத்து
ப் பலவாறு தூஷித்தார்கள். அத்தூஷணவார்த்தைகளை நீகேட்ட
மாத்திரத்தில் உனக்கு இருசெவிகளுங்கைத்துக் கொடியகாட்டிலே
னுஞ்சென்று உயிரைநீக்கிக்கொள்ளுவோமென்றெண்ணி மனம்வெ
றுத்து வீட்டைத்துறந்து காட்டிற்செல்கின்றபோது அங்கோராசிர
மத்தினைக்கண்டனை. அவ்வாசிரமத்தில் வேதாகமபுராணங்களைவா
சிக்கின்றவர்களும் அவைகளைக்கேட்கின்றவர்களும் பலதவமாதிக
ளைச்செய்து முடிக்கின்றவர்களுமான அளவற்றமுனிபுங்கவர்கள் பு
டைசூழச் சவுபரிமகாமுனிவ ரெழுந்தருளியிருப்பதைக்கண்டு அவ
ருகிற்சென்று சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்துநின்றனை. பின்
னர் அம்முனிவர் உன்வதனத்தைநோக்கி நீ மிக்கமனவருத்தத்துட
ன் இங்குவந்தகாரியமென்னவென்றுவினவ அதற்கு நீ சொன்னதா
வது சுவாமி-அடியேற்கு வறுமைநேர்ந்தகாரணத்தால் சுற்றத்தின
ரெல்லாம்வெறுக்க அதற்கு மனஞ்சகியாதவனாகி நமதுஉயிரைக்காட்
டிற்சென்று கைவிடுவதே உத்தமமென்றெண்ணி வெளிக்கொண்டு
வந்தேன் அவ்வாறுவந்தஎன்னை முற்பிறவியிற்செய்திருக்கின்ற என
துதவப்பயனன்து , தேவரீருடையதிவ்வியசமூகத்திற் கொண்டுவந்
துவிட்டது இனி அடியேற்கென்னகுறையிருக்கின்றதென்றுசொல்
லலும் அவையனைத்தையுஞ் சவுபரிமுனிவர் கேட்டு மிகவுமிரக்க





முற்று உனக்குத்தீட்சைசெய்து விநாயகக்கடவுளுடையமந்திரத்தை யுபதேசித்து அதையநுட்டிக்கு முறைமையுஞ்சொன்னார். அதைநீ யவ்வாறே அநுட்டித்துவருங்காலத்தில் விநாயகசதுர்த்திவந்தது. அத்தினத்தில் அச்சதுர்த்திவிரதத்தை உன்னுடன்கூடவிருந்து ஆகமவிதிப்படி முடிப்பித்தார். பின்னர் அவ்விரத மநுட்டித்தமகிமையினாலே விநாயகக்கடவுளுக்குக் கிருபைசுரந்துஉனது வீடுமுழுவதும் பொன் மணி முதலானசகலபொருள்களும் அளவற்றசெல்வங்களுங் குபேரனுடைய அளகாபுரியைப்போல நிறைந்திருக்கும்படியாகச்செய்தார். அதனைத்தவசிரேஷ்டராகிய சவுபரிமுனிவர்தெரிந்துகொண்டு உனக்கறிவித்து நீவீட்டிற்குச் செல்லும்படியாகக்கட்டளையிட்டனர். உடனே அவருடைய திருவடிகளை வணங்கிவந்தித்துவிடைபெற்றுக்கொண்டு உனது நகர்த்திற்சேர்ந்து அளவற்றபாக்கியங்களோடு நிறைந்திருக்கின்ற வீட்டினையடைந்து முன்னர்வெறுத்த சுற்றத்தினரெல்லாம் எதிர்கொள்ளப் பெருமகிழ்ச்சியை யுடையவனாகி அளவளாவிய போகங்களையநுபவித்திருந்தனை. இக்சணத்திலும் அவ்வாறே யனுபவிக்கின்றாய். இத்தகைஐசுவரியமும்நினைக்குமுன்னமே சகலசித்திகளையு மளிக்கத்தக்கசதுர்த்திவிரதத்தின்மகிமையாதலால் அதனை எக்காலத்துங்கைவிடாது அநுட்டித்துவரக்கடவையென்று திருவாய்மலர்ந்துவிடைபெற்றுத் தமது ஆசிரமத்தையடைந்தனர். பின்னர் கர்த்தமராசன் அளவற்ற ஆனந்தத்தில் மூழ்கி வருடந்தோறும் அவ்விநாயகசதுர்த்திவிரதத்தைஇடைவிடாதநுட்டித்துத் தனதுபுத்திரன்புயத்திற் பூபாரத்தைச்சுமத்திக் கணேசமூர்த்தியினுடைய கருணையால் பேரின்பமுத்தியை யடைந்தான்.

கசு-வது-கர்த்தமனுபாசித்தபடலம் முற்றிற்று,

---

பதினேழாவது

## நளன் உபாசித்தபடலம்.

---

அத்தியானனத் தத்தனையந்தணீர்
கர்த்தமன்றெழு தன்மைகூறினும்
சுத்தமேவு நளனெனுந்தோன்றனற்
பத்தியோடுபாசித்தமைபன்னுவாம்.

---

ஓ சவுனகாதிமுனிவர்களே விநாயகக்கடவுளுடைய சதுர்த்திவிரதத்தைக் கர்த்தமராசன னுஷ்டித்து இம்மையிற் செல்வத்தையும்

மறுமையில் முத்தியையுமடைந்தபேற்றினைச்சொன்னோம் இப்பால் நளராசனனுஷ்டித்த திறத்தைச்சொல்லுவோங்கேட்பீராகவண்டின ங்கள் இசைபாடிமொய்க்கின்ற பூஞ்சோலைகள் சூழ்ந்தநிட தநாட்டில்ந வரத்னசொர்ன்னமயமாயிருக்கின்ற மாடமாளிகைகள் நிறைந்தவிந் தநகரமென்னும் ஒருபட்டணமுண்டு. அப்பட்டணத்தில்தன்னைக் கண்டமாதர்களையெல்லாம் உடனே மன்மதபாணங்கட்கிரையாக்க த்தக்கபேரழகுடையவனாகியும் இரந்தோர்க்கு இல்லையாதளிக்கின்ற வள்ளலாகியும் அளகேசனைமருட்டும்படியான ஐசுவரியத்தையுடை யவனாகியும் எதிர்த்துவருகின்றசத்துருக்களுக்கு இடியேறொத்தவ னாகியும் தருமசாத்திரங்களில் ஆங்கீரசமுனிக்கொப்பானவனாகியும் நளனென்னு மியற்பெயரையுடைய ஓரரசனிருந்தான். அவ்வரச ன்-பதுமவத்தனென்கின்ற அமைச்சனோடுதிசையனைத்தினுந் தன துசெங்கோலைச் செலுத்திச் சகலவுயிர்களையும் பாதுகாத்துத் தமை யந்தியென்னு மனைவியுடன் வாழ்ந்திருக்கின்றநாளையில் அவனிடத் தில் வச்சிராயுதத்தை யேந்திய இந்திரனுக்கு இமைப்போதில்ஆயிர ங்கண்களைத் தந்தகவுதமமுனிவரெழுந்தருளினர். அம்முனிவரை அவ்வரசனெதிர்கொண்டழைத்து வந்து ஓராதனத்தி லிருத்திப்பல வித உபசாரங்களுடன் பூசித்துச் சாஷ்டாங்க வந்தனஞ்செய்து இரு கரங்களையுஞ் சிரமேற் கூப்பி நின்று சுவாமி - அடியேனுய்யுமாறு ஓ ர்விரதத்தைத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரா ர்த்தித்தலும் அம்முனிவர் கிருபைசுரந்து இதனைச் சொல்லுவதாயி னர். அரசனே - நீ முற்சனனத்தில் கற்றவர்களால் புகழத்தக்க க வுடதேசத்திற் கரசனாகிப் பலவின்பங்களையுங் குறைவின்றி யநுபவி த்து அரசியற்றிவருங் காலத்தில் சத்துருக்களையெல்லாஞ் செயித்து அவர்கள்தேசங்களைக் கைவசமாக்கிக்கொள்ளு நிமித்தம்சகலசேனை களோடும் வெளிக்கொண்டு செல்கின்றபோது ஓர்வனத்தின்வழியா கச்செல்ல அவ்வழியில் ஓராசிரமத்தைக் கண்டு அங்கெழுந்தருளி யிருக்கின்ற கவுசிகமுனிவரையடைந்து தேவர்களெல்லாம் வணங்க த்தக்க அவரது திருவடிகளைப் பணிந்தெழுந்து பலவாறு துதித்துநி ன்றனை. அம்முனிவர் கன்றைக்கண்டபசுவைப்போல உன்மீதுகி ருபாநோக்கஞ்செய்து தமது ஞானதிருஷ்டியினால் உனதுவரவைய றிந்துகொண்டு விரைவில் முத்தியளிக்கவல்ல விநாயகக்கடவுளுடை ய சதுர்த்திவிரதத்தை உனக்குபதேசித்து அதை ஆகமவிதிப்படி அ நுட்டிப்பித்தார். பின்னரம்முனிவரிடத்தில் விடைபெற்று உனது

நகரத்தையடைந்து சத்துருக்களையெல்லாம்வென்று சகலதேசங்களையுங்கைவசமாக்கி அளவற்றசிறப்போடும்வாழ்ந்திருந்தனே. அந்தப்புண்ணியபலத்தினுல் இச்சனனத்திலும் அளவற்றபோகங்களையநுபவிக்கின்ருய். ஆதலால் - பொற்கொன்றைசூடிய விநாயகக்கடவுளுடைய சதுர்த்திவிரதமே எல்லாவிரதத்திலுமேலானவிரதமாகும் அவ்விரதத்தையேசதாகாலமுமநுட்டித்துவருவையென்றுசொல்லித் தெய்வலோகத்திற்கொப்பான தமதாசிரமத்துக் கெழுந்தருளினர். பின்னர்நளமகாராசன் வருடந்தோறும் அவ்விரதத்தையநுட்டித்து மெய்ஞ்ஞானசுகத்தையடைந்து பரமானந்தவெள்ளத்தில் மூழ்கினன்.

களஎ-வது-நளன்உபாசித்தபடலம் முற்றிற்று.

---

## பதினெட்டாவது
## சந்திராங்கதன்உபாசித்தபடலம்.

---

மறந்தவாதவேனளன்கஜமுகத்தனைவழுத்தி
நிறைந்தஞானமேவியதிறநிகழ்த்தினந்தவத்தீர்
குறைந்திடாவளமாளவதேசத்தில்வாழ்குரிசில்
சிறந்தசந்திராங்கதனுபாசித்தமைதெரிப்பாம்.

---

ஓ சவுனகாதிமுனிவர்களே விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்திவிரதத்தைநளராசனநுட்டித்துச் சகலவேந்தர்கட்குஞ் சக்கிரேஸ்வரனுனதிறத்தைச்சொன்னேம், இப்பால்சந்திராங்கதராசன் அநுட்டித்ததிறத்தினைச்சொல்லுவோங்கேட்பீராக. சகலவளப்பமும்பொருந்திய மாளவதேசத்தில் எல்லாநகரத்தினுஞ் சிறந்த கன்னநகரத்தில் சத்துருக்களை நாசஞ்செய்யத்தக்க வேலாயுதத்தைத் தாங்கிச் சகல வுயிர்கட்கும் இதஞ்செய்துவருகின்ற சந்திராங்கதனென்னும் ஓரரசனிருந்தான். அவ்வரசனுனவன் இந்துமதியென்கின்ற தனது மனைவியோடு அளவற்றபோகபாக்கியங்களைக் குறைவின்றியநுபவித்து வருகின்றநாளையில் ஒருநாள் அவ்வரசனை மந்திரித்தலைவர்கள்வணங்கி-ஓ மண்டலேஸ்வரா காட்டில்மிருகங்கள் மிகுத்திருக்கின்றதால் வேட்டையாடுவதற் கெழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள். வேந்தர்க்கு வேட்டையாட விதித்திருக்கி

ன்ற வேதமுறைமைப்படி தானதற்கிசைந்தெழுந்து மள்ளர்கள்முதலான சேனைகளோடு மலைச்சாரல்களிலுள்ள வனங்களிற் புகுந்து புலி-மான்-காட்டெருமை-காடி-பன்றி- காட்டானை - முட்பன்றிமுதலான மிருகங்களையெல்லாம் கொலைமுகத்திலிராநின்ற யமனைப்போலச் சாடிக்கொண்டிருக்கின்றசமயத்தில் சில இராக்கதர்கள்வந்து அவனோடெதிர்க்க அவர்களுடைய தாள்களையுந் தோள்களையுங் கண்டதுண்டமாகச்சேதித்து நிலத்திலுதிரவெள்ளமோடும்படியாகச்செய்தான்- இவ்வாறு அரசன் அரக்கராவியையுண்ட செய்தியை ஓரரக்கிகேள்விப்பட்டு தானுமவனையெதிர்த்துப்போர்செய்து அவன் காத்தைப்பற்றுமாறு நெருங்கிவருதலும் அரசன்வலியிழந்து அவ்வனத்திலிருக்கின்ற ஓர்மடுவிற்பாய்ந்தான். அம்மடுவில் ஸ்நானஞ்செய்யவந்திருந்த நாகலோகஸ்திரீகள், அவ்வரசனைக்கண்டவுடன் இன்று நமக்குப் பெருஞ்செல்வம்வந்ததென்றுமனங்களித்து அவனையழைத்துக்கொண்டு தங்க ளுலகத்தைச்சேர்ந்து ஆடையாபரண முதலானவைகளைக்கொடுத்து இனிய அமுதங்களையூட்டித் தம்மைப்புணர்ந்து இன்புற்றிருக்குமாறு அவனைவேண்டினார்கள். அதற்கவன் சம்மதியாது நான் ஏமகந்தராசனுடைய புத்திரன் எனதுசுயஸ்திரீயையன்றி மற்றபரஸ்திரீகளை யான்கவனிக்கின்ற தில்லையென்று மறுத்துவிட்டான். இவ்வாறு அரசன்மறுத்துரைத்தும் அந்நாகலோகஸ்திரீகள் அவன்மீதுவைத்த ஆசையை வெறுக்காதவர்களாய் அவனையெவ்விதத்தேனுந் தங்கள்வசமாக்கத்தக்க இனிமைகளைப் பலவாறுகாட்டிச் சற்றுங்கோபியாமல் அவ்விடத்திற்றானேநிறுத்தி அளவற்றவுபசாரங்களைச் செய்துகொண்டிருந்தார்கள் இப்பால் அவ்வரசனோடு வேட்டைக்குவந்த பரிசனங்களெல்லாந் தங்கள்நாயகனை எங்குந்தேடிக்காணாமல் மடுவில் வீழ்ந்திறந்தானென்று நிச்சயித்து அவன் மனைவியாகிய இந்துமதிக்குச்சொல்ல அவளதனைக் கேட்டலும் விடந்தலைக்கேறினவளைப்போல மிகுந்ததுயரமுற்று, மார்பிலணிந்திருக்கின்ற முத்தாரங்களெல்லாஞ் சிதறும்படியாகச்சோர்ந்து வீழ்ந்து வேறொருதேறுதல் காணாமல் கரையில்லாத துக்கக்கடலில்மூழ்கி மாங்கல்யவிச்சின்னஞ்செய்து செய்யத்தக்க கருமாதிகளையுஞ் செய்து முடித்து மிக்ககவலையுற்றிருக்கின்றநாளையில், பன்னிரண்டு வருடஞ்சென்றபின்பு திரிலோகசஞ்சாரியாகிய நாரதமுனிவ ரங்கெழுந்தருள அவளை அவ்விந்துமதிகண்டு சாஷ்டாங்க வந்தனஞ்செய்து எதிர்நின்றனள். நாரதமுனிவர் அவளைப்பார்த்து ஓவனிதாரத்ன

மே-உன்னைவருத்துகின்ற மனக்கிலேசத்தையொழித்துவிடு. மன்ம
தனைவெல்லத்தக்க பேரழகினைவாய்ந்த உன்கணவன் நாகலோகத்தி
லிருக்கின்றான். அவனவ்விடத்தையகன்று விரைவில் இங்ஙனம் வ
ருவதற்கு ஒருபாயமுண்டு அஃது சந்திரசடாதரமூர்த்தியாகிய விநா
யகக்கடவுளின் சதுர்த்திவிரதமேயாம் அவ்விரதத்தை யுன்போடு ந
டாத்தக் கடவையென்றுசொல்லி அதனையநுட்டிக்கு முறைமையை
யுந்தெரிவித்து ஏகாக்ஷரமந்திரத்தை யுபதேசஞ்செய்து எழுந்தரு
ளினர் அத்தினமே தன்துணைவன்புயங்களைச்சேரப் பெற்றவள்போ
ல மனங்களித்து ஆனந்தமாகி சதுர்த்திவரவை எதிர்நோக்கி யிருந்த
னள். பின்னர் அதுவந்தவுடன் அவ்விரதத்தை ஆகமவிதிப்படி அ
னுஷ்டித்தாள், உடனே கணேசமூர்த்திக்குக் கிருபையுண்டாக அக்கி
ருபையினால் நாகலோகஸ்திரீகளுக்கு மனமிரங்கிக் கற்பின்மகளிரை
யொத்துச் சற்றேனுமனங்கலையாதிருந்த சந்திராங்கதராசனைக் குதி
ரையின்மீதேற்றி ஆபரணமுதலிய அளவற்ற திரவியங்களைத் தந்து
முன்னர் தாங்கள்கண்டழைத்துவந்த மடுக்கரையிற்கொண்டுவந்துவி
டுத்து தாங்கள் அவன்மீது வைத்திருந்தபலநாள் இச்சைகளையும் ஒ
ருநாளிலொழித்து மீட்டுந்தங்களுலகத்திற்சென்றார்கள் இப்பால் அ
ரசன் குதிரைமீதேறிவருகின்ற சேதியை நகரத்தாரறிந்து அமைச்
சர்களுக்கறிவிக்க அவ்வமைச்சர்கள் பொருக்கென்றெழுந்து எதிர்
கொண்டோடி தங்களரசனைக்கண்டு முத்தியின்பத்தை யடைந்தவர்
களைப்போல ஆனந்தமாகி அலங்காரஞ்செய்த பட்டத்துயானையைக்
கொண்டுவந்து நிறுத்தினார்கள் பின்னர் அரசனானவன் மேகவாகன
னாகிய தேவேந்திரனைப்போல அளவற்றமகிழ்ச்சியடைந்து அந்தயா
னைமீதாரோகணித்து நகரத்தைவலமாகவந்து தனது அரண்மனை
யைச்சேர்ந்து நவரத்னமயமாயிராநின்ற சிம்மாதனத்தில் வீற்றிருந்
து புரோகிதர்முதலிய பெரியோர்களைக்கூவி தலைவனைப்பிரிந்த ஸ்
திரீகளும் ஸ்திரீகளைப்பிரிந்த தலைவனும் பின்னரொன்றுபடுங்காலத்
தில் நடத்தவேண்டிய விதிகளென்னென்று வினவ அவ்வேதியர்வே
தாகமங்களையாராய்ந்துணர்ந்து அறிவிக்க அவ்வாறே சகலசடங்குக
ளையுநிறைவேற்றி ஆடையாபரணாதிகளைத் தானஞ்செய்து தன்மனை
வியோடும் இன்புற்றுவாழ்ந்திருந்தான். பின்னர் இந்துமதியானவள்
ஈவரையிற் றன்புருடனோடுகலந்திருக்கின்ற சமயத்தில் முன்ன
ம. த்தில் நாரதமுனிவரெழுந்தருளி அரசன்க்ஷேமத்தையறி
வதததும அவனைமீட்டு மடையுமாறு கணேசமூர்த்திபினுடைய

சதுர்த்திவிரதத்தை யுபதேசித்ததும்அவ்வாறே அவ்விரதத்தைத் தானனுட்டித்ததும் விவரமாகச்சொல்ல அவைகளனைத்தையுஞ் சந்திராங்கதராசன்கேட்டு மிக்கமனக்களிப்படைந்து விநாயகமூர்த்தியைப் பலவாறுதுதித்து அவரது சதுர்த்திவிரதத்தைத் தன்மனைவியோடும் இடைவிடாது அநுட்டித்து அந்தத்தில் பேரின்ப வீடடைந்து ஆனந்தசாகரத்தில் மூழ்கினன்.

௧௮ - வது - சந்திராங்கதன் உபாசித்தபடலம்
முற்றிற்று.

—*—

பத்தொன்பதாவது.

## சண்முகர்உபாசித்தபடலம்.

முற்றுணர்தவத்திரத்தியானனத்தெம் முதல்வனைவிதிமுறை யுபாசித், தற்றமில்சந்திராங்கதன்முத்தி யடைந்தவாறினிதெடுத் தறைந்தாம், குற்றமேபுரியுங் கொடியசூர்ப்பகையைக் குறைத்திடுவானவதரித்த, வெற்றிவேற்குமர னுற்றுபாசித்த மேன்மையை விளம்புதுமன்றே.

ஓ சவுனகாதிமுனிவர்களே விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்திவிரதத்தால் சந்திராங்கதராசன் தானிழந்த நகரத்தினைமீட்டுமனையப்பெற்று முடிவில் முத்தியடைந்த வரலாற்றினைச் சொன்னோம். இப்பால் சண்முகதேவர் அநுட்டித்த திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீராக. முன்னொருகாலத்தில் உமாபரமேஸ்வரி மணாளராகிய சிவபெருமானிடத்தில் நூற்றெட்டு யுகம்வரையில் அரசாளுந் திறத்தைப்பெற்ற தாருகாசுரனென்னும் ஓர் அசுரனிருந்தான். அவ்வசுரனனவன் தேவேந்திரன் ஆயிரத் தெட்டண்டங்களையும் ஆண்டுவருவதை நோக்கி மனஞ்சகியாது அவைக ளனைத்தையுந் தன்னொருகுடை நீழலின்கீழிருத்தித் தேவர்களையெல்லாம் வெளிவிடாமற் சிறையில் வைத்துத் துன்பப்படுத்தினன். அச்சிறையிலகப்படாத இந்திரன் - பிரமன் - விண்டு முதலிய சில தேவர்கள் மாத்திரம் அப்பாதகன் விழிக்குத்தப்பி மகமேருகிரியைச்சார்ந்து மெய்வெய்தி யானையுரிபோர்த்தருளியசிவபெருமான்திருவடிகளைச்சிந்தித்திருந்தார்கள். அப்போது அக்கடவுளுடையகிருபையினல் (ஓவிண்டுவாதியரே - நீங்கள்தேவர்கட்குவந்த இடுக்கண்

களைநீக்கக்கருதுவீராயின் சிவபெருமான் சுப்பிரமணியதேவரைத்தருவதானவதுக்கள்யாதோ அதனையறிந்து விரைவில்முயலக்கடவீர்கள்.) என்று ஆகாயத்தில் ஒருதெய்வவாக்குண்டாயது அத்திருவாக்கையவர்கள் செவிகுளிரக்கேட்டு ஆனந்தங்கொண்டு வெள்ளியங்கிரியையடைந்து சிவபெருமானைத் தரிசிக்கச்செல்லுகையில் சிவபெருமான் சந்நிதானத்திலிராததைநோக்கி மிக்கஏக்கங்கொண்டு துன்புற்றுவாடினார்கள் அச்சமயத்தில் - அவர்கள் மனத்தளர்ச்சிநீங்குமாறு பார்ப்பதிதேவியார் எதிரேவர உடனேஅத்தேவர்களெல்லாம்ஆனந்தக்களிப்படைந்து சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து ஓ சகலபுவனேஸ்வரியே ஓ தத்துவகாரணியே ஓ சதுர்வேதநாயகியே அவுணபாதகனாகிய தாருகனென்பவன் தேவர்களையெல்லாம்பிடித்து அனுவளவேனும் அப்பால் அகலக்கூடாத சிறையில்வைத்து வருத்துகின்றனன். அடியேங்கள்மாத்திரம் அக்கொடியவன்விழிகளில் அகப்படாதவண்ணம் இப்பூலோகத்திலொளித்துக் காலங்கழிக்கின்றேம் - தாயேயாங்கள்படுகின்ற துன்பங்களைநீக்கி விண்குடியேற்றுவித்தல் உமதுகடமையாகும் தளர்வுற்றபிள்ளைகட்குத்தாயையன்றி வேறெவ்வாதரவிருக்கின்றது என்றுபலமுறைபிரார்த்தித்தார்கள். இவையனைத்தையும் உமாதேவிகேட்டுக்கிருபைசுரந்து தேவர்களே இக்கைலாயபர்வதத்தைச்சூழ்ந்த நான்குபர்வதத்தில் மதகிரியினிடத்தில் மகாவிஷ்ணுவுக்கும் புட்பகிரியினிடத்தில் பிரமனுக்கும் சந்தானகிரியினிடத்தில் தேவர்களுக்கும் முற்காலத்திற் சிவபெருமான்யோகத்திலிருந்து தத்துவஞானத்தை யுபதேசஞ் செய்தருளியதுபோலவே இக்காலத்தில் கோளகிரியிலெழுந்தருளி முனிவர்களுக்கு உபதேசித்திருக்கின்றனர். ஆதலால் நீங்களனைவரும் அவ்விடத்திற்சென்று உங்கள்கவலைகளையொழிக்கக்கடவீர்களென்று திருவாய்மலர்ந்துசெல்லவும் அவ்வாறேவிண்டுவாதிதேவர்கள் அக்கோளகிரியருகிற்சென்று சிவபெருமான்யோகத்தைநீங்குமாறு ஓராலோசனைசெய்து மன்மதனையழைத்து இதனைச்சொல்லுவதானார்கள். அனங்கனே உனதுபெருமைகளைப்பேசுவதற்கு யாவராலாகும் கருப்புவில்லைக்கொண்டு திரிலோகங்களையும்வென்று உனதுகீர்த்தியை எங்கும்நாட்டியிருக்கின்றனை. ஆதலால் எங்களுக்குநேர்ந்தமனவருத்தங்களைப்போக்குவது உனக்குப்பெரிதல்ல யாங்கள்தாருகாசுரனால் மிகவுங் கலக்கப்படுகின்றனம். அதைநீக்கும்பொருட்டு நீதயைசெய்து அக்கோளகிரியில் மோனத்திலிருக்கின்ற பரமசிவத்தின்மீது உன்

பாணங்களைச்செலுத்தி விரகமுண்டாக்கி அவர்உமாதேவியோடுங்கூ
டச்செய்வையாயின் யாங்களனைவருஞ் சிலகாலஞ்சவுக்கியத்திலிருப்
போமென்றுசொல்லலும் இவையனைத்தையுமன்மதன்கேட்டு நடுந
டுங்கி ஒருகாலத்திலுந்தீரவறியாதபாதகங்களுக் கேதுவாகியவார்த்
தைகளைக்கேட்கவுமாச்சுதே ஈதென்னஅநியாயமென்று கிலேசித்து
அத்தேவர்களாணையைக்கடக்கக்கூடாமல் தன்படைவீடாகிய வனச
ம் - சூதம் - அசோகு - முல்லை-நீலம் என்கின்ற பஞ்சபுட்பச்சோலை
யிற்புகுந்து உன்மத்தம் - மதனம் - சம்மோகம்-சந்தாபம்-வசீகரண
ம் என்கின்ற 0 பஞ்சபாணங்களையும் அம்புபெய்குறையினிரப்பிமு
துகிலிறுக்கி ரீங்காரத்தொனிகளைவிளைக்கும் வண்டுகளைநாரியாகவு
டைய கருப்புவில்லைச்சேவித்தெடுத்து புசத்தில்மாட்டிக்கொண்டு த
ங்கத்தகட்டினைப்போலப்பிரகாசிக்கின்ற தாழம்பூவாகியவாளினை இ
டையிற்சொருகி மகிழம்பூமாலையைத்தரித்து கிரீடம் குண்டலம் வா
குவலயம் மதாணிப்பதக்கமுதலான ஆபரணங்களையணிந்து கிளிப்
பரிபூண்டதென்றற்றேரின்மீதாரோகணித்து சமுத்திரமாகிய ஜெய
பேரிகைமுழங்கவும் குயில்முழக்கமாகிய காகளமூதவும் கமுகம்பா
ளைகளாகிய வெண்சாமரைகள்வீசவும் கங்குலாகிய யானைக்கூட்டங்க
ள்நெருங்கவும் மங்கையராகியசேனைகள்புடைசூழவும் மீனகேதனம்
படபடென்றசையவும் வெண்மதியாகிய குடையினைப்பற்றவும் இவ்
விதஆடம்பரங்களுடன் கோளகிரியையடைந்து புலியினையெழுப்ப
ச்செல்லுமானைப்போல சிவபெருமானெதிரிற்சென்று இடதுகரத்தி
ல்வில்லையெடுத்து நாணேற்றிட்டு பஞ்சபுட்பபாணங்களையும் அதிற்பூ
ட்டிக்கர்த்தன் இதயகமலத்திற்கு நேராகக்குறிபார்த்துப் பிரயோகித்
தான். அவைகள் அதிவேகமாகச்சென்று சிவபெருமான் திருமே
னியிற்றாக்கியமாத்திரத்தில் தமது அனல்விழியினைச் சிறிதுதிறந்து
மன்மதனைப்பார்த்தனர். உடனே அவ்விழியினின்றும்பெருகிய சு
வாலையால் மன்மதனுடலங்கரிந்து எரிந்துசாம்பராயிற்று.

இவ்வற்புதத்தை உமாதேவிநோக்கிக் கர்த்தனருகில்வந்து சாஷ்
டாங்கவந்தனஞ்செய்து அவர்கோபந்தணியும்படியாகக் குளிர்ந்த

---

0 அவைசெய்யுமவத்தை சுப்பிரயோகம் விப்பிரயோகம் சோக
ம் மோகம்-மரணம் அவையாவன, சுப்பிரயோகம் - சொல்லுநினைவு
ம். விப்பிரயோகம் வெய்துயிர்த்திரங்கலும். சோகம்-வெதுப்புந்
துய்ப்பனதெவிட்டலும். மோகம் அழுங்கலும் மொழிபலபிதற்ற
லும். மரணம்-அயர்ப்பும்-மயக்கமும்.

வசனங்களைக்கொண்டுசுவாமிசற்றேனுமிரக்கமில்லாத்தாருகனென்னவன் யமனுங்கண்டு அஞ்சத்தக்கதாக வியற்றுங்கொடுமைக்குத் தேவர்க ளெல்லாமஞ்சி தங்கடங்கள்பதவிகளைத்துறந்து இதுகாறும் மேருவ் ரைச்சாரலிலொளித்திருந்து இப்போது சகலசீவராசிகளுடைய அக ங்காரங்களையழிக்கவல்ல தேவரீர்திவ்வியசரணாரவிந்தங்களையே தஞ் சமாக இங்குவந்தடைந்திருக்கின்றனர். அவர்கள் சுவாமிகளுடைய ஞானத்தைப்பெறுதமடமைத்தன்மையினால்தேவரீரையுந் தங்களைப் போலக்கருதி பஞ்சபுட்பபாணங்களைப் பிரயோகிக்கும்படியாக மன் மதனையேவினார்கள் அவனுந்தேவரீர் நுதல்விழிக்குஇரையாயினான். இனித்தேவரீர் அத்தணலைத்தணித்து இங்ஙனஞ்சரண்புகுந்திருக்கி ன்ற தேவர்கட்குத்திருவருள்பாலிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கக் கர்த்தன்கருணைகூர்ந்து தமது நுதற்கட்டீயைத்தணிவித்து யோகத் தையொழித்துக் கோளகிரியையகன்று கைலாயவரையைச்சேர்ந்து உமாதேவியோடும் அந்தப்புறத்திற்சென்று தேவவருடத்தில் ஆறு பதினாயிரவருடங் கலவியிலிருந்தனர். இப்பால் விண்டுவாதிதேவ ர்கள் மனம்வருந்திச் சிவபெருமான்எக்காலத்து சுப்பிரமணியக்கடவு ளைத்தந்து நமதுதுன்பங்களை யொழித்தருளுவரோவென்று கலங்கி மீட்டும் அக்கினிதேவனையேவினார்கள் அவன்துறவியைப்போலவே டங்கொண்டுகைலாயவரையிற்சென்று கர்த்தனெழுந் தருளியிருக்கி ன்ற சந்நிதானத்தின்புறம்பினின்று சகலசீவராசிகளையும் படைத்த ளித்தழிக்கவல்ல ஜகதீஸ்வரியே அடியேற்குப்பிச்சைதந்தருளவேண் டுமென்று மூன்றுதரங்கூவினான். அதனை எனது அப்பனும் அன் னையுமாகியஇருவருங்கேட்டு வந்தவன் அக்கினிதேவனென்றறிந்து கொண்டு. கலவியைவிட்டுநீங்கினார்கள். உடனேஉமாதேவி சிவ பிரானைப்பார்த்து சுவாமிதேவர்கள் துன்பத்தினின்றுநீங்குமாறு கி ருபைபுரியவேண்டுமென்று பிரார்த்தலும் கர்த்தன்தமதுவீரியத்தை ப் பரமேஸ்வரிகரத்திற்பெய்ய அதனை எனதன்னையையேற்று அக்கி னிதேவனருகில்வந்து உங்கட்குக்கிடைத்தபாக்கியமிதுவாகும் இத னை உனதுவயிற்றிற்பூரிக்கக்கடவைசிறிதேனுநிலத்திற்சிந்துமாயின் திரிபுவனங்களையும் பொடியாக்கிவிடுமென்று திருவாய்மலர்ந்து அ வன்கரத்திற்கொடுக்க அவனும் அவ்வாறே சாக்கிரதையோடும்வாங் கிப்புசித்துவிட்டனன், இப்பால் ஒப்பற்றபரமேஸ்வரருடையவீ ரியமானது அக்கினிதேவனுடைய வயிற்றிற் றங்கியமாத்திரத்தில் வெப்பமுண்டாக, அவ்வெப்பத்தைஅவனாற்றமாட்டாது

இமயகிரிச்சாரலுக்கோடி அங்கிருக்கின்ற கங்கையாற்றில் சரவணங்களால்வளர்ந்து மூடப்பட்டிருக்கின்ற ஒருபொய்கையில் அவ்வீரியத்தைவிடுத்தனன், பின்னரவ்வீரியமானது குழந்தையாக, அதற்கு நட்சத்திரஸ்திரீகள் பால்கொடுத்து வளர்த்துவந்தனர்.

இவ்வாறு கர்த்தன் வீரியமானது சரவணப்பொய்கையில்குழந்தையாகிவளர்ந்து வருவதைமகாவிஷ்ணுகண்டு கைலாயவரையிற்சென்று சிவபெருமான் சந்நிதானத்தையடைந்து சாஷ்டாங்கமாகநமஸ்காரஞ்செய்து, சுவாமி தேவரீர் கிருபைசுரந்தருளிய குமாரதேவர் சரவணப்பொய்கையி லெழுந்தருளியிருக்கக் கண்டேனென்று சொல்லலும் அதனைக்கேட்ட பார்வதியார் கர்த்தன் திருவடிகளைப் பணிந்து விடைபெற்று விண்டு பிரமன் இந்திரன்முதலிய தேவர்கள் அதிதீவிரமாகவந்து பாரிசாதபுட்பங்களை வாரிவாரி இறைத்துச்சுபங்களைக்கொண்டாடிக்கொண்டுபின்பற்றிவரவும் ஜெயபேரிவெற்றிமுரசமுதலிய மங்கலவாத்தியங்களைப் பூதவீரர்கள் அதிகவோசையெழ முழக்கிக்கொண்டு போகவும் இவ்வித ஆடம்பரங்களோடு அச்சரவணப்பொய்கைக்குச் சென்று குமாரதேவரைத் தமது கரங்களாற்றழுவியெடுத்துவந்து கொங்கைகளிற்சுரந்தபாலையூட்டிச்சிவபெருமானது திருக்கரத்திற்கொடுக்க உடனே சிவபெருமான்மனங்களித்துவெட்சிப் பூநிறத்தையொத்த சிவந்த திருமேனியையுடைய அக்குமாரதேவரை அன்போடுவாங்கிஉச்சிமோந்து உள்ளம்பூரித்து அளவளாவிய அன்போடும் ஆதரித்துவந்தனர். இப்பால் பாலசுப்பிரமணியமூர்த்தியானவர் தந்தையாகிய சிவபெருமானால் கார்த்திகைத்திங்களிலுற்பவித்ததினால் கார்த்திகேயனென்றும் நக்ஷத்திரஸ்திரீகள் பால்தந்துவளர்த்ததினால் அறுமீன்காதலனென்றும் விசாகநக்ஷத்திரத்திற்பிறந்தமையால் விசாகனென்றும் அக்கினிதேவனுதாத்திற்றங்கியிருந்தமையால் பாவகியென்றும் சங்கரியினதுகாத்தினும் அக்கினிதேவன் வயிற்றினுங் கங்கையினுந்தங்கியிருந்ததன்றி அக்கங்கையையுறிஞ்சி மீளவும்விட்டமையால் கந்தனென்றும் ஆறுமுகத்தையுடையவராதலால் சண்முகனென்றும் சகலருக்கும் சுவாமியாயிருக்கின்ற தனக்குநாதராயிருக்கின்றமையால்சாமிநாதனென்றுந்தேவர்களுடைய இட்டத்தைநிறைவேற்றுதற்குச் சேனாதிபதியாயிருத்தலினாற் றேவசேனாபதியென்றும் மாசேனனென்றும் ஞானசத்தியாகியவேலாயுதத்தைத் தாங்கியிருக்கின்றமையால் ஞானசத்திதரனென்றும் அசுரர்குலத்தை வேரோடுங்களையவல்லவராதலால் அசுரர்கு

லகாலனென்றும் மயிலைவாகனமாகவூர்ந்து நடத்துகின்றவராதலால் மயூரேசனென்றும் சேவலங்கொடியையுடைத்தானவராதலால் சேவற்கொடியோனென்றும் சகலஆன்மாக்களின் உள்ளத்திலும் மலைமுழைகளினும் வாசஞ்செய்கின்றதால் குகனென்றும் முருகனென்றும் சேயென்றும் தமக்குஒப்பற்ற அருமைப்புத்திரராதலாற் குமரனென்றும் நாமகரணஞ்செய்யப்பெற்றுத் திரிலோகங்களும் உய்யும்படித்திருவிளையாடல்செய்திருந்தனர்.

இக்காரணத்தை நெடுமான்முதலியதேவர்களறிந்து விரைவில்சண்முகக்கடவுளையடைந்து தங்கள்மகுடங்களெல்லாம் அவரதுதிருவடிகளிற் பொருந்தும்படியாகப்பணிந்தெழுந்து ஐயனே அவுணபாதகனாகிய தாருகனுடையவலிமையையும் அடியேங்களடைந்திருக்கின்ற எளிமையையுநீக்கி வையகமுழுவதும் உய்யும்படியாகக்கிருபைபுரியவேண்டுமென்று இரந்துபிரார்த்தித்து அபிஷேகமுதலிய ஆராதனைகளைநடத்தினார்கள். இவ்வாறுபிரார்த்தித்த விண்டுவாதிதேவர்களை எமது சண்முகப்பெருமானோக்கி இனியகிருபாவசனங்களால் அவ்வவர்கட்குத்தக்க ஆதரவுகளைச்சொல்லிப் பலதிருவிளையாடல்களைச்செய்துவருங்காலத்தில் கிருஷ்ணாநதிக்கு வடபாரிசத்திலிருக்கின்ற ஓர்வனத்திற்சென்று கணேசமூர்த்தியைமனதிற்றியானித்து அவரதுசடாக்ஷரமந்திரத்தைச் செபஞ்செய்துகொண்டிருந்தனர் அவ்வாறுசிலநாள்கழிந்தபின்னர், அண்ணலாராகிய விநாயகமூர்த்திக்கு அருள்சுரந்து அவரெதிரிற்பிரத்தியட்சமாகிப் பலவரங்களோடுதாமேறிநடாத்துகின்ற மயில்வாகனத்தையுந்தந்து உனக்குமயிற்றுவசனென்னும் பெயருண்டாகவென்று திருவாய்மலர்ந்து தமதுதேவகணங்களோடு மாகாயவெளியிற்கரந்தருளினர் - பின்னர் முருகக்கடவுளானவர் தமக்கெதிரிற்றரிசனந்தந்தவிடத்தில் விநாயகமூர்த்தியினுடைய திருவுருவத்தைப்பிரதிட்டைசெய்து இலட்சம் அறுகுகளையும் புட்பங்களையுங்கொண்டருச்சித்து மோதகமுதலியவைநிவேதனஞ்செய்து சகலவிலக்கணங்களோடுங் காட்சிதந்தருளியதால் அவ்விநாயகமூர்த்திக்கு இலக்கவிநாயகரென்றுதிருநாமந்தரித்து மீட்டுங்கைலாயவரையைச்சேர்ந்து தமதுதந்தையாகிய சிவபெருமானைப்பணிந்து அவர்பேருளைப்பெற்று வேலாயுதமுதலிய சகலவாயுதங்களையுமேந்தி தேவர்களெல்லாம் புடைசூழும்படியாகமயில்வாகனத்தின்மீதாரோகணித்து எதிர்த்துவந்ததாருகாசுரனுடைய ஆவியையெளிதிலுண்டு சகலலோகங்கட்கும் ஓரிடையூறுநெருங்காதவண்ணம் பாதுகாத்

தருளினர். சண்முகதேவரால் பிரதிட்டைசெய்த இலக்கவிநாயக ரை ஆராதிக்கின்றவர்களுக்குச் சகலவிடர்களுந் துன்பங்களும் ப கைகளுநீங்கி அவ்வவர்களிட்டசித்திகளெல்லாம் ஒன்று இலட்சமா கிவளரும். இலக்கவிநாயகரெழுந்தருளிய அந்தத்தலமானது மயூ ரேசமென்கின்றபெயரினால் வழங்கிவருகின்றது.

கக-வது-சண்முகருபாசித்தபடலம் முற்றிற்று.

---

## இருபதாவது.
## மன்மதன் உபாசித்தபடலம்.

வாரமேவிய மாதவத்தந்தணீர்
கூரயிற்கும ரன்மதகுஞ்சரா
வீரனைத்தொழுந் தன்மைவிளம்பினும்
மாரவேள்தொழு வண்ணமுணர்த்துவாம்.

---

ஓ சவுனகாதிமுனிவர்களே விநாயகமூர்த்தியைச் சண்முகக்கட வுளுபாசித்துத் தாருகாசுரனைவென்ற திறத்தினைச்சொன்னோம், இ ப்பால் மன்மதனுபாசித்த வரலாற்றினைச் சொல்லுவோங்கேட்பீரா க. பார்ப்பதிபாகராகிய சிவபெருமானது நெற்றிவிழியினால் முன் னர் மன்மதன் நீறுகி விடவும் இரதிதேவியானவள் உடலினின்று நீ ங்கிய உயிர்போன்றவளாய்ப் பதைபதைத்துத் தேகமாத்தியந்தமும் வெயர்த்துப் பூமியில்வீழ்ந்து புரண்டு புரண்டு அலறியலறி தாம ரைவாசியாகிய மகாலக்ஷுமியினது மனதுக்கினியமகனே அடியாள் பிராணனுக்குப் பிராணனைப்போன்றகணவனே, பசியகரும்பினைவி ல்லாகக்கொண்டு திரிலோகங்களையும் வென்று செயங்கொண்டதீர னே, என்று அளவற்ற துக்கசாகரத்துண்மூழ்கித் தனக்குப்புகலி டம்பிறிதின்றி வரத்திற்சிறந்தவள்ளலாராகிய கைலாசபதியைச் சர ணகவடைந்து பலமுறைசாஷ்டாங்கமாகப்பணிந்தெழுந்துவிழிகளி ல் நீர்த்தாரைகளைச்சொரிந்து உடலையொடுக்கியொருபுறமாகநின்று ஓ தீனசரண்ணியரோ ஓ சர்வபரிபூரணரோ ஓ ஏழைபங்காளரோ ஓ காளகண்டமூர்த்தியே ஓ பக்தவச்சலரோ எனதுகாதலர் பிரமன் முத லாயினோர் செய்தவஞ்சகபோத காரியத்தினை முடித்தகாரணத்தின ல் தேவரீருடைய நுதல்விழிக்கனலுக் கிரையாகிமாண்டனர். இ க்கருமம் அவர்சுதந்தரபுத்தியினால் நேர்ந்ததன்று. ஆதலால் அவர்

செய்த அபராதத்தினைப்பொறுத்தருளிப் பழையபடியேவுயிர்தந்தெ ழுப்பி மற்றையமாதர்களெல்லாஞ் சுமங்கலிகளாயிருக்க, யான்மாத் திரங்கைம்மையடையாதவண்ணம் அடியாட்கு மாங்கல்யபிச்சைதந்த ருளவேண்டுமென்று கையேந்திநின்றனள், உடனேபூமியைத்தே ராகவூர்ந்துதிரிபுரங்களையெரித்தருளிய தேவதேவோத்தமருக்குக் கி ருபைசுரந்து ஓ சிறுமியே நம்மாலிறந்த மன்மதனானவன் உனக்கு மாத்திரம் எக்காலத்தும் உருவமாகத்தோற்றி யிருப்பன் மற்றையர் க்கெல்லாம் அருவமாகியிருப்பன் நீ ஒன்றுக்கும் அஞ்சலையென் று திருவாய்மலர்ந்து அம்மன்மதனுயிர்பெற்றெழுந்து வருமாறுதம து திருவுள்ளத்தில் நினைத்தனர். உடனே அவனெழுந்து கர்த்தன் திருவடிகளில்வீழ்ந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து அளவ ளாவியபேரன்பினோடும் ஆனந்தக்கண்ணீர்சொரிந்து, உள்ளநெகிழ் ந்து உரோமாஞ்சிதமுற்று தோத்திரஞ்செய்வதாயினான்.

ஆறுடியவேணியனேசரணம் அரவாடியவாபரணாசரணம்
ஏறுடியவார்கொடியாய்சரணம் எரியாடியபாணியினாய்சரணம்
கூறுடியமாதுடையாய்சரணங் குரையாடியபூங்கழலாய்சரணம்
நீறுடியமேனியனேசரணம் நிகராருமிலாதவனேசரணம்.

கன்றால்விளவீழ்கணையாய்சரணங் கதழ்வாசுகிநாரியினாய்சரணங்
குன்றாகியவார்சிலையாய்சரணங் குறைமாமறைவாசியினாய்சரணம்
ஒன்றார்புரநீறுசெய்தாய்சரணம் உற்றார்தமைவீறுசெய்தாய்சரணம்
நின்றாடுபொன்மன்றுடையாய்சரணம்நிகராருமிலாதவனேசரணம்.

வடிவார்தலைமாலையனேசரணம் வானாடர்களென்பணியாய்சரணங் கடியேனவெண்கோடுடையாய்சரணங் கடலாமையினோடுடையாய்ச ரணங், துடிமீன்விழியாழினாய்சரணஞ் சுடர்கேசரியீருரியாய்சரணந் நெடியோன்விழிசேரடியாய்சரணம் நிகராருமிலாதவனேசரணம்.

இவ்வாறு தோத்திரஞ்செய்து சொல்லுவான் சுவாமி தேவரீர் உலகமாதாவாகியவிமலையைச்சேரும்வண்ணம் தேவர்களெல்லாம் எ ன்னைத்தூண்டிப்புட்பபாணங்களைப்பிரயோகிக்கும்படியாக வாக்கிய பித்தனர் அவ்வாறே அவர்கள் ஆணையைத்தடுப்பதற்கு அஞ்சினவனா ய் தேவரீர் கிருபா சமுகத்தின் முன்னர் இத்தன்மைத்தான பொல் லாத தீங்கினைச்செய்வதற்கு உடன்படலாயினேன். இவ்வபராதத் தைத் தேவரீர்பொறுத்தருளி பழையபடிகருப்புவில்லினால்சகலரை யும் வெல்லும்படியான அதிகாரத்தை எனக்குதவிரட்சிக்கவேண்டு

மென்று விண்ணப்பஞ்செய்துகொள்ளலும் சிவபெருமான் அவனை ப்பார்த்து அனங்கனே சகலதேவர்கட்குத்தலைவராகியும் ஐந்துதிரு க்கரங்களையுடையவராகியு மிருக்கின்ற கணேசமூர்த்தியானவர் உ னக்கவ்வதிகாரத்தைக் கொடுத்தருளுவர். நீ அக்கடவுளை வந்திக்க க்கடவையென்று திருவாய்மலர்ந்து ஏகாட்சரமனுவை அவனுக்குப தேசித்து அதை யனுட்டிக்குமுறைமையையுங்கிருபைசுரந்துவிடை கொடுத்தனர். பின்னர் மன்மதன் பேரானந்தக்கடலின் மூழ்கிக்க ர்த்தன்திருவடிகளிற்பணிந்தெழுந்துவிடைபெற்று இரதிதேவியோ டுஞ்சென்று முன்னர்சண்முகப்பெருமான் அநுஷ்டித்தமயூரமென் னும் தலத்தையடைந்து அத்தலத்தில் ஆயிரம்வருடமிருந்து கணே சமூர்த்தியினுடைய பாதபதுமங்களைப் பேரன்பினோடுந்தியானித்து ஏகாட்சரமந்திரத்தை இடைவிடாது செபஞ்செய்துவந்தான். இ வ்வாறுமன்மதன்செய்துவருகின்ற அநுஷ்டிப்பினுக்கு விநாயகமூர் த்திகிருபைசுரந்து அவனெதிரிற் பிரத்தியட்சமாகி, அங்கசனே உ னதன்புக்குவியந்தோம் நீவிழைந்தவையெல்லாங்கேள்தருகின்றோ ம் என்று திருவாய்மலர்தலும் சர்வசங்காரகாலத்தில் அண்டகடாகங் களையெல்லாம் ஆகாரமாகக்கொள்கின்ற சிவபெருமானுடையநுதல் விழிக்குத்தனதுடலையுமுணவாகக்கொடுத்து இளைப்பாற்றிய மன்ம தனானவன் அளவற்ற மகிழ்ச்சியை யடைந்து சாஷ்டாங்கமாகப்ப ணிந்தெழுந்து பலமுறை தோத்திரஞ்செய்து ஓ தேவர்களுயகமே அரசர்களும்படையெடுத்தற்கஞ்சும்படியான ஸ்திரீகள் மீதும்யான் படையெடுத்துவென்று உடனே இன்பந்தருவதான எனததிகாரத் தை முன்போலச்செலுத்தவும், நல்லவுருவத்தையடையவும் தேவரீ ர்கிருபையையடியேற்குப் பாலித்தருளவேண்டுமென்று விண்ணப் பஞ்செய்தனன். அதற்குவிநாயகக்கடவுள் மனதிரங்கி அன்பனே இனிநெடுமால்கண்ணனாக அவதாரஞ்செய்யப்போகின்றனன். அ க்காலத்து நீ அவன் மகவாகுவாய் உடனே உனக்குநல்ல உருவமுமு ண்டாகுமென்று திருவாய்மலர்ந்து தமது திருவுருவைக்கரந்தருளி னர். பின்னர் அம்மன்மதன்தனக்குக் காட்சிதந்தருளிய விடத்தில் ஓராலயஞ்சமைத்து அதிற்கணேசமூர்த்தியைப்பிரதிட்டைசெய்து அ ம் மூர்த்திக்குமகோற்கடவிநாயகரென்று திருநாமமிட்டு காலையினும் மாலையினுந்திருமஞ்சனத்தாலாட்டிப்பரிமளமிகுந்தபுட்பவகைகளா லருச்சித்துத்தினைமா அப்பவருக்கமுதலியநைவேத்தியங்கள்செய்து அளவற்ற பேரானந்தத்தில் மூழ்கியிருந்தான். இவ்வாறு இடைவி

டாது பூசித்துவருகின்றநாளையில் மகோற்கட விநாயகருடைய பெருங்கருணையினால்முன்போலவே தனதுகருப்புவில்லையும் பஞ்சபாணங்களையும்பெற்று சத்தலோகங்களினுந் தனது ஆக்ஞாசக்கரத்தையுருட்டி இரதிதேவியோடுங் கூடிவாழ்ந்திருந்தான். இப்பால்விண்டுவானவர்கண்ணராகத்திருவவதாரஞ்செய்ய அவருக்குஅம்மன்மதனானவன்புதல்வனாகப்பிறந்து பிரத்திமனனென்கின்ற பெயரைவகித்து, நல்லவுருவத்தைத்தாங்கிச் சகலசாத்திரங்களையும் ஆராய்ந்துணர்ந்து மகா பராக்கிரமத்தோடு யாவரும்புகழும்படியாகவாழ்ந்திருந்தான்.

அக்காலையில் வலிவிற்சிறந்தசம்பனென்கின்ற ஓர் தானவன் இவ்வுலகத்தில் மன்மதனோடு இரதிதேவியில்லாதிருப்பதைக்கண்டுதெய்வலோகத்திற்சென்று அவளைநடுங்கும்படியாகக் கைக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றான். அவ்வாறுசெல்லுகையில் அப்பாதகனுடைய கரத்தினின்றும் இரதிதேவியானவள் நழுகிக்கடலில் வீழ அக்கடலில்ஓர்பெரியமச்சமானது அவளைவிழுங்கியது பின்னர்தான் கடலிலிறங்கித் தன்திறத்திலானமட்டும் அதனைக்கலக்கிச்சோதித்து எவ்விடத்துங் காணாதவனாகித் தன்பதியைச் சேர்ந்தனன். சிலநாள்கழிந்தபின்னர் இரதிதேவியைக் கருவாகக்கொண்டிருக்கின்ற மீனானது வலையிலகப்பட்டது. அம்மீனைச்செம்படவன் சம்பாசுரனுக்குமுன்னர்கொண்டுவந்து வைத்தான். அதனை யத்தானவன்பிளக்குமளவில் அதன்கருப்பத்தில் ஓர் பெண்ணிருப்பக்கண்டு மிக்கசந்தோஷங்கொண்டு தனக்கவளைப்புத்திரியாக வளர்த்துவந்தனன். இவ்வாறு அத்தானவனிடத்தில் இரதிதேவி வளர்கின்றவரலாற்றினையெல்லாம், நாரதமகாமுனிவரறிந்து கண்ணன்புதல்வனாகிய பிரத்திமனனிடத்தில்வந்து சொல்லஅதனை அவன்கேட்டுத் தன்தேவியைக்கொண்டுவரவேண்டுமென்னுங் களிப்போடு சம்பாசுரனிடத்திற்சென்று அவனைப்போர்செய்யக்கூவி அளவற்றநாள் அவனோடு யுத்தஞ்செய்து கொண்டிருந்தனன். பின்னர்அவன்தாயாகிய உருக்குமணியானவள் இதுகாறும் நமதுபுத்திரன்வரவில்லையே, ஈதென்னகாரணமென்றுமனங்கலங்கி மிகுந்தஅன்போடு விநாயக சதுர்த்தி விரதத்தையனுட்டித்துவந்தனள். அவ்வாறுஅநுட்டித்துவந்தஆறாநாள் பிரத்திமனனானவன்சம்பாசுரனுடையஉயிரைக்குடித்துத்தன்தேவியைக்கரதலா மலகம்போலக்கைக்கொண்டு அவ்விடத்தினின்றுநீங்கித்தன்பதியைச்சேர்ந்தனன். உடனேஅவன்தாயாகிய உருக்கு மணியானவள் தன்மகன்வரவை நோக்கிப்பெருமகிழ்ச்சியை யடைந்து தனது

விழைவை நிறைவேறச்செய்த சதுர்த்திவிரதத்தை முற்றினுஞ்செய்துமுடித்து சொர்னதானம் வஸ்திரதான முதலாகிய அளவற்றதானங்களை வழங்கினுள். இப்பால் மன்மதனனவன் இரதிதேவியோடுங்கூடி வாழ்வுற்றிருக்குநாளையில் அநிருத்தனென்கின்ற ஒருபுதல்வனைப் பெற்ருன். அவ்வநிருத்தன்காளைப்பருவத்தையுற்றகாலையில்சகல தேசத்தரசர்களுந்தன்னைப்பணியும்படி அக்கினிமதிலைக்கொண்டு அரசியற்றுகின்ற வாணனென்னும் ஓர் அசுரனிருந்தான். அவ்வசுரன் அன்பினுற் பெற்றெடுத்த உஷையென்னும் பெயரினையுடைய ஒரு வனிதையானவள் ஒருநாள்அநிருத்தனுடையபேரழகைத்தன்கனவிற்கண்டு அதனைத் தனதுதோழியாகியசித்திரரேகைக்குச்சொல்ல அவள்உடனே இரக்கங்கொண்டு சென்று அநிருத்தன் நித்திரைசெய்கின்ற சமயத்தைநோக்கி அந்நித்திரையோடு மவனைக் கொண்டுவந்துதனதுநாயகியிடத்திற்சேர்த்தனள். அவளவனைக்கண்டவுடனே அதிகமகிழ்ச்சிபொங்கித் துயிலைக்கலைத்துத்தனதெண்ணப்படி அவனைச்சம்மதப்படுத்தி இரகசியமாகத் தன்னிருப்பிடத்தில் வைத்துக்கொண்டு கலவிசெய்துவந்தாள். இவ்வாறுசிலநாள்கழிந்தபின்னர் அவ்வுஷையென்பவள் வயிற்றிற்கருப்பமுண்டாக அச்செய்தியைவாணனறிந்து அநிருத்தனைப்பிடித்து அகலக்கூடாதஅருஞ்சிறையில்வைத்தனன். பின்னர் அவ்வநிருத்தனுடைய தந்தையாகியபிரத்தியுமனன் தன்புதல்வனைக்காணுமல் எங்குந்தேடித்தேடி அளவற்றதுக்கசாகரத்தின் மூழ்கிவருந்தினுன் அதனை அவன் தாயாகியஉருக்குமணி தேவிகண்டு என்னருமைப்புத்திரனே நீமுன்னர் சம்பாசுரனேடு யுத்தஞ்செய்யச் சென்றபோது நெடுநாள்வராமற்றுழுந்ததினிமித்தம்யான்மிக்க வருத்தத்தையடைந்து நீவிரைவில்வந்து சேருமாறு கணேசமூர்த்தியினுடைய சதுர்த்திவிரதத்தையநுட்டித்தேன். அநுட்டித்த ஆறுநாள் உன்னைவரப்பெற்றேன் ஆதலால்நீயும் அம்மேலானவிரதத்தை நோற்பையாயின் நின்மகனெவ்வளவுதூரதேயத்திலிருக்கினும் விரைவில்வந்து சேருவனென்றுசொன்னுள் உடனேபிரத்திமனன்அதிகமகிழ்ச்சியையடைந்து அவ்விரதத்தைஆகமவிதிப்படி மிக்கபத்தியோடனுட்டித்துவந்தனன். இவ்வாறநுட்டித்துவருகின்ற விரதநாண்முடியுமுன்னம் இவன்றந்தையாகியகிருஷ்ணனிடத்தில் நாரதமுனிவர்எழுந்தருளி அநிருத்தன்செய்தியைத்தெரிவிக்க உடனே அவருக்குக்கோபமுண்டாகி அவ்விடத்தினின்று நீங்கி வாணனிடத்திற்சென்று அவனேடு அளவற்ற நாள்யுத்தஞ்

களைச்செய்துவென்று, அவன் பெண்ணையுந் தனதுபௌத்திரனையு மழைத்துக்கொண்டு எதாப்பிரகாரந் தன்பதியைச்சேர்ந்து வாழ்ந்திருந்தனன்.

உ0-வது-மன்மதனுபாசித்தபடலம்

முற்றிற்று.

—*—

இருபத்தொன்றாவது.

## ஆதிசேடனுபாசித்தபடலம்.

மோகவாரியைக்கடந்தொளிர்மாதவமுனிவீர்
சோகமேவியமதனுபாசித்தமைசொற்றாம்
நாகமாமுகத்தெம்பெருங்கருணைநாயகனை
நாகவேந்துபாசித்ததோர்தன்மையைநவில்வாம்.

ஓசவுனகாதிமுனிவர்களேவிநாயகமூர்த்தியினுடையசதுர்த்திவிரதத்தை மன்மதனநுட்டித்து உருவம்பெற்ற வரலாற்றினைச் சொன்னேம்இப்பால்ஆதிசேடனுபாசித்ததிறத்தினைச்சொல்லுவோங்கேட்பீராக. முன்னொருகாலத்தில் பிரமனாதியதேவர்களாலும் இருக்காதிவேதங்களாலு மறிதற்கரியசாம்பவமூர்த்தியானவர்வெள்ளியங்கிரியில்நவரத்ந மயமாயிராநின்றசிம்மாதனத்தின்மேல்உமாபரமேஸ்வரிசமேதராய் வீற்றிருக்கின்றநாளையில்அளவற்றதேவர்களும்முனீஸ்வரர்களும் வந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து பலவரங்களைப்பிரார்த்தித்துக் கொண் டிருந்தார்கள். அத்தருணத்தில் சிவபெருமான் சடாமகுடத்திலிருக்கின்ற ஆதிசேடனானவன் நாம் இத்தனைபேரும்வணங்கும்படியாக சுவாமியினது திருமுடியிலிருக்கின்றோமல்லவாவென்று கர்வங்கொண்டனன். அக்கர்வத்தைக்கர்த்தனறிந்து தமதுகரத்தாற் றண்ணென்றிழுத்து நிலத்தின்மீது மோதினார். உடனே ஆதிசேடன் வெள்ளியங்கிரியில்வீழ்ந்தனன். அவன்சிரமானது ஆயிரம்பிளவாகப்பிளந்துபோயிற்று. அவனுக்கு உலகத்தைத்தாங்குகின்றவலியும்அளவற்ற தவங்களாற் கிடைத்தமகத்துவங்களுமிழந்துபோனபின்னர், ஆதிசேடன்மிக்கதுன்பமுற்று நம்மைமுன்போல சிவபிரான் சார்பிலிருக்கச்செய்யும் உபாயம் யாதென்றுகருதி சோர்ந்து சுவாசமற்று உயிர் உண்டோவில்லையோவென்று ஐயுறும்படி இறந்தவனைப்போலக்கிடந்தான். அத்தருணத்தில்

கைலாசபதியைத் தரிசிக்கவந்தநாரதமுனிவர் அவனைப்பார்த்து ஆ,
ஆ ஈதென்னபாவம்உனக்கடுத்ததுன்பம் யாதென்றுகேட்டார். அ
தற்கு அற்பவுயிரோடும் வீழ்ந்துகிடக்கின்ற ஆதிசேடன் நாணமுற்
றுஒன்றும்பேசாமலிருந்தான். நாரதமுனிவர் மீளவுமவனைப்பார்
த்து ஆதிசேடனே நீகர்வங்கொண்டபடியினாலே சிவபிரான்சார்வ
யற்று இத்தன்மைத்தான துன்பத்தில்வாடுகின்றாய், இப்பிணைநீங்கு
மாறு ஓருபாயஞ்சொல்லுகின்றேன் அதனை அன்புடன்கேட்பாயாக
தம்மைவேண்டினர்க்கு வேண்டியவண்ணம் பலபேறுகளைத்தந்து
ரக்ஷிக்கும்படியான விநாயகக்கடவுளுடையசடாட்சரமந்திரத்தைய
நுட்டிக்கக்கடவையென்று சொல்லி,அம்மந்திரத்தைஅவனுக்குபதே
சித்தனர். உடனேஅதனைஉபதேசிக்கப் பெற்றமாட்சிமையால் ஆ
திசேடனுக்குத் தேகதிடமுண்டாகி அவ்விடத்தினின்று நீங்கிப்பிர
வாளநகரத்தைச்சேர்ந்துமிக்கபத்தியோடுஞ் சடாட்சரமந்திரத்தைச்
செபித்துசதுர்த்திவிரதத்தையநுட்டித்தனன். அவ்வநுட்டிப்புக்குவி
நாயகக்கடவுள்மனதிரங்கிஆனைமுகத்தையுடையவராய்ப்பத்துத்திரு
க்கரங்களினும் பத்து ஆயுதங்களையேந்திக்கொண்டு சித்திபுத்திசமே
தராக சிங்கவாகனமூர்ந்து அவனெதிரின் பிரத்தியட்சமாயினார் உட
னே ஆதிசேடன் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து அளவற்றதோ
த்திரங்களைச் செய்துநின்றான். அத்தோத்திரங்கட்குச்சார்ந்தன்மன
திரங்கி அன்பனே - ஆயிரம்பிளவாகப் பிளந்திருக்கின்ற உனதுஒரு
சிரமானது அவ்வாறே ஆயிரஞ்சிரங்களாகியிருக்கக்கடவது நீஅவ்வா
யிரஞ்சிரங்களோடு முன்போலவேபூமியைத் தாங்கியிருக்கக்கடவை
அன்றியும் ஐந்து சிரங்களோடு எந்தையாகியும் எம்பெருமானுமாகியு
மிருக்கின்ற சிவபெருமானுடைய சடாபாரத்தில் அமர்ந்திருக்கக் கட
வைஇப்போதிருக்கின்ற இவ்வுருவத்தோடு நமக்குஉதரபந்தனமாக
க்கடவையென்று திருவாய்மலர்ந்து அண்டகோடிகளையுந் தாண்டி அ
ப்பாற்சென்ற பேருருவத்தோடு விசுவரூபங்கொண்டு அவ்வாதிசே
டனையெடுத்துவயிற்றிற் சுற்றிக்கொண்டனர். உடனேதேவர்களெல்
லாம் புஷ்பவருஷம் பெய்தார்கள், பின்னர்ஆதிசேடனைவிநாயகனது
ஒருஅமிசத்தில் உதரபந்தனமாகவிருந்து மற்ற அம்சங்களோடுதனை
க்குநற்கதிகிடைக்கச்செய்த அந்தப்பிரவாள நகரத்தில்சாத்திரவிதிப்
ப்படி ஓராலயஞ் சமைத்து அதில் விநாயகமூர்த்தியைப் பிரதிட்டை
செய்துஅளவற்றதிரவியங்களைக்கொண்டபிஷேகித்துப்பரிமளமிகுந்
தபலபுட்பங்களா லருச்சனைசெய்து ஆராதித்துக்கொண்டிருந்தான்.

உடனே கணேசமூர்த்தி தந்தருளிய வரத்தினால் சிவபெருமானுடை யசடாபாரத்தில் வசிக்கப்பெற்றும் இவ்வுலகமுழுவதுந்தாங்கப்பெற் றும், அளவற்ற களிப்பிலாழ்ந்திருந்தனன்.

உக-வது- ஆதிசேடனுபாசித்தபடலம் முற்றிற்று.

—(*)—

## இருபத்திரண்டாவது.

## புருசுண்டியுபாசித்தபடலம்.

மாப்பெருந்தவத்தீர் யானைமாமுகத்தமலன்றன்னைப்
பாப்பரசினிதுபோற்றும் பண்புரைசெய்தேனுக
மாப்பொலிவனத்தின்வாழும் வனசரனுலகர்போற்றுஞ்
சீர்ப்புருசுண்டியாகிப் போற்றியதிறத்தைச்சொல்வாம்.

ஓ சவுனகாதி முனிவர்களே, ஆதிசேடன்விநாயக மூர்த்தியினு டைய சதுர்த்திவிரதத்தை யநுஷ்டித்துத் தனக்குநேர்ந்தவிபத்தைநீ க்கிக்கொண்ட பேற்றினைச்சொன்னோம் இப்பால்புருசுண்டியுபாசித் ததிறத்தினைச்சொல்லுவோங் கேட்பீராக. அழகுபொருந்தியசோ லைகள்சூழ்ந்த மத்தியதேயத்தில் மகநட்சத்திரத்தில் சனிவாரத்ததிப திகூடிஎல்லாத்திரவியங்களையும் பொன்றச்செய்யுங்காலத்தினும்செ ன்றோர்கள் இரவாவண்ணம் வேண்டியவளங்களை யளிக்கவல்லசகத் திர புரியென்னும் பட்டணமுண்டு அப்பட்டணத்தில்தூங்காமைமு தலிய மூவகை யாற்றல்களையும் ஓதல்முதலியஅறுவகைக்குணங்களை யும் மனோதிடமுதலிய மூவகை சித்திகளையும் பதிஞானமுதலியமூ வகை ஞானங்களையும் சரிதை முதலிய நால்வகை யுபாயங்களையும்த ரும முதலியநால்வகைப் பொருள்களையும் எக்காலத்தினு நீங்காதுப கைவரைவெல்லத்தக்க வேலாயுதத்தை யேந்திப்பொதுநீக்கிஉலகமு ழுவதுங்காத்து அந்தணர் தேவர் முதலியோரை ஆதரித்துக்காமனை யொத்த கட்டழகினை வாய்ந்து சுற்றத்தினர் முதலியோரை இன்ன ல்நெருங் காவண்ணஞ் சூழ்ந்து தவம் தூய்மை முதலிய விரதங்களை வாய்ந்து,விண்ணாட்டினும் மண்ணாட்டினுந்தனக்கொருவர்நிகரில்லா த பெருங்கீர்த்தியைப் பெற்று கற்பிற்சிறந்த புண்ணிய சீலையென்னு ம்மனைவியைப் பொருந்தி குளிர்ச்சி பொருந்திய செங்கோலினால் தி சையனைத்தினுந் தனது ஆக்ஞா சக்கரத்தினை யுருட்டி அரசாட்சி

செய்கின்றசூரசேனமகாராசனென்னுமோரரசனிருந்தான். அவ்வரசன் ஒருநாள் - மந்திரியர்-புரோகிதர்- சேனபதியர்-ஒற்றர்-சாரணர்-என்கின்ற ஐவகைத் துணைவர்களும் மற்றுமுள்ள பரிசனங்களும்புடைசூழும்படியாகச் சிங்காதனத்தின்மீது கொலுவீற்றிருந்துகுறைசொல்வார்க்கும் முறைசொல்வார்க்கும் அவ்வவர்கள்கருத்தின்வண்ணங்கிருபைசெய்துகொண் டிருக்கிறசமயத்தில் அளவற்ற சூரியர்கள்அவனியி லிறங்கினாற்போல, ஒருவிமானமானது அந்தரமார்க்கமாய்வந்து தனதுகதியிற்றப்பி நிலத்தில்வந்திறங்கியது.

அதனைஅவ்வரசன்கேட்டுஉடனேஒற்றர்களைக்கூவியதோவொருதெய்வவிமானம் பூமியிலிறங்கியது நீங்கள்விரைவிலோடி அஃது வந்தவரலாற்றைத்தெரிந்துகொண்டு வாக்கடவீர்களென்றுஏவிப்பின்னர்தானும் அதிகவிரைவோடு மெழுந்து அமைச்சர் முதலாயினோர் புடைசூழும்படியாக வெளிக்கொண்டு தனது ஆட்டக்குதிரைமீதாரோகணித்துஅதனைவிரைவில்நடத்திஅவ்விமானத்தினருகிலிறங்கிச் சிலதூரம் முன்னதாக நடந்துசென்று அதன்மத்தியில் தேவேந்திரன் வீற்றிருப்பக்கண்டு மிகுந்த பேரன்பினால் அவனை வணங்கிஇதனைச்சொல்லுவதாயினான். ஓசுரலோகசக்ரேஸ்வரா வேள்வியினாலும் வீரத்தினாலும் தவத்தினாலும் தானத்தினாலும் வாள்வித்தைமுதலியதிறங்களினாலும் ஒப்பாருமிக்காருமில்லாத தேவரீரையான்பூர்வத்திற்செய்தநல்வினைப்பேற்றினாற் காணலாயினேன். அடியேனுடைய கல்வியுங்கேள்வியும் பெறத்தக்கபயன்களையடைந்தன. தேவரீர்பொன்னுலகத்தைநீங்கி இம்மண்ணுலகத்தில்வந்தவரலாற்றைத் திருவாய்மலரவேண்டுமென் றுபிரார்த்திக்க அதற்குத்தேவேந்திரனிசைந்து தன்வரவை அவ்வரசனுக்குத்தெரிவிப்பவனாகி ஓ நரேந்திரனே யான்சகலதேவர்களும் புடைசூழும்படியாகச் சிம்மாசனத்திலிருந்து அரசியற்றிவருகின்றதருணத்தில் யாழ்வல்லராகிய நாரதமகாமுனிவர்வந்து பூலோகத்தில் ஒருவர்விநாயகமூர்த்தியினுடைய அநுக்கிரகத்தைப்பெற்று தெய்வத்தன்மையுண்டாகி அந்தச்சரீரத்திற்றானே கணேசமூர்த்தியினுடைய சாரூபத்தைப்பெற்று சகலருந்தொழும்படியாகவீற்றிருக்கின்றார். அவர்பெயரைப்புருசுண்டியென்று சொல்லுவார்கள். அவரையாமுங்கண்டு தரிசித்துவந்தோமென்று சொன்னார். அதனையான்கேட்டமாத்திரத்தில் அம்மகாத்துமாவைக்காணவேண்டுமென்கின்ற ஆசையானது எனதுபிடரியைப்பிடித்துத்தள்ளஉடனே அவ்விடத்தினின்றுநீங்கி இம்மண்ணுலகத்திலிழிந்து

அவரெழுந்தருளியிருக்கின்ற விடத்திற்சென்று அவரதுபாகபதுமங்களைச்சேவித்து விடைபெற்று மீட்டுஞ் சொர்க்கலோகத்திற்சேரவெண்ணி ஆகாயமார்க்கமாகச்சென்று இவ்விடத்திற்குநேராகவரும்போது இந்நகரத்தில்மிகவுங் குட்டநோய்கொண்டபெரும்பாவியாகிய ஒருவைசியகுமாரனுடைய பார்வையால் இவ்விமானமானது கதிதப்பிப்பூமியிலிறங்கியது இனி இந்நகரத்திற்றானே ஒருவன் சங்கடசதுர்த்திவிரதமநுட்டிக்கின்றான். அவனாலே இவ்விமானம்பூமியைவிட்டெழும்பி ஆகாயத்திற்செல்லுமென்றுசொன்னான். இவையனைத்தையுஞ்சூரசேனமகாராசன்கேட்டு ஓ தானவர்குலகாலரே தேவரீருஞ்சென்றுபணியத்தக்க அப்புருசுண்டியென்பவர்என்னகுலத்தார். அவர்செய்ததவங்கள்யாவை. அவைகளையும் எனக்குணர்த்தியருளவேண்டுமென்று பிரார்த்தித்தான்.

அதற்குத்தேவேந்திரன்சொல்லுவான் அரசனே தண்டகவனத்திலே இலக்குமிவிலாசம்பொருந்திய பழமையானநந்துரமென்னும் ஒருநகரமிருக்கின்றது. அந்நகரத்தின்சமீபத்தில் ஒருவேடச்சேரியுண்டு அச்சேரியில் ஆலகாலவிடத்திற்கொப்பான கொடுஞ்செய்கைகளையுடையவிப்பிரதனென்னும் ஒருவேடனிருந்தான். அவ்வேடன் எக்காலத்தினும் எவ்விடங்களினுஞ்சென்று வழிப்போக்கர்களையெல்லாம் ஒருவனையுந்தப்பவிடாமல் மறித்துப்பொருள்பறிக்கப்பட்டவன். அவனவ்வாறிருக்கின்றகாலத்தில் ஒருநாள் அவன்சஞ்சரிக்கின்றமார்க்கமாக ஓரந்தணனானவன்விரைந்துசெல்ல அவனையவ்வேடன்கண்டு நமக்குஇத்தினம் மிக்கலாபமுண்டாயதென்று மனங்களித்து அதிகவேகத்துடனோடி அவ்வந்தணனைப்பின்றொடர்ந்தான். உடனே-அவ்வந்தணன் அவனைக்கண்டு இன்றுநமக்கிறுதிகாலம்வந்துவிட்டதென்றுபயந்தோட அவ்வேடனும் அவன்பின்னதாகநெடுந்தூரவரையிலோடி தன்னாற்பிடிக்கக்கூடாமல்மனம்வருந்திமீட்டுந் திரும்பிவருகையில் அவ்வனத்தின்கண் விநாயகமூர்த்தியினுடைய கோயிலுந்தீர்த்தமும் எதிரேதோற்றக்கண்டு அவ்விடத்திலடுத்துத்தன்னிளைப்பாறும்படியத்தீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்து தாகந்தணியுமாறு ஜலபானமுஞ்செய்து அதன்கரையில் இருக்கின்ற ஓர்மரத்தினீழலிற்றங்கி இரையிழந்தேங்குற்ற வேங்கைபோல மனக்குறைகொண்டிருந்தான் இவ்வாறிருக்கையில் தவசிரேஷ்டராகிய முக்கலமுனிவர்அவ்வழியாகச்செல்ல அவரைக்கண்டவுடனே வேடனானவன் விரைந்தெழுந்து வாளையுருவிக்கொண்டோடி அம்மகாநுபாவருடைய உயிரைவாங்கும்படியாகஓங்கினான் உடனேமுக்கலமுனி

வர்திரும்பி அவனைத்தமதுவிழிகளிஞலுற்றுப்பார்க்க அப்பார்வை யின்மகிமையால் அவ்வேடனுடையவாளும், அவன்அறியாமையும் அதுகாறு அவன்செய்துவந்த மலைபோன்றபாதகங்களும் அவனைவிட்டுநீங்கி மெய்யறிவுதித்தது உடனே அவன்முக்கலமுனிவரைப்பார்த்து அடியேன்செய்துகொள்ளும் விண்ணப்பத்திற்குச்செவிகொடுத்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்து இதனைச்சொல்லுவதாயினன் சுவாமிஇத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தபலத்திஞலும் தேவரீருடையதரிசனவிசேடத்தாலும், அடியேன்செய்தபாதகங்களனைத்தும்பறந்தன நற்கதியையடையவேண்டுமென்னுநல்லறிவும் உதித்தது மேலும்பெரியோர்கள் துஷ்டர்களை விசுவாசிக்கின்றதில்லையாயினும் அவர்கள்கிருபாநோக்கத்தால் அத்துஷ்டர்கள் பயன்பெறுமற்போகின்றதில்லை இனிசுவாமிகள் அடியேன்மீது கடாக்ஷம்வைத்து எவ்விதத்தேனுங் கைவிடாதுகாத்தருளவேண்டும். அடியேற்கிவ்வுலகவாழ்வில் யாதொருபற்றுமில்லையென்று அனந்தமுறைதுதித்து மனமுருகி அவர்திருவடிகளிற் றனதுசென்னியைப்பொருந்தவைத்து இரண்டுகரங்களாலும் அத்திருவடிகளை உடும்புபோலவிடாமற்பற்றி மீட்டுமெழாதபடி அவ்வாறேநிலத்திற்கிடந்தனன். பின்னர்முக்கலமுனிவர் அவ்விப்பிரதனுடைய அன்பையறிந்து துஷ்டர்களாயினுஞ்சரணடைவராயின் அவர்களைக்கைவிடுதல் தருமமல்லவாதலால் மிக்கஉள்ளன்போடு நம்மைசரணடைந்தஇவனுக்கு எவ்விதத்தேனும் ஓர்நன்மையைச் செய்யவேண்டுமென்றுலோசித்து இவன்வேடனகையால் விதியுளியுபதேசித்தல்கூடாதென்று கணேசமூர்த்தியினது திருநாமத்தைமாத்திரம் உபதேசிக்கத்தக்கதென்றெண்ணி நீயிவ்வாவில்ஸ்நானஞ்செய்து வருவையென்று அவனுக்கு ஆக்கியாபித்தார்.

அவ்வார்த்தையை விப்பிரதன்செவிக்கமுதாகக்கேட்டு உடனே ஸ்நானஞ்செய்துவந்தான். பின்னர்முக்கலமுனிவர் அவன்சிரத்தின்மீது தமதுதிருக்கரத்தைவைத்து ஓம்கணேசாயநமஃ வென்னுமந்திரத்தை யவன்செவியிலுபதேசித்து அவனெதிரில் ஓருலர்ந்ததடியைநட்டு அன்பனே இத்தடிக்குத் தினந்தோறுங் காலந்தவறாமல் நீர்விட்டுக்கொண்டு அது தளிர்க்கின்றபரியந்தம் அதன்சமீபத்திற்றனேயிருந்து விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளை மனதிற்றியானித்து யானுபதேசித்தமகாமந்திரத்தைச் செபித்துவருவையாயின் உனக்கு சகலசித்திகளுங்கைகூடும் நாமுஞ் சிலநாளில் இங்குவரு

வோமென்று சொல்லித் தமது ஆசிரமத்திற்கு எழுந்தருளினர். பின்னர்விப்பிரதன் அளவற்றமகிழ்ச்சிகொண்டு முக்கலமுனிவருப தேசித்தவண்ணம் அத்தடிக்கு முக்காலத்துநீர்பெய்து அதனருகிலி ருந்து விநாயகமூர்த்தியை மனதிற்றியானித்துத் தானுபதேசம்பெற் றமந்திரந்தைச்செபித்துவந்தான். இவ்வாறு ஆயிரவருடபரியந்த ம் இடைவிடாதுசெபித்துவருகையில் அத்தண்டானது தளிர்த்துப் பூத்தது அச்சமயத்தில் முக்கலமுனிவரும் அங்கெழுந்தருளி விப் பிரதனுடைய மனவுறுதியைக்கண்டு மிகுந்த சந்தோஷங்கொண் டு முற்றத்துறந்த முனிவர்கட்கும் இவ்வுறுதிவருவது அரிதெ ன்று நினைத்து பலமுறைவியந்து பொருக்கென்று தமது கமண்டல த்துள்ள நீரைமந்திரத்து விப்பிரதன்மீது தூவினர். உடனே கல் லெறியக்கண்ட பறவைக் கூட்டங்கள் மரத்தை விட்டெழும்புமாறு போல் அவன்பலபிறவிகள்தோறுஞ் செய்துவந்த பாதகங்களெல் லாம் பறந்தோடி விட்டன. மொண்டுவார்த்தசலத்திறைற் றளிர் த்துப்பூத்திருக்கின்றதண்டினைப்போல முக்கலமுனிவர் தூவிய மந் திரசலத்தினல் அவன்புருவமத்தியிற்றுதிக்கையுண்டாகி விநாயக மூர்த்தியினுடைய திருவுருவத்தையடைந்தனன். பின்னர் முக்க லமுனிவரானவர் அந்தச்சற்சீடனைத் தழுவிக்கொண்டு கணேசமூர் த்தியினுடைய ஏகாக்ஷரமந்திரத்தை யுபதேசித்து என்னருமை மைந்தனே நீ இப்போதடைந்திருக்கின்ற வுருவத்தோடு ஒருகற்ப காலவரையில் வாழக்கடவாய் நீ பெய்துவந்தசலத்திறைற்றளிர்த்துப் பூத்திருக்கின்ற இம்மரமானது கற்பகவிருட்சமாகக் கடவதென்று சொல்லி அவ்விடத்தினின்று மெழுந்தருளினர் - உடனே அம்மர முங்கற்பகவிருட்சமாகி அவ்வவர்கள் வேண்டுவனவற்றையெல்லாம் வரையாது கொடுத்துவந்தது பின்னர் விப்பிரதன் அன்பே ஒருருவ மாகிக்கணேசமூர்த்தியினுடைய திருவடிகளைத்தியானித்து தனதுபு ருவத்திலடுவிற் சுண்டந்தாங்கியிருக்குந்தன்மையால், யாவரும்புரு சுண்டியெனும் பெயரினல் அழைக்கப்பெற்று முக்கலமுனிவ ருப தேசித்த ஏகாட்சரமந்திரத்தை முன்போலவேஆயிரவருடம் வரை யிற்செபித்துக்கொண்டுவர அதற்குக்கணேசமூர்த்தி கிருபைகூரந் து அப்புருசுண்டிக்கெதிராக ஆகாயமார்க்கமாய்த் தரிசனந்தந்த ருளினர்

உடனே அத்தெரிசனத்தைப் புருசுண்டிமுனிவர்கண்டு ஆடிப் பாடி ஆனந்த பரவசங்கொண்டு கரங்களைச்சிரமேற்கூப்பி ஓ விண்டு

பிரமனாதியரால் அறிதற்கரியகர்த்தனே நமஸ்காரம் தேவர்களெல்லாந்தொழும்படியாக முதன்மைபெற்றிருக்கின்ற கடவுளே நமஸ்காரம் மகாவீரத்தன்மையையுடைய அங்குசபாசங்களையேந்துங் கரத்தினைப்படைத்த கணேசமூர்த்தியே நமஸ்காரம பொய்யர்க்குப்பொய்யராகியும் மெய்யர்க்கு மெய்யராகியும் விளங்குந் தினதயாபரமூர்த்தியே நமஸ்காரம் ஞானசத்தியுங் கிரியாசத்தியுமா யிருக்கின்ற சித்திபுத்திகள்மணாளரே நமஸ்காரம்என்று அனந்தமுறை தோத்திரஞ்செய்தலும் அத்தோத்திரங்கட்கு விநாயகமூர்த்திசந்தோஷங்கொண்டு அன்பனே நீ கருதியவரங்களைக்கேள் தருகின்றோமென்று திருவாய்மலர்ந்தனர். புருசுண்டியானவர் மீளவும் பணிந்தெழுந்து கர்த்தனே அடியேன் தேவரீருடைய கிருபையினால் தேவர்களாலுமடைதற் கருமையனவாகிய செல்வத்தையும் பேரின்பத்தையும் எளிதிற்பெற்றேன் அன்றியுந்தேவரீருடைய திருவுருவத்தையுமடைந்தேன் இனிஅடியேன்பெறத்தக்கபேறு தேவரீர் திருவடிகளையடைவதேயன்றி அதைவிடவிரும்பத்தக்கது வேறென்னவிருக்கின்றது சுவாமி அத்திருவடிப்பேற்றையே அடியேற்கருளவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டனர். அதற்கு விநாயகக்கடவுள் மனமிரங்கி அவனருகிலெழுந்தருளி அன்பனே நீகருதியதிருவடிப்பேற்றினையடைவதற்கு வேதாகமபுராணங்களில் நான்குபாயங்கள்விதிக்கப்பட்டிருக்கின்றன அவ்வுபாயங்கள் - சரிதை-கிரியை-யோகம்-ஞானம்-என்றுசொல்லப்படும், அவற்றுள் சரிதையாவது பிராதக்காலையிற்றேவாலயங்களிற்சென்று பயபத்தியுடனே திருவலகிடுதல், திருமெழுகிடுதல், திருவிளக்கிடுதல், நந்தனவனம்வைத்தல், பூமாலைதொடுத்துச்சாத்தல், பூசனைபுரிதல், பெரியோர்களைக்காண்டல், கடவுளுக்குவழிபடுதல்போல அவர்கட்கு வழிப்பட்டுவசித்தல் தேவாலயம் - சத்திரம்-சாவடி-முதலியவைகளை நூதனமாகச்செய்வித்தல், இவைகள்சீரணித்திருக்கின் பழுதுபார்த்தல், தினந்தோறுங் கங்கைமுதலாகிய புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தல், ஆலயங்களில் அங்கப்பிரதக்ஷணஞ்செய்தல், அடியளந்துநடத்தல், நூற்றெட்டு ஆயிரத்தெட்டு என்னுந்தொகைப்படிபிரதக்ஷணஞ்செய்தல், தருமத்தின்வழிநின்றுபொருள்சம்பாதித்தல், பிரமசாரி வானப்பிரஸ்தன்-சன்னியாசியென்னும் இம்மூவருக்கும் பசி பிணி முதலிய இடையூறுகளுறாதவண்ணந் தக்கமுயற்சிசெய்தல், பிதிர்தேவதைகளுக்கு யாகாதிகருமங்கள்நீர்க்கடன்முதலியவற்றால் திருப்தி செய்துவித்தல்






வந்தவிருந்தினரைப்பாதுகாத்து இனிவரும் விருந்தினருக்கெதிர்பார்த்தல், உறவினர்கள் உள்ளமகிழவேண்டியவற்றையுதவல்; தானுந்தன்மனைவியும் ஒருவழிப்பட்டு நடுவுநிலைமையையநுசரித்திருத்தல், அன்புடைமை-அடக்கமுடைமை-ஒழுக்கமுடைமை பொறையுடைமை - யென்னுநன்னெறிகளையுற்றிருத்தல்; பிறர்பொருள்கவர்தல்-புறங்கூறுதல்- பயனிலாவற்றையநுசரித்தல் - என்னுந்தீநெறிகளைவிலக்குதல்முதலியனவாம். இவற்றையநுட்டித்தவர்கள்சாலோகபதவியையடைவார்கள். அதாவது நமதுலோகத்தில் வந்திருப்பதாம். கிரியையாவது-சந்தனம்-புட்பம்- தூபம்-தீபம்-நைவேத்தியம்-கோசலம்-கோமயம்-பால்-தயிர்- நெய்-தேன்- வாழைக்கனி-மாங்கனி பலாக்கனி நாரத்தங்கனி-இளநீர்-பனிநீர்-சந்தனம் - முதலிய பூசாதிரவியங்களைக்கொண்டு வேதாகமவிதிப்படி திருமஞ்சனாதிகளைச் செய்தல்,மெய்-வாய்-கண்-மூக்கு-செவி- என்னுமிவற்றின்வழியாகிய சத்த-பரிச-ரூப ரச கந்தமென்கின்ற ஐந்தாசைகளையும் நாளுக்குநாள் அடக்கல்விரதம்-தேவதாபூசை-மந்திரம்- எந்திரம்-செபம்-யாகம-என்னுமிவைகளையநுசரித்தல் ஓருயிர்க்கும் இடையூறுவராமற்காத்தல், தவங்களினிற்றல், மனத்தையடக்கி அறிவோடுகலந்து தற்பதத்தையுணருகின்றவனாயில் ஆசிரியன்கட்டளையையுஞ் சாத்திரவிதியையுங் கடைப்பிடித்திருத்தல், கோபமாதிகளைநீக்கல்; முதலியனவாம். இவற்றையநுட்டித்தவர்கள் சாமீபபதவியைப் பெறுவார்கள். அதாவது நமதுசமீபத்திலிருப்பதாம் யோகமாவது ·இயமம் -நியமம்-ஆதனம்-பிராணாயாமம் - பிரத்தியாகாரம்-தாரணை-தியானம்-சமாதி-என எண்வகைப்படும். இவற்றுள் இயமமென்பது கொல்லாமை-மெய்மைகூறல்-கள்ளாமை-பிறர்பொருளிச்சியாமை இந்திரியமடக்கல்முதலியனவாம். நியமமென்பது- தவம்தூய்மை-தத்துவநூலோர்தல்-மௌனமுவந்திருத்தல் - தெய்வம்வழிபடல் முதலியனவாம். ஆதனமென்பது சுவத்திகம்- கோமுகம்-பதுமம்- வீரம் கேசரி-மயூரம்-பத்திரம்-முத்தம்-சுகம் என ஒன்பதுவகைப்படும். இவற்றுள்-தொடைக்குமுழங்காற்குநடுவே இரண்டுள்ளங்காலையுஞ்செலுத்தி யிருமாந்திருத்தலைச் சுவதகநியென்றும்-சகனப்பக்கத்தில் இருகாற்பரட்டையுமாறவைத்து அவ்விருகாற்பெருவிரலைக்கைப்பிடித்திருத்தலைக்கோமுகமென்றும் இருதொடைமேலும் இரண்டுள்ளங்காலையுமாறித்தோன்றவைத்தலைப் பதுமமென்றும்- வலத்தொடையில் இடக்காற்பரட்டைச்சேர்த்தி இருமாப்புற்றிருத்தலைவீரமென்றும்-




பீசத்தின்கீழ்ச்சீவனியிடத்துப் பாட்டைவைத்து இடமுழங்கையை முழந்தாளில்வைத்து அங்குலிவிரித்துநாசியைப்பார்த்திருத்தலைக் கேசரியென்றும், பீசத்தின்கீழ்ச்சீவனியிடத்துஇருகாற்பாட்டையும்வைத்துஅவ்விருபதத்தையும் இருகையாலிறுகப்பிடித்து அசையாதிருத்தலைப் பத்திரமென்றும், இடக்காற்பாட்டாற் சீவனியையமுத்திவலகாற்பாடு அப்பாட்டின்கீழுந்தவிருத்தலை முத்தமென்றும், முழங்கையிரண்டும் முந்திப்புறத்திலமுந்தப் புவியிற்கையூன்றிக் காலீட்டித்தலையிர்ந்திருத்தலை மயூரமென்றும, சுகமுந்திடமும் எவ்வாறிருக்கினெய்துமோ அவ்வாறிருத்தலைச் சுகமென்றுங்கூறப்படும். பிராணாயாமமென்பது, பிராணவாயுவை இரேசகபூரககும்பகஞ்செய்தலாம். பிரத்தியாகாரமென்பது, உபாதியை நீக்கி யுண்ணோக்கலாம், தாரணையென்பது, கண்டம்-இதயம்-நெற்றி-கபாலம்-நாபி-இவற்றிலொன்றிற் சத்ததஞ்சிந்தை வைத்திருத்தலாம். தியானமென்பது, ஐம்புலமடக்கிச்சிவயோகஞ்சேர்தலாம். சமாதியென்பது, இந்திரியமுதலியதத்துவசேட்டைகட் கேதுவாயாக்கையுளின்று அவற்றோடு கூடினும் அவற்றிற்பற்றின்றியிருக்கும் ஆன்மாவாகிய தன்னைத்தான் காண்டலாம். இவற்றையனுட்டித்தவர்கள் சாரூபபதவியைப் பெறுவார்கள். அதாவது நம்மைப்போன்றுஉருவம்பெற்றுவாழ்தலாம். ஞானமாவது, ஞானாசாரியருடையதீக்ஷாக்கிரமத்தினால் வஸ்துத்திரயம்-தத்துவத்திரயம்-தசகாரியம்-என்னும்மூன்று ஞானங்களையுமறிந்து அஞ்ஞானத்தினின்றுநீங்குதலாம். இவற்றுள்வஸ்துத்திரயமாவன, பதி-பசு-பாசம் என்பன. இவற்றுளபதியாவது-ஆதியந்தமில்லாததும் உருவருவில்லாததும் குணங்குறியில்லாததும் எங்குநிறைந்துள்ளபரிபூரணமானதும் தனக்குமேலொரு கடவுளில்லாததும் மனோவாக்குக்கெட்டாததும் விருப்புவெறுப்பில்லாததும் உயிர்க்குபிராயிருப்பதும் இவைமுதலான அளவிறந்த தன்மையையுடைய நிட்களப்பொருளா யிருப்பதாம். பசுவாவது-அளவிடற்கரியதும் நித்தியத்துவமுள்ளதும் மலவிருளிலழுந்திருப்பதும், நமதுதிருவருளால் இருவினைக்கீடான சரீரமெடுத்து பலவாகியபுவனபோகங்களை அனுபவித்து இதனாற்புண்ணியபாவங்களைச்செய்து பிறப்பிறப்புள்ளதும் புண்ணியமேலிட்டால் இருவினையொப்பு மலபரிபாகமுண்டாகுங்காலத்தில்குருவருளால் நம்மைச்சேர்வதுமாம். பாசமாவது-ஏகத்துவமும் நித்தியத்துவமும் அளவிறந்தவல்லமையுமுள்ளதும் செம்பிற்களிம்புபோலச் சீவனைப்பற்றி அறி

வுமுழுவதையுமறைப்பதும் புண்ணியமேலீட்டால் பக்குவப்படுவது ம்இரவினிருளிலும் அதிகவிருளாவதுமாயிருப்பதுமாம். இனி தத்து வத்திரயமாவன, ஆத்மதத்துவம்-வித்தியாதத்துவம்-சிவதத்துவம்-என் பன. இவற்றுள் ஆத்மதத்துவம் பிரிதிவு-அப்பு,தேயு-வாயு-ஆகாய ம்என்கின்ற ஐந்துபூதங்களும், சோத்திரம்-தொக்கு-சட்சு-சிங்குவை ஆக்கிராணம்-என்கின்ற ஐந்துஞானேந்திரியங்களும், சத்தம்-பரிசம்-ரூபம்-ரசம்-கந்தம்-என்கின்ற ஐந்துதன்மாத்திரைகளும்,வாக்கு-பாதம் பாணி பாயுரு-உபத்தம்-என்கின்ற ஐந்துகன்மேந்திரியங்களும், மனம் புத்தி-சித்தம்-அகங்காரம்-என்கின்றநான்கு அந்தக்கரணங்களும் ஆகி யஇவ்விருபத்துநான்குமாம். வித்தியா தத்துவமாவது, காலம்-நியதி கலை-வித்தை-இராகம்-புருடன் - மாயை என்கின்ற இவ்வேழுமாம். சிவதத்துவமாவது, சுத்தவித்தை - ஈச்சுரம்-சாதாக்கியம்-சத்தி-சிவம் என்கின்ற இவ்வைந்துமாம். இவற்றிற்பூதமுதலாய ஆத்மதத்துவங்க ளுள் பிரிதிவு-உரத்துத்தரிக்கும், அப்பு-குளிர்ந்துபதஞ்செய்யும்-தேயு சுட்டொன்றுவிக்கும்,வாயு-சலித்தெவையுந்திரட்டும், ஆகாயம்-நிரந்த ரமாயிடங்கொடுக்கும், சோத்திரம்-சத்தத்தையறியும்,தொக்கு பரிச த்தையறியும், சட்சு-ரூபத்தையறியும், சிங்குவை-ரசத்தையறியும்,ஆ க்கிராணம்-கந்தத்தையறியும், வாக்கு-வசனிக்கும்,பாதம் கமனம்பண் ணும், பாணி இடுதலும்ஏற்றலுஞ்செய்யும்,பாயுரு-மலவிசர்க்கத்தைவி டும், உபத்தம்-ஆனந்தத்தைவிக்கும், மனம்-பற்றும், புத்தி-நிச்சயிக்கும், சித்தம்-சிந்திக்கும்-அகங்காரம்-கொண்டெழும்பும் எனவறிக. காலமு தலியவித்தியாதத்துவங்களுள் காலம் நிகழ்காலம்-இறந்தகாலம்-எதிர் காலம்-எனமுக்காலங்களைக்கற்பிக்கும்; நியதி - கன்மத்தைநிச்சயித்து அநேகசாதிநாமத்துவங்களையுண்டாக்கும்; கலை-ஆணவத்தைச்சிறிதே நீக்கி அந்தந்தசாதிகளுக்கேற்ற கருமங்களைப்பற்றுவிக்கும்; வித்தை அறிவையெழுப்பிக்கிரியையோடு ஞானத்தை ஓர்விக்கும்; இராகம் பெற்றதைச்சிறிதாக்கிப்பெறுதலில் இச்சையுண்டாக்கும்; புருடன்-ப ஞ்சேந்திரியங்களின் வழியாகவிடயத்திலே யழுத்துவிக்கும்; மாயை, தமம்-மாயை-மோகம்-அவித்தை-அநிர்தம் எனஐவகையாயிருந்துமய க்கும்; இவற்றுள்தமம்-சிவசைதன்னியத்தைமறைக்கும்; மாயைசகத் ரூபமான அன்னியாத்தோற்றத்திற்குக்காரணமாகியிருக்கும்; மோக -விபரீதஞானம் உண்டாக்கும்; அவித்தை-உணர்வழிக்கும்;அநிர்தம் ரூபத்துக்கன்னியமாகும் எனவறிக. சுத்தவித்தைமுதலிய சிவ

தத்துவங்களுள் சுத்தவித்தை-ஞானமேறிக்கிரியைகுறைந்திருக்கும்; ஈச்சுரம்-ஞானங்குறைந்துகிரியையேறியிருக்கும்; சதாக்கியம்-ஞானமுங்கிரியையும் ஒக்கிருக்கும்; சத்தி-கிரியையாயிருக்கும்; சிவம்-ஞானமாயிருக்குமெனவறிக. இவற்றுள் சிவம்சிவனுக்கிடம் நாதமென்றும்பெயர். சத்திகாருண்ணியத்திற்கிடம் விந்துவென்றும்பெயர். சாதாக்கியம் அநுக்கிரகத்துக்கிடம் சதாசிவமென்றும்பெயர். ஈச்சுரம் திரோபவத்துக்கிடம் மகேஸ்வரனென்றும்பெயர். சுத்தவித்தைசங்காரத்துக்கிடம் உருத்திரனென்றும்பெயர். இனி தசகாரியமாவன, தத்துவரூபம்-தத்துவதரிசனம்-தத்துவசுத்தி-ஆத்மரூபம்-ஆத்மதரிசனம்-ஆத்மசுத்தி-சிவரூபம்-சிவதரிசனம்-சிவயோகம்-சிவபோகம் என்பனவாம். இவற்றுள் தத்துவரூபமாவது அவற்றின்குணங்களைக்காண்கை; தத்துவ தரிசனமாவது அவைதன்னிடத்திலேநின்று சீவித்த முறையைக்காண்கை; தத்துவசுத்தியாவது அவைதனக்குவேறென்றறிந்து நீங்குகை; ஆத்மரூபமாவது ஆத்மஞானமென்னும் அறிவேவடிவெனவறிகை; ஆத்மதரிசனமாவது தத்துவங்களையறிந்துநீங்கி இவற்றினின்று நீங்கினவறிவு தானெனவறிகை; ஆத்மசுத்தியாவது பந்தமுத்தியிரண்டிலும்சிவனுபகரிக்கின்றானென்று தன்னுடைய சுதந்தர ஹானியையறிகை; சிவரூபமாவது தத்துவமுப்பத்தாறிற்கும் அப்பாலாய் வாக்குமனாதீதகோசரமாய்ஞானமேவடிவாயிருப்பதெனவறிகை; சிவதரிசனமாவது தத்துவமுப்பத்தாறையுமறிவித்து தரிசிப்பித்துநீங்கி இவற்றினின்று நீங்கிநிற்கும் ஆத்மாவையுந்தரிசிப்பித்துநிற்கின்ற ஞானமெனவறிகை; சிவயோகமாவது இந்தஞானந்தன்னைவிட்டு நீங்காதென்றறிந்துதான் அதுவாய்நிற்கை; சிவபோகமாவது தான் அந்தநேயத்திலே நின்றழுந்திச்சிவத்தைப் பெறுகையெனவறிக. இந்தமேலான ஞானத்தையனுட்டித்தவர்கள் சாயுச்சியபதவியையடைவார்கள். அதாவதுநம்மோடு இரண்டறக்கலந்திருப்பதாம். அன்பனே மேற்கூறிய சரிதாதிநான்குபாயங்களையுங் கைப்பிடித்து மனதில் ஆசிரியருடைய உருவத்தைப்போல தியானஞ்செய்து சோடசவுபசாரங்களையு நடத்துவதாகிய குருபாவனையையும், ஆலயங்களில் பூசித்துவரும் வடிவங்களைப்போல மனதிற்றியானித்து அபிடேகமுதலியவைகளை நடத்துவதாகிய சொரூபபாவனையும், ஆசிரியர் சொல்லியகுறியைப்பார்த்து மனதைப்பஞ்சேந்திரியவழியிற் செலுத்தாமலிருத்தலாகிய பூரணபாவனையையும், ஒன்றையுஞ்சுற்றிப்பாராமல் மனதைத் தற்போதத்தில் சேர்ப்பதாகிய

அதீதபாவனையையும்அனுசரித்திருப்பதே நமதுதிருவடிகளை யடையத்
தக்க உபாயமென்று சகலவேதாகமங்களி னுட்பொருள்களையெல்லா
ம் அங்கைநெல்லிக்கனிபோலத் தெரிவித்துத் தமதுபரிபூரண கடாட்
சமும் பாலித்து எழுந்தருளினர்.

பின்னர்புருசுண்டி அவையனைத்தையும் அன்போடுகேட்டமகத்
துவத்தால் இப்போது சீவன்முத்தராகி யிருக்கின்றனனென்று சொ
ல்ல மீட்டுஞ்சூரசேனமகாராசன் தேவேந்திரனைப்பணிந்தெழுந்து இ
வ்விடத்திற்சங்கடசதுர்த்திவிரதத்தையநுட்டிக்கின்ற ஒருவனாலிவ்
விமானம் மீட்டுமெழும்பி தேவலோகஞ்செல்லுமென்று தேவரீர்சொ
ன்னபடியால் அவ்விரதத்தின் மகிமையையும் அடியேற்குத்தெருட்ட
வேண்டுமென்றுபிரார்த்தித்தனன். அதற்குத்தேவேந்திரன் சொல்லு
வான், அரசனே இப்புருசுண்டியென்பவர் இத்தன்மைத்தானமகத்து
வத்தோடு மிருக்கின்றகாலத்தில்பாவஞ்செய்தோரையெல்லாம் பலவ
கைநரகங்களிற்செலுத்தி வதைசெய்யவும் புண்ணியஞ்செய்தோரை
யெல்லாம் போகபூமிகளில்விட்டு உபசரிக்கவுஞ்செய்து தனது நடுவு
நிலைமைதவறாது நீதிசெலுத்திவருகின்ற யமதருமராசனுலகத்திற்கு
ஒருநாள்நாரதமகாமுனிவர்செல்ல அவரைக்கண்டவுடன் யமதருமரா
சன் விரைந்தெழுந்து எதிர்கொண்டுவந்து சோடசவுபசாரங்களோடு
ம்பூசித்து சுவாமி-தேவரீர் இங்கெழுந்தருளியகாரியத்தை அடியேற்
குணர்த்தியருளவேண்டுமென்று பிரார்த்தித்தான். அதற்குநாரதமு
னிவர் உனது உலகத்தின்வளங்களைக்காணவேண்டி இங்குவந்தனமெ
ன்றுசொல்லலும் அவ்வெமதருமராசன் மகாபாக்கியமென்று ஆனந்தி
த்து அம்முனிவரையழைத்துக்கொண்டு அந்நகரத்தில்நவரத்நச்சொர்
ணமயமாயிராநின்ற அளவற்றவிநோதங்களைக்காட்டி, நரகபூமியில
ழைத்துக்கொண்டு சென்று அங்கு அளவற்றபேர்கள் இருபத்தெண்
கோடிநரகங்களிலும்வீழ்ந்து வருந்துவதைக் காண்பித்தனன். அவை
யனைத்தையும்நாரதமுனிவர்கண்டு அப்பாற்செல்லுகையில் கும்பீபா
கமென்னும் ஓர்நரகத்துள் தேவர்களும்புகழ்ந்து வணங்கத்தக்கதவசி
ரேஷ்டராகிய புருசுண்டியினுடைய சுற்றத்தினரெல்லாங் கிடந்துவரு
ந்துகின்றதைப்பார்த்து பரமசிவத்தினது திருவடிகளைமனதிற்றியானி
த்து யமதருமராசனிடத்தில் விடைபெற்று அவ்விடத்தினின்றுநீங்கி
க்ககிருபையோடும் ஞெரேலென்று புருசுண்டியிடத்திற்குவந்து
த்திப்பிரதாபரோ நீர்விநாயகக்கடவுளுடைய பெருங்கருணையி

ஞலே அவர்சாரூபத்தைப்பெற்றிங்ஙனமிருக்க உம்முடைய சுற்றத்தினரெல்லாம யமலோகத்திற்கும்பீபாகமென்னும்நரகத்தில் வீழ்ந்துவருந்துகின்றார்களாதலால் அவர்களை நற்கதியிற்சேர்ப்பிக்கவேண்டியமுயற்சிகளை நடத்தக் கடவீரென்று சொல்லி ஆகாயமார்க்கமாகச் சென்றனர்.

அப்பால் புருசுண்டியென்பவர்மனம்வருந்தி இதுகாறும் இக்காரணத்தை யாமறியோமே இதற்கினியென்செயயத் தக்கதென்று யோசித்து சிறிதுநேரந் தியானித்திருந்து தமதுமனத்துள் ஒருநிச்சயத்தையுணர்ந்து சகலபொருள்களையுஞ் சேகரித்து நரகத்தில்வீழ்ந்து வருந்துகின்ற சுற்றத்தினரைக் குறித்து வேதாகம விதிப்படி சங்கடசதுர்த்திவிரதத்தை யநுட்டித்து அவ்விரதப்பலனை முன்னர் தம்மையாட்கொண்டு பதிபசுபாசவிளக்கத்தினை யுபதேசித்தருளிய கணேசமூர்த்தியினுடைய திருக்கரத்தில் தத்தஞ்செய்தனர். இவ்வாறு தத்தஞ்செய்வதன்முன்னமே கும்பீபாகமென்னு நரகத்தில்வீழ்ந்து வருந்தியிருந்தவர்களெல்லாம் விமானங்களிலேறித் தெய்வலோகம்போய்ச் சேர்ந்தார்கள். ஆதலால் ஒருதினத்திற்செய்த அவ்விரதத்தின்பயன் இத்தன்மையதாயின் எக்காலத்தும் அதனையநுட்டித்து வருமவர்களடையும்பயன் யாவராலளவிட்டுரைக்கற்பாலதென்று தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச்சொன்னான்.

உஉ-வது-புருசுண்டி உபாசித்தபடலம்.

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

## இருபத்துமூன்றாவது,

## அங்காரக னுபாசித்தபடலம்.

பொங்குநான்மறைவலீர் புருவிற்சுண்டனை
ஐங்கரற்போற்றிய வார்வமேதினும்
புங்கவர்தம்மொடு புணரும்வேட்கையால்
மங்கலனருச்சித்த மாணையோதுவாம்.

ஓசவுனகாதிமுனிவர்களே விநாயகக்கடவுளுடைய சங்கடசதுர்த்திவிரதத்தைப் புருசுண்டிமுனிவர் அநுட்டித்து தம்மினத்தினரையெல்லாம் விண்குடியேற்றுவித்த விவரத்தினைச் சொன்னோம் இப்பால் அங்காரகனுபாசித்த திறத்தினைச்சொல்லுவோங் கேட்பீராக. மீட்டுந்தே





வேந்திரன் சூரசேனமகாராசனை நோக்கிச்சொல்லுவான் அரசனே உலகமுழுவதுந் தொழுதேத்தும்படியாகக் காலந்தவறாமல் நீரைச்சுரந்தளிக்கின்ற காவிரிநதிக்கு ஒருதுறைவிடமாகிய சையவரைச்சாரலில் சகல வளங்களு நிறைந்த ஓர் பட்டணத்தில் எல்லாவேந்தர் கட்கும் இராசகம்பீரவத்திற்கொப்பானவனாய் வையமுழுவதும் வணங்கும்படி அரசாட்சிசெய்துவந்த கிருதவீரியனென்னும் இயற்பெயரையுடைய ஓரரசனிருந்தான். அவன் சுகந்தையென்கின்ற தனதுமனைவியோடும் வாழ்வுற்றிருக்குநாளையில் தன்னைநற்கதியிற் சேர்ப்பிக்கவல்ல புத்திரப்பேறின்றி மனவருத்தமுற்றுத் தானுந் தன்மனைவியுமாகவனத்திற்சென்று காற்றையுஞ் சருகையும் புசித்து உடல்வருந்தத்தவஞ்செய்துகொண்டிருந்தான். அதை நாரதமுனிவர் அறிந்து பிதிருலகத்திற்சென்று அக்கிருதவீரிய மகாராசனுடைய தந்தையைக்கண்டு பிதிர்தேவனே - வேதவொழுக்கங்களில் நின்று தனது செவ்விய கோலைத் திசையனைத்தினுஞ் செலுத்தி நீதியோடும் அரசாட்சிசெய்துவருகின்ற உனது குமாரனாகிய கிருதவீரியமகாராசனானவன் இதுகாறும் ஓர் புத்திரப்பேறில்லாத துக்கத்தினால்தன்னகரத்தைவிடுத்து வனத்திற்சென்று உடல் - உயிர் - உள்ளம் - என்னுமிவைகள் வருந்தும்படியாக அரிய தவத்தினைச் செய்கின்றான். அவன்மனைவியும் அவ்வாறே இருக்கின்றனள். இனியவர்கட்குப் புத்திரனுதித்தாலன்றி உயிர்வைத்திருக்கமாட்டார்கள். பின்னர் உனதுவமிசமும் விருத்தியில்லாமற் போய்விடும், ஆதலால் உனது புத்திரனுக்கு மக்கட்பேறுண்டாகத்தக்க முயற்சியை விரைவில் நடாத்தக் கடவையென்று சொல்லித் தமதிருக்கையை யடைந்தனர்.

இப்பால் அவையனைத்தையும் பிதிர்தேவன் கேட்டமாத்திரத்தில் மனம் வருந்தி அவ்விடத்திற் சத்தியலோகத்திற்சென்று பிரமதேவனைக்கண்டு சாஷ்டாங்கமாகவணங்கி சுவாமி - மறத்தாறு கடந்திட்டிய பொருள்களை அறத்தாற்றிற்செலவுசெய்து எல்லாப்புகழையும் எளிதிற் சம்பாதிக்கவல்ல எனது செல்வக்குமாரனுக்கு இதுகாறும் ஒரு புத்திரப்பேறில்லாதகாரணம் யாதினாலோ அதனை அடியேற்கு விளம்பியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டான். அதற்குப்பிரமதேவன் சொல்லுவான் ஓ பிதிர்தேவனே - உன்மைந்தனாகிய நகவீரியன் முற்சனனத்திலும் இப்போது வசித்திருக்கின்ற ஊரி யிசத்திற்றானே பிறந்து சாமனென்னும் இயற்பெயரையு



கித்துக் கணேசனென்னும் புத்திரனோடு வாழ்ந்திருக்குங்காலத்தில் ஓர்கால் பெருக்கவிஷியென்னுங் கருங்குலப்பாம்பின் வெவ்வாய்ப்பட்டு வெதும்புவானாகி நிகரற்ற துன்பத்தை நெடுகோளனுபவித்து இரண்டு தினம் மூன்றுதினமாகப் பட்டினிகளிருந்து இடையிற் கிடைத்ததைப் புசித்துக்கொண்டு தனது வாழ்நாளைக்கழித்து வருகையில் ஓர்நாள் ஏதுங்கிடையாதவனாய் வருந்திப் பசியின்கொடுமையை யாற்றமாட்டாது விதிதப்பி வழிபறித்துண்ண நினைத்து நெருங்கிய கானகத்திற் புகுந்து அதில் பன்னிரண்டு பிராமணர்கள் வழிச்செல்வதைநோக்கி அவர்களெதிரில் யமனையொப்பச்சென்று இருப்புத்தடிகொண்டு மோதி உயிரை விசும்பிலேற்றி உடல்களை மலைக்குகைகளிற்போட்டு அவர்கள் வைத்திருந்த வஸ்திராபரணமுதலிய பொருள்களைக் கவர்ந்துகொண்டு இராக்காலத்தில் வீட்டிடைச்சென்று தாளிட்டிருந்த கதவத்தைப் பலமுறைதட்டித் தன்குமாரனைக் கணேசா கணேசாவென்று மூன்றுதரங் கூவினான். அதற்கு அக்கணேசன் அன்றுமுழுவதும் அன்னபானங் கிடையாமல் மிக்கசோர்வினையடைந்து உயிரிழந்து தனியாய் வீழ்ந்துகிடந்தமையால் தனக்குக்கதவந்திறப்பார் ஒருவருமின்றி மற்றொருவழியாகச்சென்று வீட்டையடைந்து தன்புதல்வன் இறந்து கிடக்கின்றமையைப் பார்த்து மிக்கதுயரங்கொண்டு தனக்கிருந்த பசியின் கொடுமையினாலும் புத்திரனிறந்தானென்னுந் துக்கத்தினாலும் பிரமஹத்தி சூழ்ந்துகொண்டதனாலும் அன்றிரவெல்லாம் உறங்காதிருந்த தன்மையினாலும் மறுநாளுதயத்தில் காலனையாற் காயத்தைவிட்டனன். அத்தினம் சங்கட்டசதுர்த்தியாக விருந்ததன்றி அதற்கு முன்னாள் தனது புதல்வனாகிய கணேசன் அன்னபானாதிகளின்றி யிறந்தமையால் உடனே தெய்வவிமானம்வர அதில் அக்கணேசனென்பவன் ஏறி விநாயகலோகத்திற்போய்ச்சேர்ந்தான். மேற்கூறிய சாம்பனோவெனில் அத்தினந் தன்புதல்வனைக்கணேசாவென்று மூன்றுதரங்கூவிய தன்மையால் இச்சனனத்தில் உனக்குப்புதல்வனாயவதரித்து காமனுங்கண்டு நாணத்தக்க கட்டழகினையுடையவனாகி உலகமெல்லாம் வணங்கத்தக்க அரசுரிமையையடைந்தனன். ஆயினும் அந்தணரைக்கொன்ற பிரமஹத்திபாவத்தினால் இதுகாறும் புத்திரப்பேறில்லாதவனாயினான். ஆதலால் உன்குமாரனாகிய இவ்வதவிரியனுக்குப் புத்திரப்பேறுண்டாகவேண்டுமென்று கருத்திருக்குமாயின் மேற்சொன்ன கொலைபாதகச்சேட மொழியுமாறு யானைமுகக்கடவுளாகிய க

ணேசமூர்த்தியினது சங்கடசதுர்த்தி விரதத்தை யநுட்டிக்கவேண்டும். அவ்விரதத்தை யநுட்டிக்கு முறைமையைச் சொல்லுவோங் கேட்பாயாக.

மாசிமாதத்தில் அமரபட்சத்தில் செவ்வாய்க்கிழமைகூடிய சதுர்த்தியில் அவ்விரதத்தைத் துவக்கி அன்று உதயத்திலெழுந்து ஸ்நான முதலிய கடன்களைமுடித்து திருவெண்ணீறணிந்து உருத்திராக்கம்பூண்டு சுத்தபூமியிலிருந்து சிரசாதிபாதம்வரையில் விதிப்படி நியாசஞ்செய்து கர்மாக்கினிபாதிகளைத்தணித்து கணேசமூர்த்தியினுடைய பாதபதுமங்களை மனதிலிருத்தி ஏகாக்கரமந்திரம் சடாக்கரமந்திரம் திருநாமமந்திரம் என்னும் இம்மூன்றினையுந் தியானித்து அன்னபானாதிகளை நீத்து சந்திரோதயமானவுடனே விநாயகமூர்த்தியை யெழுந்தருளச்செய்து சகல பூசாதிரவியங்களோடும் பூசனைமுடித்து சந்திரனுக்கும் அருச்சனையாதிகளை நடத்தி வேதியர்களை வரவழைத்து அவர்கட்கு அறுசுவையோடுங்கூடிய உண்டியை அன்போடளித்து அன்றிரவு முழுவதும நித்திரையின்றியிருந்து விநாயகப்பெருமானுடைய திவ்வியசரித்திரங்களைக் கேட்டுக்கொண்டிருப்பது விதியாகும. பெறுதற்கரிய இவ்விரதத்தைச் சதுர்த்திதோறும் ஒருவருடம்வரையிற் செய்கின்றவர்களுக்குப் புத்திரப்பேறுமுதலான பாக்கியங்களுண்டாகும். மேலும் அத்தினம வன்னிவிருக்கத்தடியிலிருந்து அநுட்டிப்பார்களாயின் கூன்குருடுமுதலிய எச்சங்களொழியப்பெற்றுஎல்லாப்பொருள்களையும் வேண்டுமட்டும் பெறுவார்கள். ஆதலால் இத்தன்மைத்தாகிய மேலானவிரதமே நீகருதியகோரலை முடிக்கத்தக்கதென்று பிரமதேவன் சொல்ல அவையனைத்தையும பிநிர்தேவன் அமுதாகக் கேட்டு மனமகிழ்ச்சிகொண்டு மீட்டுந்தொழுதெழுந்து சுவாமி - விநாயகப்பெருமானுக்கு செவ்வாய்க்கிழமையில் வருகின்ற சதுர்த்தி முக்கியமாயிருக்கின்றகாரணம யாதுகொண்டோ அதனையும் அடியேற்குத் தெரிவித்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டனன், அதற்குப் பிரமதேவன் சொல்லுவான்.

முன்னொருகாலத்தில் நருமதை நதிதீரத்தில் அரையிற் சர்ப்பக்கச்சினைவீக்கிய விநாயகக்கடவுளுக்கு அன்பராகிய பரத்துவாசனென்னும் ஒருமுனிபுங்கவரிருந்தார். அவர் ஒருநாள் - அந்நருமதையில் ஸ்நானஞ்செய்யப் புக்கபோது யாவருந் தெய்வரம்பையோவென்றெண்ணத்தக்கவனப்பினைவாய்ந்த ஒருஸ்திரீயானவள்சிலகூட்டத்துடன்

அந்தியில் ஸ்நானஞ்செய்யவந்து ஆதன்கரையின்கணின்றனள். அவளை அப்பரத்துவாசமுனிவர் பார்த்தமாத்திரத்தில் அவர் நெஞ்சமானது கூற்றமோ கொடும்பகழியோ வென்றுசொல்லத்தக்க அவளது கண்வலையிற்சிக்கி அலமற அதையம்முனிவர் சிறிது மாற்றுவதாயினர். அவ்வாறு மாற்றுவதற்கு முன்னமே அவருடையவீரியம் வெளிப்பட்டுப் பூமியில்விழ்ந்தது. அதற்கம்முனிவர் மனங்குன்றிப் பின்னரொருவாறுதேறித் தமதிருக்கையைச்சேர்ந்து தவஞ்செய்துகொண்டிருந்தனர். இப்பால் அவ்வீரியமானது விழுந்தவிடத்திற்றானே ஓரிளமகவாகியிருக்க அதைப் பூமிதேவியெடுத்து நமக்குநற்பேறு கிடைத்ததென்று அன்போடுவளர்த்துவந்தனள். பின்னர் அக்குழந்தையானது தனதுமேனி செவ்வானம்போலச்சிவந்து அழல்போல ஒளிவிட்டிருந்தமையால் அங்காரகனென்றும் வீரியமாய் பூமியில்விழ்ந்து பிள்ளையானதால் பூமகனென்றும் பெயராவகித்துத் தெருக்களில் விளையாடிக்கொண்டிருக்குங்காலத்தில் ஓர்நாள் தனதன்னையாகிய பூமிதேவியிடத்தில்வந்து சாஷ்டாங்கமாகவணங்கி யெழுந்து அம்மா அடியேனைப்பெற்று வளர்த்ததாய் நீயாயினை, என்தந்தையாரோ அறிகின்றிலேன், அதனை இப்போது எனக்குத் தெரிவித்தருளவேண்டுமென்றுவினவ, அதற்கப்பூமிதேவி இசைந்து உனதுதந்தை பரத்துவாசமுனிவனென்று அறிவித்து உடனே அப்பிள்ளையை யழைத்துக்கொண்டு அம்முனிவரது ஆசிரமத்திற்சென்று அவர்திருவடிகளில் வணங்கி சுவாமி - இச்சிறுவன் தேவரீர்வீரியத்தினின்றும் உதித்தவன் இனித்தேவரீரே அவனைக்கைக்கொள்ள வேண்டுமென்றுசொல்லி அவனையவரிடத்தில் விடுத்துச்சென்றனள். அதற்கம்முனிவர் மனமகிழ்ந்து தமது இரண்டுகரங்களாலும் அக்குழந்தையைத் தழுவியெடுத்து உச்சிமோந்து உபநயனாதிகளைச்செய்து வேதமோதுவித்து கலைடாதிகளையுங் கற்பித்து கணேசமூர்த்தியினுடைய திருமந்திரத்தை உபதேசித்து அதனைத்தியானிக்கு முறைமையினையுந் தெருட்டி நீ தக்கவிடத்திற்சென்று தவஞ்செய்துகொண்டிருக்கக் கடவையென்றேவினர். உடனே அங்காரகன் அவ்வாசிரமத்தினின்றுநீங்கி மற்றொரு வனத்தினுட்சென்று ஒப்புயர்வற்ற மகாகணபதியினுடைய திருவடித்துணைகளையே சார்பாகப்பற்றி நாடோறும் அவர்மந்திரத்தைக்கணித்து ஆயிரவருடவரையிற் றவஞ்செய்துகொண்டிருந்தனன். பின்னர் அத்தவத்திற்கு விநாயகமூர்த்தி அருள்சுரந்து மதம்பொழிகின்







ற யானைவதனமும் அருட்பார்வையும் துதிக்கரமும் பத்துபுயங்களும் ஒளிவீசுகின்ற திருமேனியும் உடையவராய் அவனெதிரிற் பிரத்தியட்சமாக, உடனே அங்காரகன் விரைந்தெழுந்து சாஷடாங்கமாக நமஸ்காரஞ்செய்து ஆனந்தக்கூத்தாடி வேதாகமங்களாற்றுதித்து கரைந்து கரைந்து கண்ணீர்பெருக்கி உடன்முழுவதும் புளகாங்கிதங்கொண்டு நின்றனன். அதற்குக்கங்கையும் கொன்றையும் அணிந்தசடாபாரத்தினையுடைய கணேசமூர்த்தியானவர் சந்தோஷித்து அப்பனே நீசெய்த தவத்திற்கு மெச்சினோம் உனக்குவேண்டிய வரங்களைக் கேட்பாயாகவென்று திருவாய்மலர்ந்தனர். அங்காரகன் மீட்டுந்தொழுதெழுந்து அரியதவத்தர்கட் கானந்தவீடளிக்குங் கர்த்தனே - தேவரீர் திருவடிகளில் இடைவிடாதபத்தியும் தேவர்களோடுகூடி அமுதுண்ணத்தக்க உறவும் கோள்களோடு ஒன்றாகவதியும்பேறும் அடியேற்குக் கிருபைசெய்வதன்றி யான்தேவரீர் தரிசனங்கிடைக்கப்பெற்ற இத்தினஞ்சதுர்த்தியாதலால் இச்சதுர்த்தி திதியில் எனதுவாரமாகிய அங்காரகவாரஞ்சேர்ந்து வருகின்றதினத்தில் சுவாமிகளைத் தொழுகின்றபேர்களுக்கு வினைப்பற்றுகளை யொழித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அவ்வாறே கணேசமூர்த்தி யநுக்கிரகஞ்செய்து அன்பனே-யாம் - சகலமங்களத்தோடும் உனக்குக் காட்சிதந்தமையால் அதைத்தெரிசித்தவுனக்கு மங்களனென்று பெயருண்டாகக்கடவது நீ இன்னுஞ்சிலநாள்வரையில் இவ்விடத்திலிருந்து நம்மைப்பூசித்து வரக்கடவையென்று திருவாய்மலர்ந்து தமது திருவுருவைக் கரந்தருளினர். பின்னரவ்வங்காரகன் அவ்விடத்திற்றானேயிருந்து பசும்பொன்னால் ஓராலயஞ் சமைத்து அதிற்றனக்குக்காட்சிகொடுத்தருளிய கணேச மூர்த்தியினது திருவுருவத்தை தாபித்துப் பூசனைசெய்துவந்தனன். இவ்வாறு சிலகாலம் பூசித்துக்கொண்டிருக்கையில் விநாயகப்பெருமானுடைய பேரருளால் ஒருதெய்வவிமானம்வர அதில் அவ்வங்காரகன் ஆரோகணித்துத் தேவலோகத்தைச் சேர்ந்து தேவர்களோடுங்கூடி யமுதுண்டு நவக்கிரகங்களில் ஒருவனாய்க் கலந்தனன். ஆதலால் அவ்வங்காரகனது தினத்தில் வந்த சதுர்த்தியானது ஏனைய சதுர்த்திகளைவிட விநாயகமூர்த்திக்கு மிக்கசந்தோஷத்தை யளிப்பதாயிருப்பதன்றி அநுட்டித்தவர்கட்கு எல்லாச்சங்கடங்களையும் போக்கத்தக்கதாயு மிருக்கின்றமையால், அதைச் சங்கடசதுர்த்தியென்று சொல்லப்படும். அவ்வங்காரகனாற் பிரதிட்டைசெய்த விநாயகமூர்த்தியானவர் ஙி





னைத்தவரங்களை நிகரின்றி யளிப்பவராதலால் எல்லாத்தேவர்களும் அவரைப்பூசித்து சிந்தாமணிவிநாயகரென்று திருநாமஞ்சாத்தினர்கள். மேலும் அவ்வங்காரகன் அம்மூர்த்தியை அவந்திமாநகரத்திற்கு மேற்புறத்திற்பிரதிட்டைசெய்து பூசித்ததால்அத்தலத்திற்குக் காமதமென்று வேறொருபெயர்வழங்குகின்றது. அவ்விடத்தில் யோகிகள் சித்தர்கள் முதலாயினோரும் வந்து வணங்குகின்றார்கள். என்றுபிரமதேவன் பிதிர்தேவனுக்குச் சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச்சொன்னான்.

உக - வது, அங்காரகனுபாசித்தபடலம்.

முற்றிற்று.



உ

கணபதிதுணை.

இருபத்துநான்காவது.

## சந்திரன் உபாசித்தபடலம்.

நந்துபாணிசேய் நண்பிரானலங்
தந்துபாணியா லுய்ந்ததோதினும்
முந்துபேணிய முதுவராற்கடிந்
திந்துபேணிய வியல்பையோதுவாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே விநாயகமூர்த்தியை அங்காரகனநுட்டித்ததையும் சதுர்த்தி அங்காரகசதுர்த்தியான வரலாற்றினையுஞ் சொன்னோம் இப்பால் சந்திரனுபாசித்த திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீராக. மீட்டுந்தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொல்லுவான் அரசனே கிருதவீரிய மகாராசனுடைய பிதிர்தேவன் பின்னும் பிரமதேவனைப் பணிந்தெழுந்து சுவாமி - மேற்கூறிய அங்காரக சதுர்த்தியைச் சந்திரவுதயத்திற் பூசிக்கச்சொன்ன வரலாற்றையுந் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொள்ள அதற்குப் பிரமதேவன் சொன்னதாவது ஓ பிதிர்தேவனே முன்னொருகாலத்தில் அண்டர் நாயகராகிய சிவபிரானைத் தெரிசிக்குமாறு யான்கைலாயகிரிக்குச்சென்றேன். அப்போது சிவபெருமான் விநாயகமூர்த்

நியோடுஞ் சுப்பிரமணியக்கடவுளோடுந் திருவோலக்கத்தி லெழுந்தருளியிருந்தனர். அச்சமயத்தில் நாரதமுனிவர்வந்து தமதுகையுறையாகக்கொண்டுவந்த ஓர்கனியைக் காத்தனெதிரில்வைத்து திருவடிகளிற் சாஷ்டாங்கமாகத் தொழுதெழுந்து தமது யாழினைமீட்டி தேனுண்டுபெய்யு மேகம்போல இசையாகிய அமுதத்தைப் பொழிவதாயினர். அவ்விசையமுதத்தைச் சிவபெருமான் செவிமடுத்து அம்முனிவருள்ளத்தை மகிழ்ச்சிபெறச்செய்து அவர்கையுறையாகத் தந்த கனியையெடுத்து எனது முகத்தைநோக்கிப் பிரமனே நம்மிருபக்கலும் விநாயகமூர்த்தியுஞ் சுப்பிரமணியனு மிருக்கின்றதால் இவர்கட்குள் இக்கனியை யாவர்க்குத்தரத்தக்கதென்று வினாவியருள அதற்குமுருகக்கடவுள் இளையவராதலால் அவருக்கே கொடுக்கத்தக்கதென்று சொன்னேன். அவ்வாறே யதனை அவர்க்களித்தனர். அதைக்கணேசமூர்த்தியறிந்து விழிகளிற் றீப்பொறிகள் சிதறும்படியாகக் கோபித்து என்னைநோக்கலும் முன்னஞ்சிவபிரானால் எனதுசிர மறுப்பட்டபோதுகொண்ட பயத்திலும் அதிகபயத்தையடைந்து என்னுடனிருந்த கணங்களோடும் அவர் சமூகத்திற்சென்று திருவடிகளிற் றீர்க்கதெண்டன்செய்து பலமுறை வேதாகமங்களாற்றுதித்து சுவாமீ - அடியேன் செய்தகுற்றத்தை மன்னித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துக்கொண்டேன். அதற்கு அக்கணேசமூர்த்தி மனதிரங்கி யான்கேட்டுக்கொண்டவாறே கிருபைபுரியுஞ் சமயத்தில் அதைப்பார்த்துக்கொண்டிருந்த சந்திரன் தன்னுள்ளத்தின்கண் அவமதிப்புகொண்டவனாய்ச் சிறிதுபல்லைக்காட்டி நகைத்தனன். அதைக்கணேசமூர்த்தி நோக்கி மிக்ககோபங்கொண்டு பெரியோர்களிருக்கின்ற சபையில் சிறிதேனு மடக்கமில்லாமல் நகைத்தனையாதலால் இனி நீ உலகத்தில் பிரகாசமின்றி மறைந்துபோகக்கடவது உன்னுருவத்தைக் கண்டவர்களும் இடருழக்கக் கடவரென்று சபித்தனர். இச்சாபந்தனைப் பெற்றவுடனே சந்திரன் ஆகாயமார்க்கமாய்த் திரிதலற்றுத் தன்னொளியும் மறைப்பட்டவனாய் - மிக்கமனவருத்தத்தோடு தனதிருக்கையிற்சென்றிருந்துவிட்டனன். பிதிர்தேவனே - ஏளனமான நகையெவரிடத்திற்செய்தாலும் அதனாற்பின்னர் துன்பம்வருமென்று பெரியோர்கள் கூறியிருக்க, அப்பெரியோர்களிடத்தில் அதனைச்செய்து யாவர் பிறக்கவல்லவர்கள். அவ்வழியாமையால் தெள்ளிதிங்களுந் தீதுற்றவா. இவ்வாறுசந்திரன் ஒளிமழுங்கிமறைந்துபோகவும் தேவ

ர்கட்கு அமுதபானங் கிடையாமல் வருந்தி அவர்கள் இந்திரனிடத்திற் சென்று முறையிட அவ்விந்திரன் அதிகதுயரங்கொண்டு இவ்விபத்தைக் கணேசமூர்த்தியே தீர்க்கத்தக்கதென்று நிச்சயித்து எல்லாத் தேவர்களோடும் அவர் சமுகத்திற்சென்று அவரது பாத பதுமங்களைத்தொழுதெழுந்து ஓ தீனசரண்ணிய மூர்த்தியே விண்ணுலகத்தார்க்கு அமுதஞ்சுரத்தலும மண்ணுலகத்தார்க்குப் பயிரை வளர்த்தலுஞ் சந்திரனுக்குரிய கடமையானது தேவரீரது கட்டளையேயன்றி வேறன்று. அச்சந்திரன் இப்போதில்லாமையால் இவ்விரண்டுலகமு மாழ்கியிருக்கின்றன. சிறியோர்செய்த பிழையைப் பெரியோர் பொறுப்பது கடனாதலால், அறிவினனாகிய சந்திரன்செய்த குற்றத்தைத் தேவரீரே பொறுத்தருளாவிட்டால், மற்றையாவரிடத்தில் பொறுமை நிற்கமாட்டும். ஆக்கவும் அழிக்கவும்வல்ல ஓ பரம்பொருளே மிக்க துயரத்தில் மூழ்கியிருக்கின்ற சந்திரன் சாபத்தைத் தேவரீர் கிருபைகூர்ந்து நிவிர்த்திசெய்தருளவேண்டுமென்று பலமுறை துதித்து இரந்தனன். இவ்வாறு மனத்துயர்கொண்ட எல்லாத்தேவர்களோடுந் தேவேந்திரன் செய்துகொண்ட விண்ணப்பத்திற்கு விநாயகக்கடவுள் செவிகொடுத்து இந்திரனே - நெருப்புசுடாமற் குளிர்ந்தாலும் இருள் சூரியனை விழுங்கப்பட்டாலும் பூமிக்குப்பொறுமையற்றாலும் நமதுவாக்கியம் எக்காலத்து மாறுந்திறமன்று. நம்மைநன்மையோடுவந்து நயந்து போற்றினபேர்க்கு இன்மையென்னுந்துன்ப மெய்துதலுமில்லை. இதுவே நமதுதன்மையென் றறியக்கடவை. ஒருசந்திரனுக்களித்த சாபத்தினிமித்தம நீங்கள்யாவரும் பரிந்து கேட்டுக்கொள்வதால் அவனைச் சிறுமைசெய்கின்ற சாபத்தை நிவிர்த்திசெய்கின்றோம். அஃதெவ்வாறெனில் - ஆவணிமாதம் பூர்வபட்சத்தில் வருகின்ற சதுர்த்தியில்மாத்திரம் அவனையாவரும் பார்க்காதிருக்கக்கடவர்கள். மறந்தேனும் பார்ப்பார்களாயின் அவர்கள் பலவகைப்பாதகங்கட்கும் பாத்திரர்களாகி இடும்பைக் கடலினின்று மெழுந்திரார்கள். மற்றையநாள்களி லெல்லாம் முன்போலவே அவனுருவினையாவரும் ஆகாயத்தின்கண் காணலாம். இதனையறிந்து நடந்துகொள்ளக் கடவீர்களென்று திருவாய்மலர்ந்தருளினர். அத்திருவாக்கினைக் கேட்டலுந் தேவர்களெல்லாம் உய்ந்தோம் உய்ந்தோமென்று துள்ளி ஆனந்தக்கூத்தாடினார்கள். இப்பால் இந்திரன் அவ்விடத்தினின்றும் விடைபெற்றுச் சந்திரனிடத்திற்சென்று விநாயகக்கடவுளநுக்கிரகித்த முறைமையைக்கூறி, அக்க





டவுளது ஏகாக்ஷரமந்திரத்தை உபதேசித்து, ஓ குமுதநண்பனே-நீ உன்மனதிற் கணேசமூர்த்தியை யிருத்தி, அவர்மனுவாகிய இவ்வேகாக்ஷர மந்திரத்தை இடைவிடாது தியானித்து, அவர் பெருங்கருணையைப் பெற்றுக்கொள்ளக்கடவையென்று சொல்லி எல்லாத்தேவர்களோடுந் தனது சொர்க்கலோகத்திற்குப் போய்விட்டான். பின்னர் சந்திரன் அவ்விடத்தினின்று நீங்கி, கங்காநதியின் தக்ஷணதீரத்திற் சென்று, சர்வசித்திகளையுங்கொடுக்குந் தன்மையாற் சர்வசித்திகரமென்று சொல்லத்தக்க ஓரிடத்திலிருந்து மனோதிடங்கொண்டு ஏகாட்சரமந்திரத்தை இருபத்திரண்டுவருடங் கணித்தான். அதற்குக் கணேசமூர்த்தி மனதிரங்கி, ஒற்றைக்கோட்டினையுடைய யானைமுகத்தோடும் அவனுக்கெதிரிற் பிரத்தியட்சமாயினர். உடனே சந்திரன் விரைந்தெழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, விழிகளில் ஆனந்த நீர்த்தாரைகளைச் சொரிந்து, சுவாமி - அறிவிலியாகிய அடியேன் அறியாமற்செய்த பிழையை முழுவதும் பொறுத்து, என்னைக்குழமியரிக்கின்ற கொடுந்துன்பநோயை வீழச்செய்து, தேவரீரது மெய்யருளைத்தந்து ரட்சிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். அதற்கு விநாயகக்கடவுள் கிருபைகூர்ந்து சந்திரனே - உனக்குவேண்டிய வரமெல்லாம் முன்னமே கொடுத்திருக்கின்றோம், இன்னுமோர் வரமுந் தருவோங் கொள்ளக்கடவாயாக, அஃதாவது சங்கடங்களை நீக்கிக் கொள்ளவேண்டினோர், அங்காரக சதுர்த்திதோறும் நீ உதயமாகின்ற சமயத்தில் நம்மைப்பூசைசெய்து, உன்னையும் அருச்சித்து துதிசெய்யக்கடவர். உன்னையாவருந் தொழும்படியாக, உனது கலைகளுள் ஓர் கலைமாத்திரம் நமதுமுடியின்மீ திருக்கக்கடவது. என்றிவ்வாறு அருள்கூர்ந்து அவனை ஆகாயத்திற்செல்ல விடைகொடுத்து, தமது திருவுருவைக் கரந்தருளினர். இப்பால் சந்திரன் தனது பகிர்முகத்துள்ள மலினமெல்லாம் ஒழிந்தமையால், அகமுகத்துள்ள இருளுங்கடந்தவனாய், உடனே எண்ணற்ற கிரணங்களைக்கொண்டு, முன்னிருந்ததினும் அதிகப்பிரகாசத்தினை யடைந்து, அழகுபொருந்திய வோர் கோயிலைச்சமைத்து, அதில் ஓங்காரக்கடவுளாகிய கணேசமூர்த்தியைப் பிரதிட்டைசெய்து, பாலசந்திர விநாயகரென்று திருநாமங்கூறி, சிறந்த பணிகளையியற்றி, பழையபடி ஆகாயமார்க்கத்திற்சென்றனன். பி-கணேசமூர்த்தியினுடைய திருமுடிக்கு ஓரணியாகவிருக்கப்பெற்று ...திருந்தும் அப்பாலசந்திரமூர்த்தியை அன்றுதொ



ட்டு தேவர் முனிவர் முதலாயினோர் வந்து பூசைசெய்கின்றனர். மேலும் பூசிக்கின்றோர்கள் உடனே சகலசித்திகளும் பெறுந்தன்மையினால்அந்தலம் சகலசித்தித் தலமென்னும் பெயரையடைந்து எல்லாத்தலங்கட்குந் தலைமைபெற்றிருக்கின்றது. ஆதலால் சங்கடசதுர்த்திதினத்திலே சந்திரோதயகாலத்தை முக்கியமாகச் சொல்லப்பட்டது, மேலும் விநாயகமூர்த்திக்குச்செய்த அபராதத்தினால் பலவகைப்பட்ட இடர்களுள் சந்திரனேமூழ்கி வருந்தினனாயின், அவரதுமேன்மையை என்போலிகளால் எவ்வாறறிந்து சொல்லக்கூடும். சுகம்பெறவேண்டினோர்கள், கணேசமூர்த்தியினிடத்தில் மறந்தேனும் - வாய்சோர்ந்தேனும் - மெய்வழுக்கியேனும் - தருமத்திற் கடாதனவற்றைச் செய்வாராயின் மிக்க துன்பங்களை யநுபவித்து நரகத்தில் அழுந்தி வருந்துவார்கள். ஈதல்லாமல் - விநாயகமூர்த்தியைக் குறைவில்லாமற் பூசிக்கின்றபேர்கள் அவசியம் அறுகுகொண் டருச்சிக்கவேண்டும். என்று பிரமதேவன் பிதிர்தேவனுக்குச்சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச்சொன்னான்.

உ௪ - வது. சந்திரனுபாசித்தபடலம்.

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

இருபத்தைந்தாவது.

## தூர்வைமகத்துவப்படலம்.

சிறுகவின்றிய சிந்தையீர்
குறுகினன்செயல் கூறினம்
அறுகையத்த னருச்சனைக்
குறுகையின்செய லோதுவாம்.

ஓ சவுனகாதி முனிவர்களே சந்திரன் விநாயகமூர்த்தியினுடைய திருமுடிக்கு ஓரணியாகிய வரலாற்றையும் அங்காரக சதுர்த்தியிற் சந்திரனைப் பூசிக்கவேண்டிய காரணத்தையுஞ் சொன்னோம் இப்பால் தூர்வை மகத்துவத்தைச் சொல்லுவோங் கேட்பீராக. தேவேந்திர

ன் மீட்டுஞ் சூரசேனமகாராசனை நோக்கிச் சொல்லுவான். அரசனே - பிதிர்தேவன் பின்னும் பிரமதேவனை வணங்கி சுவாமி - பரிமளமிகுந்த புட்பங்கள் பலவாகவிருக்க அவைகளைப்பார்க்கினும் தாழ்ந்த அறுகுக்கு அவ்வளவு விசேடம்வந்தகாரணம் என்னென்று வினவினான். அதிற்குப் பிரமன் சொன்னதாவது ஓ - பிதிர்தேவனே அழகுவாய்ந்த அவந்தியென்கின்ற பட்டணத்தில் சுலபனென்னு மியற்பெயரையுடைய ஓரரசனிருந்தான். அவனுக்குச் சுபத்திரையென்னும் ஓர் மனைவி யிருந்தனள். அவ்வரசன் அவளோடுகூடி நீதிவழுவாது அரசியற்றிவருகின்றநாளையில் ஒருநாள் வறுமைக்கடலுண்மூழ்கி வருந்துகின்றவனாகியும் கங்காசடாதர மூர்த்தியாகிய சிவபெருமானது பாதபதுமங்களிற் சிறந்த பத்தியுடையவனாகியும் நீரிறைத்து கறை போக்குவதற்கும் வழியில்லாத நார்ச்சீரையை யுடையவனாகியும் கரத்திற் கரகமுங் கோலுங்கொண்டு மனைகடோறும் பிச்சையேற்பவனாகியுமிராநின்ற மதுசூதனனென்னும் ஓர் வேதியன் அவனிடத்து வந்து யாசித்தான். அப்போது அவ்வரசன் ஏற்றோர்க்கு மாற்றாதுகொடுக்குந் தன்மையினனாயினும் பழைய ஊழின்வலியால் அவனைக்கண்டு நகைத்தனன். அதை அவ்வேதியன்கண்டு மனம்வருந்தி கண்களில் அனற்பொறி சிதறும்படியாகத் தானும் ஊழ்வசத்தனாய்க் கோபித்து அரசனே நீ - சிறிதேனுங் கல்வித்துறை கண்டவனல்லை, கனவினையொத்த நின்செல்வச் செருக்காலன்றோ என்னைநோக்கி நகைத்தனை, அஃது என்னுள்ளத்தையும் உன்குலத்தையுஞ் சுட்டுவிட்டது, பசுவின் பின்புறமோந்து பல்லைக்காட்டும்இடபத்தைப்போல என்னைக்கண்டு பல்லைக்காட்டினையாதலால் நீ ஏறிற்பூட்டும் எருதின்வடிவாகிப் புல்லையுணவாய்ப் புசிக்கக்கடவையென்று சபித்தனன். அச்சாபத்தை அவ்வரசனது மனைவியாகிய சுபத்திரைகேட்டு மிக்க துன்பமடைந்து ஓவேதியனே - உனது மெய்ம்மை முழுதும் புண்ணிய நீற்றைப்பொலிவுறப் பூசினையாயினும் அதற்கேற்ற இரக்கத்தினை யுன்னிடத்திற் காண்கிலேன், யாவரேனுந்தெரிந்துந்தெரியாமலும் ஓர் குற்றமிழைத்தார்களாயின் விவேகிகள் அதனைப் பொறுப்பார்களேயன்றிக் கோபியார்கள். நீசிறிதேனுந் தாரதம்மியம்பாராமல் உலகத்தையாளுமரசனென்றுமயோசியாமல் அறிவற்ற கழுதையைப்போல்சபித்தனையாதலால் நீ கழுதையாகி ஆடையொலிக்கும் வண்ணான்
ன் சிக்கி முதுகுநெளிய வத்திரமூட்டைகளைச்சுமந்து வருந்தக்க

டவையென்று சபித்தனள். அதை வேதியன்கேட்டு மனங்கலங்கி பெண்ணே - குற்றம் உங்கண்மீதிருக்க அதைக் குறையிரந்து நிவிர்த்திசெய்துகொள்ள எண்ணமுறாது நீச ஸ்திரீகள்போல எனக்கு மறுசாபமிட்டனையாதலால் நீ - புலைச்சியாகி உண்ணப்படுவனவும் உடுக்கப்படுவனவுமின்றித் துன்பமுறக் கடவையென்று சபித்தனன். ஓயிதிர்தேவனே - பாவங்களென்று சொல்லப்பட்ட எல்லாக்கொடிகளும் படர்வதற்குக் கொழுக்கொம்பாயிருப்பது வெகுளியாகும் அவ்வெகுளி ஒருவனிடத்திருக்குமாயின் அவனுக்குச் சங்கடமும் வறுமையும் இல்லாமற்போவதுண்டோ. இப்பால் அம்மூவருந் தங்களுக்குத தாங்களே முத்துக்கொண்ட சாபங்கள் மேலிடலும் குலமகாராசன் இடபமாகி அந்நகரத்திலிருக்கின்ற ஒருழவனிடத்திற்சென்று துன்பமுற்றிருந்தனன். மதுருதனனென்னும் வேதியன் கழுதையாகி வண்ணான்கரத்திற் சிக்கி வருத்தமுற்றிருந்தனன். சுபத்திரையென்பவள் புலைச்சியாகி அந்நகரத்திற் புறம்பிலிருக்கும் புலைச்சேரியிற்சென்று வறுமையினால் அடக்கக்கூடாத பசியையுடையவளாகி யாவரேனும் இடுந்தளிக்கும் பிச்சையை யேற்றுண்டிருந்தனள். இவ்வாறு நெடுநாள்செல்ல ஒருநாள் எருதானது உழவனுடைய ஏரிற்பிணிப்புண்டு. அவனது கொல்லையைவளைந்துவளைந்து உழுதுகொண்டிருந்தது கழுதையானது தன்முதுகெலும்புநோக மூட்டையைச்சுமந்து கொண்டுபோய் வண்ணான் துறையிற் போட்டுவிட்டுப் புல்லைமேய்ந்து கொண்டிருந்தது. புலைச்சியானவள் குளிர்காயவேண்டி மரப்பட்டைகளையும் புற்களையுஞ் சேதிக்கச்சென்றனள். இவ்வாறுமூன்றும் ஓரிடத்திற் சேர்ந்தபோது மேகமானது ஆகாயத்தில் இருளைப்பரப்பி மின்னலை வீசி வில்லைவளைத்து இடியிடித்து மழையைச்சொரிய அதனால் உழவன் எருதினது பூட்டைத் தரித்துவிட்டுச்செல்ல அஃது அவ்விடத்தினின்றுந் தப்பியோடி அங்கிருக்கின்ற விநாயகமூர்த்தி ஆலயத்திற் புகுந்தது அக் கோயிலின்மருங்கு மேய்ந்திருந்த கழுதையும் அவ்வாறேசென்றது, புலைச்சியானவள் தான்சேதித்த புற்களைக்கட்டியெடுத்துக்கொண்டு அக்கோயிலின் வெளிப்பிரகாரத்திலொதுங்கினள். உடனே இராக்காலநெருங்கலும் அக்கழுதையும் எருதும் பையப்பையச் சென்று புலைச்சிசுமந்திருக்கின்ற புல்லைப்பிடுங்கிக்கறித்து வாயிற் குதட்டிக்கொண்டிருந்தன. அதை அவள்கண்டு அப்புற் சுமையை நிலத்திலிட்டுக் கோலையெடுத்துக் கழுதையைமொத்தினள். அது தன்றுகா

லால் எருதை உதைத்தது. அவ்வெருது தனது கொம்பினால் அக்கழுதையை முட்டியது. இப்படி மூன்றுமக்காலத்தில் ஒன்றுக்கொன்று பிணங்கிப் பேரொலிசெய்துகொண்டிருக்க அவ்வொலியை அத்தினம் விநாயகசதுர்த்தியாயிருந்தமையால் அவ் விநாயகமூர்த்திக்குச் சந்தியகாலபூசையை நிறைவேற்றி அவரது மந்திரத்தைச் செபித்துக்கொண்டிருந்த முனிவர்கள் கேட்டு உடனே தடி ஏந்திவந்து அவைகளை அடித்துத்துரத்தினார்கள். அதற்கு அவைகளஞ்சிக் குளிர்ந்த வாடைக்காற்றினாலும் இடி மின்னலோடுகூடிய பெருமழையினாலும் வெளிக்கொண்டு போவதற்கிடமில்லாமல் அவ்வாலயத்தைப் பலமுறை சுற்றிவர அம்முனிவர்கள் அவைகளை மேலுமேலுந் துரத்திப் புறம்பிலோட்டிவிட்டனர். அவைக ளவ்வாலயத்தைச் சுற்றிச் சுற்றி ஓடுகையில் மிருகங்கள் வாயிற் குகட்டிக்கொண்டிருந்த புல்லும் புலைச்சிகையிற்கொண்டிருந்தபுல்லும் சந்நிதிக்கு முன்பாகவிழ அவைகளில் மூன்று புல்லைமாத்திரங் காற்றானது எழுப்ப அவைகள் கணேசமூர்த்தியினுடைய திருமேனியைச்சார்ந்தன.

அஃதெவ்வாறெனில் புலைச்சிகையினின்றும் வீழ்ந்த புல்லானது முடியின்மீதும் எருதின்வாயினின்றும் வீழ்ந்தது துதிக்கைமீதும் கழுதை வாயினின்றும் வீழ்ந்தது திருவடியின்மீதுஞ் சார்ந்தன. இவ்வாறு அப்புற்களானவை கணேசமூர்த்தியினுடைய திருமேனியிற் றலை மயக்குற்றிருக்கின்ற காரணத்தினால் ஆலயத்திற்கு விழுப்புவந்துவிட்டதென்று முனிவர்களெல்லாம் ஸ்நானஞ்செய்துவந்து ஆலயமுழுவதுஞ் சுத்திசெய்து கும்பமாதிகளை வைத்து திருமஞ்சனந் தூபதீபமுதலிய எல்லாப்பொருள்களையுஞ் சேகரித்து முதிர்ந்தமெய்யன்பினோடும் பூசித்துத் தங்கடங்கள் கவலைகளை யொழித்துக் கொண்டனர். இப்பால் அம்முனிவர்களால் அடித்துத் துரத்தப்பட்ட எருது முதலிய மூன்றும் அடியுண்டவருத்தத்தினாலும் காற்றுமழையினாலும உணவில்லாக் குறைவினாலும் எங்கும் போக்கிடங்காணாமலுயிர்பிரிந்திறந்தன. பின்னர் அம்மூன்றின் பாலவாய்வந்து வீழ்ந்தபுற்கள் நமக்கருச்சனைசெய்ததாகவும் அவைகள் அடியுண்ணமாட்டாது ஆலயத்தைச் சுற்றிசுற்றிவந்தது வலம்வந்ததாகவும் முனிவர்கள் விழுப்புநேர்ந்ததெனக் கருதி இயற்றிய அபிடேகம் அவைகள் செய்த அபிடேகமாகவுங்கொண்டு கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து அவைகளை யழைத்துவருமாறு தேவகணங்களையேவ, அத்தேவகண

ங்கள் உடனே ஒரு விமானத்தைக்கொண்டுவந்து அம்மூன்றுக்குந் தேவவுருவந்தந்து அரம்பையர் புடைசூழ்ந்து ஆடல்பாடல் செய்யும்படியாக அவ்விமானத்தின் மீதாரோகணிக்கச்செய்தனர். என்று பிதிர்தேவனுக்குப் பிரமதேவன் சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொன்னான்.

உ௫-வது, தூர்வைமகத்துவப்படலம்.

மூ ற் றி ற் று.



உ

கணபதிதுணை.

இ ரு ப த் தா று வ து.

## தூர்வையருச்சனைப்படலம்.



அடைதருமறுகினு லருந்தவத்தர்காள்
விடைகாம்புலைச்சி வீடுற்றதோதினும்
புடைவருமனலனைப் புசித்தெமைக்கரன்
சடைபெருகறுதினுற் றணிந்ததோதுவாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே விடைகரம்புலைச்சியாகிய மூவரையும் வீடுபெறச்செய்த தூர்வைமகத்துவத்தைச்சொன்னோம் இப்பால் அத்தூர்வை யருச்சனையைச் சொல்லுவோங்கேட்பீராக. பின்னுந்தேவேந்திரன் சூரசேனமகாராசனைநோக்கிச் சொல்லுவான், அரசனே பிரமனைப் பிதிர்தேவன் மீட்டும்பணிந்தெழுந்து கூவாயபுலைச்சிமுதலிய மூவருந்தெய்வசரீரம்பெற்று விமானத்திலேறியபின்பு அங்குநடந்தகாரண மென்னென்று வினவ அதற்குப் பிரமன்சொன்னதாவது, பிதிர்தேவனே அவ்வாறம்மூவரும் விமானத்திலேறவும் அங்கிருந்த தவசிரேஷ்டர்களெல்லாம் அதிசயமுற்று அவ்விமானங்கொணர்ந்துவந்த தேவகணங்களை வணங்கித் துதிசெய்து விதியென்பதைத் தேனு மறியாத இவர்கள் எந்தகாரணத்தால் இவ்விமானத்திலேறத்தக்கவர்களானார்களென்றுகேட்க அதற்கக்கணங்கள் சற்றுநின்று, ஓ தவசிரேஷ்டர்களே இவர்கள் கணேசமூர்த்தியை அறுகினாலே பூசனைசெய்து அவர்களுடைய பாபசரீரங்களைவிட்டுத் தெய்வசரீரங்

கொண்டு இவ்விமான மேறப்பெற்றார்களென்று கூற அதையம்மு
னிவர்கள்கேட்டு, கணநாதர்களே இந்தசென்மத்தையுடையவர்கட்
கு - உயர்ந்தலோகத்திற் சேரத்தக்க புண்ணியத்தை ஓரறுகுகொடு
த்ததாயின் அவ்வறுகைக்கொண்டு விநாயகக்கடவுளை யருச்சிக்கு
மேன்மையை அடியேங்கட்குச் சொல்லியருளவேண்டுமென்று விண்
ணப்பஞ்செய்தார்கள். அதற்குத்தேவகணங்க ளிசைந்து ஓ முனிவர்க
ளே நிறைந்தசோலைகளாற் சூழப்பட்டிருக்கின்ற தாபரமென்கின்றந
கரத்திலே தென்றிசையிலே ஓர்பனந்தோப்பிலுள்ள ஓடக்கரையை
த் தமக்காசிரமமாகவுடைய கவுண்டின்னியரென்னும் ஒருமுனிவரிரு
ந்தார். அவர் - தமது இல்லறப்பணிகட்கு இடையூறெய்தாவகை
நடத்திவருபவளாகிய ஆசிரியையென்னும் பத்தினியோடு தவஞ்செய்
துவருகின்றநாளையில் ஆதியந்தமில்லாதவராகியும் மனவாக்குக்காய
ங்கட் கெட்டாதவராகியுமிருக்கின்ற விநாயகமூர்த்தியை அவ்வாசிரம
த்தில் ஆகமவிதியோடும் பிரதிட்டைசெய்து, சத்தசாகரங்களையும் இ
ளையிடக்கூடாத தமது நிறைந்தபத்தியினால் பிரதிதினம் பதினாயிரம்
அறுகுகொண்டுவந்து அவைகளைக் குற்றமறவாராய்ந்து அருச்சனை
செய்துவருவார். இவ்வாறு நடாத்திவருகின்றநாளையில் ஒருநாள் அ
வர்பத்தினியாகிய ஆசிரியையென்பவள் தவசிரேஷ்டராகிய அக்கவு
ண்டின்னிய முனிவரைப்பணிந்து சுவாமி பரிமளமிகுந்த புட்பங்க
ள் பலவகையிருக்க அவைகளைப்பறித்து அருச்சனைசெய்யாது பிர
திதினம் அளவற்ற அறுகுகளைக்கொண்டுவந்து அருச்சிக்கின்றீரே
அஃதென்னகாரணத்தினால் அதனையடியாட்குத் தெரிவித்தருளவே
ண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனள். அதற்கம்முனிவர்
சந்தோஷித்துப் பெண்ணே அவ்வறுகின்பெருமை மகாரகசியமுள்ள
து ஆயினும் நீ மிக்கபத்தியோடுங் கேட்கின்றமையால் அதனைச்சொ
ல்லுவோங் கேட்பாயாக. முன்னொருகாலத்தில் ஒருவிசேடதினத்தில் வி
ண்ணவர் - கின்னரர் - கருடர் - விஞ்சையர் - சாரணர் - முனிவரர்
முதலியோ யாவரும்பணிந்து புடைசூழ்ந்திருக்கத்தக்கதாக யமதருமரா
சனென்பவன் தனது கொலுச்சபையிலிருக்கின்ற நவரத்தினசிம்மாசன
த்தின்கண் மிக்கவலங்காரத்தோடு வீற்றிருக்கின்றபோது அரம்பாஸ்
திரீகள் தங்களுள்ளங் கண்ணின்வழிநடப்பதும் அக்கண் கையின்வ
ழிச்செல்வதுமான அபிநயத்தைக்கொண்டு நாட்டியஞ் செய்தார்கள்.
அப்போது அவ்வரம்பாஸ்திரீகளுள் மிக்க அழகினையடைந்த திலோ

த்தமையென்பவளது மேல்வத்திரம் நழுவிப்போக அவள் மிகவும் நாணமுற்றுத் தலைகுனிந்து அருகிலிருப்பவர்க ளறியாதவண்ணம் அவ்விடத்தைவிட்டு அப்பாற்சென்றனள். யமதருமராசன் அவளது தனங்களிரண்டையும் நன்றாய்க்கண்டவுடன் உடனே அவன்மனது காமத்தாலுருகி விரகமென்கின்ற அனலாற்பொருந்தப்பட்டு அக்கொலுச்சபையினின்று நீங்கி அந்தப்புறத்திற்குச் செல்வதாயினன். அவ்வாறு செல்வதன்முன் அவன் வீரியமானது வெளிக்கொண்டு நிலத்தில்வீழ அதினின்றுங் கொதித்தெழுகின்ற வடவனலத்திற்கொப்பான கொடுமையோடு கலப்பையைப்போன்ற வெளுத்த கோரைப்பற்களும் நீண்டுமுறுக்கிச் சிவந்திருக்கின்ற முகமயிர்களும் பெருகியோங்கிய அழற்கொழுந்தினையொத்து நிமிர்ந்திருக்கின்ற புறமயிர்களும் சிவந்தகண்களும் தேவர்களுங்கண்டஞ்சத்தக்க அவயவங்களு முடையவனும் ஒப்பற்றபெருவலியினையுடைய அனலாசுரனென்னும் ஓரசுரன் உதித்தெழுந்தனன். உடனே அங்கிருந்தவர்களெல்லாம் அவனைக்கண்டுபயந்து அப்பால் ஓடிப்போயினர். இப்பால் திரிலோகமுந் துயருறும்படியாக முன்னர்திருப்பாற்கடலின்கணுதித்த ஆலகாலத்தையொத்த அப்புதல்வனது கொடியவுருவத்தை தனதுகாமந்தணியுமாறு அந்தப்புரத்திற்சென்ற யமதருமராசன் கண்டுபயந்து அவ்விடத்தில் அவன்றுழையாதவண்ணங் கதவைத் தாளிட்டுக்கொண்டனன். அவற்றை அவ்வனலாசுரனறிந்து யமதருமராசனைத் தந்தையென்கின்ற மதிப்போய்விட்டுநீங்கிப் பூவுலகத்திலுண்டான சகலசீவராசிகளையும் புசித்து இனி இந்திரன்முதலிய எல்லாத்தேவர்களையும் புசித்துவிடுவோமென்று கருதி விண்ணுலகத்திற்கெழுந்தனன். அதை அவ்விந்திரன் முதலியோரறிந்து பயந்து இலக்குமியை மார்பினிடமாகவுடைய மகாவிஷ்ணுவைச்சரணடைந்து தங்களிடும்பையைக்கூறி முறையிட்டார்கள். அவையனைத்தையும் மகாவிஷ்ணுகேட்டு அப்பாதகனுடைய பராக்கிரமத்தையும் யோசித்து இவன் விநாயகமூர்த்தியினுடைய திருக்கரத்தாலழியத் தக்கவனேயன்றி மற்றையரால் அழிபவனன்றென்று தெளிந்து எல்லாத்தேவர்களையும் அழைத்துக்கொண்டு ஒருபாரிசத்திற் கூட்டமாகவிருந்து விநாயகமூர்த்தியினுடைய திருவுருவை மனதிற்றியானித்து வேதாகமங்களாற் பலமுறைதோத்திரஞ்செய்து தங்கள்தங்கள் குறையினைச்சொல்லி முறையிட்டார்கள். அதற்கு ஆன்றோர்களறிதற்கும் அகப்படாதவராகிய விநாயகமூர்த்தி

யானவர் மனதிரங்கி மான்றோல்முடிந்த பூணூல் மார்பின்கண் பிரகாசிக்கும்படியாகப் பிராமணர் குலத்திற்பிறந்த பிரமசாரியைப்போல வடிவெடுத்து அத்தேவர்கள் முன்னதாகச்சென்றனர். உடனே எடுத்த தேகத்தாலடையத்தக்க பயனை எளிதிலடைந்தவர்களை பொத்துக்களித்து இவரோ ஓங்காரத்தினின்று மெழுந்தருளிய விநாயகமூர்த்தியென்று நிச்சயித்து விண்டுமுதலிய எல்லாத்தேவர்களுஞ் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து; ஐயனே தயாளுவே அடியேங்கள் படுகின்ற துன்பப்பாட்டினையொழித்து அனலாசுரனை யழித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டார்கள், அதற்கப்பிரமசாரியாய்வந்த விநாயகமூர்த்தியானவ ரிசைந்து அருள்வழங்கினர். அச்சமயத்தில் சொர்க்கலோகத்திற்சென்ற அனலாசுரன் அங்குத்தேவர்களைக் காணாதவனாய்ப் பற்பலவிடங்கடோறுந்தேடிப் பின்னர் அவர்கள் ஒன்றாகக் கூடியிருக்குமிடத்தினைக் கண்டுபிடித்து எதிர்நோக்கிச்சென்றனன். அப்பாதகன்வரவைப்பார்த்த முனிவர்களெல்லாம் உடனே ஓட்டமெடுத்தார்கள். தேவர்களெல்லாம் நடுநடுங்கி உமாபரமேஸ்வரியார் புத்திரராகியும் மூவர்முதல்வராகியும் வீற்றிருக்கின்ற கணேசமூர்த்திக்குப் பின்பக்கத்திலடுத்து உயிரற்ற உடல்போலவிருந்தார்கள். இவ்வாறு அசுரன்வருவதையும் அவனுக்கஞ்சித் தேவர்கள்படுங் கலக்கத்தினையும் விநாயகப்பெருமான்கண்டு அவர்கள் உய்ந்தோம் உய்ந்தோமென்று களிப்படையும்படியாக அஞ்சவேண்டாமென்று அபயந்தந்து தமது நிசவுருவங்கொண்டு அனலாசுரனருகிற்சென்று அகத்தியமுனிவர் ஆழியுண்டதுபோன்றும் சிவபிரான் விடத்தையுண்டதுபோன்றும் அவனைத் தமது கரதலத்திலடங்கும்படியாக வெடுத்து, அசுரனே நீ இவ்வுலகத்தை மிகவும்வருத்தினை இதுவன்றி இன்னும்பழமையான அளவற்றவுலகங்கள் நமதகட்டினுளிருக்கின்றன. அவைகளையும் ஒருகைபார்க்கக் கடவையென்று ஒருகவளமாய் விழுங்கிவிட்டனர் அவ்வற்புதத்தைக் கண்டவர்களெல்லாம் அதிசயமடைந்தார்கள். இப்பால் கணேசமூர்த்தியினுடைய உதரத்தில் அனலாசுரனடங்கவும் சகலசராசரங்களினுடைய உதரங்களிலெல்லாம் அனல் பற்றிக்கொண்டதுபோல வெப்பமுண்டாயது தேவர்கட்கும் அவ்வாறே ஆயது. பின்னர் யாவரும் மிக்கதாபத்தையடைந்து விநாயகப்பெருமான் வயிறுகுளிர்ந்தால் யாவர் வயிறுங்குளிருமென்று நிச்சயித்து இந்திரனுடைய ஏவலினால் சந்திரனானவன் சுவாமியினது திருமு

 

டியின்மீதிருந்து தனது அமுததாரைகளை முற்றுஞ்சொரிந்துகொண்டிருந்தனன். அதனாலும் அவ்வெப்பு நீங்காமல பின்னர் பிரமதேவனுடைய அன்புகூர்ந்த விண்ணப்பத்தினால் சித்திபுத்திகள் சுவாமியினருகிலிருந்து தமதுகுளிர்ந்த அவயவங்களை அவர்திருமேனியில் ஒற்றிக்கொண்டிருந்தனர். அதனாலும் அவ்வெப்புநீங்காமல் மகாவிஷ்ணுவானவர் அளவற்றதாமரைமலர்களைக்கொண்டுவந்து சுவாமிகளெதிரில் நீட்ட அவைகளைத் தாமேவாங்கிவாங்கி ஒற்றிக்கொண்டனர். அதனாலும் அவ்வெப்புநீங்காமல் வருணன் சீதளநீரைக்கொணர்ந்து அபிஷேகித்தனன். அதனாலும் அவ்வெப்புநீங்காமல் சிவபிரான் மிக்க உரிமையோடுந் தமது திருமேனியிலணிந்திருக்கின்ற ஆதிசேடனைக் கொண்டுவந்து தரித்தனர். இவ்வாறு அவ்வவர்கள் ஒவ்வொருவிதத்தாற் குளிர்செய்தும் அவ்வெப்பு நீங்காதிருக்கப் பின்னர் எண்பத்தெண்ணாயிர முனிவர்கள்வந்து அவ்வவர்கள் வெவ்வேறு இருபத்தொன்று அறுகுகளைக்கொண்டு சுவாமியினுடைய சிரசுமுதல் பாதமளவுஞ் சொரிந்தார்கள். உடனே அனல்வெப்பம் நீங்கியது. விநாயகப்பெருமானுடைய திருமேனியில் வெப்பந்நீங்கினபோதே விண்டுமுதலியோரடைந்திருந்த வெப்பங்களும் நீங்கினபின்னர் யாவரும் வேதாகமங்களால் ஆயிர மாயிரமாகத்துதித்து ஆனந்தக்கூத்தாடினார்கள். தேவர்களெல்லாம் புட்பவருடஞ்சொரிந்தார்கள். சொர்க்கமத்தியபாதலமென்னு மூவுலகங்களுந்தழைத்து மகிழ்ச்சியையடைந்தன. இப்பால் விநாயகமூர்த்தி அம்முனிவர்களைப்பார்த்து, அன்பர்களே நமது திருமேனியிலிருந்த வெப்பமானது தேவர்களெல்லாஞ் செய்த உபசாரங்களால் நீங்காமல் நீங்களருச்சித்த அறுகினால் அவ்வெப்பஞ் சிறிதுமின்றி நீங்கியபடியால் எமக்குப் பற்பல உபசாரங்கள்செய்து அறுகு ஒன்றுமாத்திரமில்லாவிட்டால் அப்பூசனைக்குயாம் பயனைத் தருவதில்லை. உபசாரம் ஒன்றுமின்றி அறுகு ஒன்றுமாத்திரமிருக்குமாயின் அப்பூசனைக்கு அதிசீக்கிரத்திற் பயனைத்தருவோம். அவ்வறுகைமிகுதியாகச் சேகரித்துப் பூசைசெய்யக் கூடாதவர்கள் இருபத்தோரறுகாயினுங்கொண்டு அருச்சித்தல்வேண்டும் அதற்குஞ்சத்தியில்லாதவர்கள் ஓரறுகாயினுங்கொண்டு பூசித்தல்வேண்டுமென்று திருவாய்மலர்ந்து அவ்வவர்கள் விழைந்த வரங்களைத்தந்து தமதுதிருவுருவத்தைக் கரந்தருளினார். பின்னர்தேவர்களெல்லாம் அவ்விடத்தில் ஓராலயஞ்சமைத்து அதிற்கணேசமூர்த்தியைப் பிரதிட்டைசெ

ய்து பால் - தயிர் - தேன் - முதலிய திரவியங்களைக்கொண்டு பூசித்து சிறந்த அறுகினாலருச்சனைசெய்து, காலனது வீரியத்தாலுண்டான அனலாசுரனைவிழுங்கிய காரணத்தால் காலானலப் பிரசமரென்றும் பாலவயதுடன்வந்து அக்கினியும் ஆலமுமஞ்சத்தக்க அனலுருவோடுங் கூடிய அசுரனைவிழுங்கி எல்லாவுயிர்கட்குஞ் சந்திரனைப்போலக் குளிர்ச்சிதந்தமையால் பாலசந்திரரென்றுந் திருநாமமிட்டு தங்கடங்கள் பதவிகளைச்சேர்ந்தார்கள். அன்றுமுதல் விநாயகமூர்த்தியினது பூசனைக்குரிய அனந்தம் வத்துக்களில் அறுகு சிறந்ததாயது என்று கவுண்டின்னிய முனிவர் தனதுபத்தினிக்குரைத்ததாக தேவகணங்கள் முனிவர்கட்குச்சொன்னபடி பிதிர்தேவனுக்குப் பிரமதேவன்சொன்னான். அதனைத் தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொல்லினன்.

௨௬ - வது. தூர்வையருச்சனைப்படலம்.

முற்றிற்று.





௨

கணபதிதுணை.

இருபத்தேழாவது.

## தூர்வையாசகப்படலம்.



நீக்கமிலந்தணீர் நீத்துளோர்பலர்
ஊக்கமொடறு கருச்சித்ததோதினும்
நோக்கிருவர்க்கதால் நூழில்மாமுகன்
ஆக்கமுஞானமு மளித்ததோதுவாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே விநாயகமூர்த்தி அனலாசுரனை விழுங்கித் தேவர்களைக்காத்ததும் அவனைவிழுங்கிய வெப்பநீங்குமாறு முனிவர்கள் தூர்வையருச்சனைபுரிந்ததுஞ் சொன்னோம், இப்பால் அவ்விநாயகமூர்த்தி தூர்வையாசகஞ்செய்த வரலாற்றினைச்சொல்லுவோங்கேட்பீராக. பின்னுந்தேவேந்திரன் சூரசேனமகாராசனை நோக்கியரசனே - தேவகணங்கள் முனிவர்களுக்கு மற்றொருகதையுஞ்சொன்னதாகப் பிதிர்தேவனுக்குப் பிரமன்சொன்னதாவது. முனிவர்களருட்செல்வத்தினராகிய துறவறத்தோர்களையும் பொருட்செல்

வத்தினராகிய இல்லறத்தோர்களையும் வசிக்கப்பெற்று அளவற்ற வளமையோங்கியிருக்கின்ற மிதுலாபுரியென்கின்றபட்டணத்தில், அன்பு கலையுணர்ச்சி-ஈகை - வலி - வெற்றி - ஒழுக்கம் - இல்லறநடை - முதலிய எல்லாநன்மைகளையுந் தனக்கேவலாகக்கொண்ட சனகமகாராசனென்னும் ஓரரசனிருந்தான். அவ்வரசன் திசையனைத்திலுந் தனது சங்கோலைச் செலுத்தி அரசியற்றிவருகின்றநாளையில், தமக்கொருவர் ஒப்பில்லாதவராகியும் எல்லாவுலகத்திலுஞ் சஞ்சரிப்பவராகியும் சடாமகுடத்தைத் தரித்தவராகியும் மகதியாழ்த்தலைவராகியுமிராநின்ற நாரதமகாமுனிவர் ஒருநாளவனிடத்திற்குவந்தனர். அக்காலத்தது அவன் பரதத்துவவுண்மையை யறியாதவனாய்த் தனதுபுலன்சென்ற வழியே மனஞ்செலுத்தி இருவினைகளையும் விடாமற்புசித்துத் தானேபரத்துவமென்று நிச்சயங்கொண்டிருக்கின்ற மதியின்மையினால் அந்நாரதமுனிவருக்கு வழிபாடுசெய்யாதவனாகியிருந்தனன். அதை அம்முனிவர்கண்டு அவனறிவின்மையைத் தமது மனதில் மறைத்துக்கொண்டு, அரசனே - பகவானுடைய கிருபையினாலே சகலபாக்கியங்களும்பெற்றனை அப்பாக்கியங்களை வறியாரிடத்திற் செலுத்தி வாழ்கின்றனை எல்லாநன்னடைகளையுங் கடைப்பிடித்தனை ஆதலால் - இன்னம் அச்செல்வத்தை உனக்குவேண்டுமட்டும் அப்பகவானளித்தருளக்கடவரென்று ஆசிர்வதித்தனர். அதை அச்சனகராசன்கேட்டு முனிவரே-வேறே பகவானிருக்கின்றனரென்றும் அவர் வேண்டியபாக்கியங்களை யளிப்பரென்றும் பேதப்படுத்திச்சொல்வது அறிவில்லாதவர்களுடைய தன்மையேயன்றி ஆபேதிகளாயிருக்கின்றவர்களுடைய் தன்மையவ்வாறன்று. யாவையுங்கொடுக்கின்றபகவானும் அவைகளை ஏற்றுக்கொள்கின்ற யாசகனும் யாவையும் அநுபவிக்கின்றயோகியும் அவைகளைக் குற்றமாகவெறுக்கின்றயோகியும் நானேயன்றிவேறில்லையென்று அவமதித்துரைத்தனன். அதையம்முனிவர் மறுத்து, அறிவற்றசனகராசனே - பகவான் வேறில்லையென்று பேதைமையாற் பேசினை அப்பகவானுண்டென்பதை நீகாணங்கொள்ளும்படி உன்னை இன்றுனை காட்டுகின்றோம் அப்போதேனும் அறிந்துகொள்ளக்கடவையென்றுரைத்து அவ்விடத்தினின்றுநீங்கிக் கவுண்டின்னிய முனிவரிடத்திற் சென்றனர். அக்கவுண்டின்னியமுனிவர் நாரதமுனிவரையெதிர்கொண்டுசென்று தீர்க்கதண்டஞ்செய்து அழைத்துவந்து ஓராதனத்திலிருக்கவைத்துப் பல உபசாரங்களோடு பூசனைசெய்து. அள

வளாவிய சந்தோஷத்துடன் இனியவார்த்தையாடி இளைப்பாற்றி னர். பின்பு நாரதமுனிவரெழுந்து அக்கவுண்டின்னிய முனிவர் பூசிக் கின்ற விநாயகமூர்த்தி சந்நிதானத்திற்சென்று சாஷ்டாங்கமாகப் ப ணிந்தெழுந்து கரத்தில் யாழினையேந்தி நரம்புகளைத்தடவி பற்பல விசைகளோடும் அவர்பேரருளைப்பாடித்துதித்து, சுவாமி - தேவரீர் கிருபையால் சனகராசனுக்குப் பூலோகவரசாட்சியும் போக்கற்கரிய செல்வமும் உண்டாயிருக்கின்றன. அவைகள் தேவரீர் கிருபையா ற்கிடைத்தனவென்று சற்றுங்கருதிலன். தேவரீரைப் பரத்துவமென் றும் எண்ணிலன். முத்தியிற் காமுற்றவனைப்போலவிருக்கின்றான். பெரியோர்களைக்கண்டால் வந்தனைவழிபாடுகள்செய்யாது தானேபர த்துவமாக மதித்து அகங்கரித்திருக்கின்றான். அவைகளைத் தேவ ரீர்திருமுன்பு விண்ணப்பஞ்செய்துகொள்ளுமாறு அடியேன் இங்ங னம்வந்தனனென்றுசொல்லி மீட்டுஞ் சாஷ்டாங்கமாகச்சேவித்துஆ காயமார்க்கமாகச் சென்றனர்.

பின்னர் விநாயகக்கடவுள் அச்சனகராசனது மையலைநீக்கி ஆட் கொள்ளுமாறு திருவுளங்கொண்டு, தொழுநோய்கொண்ட சரீரத்து டன் ஓரந்தணராக வெளிக்கொண்டு அவ்வரசனுடைய அரண்மனைவா யலுக்கெதிர்சென்று, அங்கு காவல்கொண்டிருக்கும் ஏவலாளரைப் பார்த்து யாம்வந்திருக்கின்ற செய்தியை அரசனுக்கறிவிப்பீர்களென் று திருவாய்மலர்ந்தனர். அவர்கள் அவ்வாறேசென்று சேவித்து, ஓ சார்வபௌமா-தேவரீர் அரண்மனைவாயிலைநோக்கி நேற்றையவரையி ல் வந்தவர்க்குள் தரித்திரத்தால் வருத்தமுறுகின்றபேர்களை யொருவ ரையுங்கண்டதில்லை. இத்தினமே ஒருவரைக்கண்டோம். அவர்ம காயோக்கியமுள்ள அந்தணராயும் தொழுநோய்கொண்ட சரீரத்துட ன் மிக்கதுன்பத்தையும் பசியையும் உடைத்தானவராயுமிருக்கின்று ரென்றுசொல்ல, அதைஅரசன்கேட்டு அவ்வேதியரை இங்ஙனங்கொ ண்டுவரக்கடவீரென்று கட்டளையிட்டான். அவ்வாறே அக்காவலாள ர் அவரை அழைத்துக்கொண்டுசென்று அரசனெதிரில்விடுத்தார்கள் யாவரும் அருவருப்புகொள்ளத்தக்க சரீரத்தோடிருக்கின்ற அந்த ணரை அரசன்பார்த்து உமக்குயாதுவேண்டிவந்தீரென்றுவினவ அத ற்கவ்விநாயகமூர்த்தியாகிய வேதியர்சொல்லுவார், அரசனே-முன்னர் எனதுபசிநோய்நீங்குமாறு அமுதூட்டல்வேண்டுமென்றனர். உட னே அரசன்தனதுகுமாரனையழைத்து இவ்வேதியரதுபசிதணியும்ப

டியாக அறுசுவை பதார்த்தங்களோடும் போசனஞ்செய்விக்கக்கடவையென்று கட்டளையிட்டனன். அப்புதல்வனதற்கிசைந்து அந்தணனையுள்ளே யழைத்துக்கொண்டுசென்று வாசனையூட்டியசலத்தினால் அவரது திருவடிகளை விளக்கி ஓராதனத்தி லெழுந்தருளச்செய்து சாஷ்டாங்கமாக வணங்கிக் குருத்தாகி நீண்டிருக்கின்ற இரண்டு தலைவாழையிலைகளை யொன்றுகச்சேர்த்து அவைகளில் அன்னங்கறிமுதலான எல்லாவுணவுகளையுங் குறைவற நிரப்பி, சுவாமி-இனித்தேவரீரமுதெடுத்தருளவேண்டுமென்று இரந்து அருகில் விசிறியைக்கொண்டு மெல்லமெல்லவிசிறி உபசரித்தனன். பின்னர் அவ்வேதியர் எல்லாவுண்டிகளையு நீர்விளாவி அவைகளைத் தமது திருக்கரத்தாற்றொட்டருளியமாத்திரத்தில் அருகிருந்தவர்கள் அவ்விலைகளிலிட்ட பதார்த்தங்களில் ஒன்றேனுங்கண்டிலராகி ஆச்சரியமடைந்தார்கள். அரசகுமாரன் உடனே சமையற்காரரைக்கூவி நீங்கள் சமைத்திருக்கின்ற எல்லாவுண்டிகளையுங்கொண்டுவந்திடுவீர்களென்ன, அவ்வாறே அவர்கள் அளவற்றபொற்பள்ளயங்களிற் பாகமுழுவதுநிறைவேறியிருக்கின்ற பற்பலவுணவுகளைக்கொண்டுவந்து படைத்தனர். படைக்குந்தோறும் அவர்கள் நாணும்படி உடனுக்குடனே வேதியரும் உண்டருளினர். அதைச் சமையற்காரர்கள் நோக்கிக் குறுநகைகொண்டு மீளவுஞ்சென்று பாகமானதும் ஆகாததுமாய் மட்கலத்தோடுவைத்திருக்கின்ற உண்டிகளையெல்லாங் கொண்டுவந்துபடைத்தார்கள். அவைகளையும் அவ்வாறே உண்டருளினர். பின்னரவர்கள் அரசகுமாரனை நோக்கி யாங்கள் சமைத்துவைத்திருந்த எல்லாவுணவுகளையும் இவ்வொருவருக்கே படைத்தாய்விட்டன. இன்னும் அரைக்கணப்போது பொறுத்திருந்தால் அளவற்றவுண்டிகளைச் சமைத்துக்கொண்டுவருகின்றோமென்று சொன்னார்கள். அதை அந்தணராய் வந்த எமது கர்த்தன் செவியுற்றுத் தமது திருமுடியைத் துளக்கி இனிவெந்தபின்பு என்பசியை விலக்கும்போது விலக்குங்கள் இப்போது வேகாதிருக்கின்றவைகள் யாதாயினும் இருந்தால் அவைகளைக் கொண்டுவந்து விரைவிற்படையுங்களென்று திருவாய்மலர்ந்தனர். அதற்கவ்வரசகுமாரனதிசயித்து இவர்க்கு அப்பண்டங்களை அடிக்கடி எடுத்துவந்துபடைப்பது அரிதென்றுநினைத்து அந்தந்தப்பதார்த்தங்களை யடைத்திருக்கின்ற எல்லாக்களஞ்சியங்களையுந் திறந்து சுவாமி இவைகளிற்புகுந்து உமக்குவேண்டுவன புசித்தருளுதியென்றுசொன்னான். அவ்

வாறே அவைகளனைத்திலும் வடவானலத்தைப்போலப் புகுந்து யா வையும் புசித்தருளினார். இவ்வற்புதத்தைச் சனகராசன் கேள்வியுற் று ஞெரோலென்றெழுந்துவந்து கர்த்தன் திருவிளையாடல்களைப்பார்த் து இஃது கனவேயன்றி நனவாகக்காணப்படவில்லை, ஆகிஃதில்லாவிடி ன் ஓர் மாயையென்றெண்ணத்தக்கதேயன்றி மற்றொன்றல்லவென் று மதித்து அந்தநகரத்திலுள்ளனவும் அந்நகரத்தைப் புடைசூழ்ந்த நாடுகளிலுள்ளனவுமான பதார்த்தங்களையெல்லாம் மனோவேகமாய்ச் சென்று கொண்டுவருவதாகத் தூதர்களுக்காக்கியாபித்தனன். அத் தூதர்கள் அக்கட்டளையை ஆங்காங்கிருக்கின்ற எல்லாச்சனங்களுக்கு மறிவிக்க அவ்வவர்கள் வெந்தனும் வேகாதனுமாயுள்ள அளவற்றபதார் த்தங்களைக்கொண்டுவந்து மலைபோலக் குவித்தார்கள். உடனே சர்வ சங்காரகாலத்தில் சகலலோகங்களையும் அவ்வுலகங்களிலுள்ள எல்லா ப்பொருள்களையும் எண்ணிறந்த சீவராசிகளையும் இமைப்போதிற் றம து உதரத்துள் ஒளிக்கச்செய்யவல்ல வேதியரானவர் அப்பதார்த் தங்களையெல்லாம் அரசன் காணும்படியாக முன்போலவே உண்ட ருளினார்.

இவ்வாறு யாவையும் உண்டருளிய! அதிசயத்தைக் கண்டவர்க ளெல்லாம்பயந்து இன்னும இக்குட்டவேதியன் பசி தீராமையால் இ னிநம்மையுமெடுத்து விழுங்கிவிடுவனென்று நாற்றிசைகளினும் ஓடிப் போனார்கள். அமைச்சர்களெல்லா நடுநடுங்கி இம்மறையவன் தேவ னோ அசுரனோ அரக்கனோ பூதனோ மற்றெவ்வகைத்தானவனோ அறி கிலேம், இவன்மனிதனாயின் இவ்வாறுண்ணத்தக்கவனன்றென்று சந் தேகித்தனர். அரசனும் அதிக அச்சங்கொண்டு வடவாமுகாக்கினி யே ஓர் வடிவங்கொண்டுவந்ததோ அல்லது சிவபெருமானுடைய நு தல்விழித்தீயோவென்று மனங்கலங்கினவனாய் நமது நகரத்தினையு நாடுகளையும் யானையுண்ட விளாங்கனிபோலவும் உயிர் நீங்கிய உடல் போலவுஞ்செய்து எல்லாப்பொருள்களையும் இவரெதிரிற் கொண்டுவந் துபடைத்தும் இன்னும் இவர்பசிக்கு இறுதி கண்டதில்லையாதலால் இவர்க்கு அமுதளிப்பவர் மனிதருக்குளில்லை யோசிக்குமிடத்தில் தே வர் கூட்டத்தினு மிரார்கள் இனி யாம்செய்யத்தக்கது ஒன்றையுங்கா ணேம் இவரைநல்லவார்த்தையால் வெளிப்படுத்துவ தெவ்வுபாயத்தி னாலென்று யோசித்து விநாயகமூர்த்திசமீபத்தில்வந்து, சுவாமி-தேவரீ ர் அந்தணராதலாலும் இவ்வுலகில் அரிதிராந்தால் மிகவும் வருத்தமு

ற்றிருக்கின்றீராதலாலும் உமக்கு உணவுதருவதாக ஒப்புக்கொண்ட
னன் அவ்வாறேயெங்குமுள்ள பதார்த்தங்களையெல்லாம் வரவழைத்
துத் தந்தும் உமதுபசிநோய் பூர்த்தியாய்த்தணிந்ததில்லை இனி அந்தக்
குறையையும் நீக்கத்தக்கவர்களிடத்தி லெழுந்தருளலாமென்றுசொல்
ல அதனை எமதாண்டவ'ராகிய விநாயகப்பெருமான்கேட்டு, ஆ-ஆ-அர
சனே-உன்செயல்மிகநன்று மிகநன்று. இந்நாட்டிலுள்ளோர்களெல்லா
ம் உன்னை வரையாதுகொடுக்கும் வள்ளலென்று சொல்வதை உண்
மையென்று மதித்து எனதுகள்ளப்பசியைக் களையுமாறல்லவாவந்தே
ன் அப்படிவந்தயெனக்கு அப்பசியை அழலில் அவிசொரிந்து அதிக
ரிக்கச்செய்ததுபோல அற்பபோசனந் தந்து அதிகரிக்கச்செய்தாய் பி
ன்னும் உமதுபசிக்கு எல்லாப் பதார்த்தங்களையு மளித்துவிட்டேன்
இன்னுஞ் சிறிதுண்டாயின் அதனைத் தீர்க்கத்தக்கவர்களிடத்திற் செ
ல்லுவீரென்றுசொல்லி எனக்குவழிகாட்டுகின்றனை உனதுவாய்மை
யுங் கீர்த்தியுங்கிருபையும் பெருமையும் மிக்க அழகாயிருக்கின்றன. பி
ரமம் நாமேயன்றி வேறொருபிரமமில்லையென்றும் கொடுக்கின்றதும்
ஏற்கின்றதும் உனது வயத்ததென்றுங் கருதி நிச்சயங்கொண்டிருக்
கின்ற உனக்கு எனதுபசியை நீக்க வல்லபமில்லாதிருக்குமா இன்னு
ஞ்சிருஷ்டிசெய்து கொடுத்தற்குப் பான்மாறி மறைவாய்ப்பேசினது
போலிருக்கின்றது எல்லையற்றபதார்த்தங்களை இமைக்குமுன் ஆக்க
வும் அழிக்கவும்வல்ல ஒன்றானபிரமம் நீயேயாகில் உன்னை யாசித்து
வந்த என்பசியை நீக்காமல் இல்லைபோமென்றுரைப்பையோ ஈவதற்
கிடமின்றியல்லற்படுகின்ற நீயோபிரமமாவாய், அன்றியும்அப்பிரமம்
ஓர்சுகத்தை விழைந்தும் அதுகிடைக்கவேண்டுமென்று யத்தனஞ்செ
ய்து இடையில்வருகின்றதுன்பங்கட்கு ஏங்கியுமிருக்குமோ,சனகனே
உனது பிரமத்துவத்தை நெருப்பிற்போடென்று சொல்லிக் கோபித்து
ச் சரேலென்றுஅவ்விடத்தினின்று நீங்கிஅரண்மனைவாயிலைக்கடந்தனர்
அவ்வாறுசெல்கின்ற அந்தணரைச் சனகராசன்பார்த்து இவர் கூறிய
தெல்லாம் மேலானவார்த்தைகளா யிருப்பதுமன்றி இவர்செய்த செ
ய்கைகளுந் திவ்வியமாகவேயிருந்தன. அம்மா-இவரை இன்னாரென்று
அறிவது மகாதுல்லபமென்று நினைந்து தான்கொண்டிருந்த கொள்
கைக்குப் பழுதுநேர்ந்ததென்று நாணி வருத்தமுற்றிருந்தனன். இ
ப்பால் வீதியிற்சென்ற பிராமணராகிய விநாயகக்கடவுளானவர் அந்ந
கரத்தின்கண் வேதவொழுக்கங்களிற் றவறாதவனாய்த் திரிசிரனென்

னும் பெயரைவகித்துக் கற்பிற்சிறந்த விரோசனையென்னும் பத்தினியோடு வாழ்ந்திருக்கின்ற ஓர் ஏழைப்பிராமணன் வீட்டினுட் பிரவேசித்தனர். அக்காலத்தில் விரோசனையென்பவள் ஏவல்செய்யக் கணேசமூர்த்தியைப் பூசித்துக்கொண்டிருந்த அத்திரிசிரன் சுவாமியைக் கண்டவுடன் விரைந்தெழுந்து எதிர்கொண்டு சாஷ்டாங்கமாகப்பணிந்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி நின்றனன்.

அவன்மீது கர்த்தன் கிருபாநோக்கம்பாலித்து, அன்பனே-செல்வத்திற்சிறந்த சனகராசன் அரண்மனைக்குச்சென்றோம். அவனெமதுபசிநோயைச் சிறிதாற்றினன். மற்றதையுந் தணித்துக்கொண்டுபோமாறு உன்னிடத்திற்கு வந்தோமென்று புன்னகையோடுந் திருவாய்மலர்ந்தருளினர். அதை அவன்பத்தினியாகிய விரோசனையென்பவள்கேட்டுத் தீர்க்கதண்டன்செய்து, சுவாமி - தடாகநீர்முழுதும் அருந்தித் தணியாதிருக்கின்ற கொடுந்தாகம் அதினின்றுங் கொணர்ந்துவந்த குடிநீரால் தணியப்போகின்றதா, நேற்றையவரையில்யாசகத்தாற்கிடைத்ததைப் புசித்திருந்தோம் இத்தினம் அதுவுமின்றி யிருக்கின்றோம் கணேசமூர்த்தியைப் பூசித்து மிகுந்த ஓரறுகுமாத்திரமன்றி வேறொன்றுமில்லையென்றனள். இவ்வாறு தாங்களடைந்திருக்கின்ற வறுமைப்பாட்டினை விரோசனையுரைத்தலும் வேதியராய்வந்த விநாயகமூர்த்தி மனதிரங்கி, பெண்கள்நாயகமே-குற்றமுற்ற மனத்தையுடைய செல்வர்கள் கோடிதனத்தை யளித்தாலும் யாம்விரும்பேம் ஏதுமற்ற எளியோர்களளிப்பது எள்ளளவாயினும் அன்போடளிப்பாராயின் அதுவேயெமக்கு மேலானதாகும் அவ்வாறு ஈவோருக்குப் புண்ணியமும் ஏற்போருக்குப் புகழுமுண்டாகும் நீங்கள் யோக்கியமில்லாத புல்லை எவ்வாறளிப்பதென்று யோசிக்கவேண்டாம். அறுகேயெனக்கு மகாபாக்கியமாகும். ஆதலால் விரைவிற்சென்று அதனை அன்புடன்கொண்டுவந்தளிப்பீர்களென்று திருவாய்மலர்ந்தனர். அவ்வாறே விரோசனை அவ்வறுகை யெடுத்துவந்து நீட்ட அதனைத் தமதுகரத்தினால் வாங்கி வாய்மடுத்து மென்றுதின்று ஏப்பமிட்டனர். அந்நிமிடத்தில் கணேசமூர்த்தியினுடைய திருவருளினால் அவர்களுடைய பழையகூரைவீடானது தங்கமயமான மாளிகையாய்விட்டது. அதற்குள்ளே அன்னமுதலிய எல்லாவுண்டிகளும் பொன்வெள்ளிமுதலான அளவற்றபாக்கியங்களும் ஆணடிமை பெண்ணடிமைகளும் எங்கும் நிறைந்திருந்தன. அவைகளைக்கண்டதிரிசிரனும் விரோசனையுந் திகைத்து மீட்டுந்

தெளிவுற்றுந் தங்களையடைந்திருந்த வறுமைக்கு விடைகொடுத்தனுப்பினார்கள். மிதுலாபுரியினும் அதைச்சேர்ந்த நாடுகளினுமிருந்து அவ்வணங்கள் முன்னர்கொண்டுவந்திருந்த பண்டங்களெல்லாம் பின்னு நூறுமடங்கு அதிகமாயுண்டாயின. அவ்வற்புதத்தைக் கண்டவர்களெல்லாம் அதிசயமடைந்தார்கள். இப்பால் திரிசிரனும் விரோசனையும் வறுமையாற் றளர்ச்சியடைந்தாராயினும் அன்பிற் றளர்ச்சியடைதலில்லாத சத்தியசீலர்களாதலால் அவர்கள் முழுவதுங் கடைத்தேறுமாறு தொழுநோய்கொண்டு அருகிருந்துநின்ற அந்தணரானவர் அவ்வுருவைக்கரந்து தமது தெய்வவுருவத்தைக்கொண்டு, அறுகையுஞ் சந்திரனையுந் தரித்திருக்கின்ற சடாமகுடமும் மழுப்படை-தாமரைமலர்-படிகமாலை-ஒற்றைக்கோடு என்னுமிவைகளைத்தாங்கிய நான்கு திருக்கரங்களும் முப்புரிநூலணிந்த மார்பும் வேதத்தை இடைவிடாது ஒலித்துக்கொண்டிருக்கின்ற சிலம்பணிந்த திருவடிகளும் மணிமுடி-குண்டலம்-புயகவசமுதலிய ஆபரணங்களுந் தோன்றும்படியாக அவர்களெதிரே பிரத்தியட்சமாகின்றனர். உடனே அவ்விருவர்களுந் திகைத்து அன்பும் அச்சமுங்கொண்டு அளவற்றபுட்பங்களாலருச்சனைசெய்து அவர்திருவடிகளில் சாஷ்டாங்கமாகவணங்கி அளவிறந்த தோத்திரங்களைச்செய்து ஆனந்தக்கூத்தாடி, எண்ணற்ற பிறவிகடோறுஞ் செய்துமுற்றிய தவத்தினுங் கிடைத்தற்கரிய ஓ கிருபாமூர்த்தியே தேவரீர் திருவடிகளை எளிதிற் பெற்றனமாதலால் இனிஅடியேங்கள் இப்பிரபஞ்சவாழ்க்கையை வேண்டுகிலம் தேவரீர் திருவடிநிழலி லிருக்கத்தக்கபேற்றினை யளித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டார்கள். அதற்கு விநாயகக்கடவுள் அருள்கூர்ந்து, அன்பர்களே உமக்கு அந்தியகாலத்தில் அவ்வாறே அளிப்போமென்று திருவாய்மலர்ந்தனர். இவ்வாறு அப்பத்தர்களுடைய வறுமையைநீக்கிப் பெரும்பாக்கியத்தினை யளித்துத் தமது திருவருளையுங் காட்டிக்கொண்டிருக்கின்றசமயத்தில் சனகராசனென்பவன் தனது அரண்மனையினுந் தனதாணையிலடங்கியிருக்கின்ற நாடுகண்முதலாயுள்ள எல்லாவிடங்களினும் அளவற்றசெல்வங்கள் அமைந்திருப்பதைநோக்கி ஆச்சரியமடைந்து, நம்மையாசித்துவந்த அந்தணன் ஈச்சுரனேயாகுமென்று நிச்சயித்து உடனே விரைந்தெழுந்து திரிசிரனுடைய மனைக்குட்சென்று, இருக்குமுதலாயுள்ள சதுர்வேதங்களாலு மறியப்படாத சுமுகராகியும் அன்பர்களுள்ளமே ஆலயமாகவீற்றிருக்கும் பெருமானாகிய விநாகி

ன்ற விநாயகமூர்த்தியை எதிர்கொண்டு சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து விழிகளில் ஊற்றெடுத்ததுபோல ஆனந்தபாஷ்பஞ் சொரிந்து நெக்குவிட்டு நெஞ்சமுருகிக் கரங்களைச் சிரமேற்கூப்பி அறிவினைப் போன்று மறைத்துக்கொண்டிருந்த அறியாமையால் அசம்பிரமமென்று நினைத்து மிகவுங்கர்வப்பட்டு சன்மசாகரத்தில் மூழ்கிப்போய்ப்படியிருந்த அடியேனை அவ்வாறு மூழ்கிப்போகவொட்டாமல் கடைத்தேறுமார்க்கம் இஃதென்று காட்டி யாட்கொண்டருளிய ஓ நின்மலமூர்த்தியே - தேவரீருடைய கிருபைக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம். சிவபிரானுக்குத்திரிபுரதகனஞ்செய்யுமாறு கடாட்சித்தருளிய ஓ தேவோத்தமரே-தேவரீர் திருவடித்தாமரைகட்குச் சாஷ்டாங்க நமஸ்காரம். நாரதமுனிவர் கூறிய நன்மார்க்கங்களை சிறிதுமுணராதிருந்த சிறியேனைக் கரைசேர்க்கும்வண்ணமெழுந்தருளிய ஓ பரஞ்சோதியே தேவரீருடையபெருங்கருணைக்குச் சாஷ்டாங்கநமஸ்காரம். அடியேன் மாத்திரமன்றி அடியேன்சுற்றத்தார்களும் அடியேனாளுகின்ற நாடுநகரங்களும் அவைகளிலுள்ளபதார்த்தங்களும் சுவாமிகளது பாதாரவிந்தங்களிற்சேரும்படியாகத் திருவுளங்கொண் டெழுந்தருளிய ஓ நின்மலமூர்த்தியே-தேவரீருடையகிருபைக்குச்சாஷ்டாங்கநமஸ்காரம். என்றிவ்வாறு அனந்தமுறை தோத்திரஞ் செய்து, கர்த்தனே-பிரமனும் விண்டுவினுந்தேடிக்காணக்கூடாத சிவபெருமானுடைய திருவடிகளை முன்னொருகாலத்தில் எமதருமராசன் எதிர்த்துப்பெற்றதுபோல அடியேன் பரப்பிரமத்தை மாறுபாடாகநினைத்துத்தேவரீருடைய திருவடிகளைப்பெற்றேன் இனித்தேவரீருடைய நின்மலஞானத்தை அடியேன் தெளியும்படியாக அநுக்கிரகஞ்செய்யவேண்டுமென்றுபிரார்த்தித்தனன். அதற்குக்கர்த்தன் கிருபைகூர்ந்து அச்சனகராசனுடைய சித்தபரிபாகத்தையறிந்து மீட்டும் அவன் சனனமெடுக்காத மார்க்கத்தினுக்குரிய ஆகமமுறைமைப்படி தீட்சைசெய்து தயிருள்ளெழுந்தவெண்ணெய்போலத் தக்கமுறையானுபதேசிப்பதாயினர். அரசனே பதி பசு-பாசம்-எனமூன்றுபொருள்களுண்டு. அவற்றுள் ஏகமாகியநம்மைப்பதியென்றும் அனேகமாகிய ஆன்மாவைப்பசுவென்றும் ஆணவம்-கன்மம் அசுத்தமாயை சுத்தமாயையென்னுமிந் நான்கினையும் பாசமென்றுங் கூறப்படும். இவைகட்கு இயல்பாயுள்ளகுணங்கள் பலவுள. அவை-ஏகமாகிய பதிக்கு ஒருவருமறிவிக்காமலறிகின்றகுணமும் ஆன்
கு அறிவிக்குங்குணமுமுதலாயின. அனேகமாகியபசுவுக்கு அறி

வித்தாலறிகின்றகுணமும் பிறருக்கு அறிவிக்கமாட்டாத குணமுமுத லாயின. இருளாகிய ஆணவமலத்திற்கு ஆன்மாவேண்டுங்காரியத் தை மறைக்கின்ற குணமும் வேண்டாக்காரியத்தில் விருப்பங்கொடு க்கின்ற குணமுமுதலாயின. புண்ணியபாவமாகிய கன்மமலத்திற்கும் அசுத்தாசுத்தமாகிய மாயாமலத்திற்கும் ஆன்மா ஆணவத்தைப்பொ ருந்தினால் ஆணவத்திலழுத்திவிக்கின்றகுணமும் பதியைப்பொருந்தி னால் பதியிலழுத்துவிக்கின்ற குணமுமுதலாயின. இவ்வாறுபொரு ளும்வியாபகம் வியாத்தி-வியாப்பியம்-என மூவகையாயிருக்கும். இவ ற்றுள்வியாபகமாவது நிறைந்திருத்தல். வியாத்தியாவது சமநிறைவா யிருத்தல். வியாப்பியமாவது அடங்கியிருத்தலாம். அஃதெவ்வாறெனி ல்-சமுத்திரம்வியாபகம் அதுபோலரனாம். அச்சமுத்திரத்தில் தண்ணீர் வியாத்தி அதுபோலுமம்மிடத்தில் ஆன்மா. அத்தண்ணீரில் உப்புவி யாப்பியம் அதுபோலும் ஆன்மாவிடத்தில்மலமுதலியவைகள். இப்ப டி இவ்வாறுபொருளும் ஒன்றிலொன்றாகலந்து அடங்கியிருப்பதாயி னும் அவைகள் அனாதிநித்தியமாகியிருத்தலன்றி எங்கும் வியாபகமா யு மிருக்கின்றன. ஆனால் பதிதான் அநாதிநித்தியம் மற்றைய பசு முதலியவைகள் எவ்வாறு அனாதிநித்தியமாமெனில், சூரியனுள்ளபோ தே கண்ணும் அக்கண்ணைமறைத்த இருளும் அநாதிநித்தியமேயாம். ஆனால் அவைகள் எங்கும வியாபகமாயுமிருக்கின்றனவென்ற தெவ் வாறெனில்- எண்ணிறந்தகண்களுக்கு ஓராதித்தனிருந்து அறிவித்தல் போல எல்லாப்புவனங்களினு மிருக்கின்ற எண்ணிறந்த ஆன்மாக்க ளுக்கு நாமொருவனிருந்து அறிவித்தலானும், கண்ணானது சூரியமண் டலமுதலிய எல்லாமண்டலங்களினும் போக்குவரத்தில்லாமல் சகல காரியங்களையுமறிவதுபோல ஆன்மாவானது சகல புவனங்களினும் போக்குவரத்தில்லாமல் எல்லாக் காரியங்களையுமறிதலானும், இரு ளொன்று எண்ணிறந்த கண்களையுமறைத்தல்போல ஆணவமலமொ ன்றுஎண்ணிறந்த ஆன்மாக்களையு மறைத்தலானும், பலதானியங்கள் அந்தந்த ஊரிலிருக்கின்றோர்களுக்குஆங்கங்கே புசிப்பாயிருத்தல்போ ல பலகன்மங்கள் அந்தந்தப்புவனங்களிலிருக்கின்ற ஆன்மாக்களுக்கு அங்கங்கேபுசிப்பாயிருத்தலானும், குயவனானவன் பல பாண்டங்களை அந்தந்தவூரிலிருக்கின்றோர்களுக்கு அங்கங்கேபடைப்பதுபோல அசு த்தாசுத்தமாகிய மாயையானது பல தனுகரணாதிகளை அந்தந்த புவன ங்களிலிருக்கின்றஆன்மாக்களுக்குஅங்கங்கேபடைத்தலானும், அவ்வா

றுபொருள்களும் வியாபகமென்றேசொல்லப்பட்டன. இப்படிவியாபக
மாயிருக்கின்ற ஆறுபொருள்களும் ஒன்றுக்கொன்றுஎவ்வாறுசம்பந்தப்
பட்டனவெனில் - அநாதியிலே ஆன்மாக்கள் ஆணவமலத்திற் கிடந்தா
ர்கள், அவ்வாணவமலம் ஆன்மாக்களுக்குக் கன்மத்திலேவிருப்பத்தை
க்கொடுத்தது, இந்தச்செய்தியைநாமறிந்து, இரக்கத்தினாலே அவ்வா
ன்மாக்களது விருப்பத்திற்கேற்றமாயாகருவிகளைக்கொடுத்து, அவைக
ளினிடமாகக் கன்மங்களைப்புசிப்பிப்போம். அநாதியிலே பிரபஞ்சமு
ண்டாகின்ற முறைமை இவ்வாறாகும். ஆனால் அநாதியில் ஆன்மாக்
கள் ஆணவமலத்திற் கிடந்தனவென்றால் அவர்கட்கவ்வாணவமலத்
தை நாம்கூட்டிவைத்ததோ அதுதானேவந்து பொருந்திற்றோவெனி
ல்-நாம நின்மலனாகிய சர்வானுக்கிரகனாதலாலே நாம் கூட்டிவைத்த
தன்று, ஆணவமலஞ்சடமாதலால் தானேவந்துபொருந்தமாட்டாது, ஆ
தலால் ஆன்மாக்களே ஆணவமலத்தைப் பிடித்தனவென்றறிக.

ஆனால் ஆன்மாக்களுக்கு ஆணவமலம் இயற்கையோ செயற்கை
யோவெனில் - இயற்கையானால் பாலுக்குவெண்மையுங் கரிக்குக்கரு
மையும் ஒருக்காலும்விட்டு நீங்காததுபோல ஆன்மாக்களுக்கு ஆண
வமலம் ஒருக்காலும்விட்டுநீங்காது, செயற்கையானால் வெள்ளைவஸ்தி
ரத்தில் அழுக்கேறுவதுபோல முத்தியிலும்வந்து பொருந்தும், ஆதலா
ல் இரண்டுமன்று. நெல்லுக்குமியும் செம்புக்குக்களிம்பும் கடல்நீரு
க்கு உப்பும்போல, ஆன்மாக்களுக்கு ஆணவமலம் அநாதிசெயற்கை
யென்றும் அநாதியியோகமென்றுஞ் சொல்லப்படும். ஆனால் ஆன்
மாக்கள்சுதந்தரவினர்களாயிருத்தலால் நமக்குண்டாகியசெய்தி அவ
கட்குண்டோவெனில்-வேதாகமங்களிலே விதிவிலக்கும் அவர்கட்கு
நரகமோக்கமுமுண்டாயிருத்தலினாலே செய்தியுண்டு. ஆனால் ஆன்
மாக்களுக்குக் கன்மத்திலுண்டாகிய விருப்பம் நாம்கொடுத்த விருப்ப
மோ ஆன்மாக்களுக் குண்டாகிய விருப்பமோ வெனில் - நாம் கொ
டுத்தவிருப்பமானால் ஏன் பாவத்தைச்செய்தீரென்று நரகத்திலிட்டு
த்தண்டிக்கவேண்டுவதில்லை, ஆன்மாக்களுக்குண்டாகிய விருப்பமா
னால் புண்ணியங்களிருக்கப் பாவங்களைச் செய்யமாட்டார்கள் ஆதலால்
ஆணவமலமே ஆன்மாக்களுக்குக் கன்மத்திலே விருப்பத்தைக் கொ
டுக்கும். விருப்பத்தைக்கொடுத்த ஆணவமலமும் ஆன்மாக்களுக்குக்
கன்மத்தையறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. விரும்பிய ஆன்
கன்மத்தையறிந் தெடுத்துக்கொண்டு புசிக்கமாட்டார்

சன். விரும்பப்பட்டகன்மமும் ஆன்மாக்களை யறிந்துவந்து பொருந்தமாட்டாது. இந்தச் செய்தியை நாமறிந்து இரக்கத்தினாலே அவ்வான்மாக்கள் கன்மத்துக்கேற்ற தனுவைக்கொடுத்து அத்தனுவினிடமாக அக்கன்மத்தைக் கூட்டிப் புசிப்பிப்போம். அஃதெவ்வாறெனில்-குழந்தைக்குப் பாலின்கணுண்டாகியவிருப்பந்தாய்கொடுத்த விருப்பமோ குழந்தைக்குண்டாகியவிருப்பமோவெனில்-தாய்கொடுத்தவிருப்பமானால் அவள் கொடுக்கின்றபோதெல்லாம் பாலையருந்தல்வேண்டும், குழந்தைக்குண்டாகியவிருப்பமானால் மாந்தங்கொண்ட வேளையினு மாறாதருந்தல்வேண்டும், இவ்விரண்டுமின்மையால் பசியே குழந்தைக்குப்பாலின்கண் விருப்பத்தைக்கொடுத்தது. விருப்பத்தைக்கொடுத்தபசியும பாலையறிந்தெடுத்துக்கொடுக்கமாட்டாது. விரும்பிய குழந்தையும் பாலையறிந்தெடுத்துக் குடிக்கமாட்டாது. விரும்பப்பட்ட பாலுங்குழந்தைவாயில்வந்து புகுதமாட்டாது. இந்தச்செய்தியைத் தாயானவள் அறிந்து இரக்கத்தினாலே பாலையெடுத்துப்பாலடையில்விட்டுக் குழந்தைவாயிலேவைத்துப்புகட்டுவள். இவற்றுள்குழந்தையைப் போலும்ஆன்மா, பசியைப்போலும்ஆணவமலம், பாலைப்போலுங்கன்மமலம், தாயைப்போலு நாம், பாலடையைப்போலுந் தனு எனவறிக. அன்றியும் குருடனுக்குக்கோலின்கணுண்டாகிய இச்சைகோல்கொடுத்திருக்கின்றவ னிச்சையோ குருடனுக் குண்டாகிய விச்சையோவெனில் - கோல் கொடுத்திருக்கின்றவ னிச்சையானால் அவன் கொடுக்கின்ற நேரமெல்லாங் கோலைப்பிடித்தல் வேண்டும். குருடனுக் குண்டாகிய இச்சையானால் எப்போதுங் கோலைப்பிடித்துக் கொண்டே யிருத்தல் வேண்டும். இரண்டு மின்மையால் குருடேகுருடனுக்குக் கோலின்கண் இச்சையைக் கொடுத்தது. இச்சையைக் கொடுத்த குருடுங் கோலை யறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. இச்சித்த குருடனுங் கோலை யறிந்தெடுத்துக் கொள்ளமாட்டான். இச்சிக்கப்பட்டகோலுங் குருடன் கையில் வந்து பொருந்தமாட்டாது. இந்தச் செய்தியை அவனுக் குரிமையா யுள்ளவ னறிந்து இரக்கத்தினாலே கோலையெடுத்து அவன் கையிற்றந்து அவன் நினைத்தவிடத்திற் கொண்டுபோய் விடுவன். இவற்றுள் குருடனைப்போலும் ஆன்மா, குருடைப்போலும் ஆணவமலம், கோலைப்போலும் சரீரம், கோல்கொடுத்திருக்கின்றவனைப்போலு நாம், இடத்தைப்போலும் புவனம் எனவறிக. ஆணவமலஞ் சடமாயிருத்தலால் அதற்குச் செய்தியு

ண்டோவெனில்-விஷம் பாஷாணம் தீ நீர் காற்று முதலிய ஜடங்கட்
குச் செய்திபுண்டானாற்போல அதற்குச்செய்தியுண்டு. ஆனால் நாம்
ஆன்மாக்களுக்குத் தனுக்களைப்படைக்குமிடத்து நமது நினைவின்படி
படைப்போமோ ஆன்மாக்கள்-நினைவின்படி படைப்போமோவெனில்
ஒரே வடிவன்றிப் பலவடிவங்களாகப் படைத்தலால் ஆன்மாக்களது
நினைவின்படியே படைப்போம். அஃதெவ்வாறெனில்-குலாலன் பா
ண்டங்களை வனையுமிடத்துத்தனது நினைவின்படிவனைவானோ பிறர் நி
னைவின்படி வனைவானோவெனில் - தனது நினைவின்படிவனைவானாயின்
ஒரேவடிவாகவனைதல்வேண்டும். அவ்வாறின்றிப்பலவடிவங்களாய் வ
னைதலால் பிறர் நினைவின்படியேவனைவான். இவற்றுள்குலாலனைப்
போலுநாம். மண்ணைப்போலுமாயை. பாண்டத்தைப்போலுந்தனு
பிறரைப்போலும் ஆன்மாக்களெனவறிக. ஆனால் ஆன்மாக்கள் எங்
கும் வியாபகராயிருக்க எவ்வாறுசரீரத்தைப் பற்றுவரெனில்-படிகம
லையானது எந்தப்புறத்தில் வன்னத்தைக் கொடுத்தாலும் பற்றிக்
கொள்வதுபோல எல்லாப்புவனங்களிலும் வியாபகராயிருக்கின்ற ஆ
ன்மாக்கள் நாம் எந்தப்புவனத்திலே சரீரத்தைக்கொடுத்தாலும் பற்
றிக்கொள்ளுவர். அஃதெவ்வாறெனில்-படிகமலையொன்று, படிகமலை
க்கொளியொன்று,படிகவொளிக்குப் பற்றுங்குணமொன்று,படிகவொ
ளிக்குப் பற்றுந்தொழிலொன்று, வன்னமொன்று, வன்னத்தைப் பற்
றுவிக்கின்றவனொன்று, ஆகஆறு. இவற்றுள் படிகமலையைப்போலும்
ஆன்மா, படிகமலைக்கொளிபோலும் ஆன்மபோதம்,படிகவொளிக்குப்
பற்றுங்குணம்போலும் ஆன்மபோதத்திற்கு அறியுங்குணம்,படிகவொ
ளிக்குப் பற்றுந்தொழிலைப்போலும் ஆன்மபோதத்திற்கு அறியுந்தொ
ழில், வன்னத்தைப்போலும் மாயாகருவி, வன்னத்தைப்பற்றுவிக்கி
ன்றவனைப்போலுநாம் எனவறிக. ஆனால் ஆன்மாக்களுக்கு அறியுங்
குணமிருக்கின்றதிலே அவர்களை மலம் எவ்வாறு மறைக்குமெனில்
சந்திராதித்தர்களை இராகுகேதுக்கள் மறைப்பதுபோலும், நெருப்பை
நீர்மறைப்பதுபோலும்,ஆகாயத்தைமலைமறைப்பதுபோலும்,ஆன்மாக்
களை ஆணவவிருள்மறைக்கும். இம்மறைப்புத்தான் ஆன்மாக்களுக்
கு வருவானேனெனில்-அவர்கள் கன்மத்தால்வந்தது. ஆனால் ஆன்
மாக்கள் அவயவமின்றி நிரவயவராயிருக்க அக்கன்மந்தான் எவ்வாறு
ந்ததெனில்-நாம்-நிரவயவரென்பதை மறந்து அவயவர் நாமென்னுங்
அக்கன்மம் வந்தது. அக்கன்மத்தால் மாயையுண்டாயது.

அம்மாயையால் தனு கரண புவன போகங்கள் உண்டாயின. ஆனால் நாம் ஆன்மாக்களுக்கு அக்கன்மங்களைப் புசிப்பிக்குமிடத்து எவ்வண்ணமாயிருந்து புசிப்பிப்போமெனில், இச்சாஞானக்கிரியா சொரூபனாயிருந்து புசிப்பிப்போம்.

அஃதெவ்வாறெனில் - ஆன்மாக்களை முத்தியிற் சேர்க்கவேண்டுமென்பதே இச்சை, ஆன்மாக்களிச்சித்த கன்மங்களை யறிவதே ஞானம், ஆன்மாக்களுக்கு அக்கன்மங்களை யூட்டியுறக்கித் தொலைப்பித்தலே கிரியை எனவறிக. ஆனால் ஆன்மாக்கள் அக்கன்மங்களைப் புசிக்குமிடத்து எவ்வாறிருந்து புசிப்பரெனில், இச்சாஞ்ஞானக்கிரியாசொரூபராயிருந்து புசிப்பர். அஃதெவ்வாறெனில், பண்டபதார்த்தங்களிற் சென்று பற்றுதலே இச்சை. அவைகளைப்பகுத் தாராய்தலே ஞானம். சர்வத்தையுந் தனதென்றழுந்துதலே கிரியையெனவறிக. ஆனால் ஆன்மாக்களுடைய கன்ம மெத்தனைவகையா யிருக்குமெனில் தூலகன்மம் சூட்சுமகன்மம் அதிசூட்சுமகன்மம் எனமூவகையாயிருக்கும். இவற்றுள் வினைகளுக்கெல்லாந் தூலகன்மமென்றும், இவ்வினைகளுக்குப் பின்பலனாகவருகின்ற புண்ணியபாவங்கட்கெல்லாஞ் சூக்ஷுமகன்மமென்றும், இப்புண்ணியபாவங்களுக்குப் பின்பலனாகவருகின்ற இன்பதுன்பங்களுக்கு அதிசூக்ஷுமகன்மமென்றும்பெயர். இம்மூன்றும் ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்துவம் என மூவகையாயிருக்கின்றன. அவையெவ்வாறெனில்-இருவினைகள் ஆகாமியமாகவும், இருவினைப்பயனாகிய புண்ணியபாவங்கள் சஞ்சிதமாகவும், புண்ணியபாவங்கட்குப் பலனாகவருகின்ற இன்பதுன்பங்கள் பிராரத்துவமாகவுமிருக்கின்றன. இவற்றுள் பயிரிடுவதுபோலும் இருவினைகள், அப்பயிரானுண்டான பலனைக் களஞ்சியத்திற் கட்டிவைப்பதுபோலும் புண்ணியபாவங்கள், அக்கட்டிவைத்ததிற் சிறுகச்சிறுக வெடுத்துண்பதுபோலும் இன்பதுன்பங்களை யனுபவித்தல் எனவறிக. ஆனால் இக்கன்மங்கள் ஆன்மாக்கள் நினைத்தவண்ணம் பலன்பட்டு வருவதுண்டோவெனில்-ஒருவன் முன்னே பனையுண்டாக்கிப் பின்னர் கத்திரிகட்டு அதன்பின்னர் கீரைபயிரிட்டால், இவற்றுள் பின்னாற் பயிரிட்ட கீரை பதினைந்துநாளுக்குள் புசிப்பாம். கத்திரி இரண்டுமாதத்திற்குள்ளேபலனாகிவரும். பனை பதினைந்துவருடத்திற்குப்பின் பக்குவப்பட்டுவரும். இதுபோல ஆன்மாக்கள் முன்பு ஆர்ச்சித்தகன்மம் முன்னே பலன்பட்டுவராமல் வெகுஜனனத்திற்குப் பின்வருதலும், பின்பார்ச்சித்

தகன்மம் உடனே பலன்பட்டுவருதலுமாம். ஆனால் இக்கன்மம் ஆன்மாக்களுக்குப்புசிப்பாகவருங்காலத்து எவ்வாறுவருமெனில், ஆதிதைய்விகம் ஆதிபௌதிகம் ஆதியாத்மீகம் என மூவித தாபத்திரயங்களால்வரும். இவற்றுள் தெய்வத்தால்வருகின்ற இன்பதுன்பங்கட்குத்தைய்விகமென்றும், பூதத்தால்வருகின்ற இன்பதுன்பங்கட்குப் பௌதிகமென்றும், ஆன்மாக்களால் வருகின்றஇன்பதுன்பங்கட்கு ஆத்மீகமென்றும்பெயர். ஆனால் மேற்கூறிய கன்மங்கள் எவ்வாறொழியுமெனில், ஒருவன்பயிரிட்டு ஆயிரங்கோட்டை நெல்லுகண்டபின்புகளஞ்சியத்திலே ஐந்நூறுகோட்டை நெல்லைக்கட்டிமுந்நூறுகோட்டைநெல்லை உணவுக்காகவைத்து இருநூறுகோட்டைநெல்லை வயலில்விதைத்திருக்க, இவற்றுள் களஞ்சியத்திற்கட்டிய நெல் தீப்பட்டுவெந்தது. உண்ணவைத்தநெல் உண்டு செலவழிந்தது. விதைத்தநெல் மழையின்றிக்காய்ந்தது. இதுபோல ஆன்மாக்களுக்குப் பக்குவம்வந்தகாலத்திலே சஞ்சிதகன்மமானது ஞானாசாரியருடைய திருவருள்நோக்கால் வெந்துபோய்விடும், பிராரத்துவகன்மமானது எடுத்த சரீரத்திற்குப் புசித்துத் தொலையும், ஆகாமியகன்மமானது நமது நின்மலஞானத்தால் மேலைக்குவாராமல் நீங்கிப்போய்விடும், இவ்வாறே சஞ்சிதம் பிராரத்துவம் ஆகாமியம்என்னு மூவகைக்கன்மங்களு மொழியுமுறைமையெனவறிக. ஆனால் இவ்விதகன்மங்களை ஆன்மாக்களது விருப்பத்திற்கேற்றபடி புசிப்பிக்கின்றவன் நாமாயிருக்க ஆன்மாக்களுக்கு முதன்மை எவ்வாறு கற்பிக்கப்படுமெனில், ஆன்மாக்களுக்குக் கன்மத்தின்கண் விருப்பமிருக்க நாம் சொற்கத்திற்குவாவென் றழைத்தால் வருவாரல்லர். ஆதலால் அவ்வான்மாக்கள்பெத்தகாலத்தில் ஆணவமலத்தி லழுந்திக்கிடக்கும்போது தாஞ்சற்றுந் தோன்றாமல் அதன்மயமாயிருப்பதுபோல, முத்திகாலத்தில் நம்மிடத்திலழுந்தி நமதுமயமாய்க்கிடக்கையால் பெத்தத்தில் ஆன்மாக்களும் முத்தியில்நாமு முதன்மையெனவறிக. ஆனால் பெத்தான்மாக்களிடத்திலும் முத்தான்மாக்களிடத்திலும் நாமெவ்வாறிருப்போமெனில், பெத்தான்மாக்களிடத்தில் பாலுக்குள் நெய்போலவும் முத்தான்மாக்களிடத்தில் தயிருள் வெண்ணெய்போலவும் இருப்போம். ஆனால் ஆன்மாக்கள் எக்காலத்திலுந் தனித்திருக்கின்றதில்லையோவெனில் - கண்ணானது ஒருக்கால் ஒளியோடும் ஒருக்கால் இருளோடுங்கூடி யிருப்பதன்றி எக்காலத்தி தனித்திராததுபோல, ஆன்மாக்களெல்லாம் ஒருக்கால் மலத்தி



லேயும் ஒருக்கால் நம்பிடத்திலேயுங் கூடியிருப்பதன்றி எக்காலத்தி னுந் தனித்திரார்கள்.

ஆனால் ஒளியுமிருளும் ஓரிடத்திற் கூடியிராததுபோல ஆவ்வான் மாக்களிடத்தில் ஆணவமலமும் யாமுங்கூடியிருத்தல் கூடாதேயெ னில், ஒருமரத்தில் அடிதொடுத்து நுனிபரியந்தம் இரதமும் அக்கினி யுங்கூடியிருத்தல்போலயாமும் அவ்வான்மாக்களைக்கூடியிருப்போம். ஆனால் அவ்வான்மாக்கள் நரகத்திற்கிடந்து துன்பங்களை யநுபவிக்கு மிடத்து அவர்களைவிட்டு நீங்காத நமக்குமத்துன்பமுண்டோவெனி ல், ஆதித்தனொளிபடிகவொளியிற் கலந்துநின்று வாளெங்களைப்பற்றுவி த்துந் தான்பற்றாதவாறுபோலவும், ஒருவனனுபவிக்கின்ற துன்பம் அ வன்வயிற்றிற்கிடக்குங் கிருமிகட்கில்லாததுபோலவும், நமக்கொருக்கா லுமில்லை. ஆனால் ஆன்மாக்கள் எக்காலத்தினும் ஒன்றோடுகலந்திரு த்தலால் அவர்கட்கவத்தை யேதேனுமுண்டோவெனில்-கேவலம் ச கலம் சுத்தம் எனமூன்றவத்தையுண்டு. இம்மூன்றும் காரணம் காரிய மென இருவகைப்படும். இவற்றுள் காரணகேவலமாவது அநாதியிலே ஆன்மாக்கள் அறிவுகெடாமல் ஆணவமலத்தில் அழுந்திக்கிடத்தல், அஃதெவ்வாறெனில்-கண்ணானது இராக்காலத்திருளிலே ஒளிகெடா மல் விழித்திருத்தல்போலும். காரியகேவலமாவது நெற்றி - கண்டம் இதயம் - நாபி - மூலம் என்னுமிவ்வைந்திடத்திலும் சாக்கிரம் - சொ ப்பனம்-சுழுத்தி - துரியம் - துரியாதீதம் என்னுங்கீழாலவத்தை ஐந்தை யுமடைதல். காரண சகலமாவது அநாதிகேவலத்திலேயழுந்திக்கிட ந்த ஆன்மாக்கள் மாயாகருவிகளினாலே அக்கேவல நீங்கிச் சுகதுக்கங்க ங்களையறிதல். அஃதெவ்வாறெனில்-இராக்காலத்திருளிலே யழுந்திக் கிடந்தகண்ணானது விளக்கினாலே இருணீங்கிப் பதார்த்தங்களை காண டல்போலும். காரிய சகலமாவது இலாடத்தானத்திற்றானே துரியாதீத முதல் சாக்கிரமீறாயுள்ள மத்தியாலவத்தை ஐந்தையுமடைதல். கார ண சுத்தமாவது - அநாதி கேவலத்தினும் சகலத்தினும் அழுந்திக்கி டந்த ஆன்மாக்கள் அருட்டெரிசனத்தினால் அவைகளை விட்டு நீங்கி ப் பிரமானந்தத்தை யனுபவித்தல், அஃதெவ்வாறெனில்-இராக்கால த்திருளோடும் விளக்கோடுங்கூடியிருந்த கண்ணானது ஆதித்தனுத யஞ் செய்தவிடத்து அவைகளை விட்டு நீங்கி அவ்வாதித்தனைக் கண் டுகொண்டிருத்தல்போலும், காரிய சுத்தமாவது நின்மல சாக்கிரமுத ல் நின்மல துரியாதீத மீறாயுள்ள மேலாலவத்தை ஐந்தையு மடைதல்

எனவறிக. ஆனால் யாம் செய்கின்ற பஞ்சகிருத்தியங்கள் இவ்வான்மாக்களுக்கோ சரீரங்களுக்கோ வெனில் - ஆன்மாக்கள் நித்தியராதலால் - சிருட்டி - திதி - சங்காரம் கூடாது. சரீரஞ்சடமாதலால் திரோபவமும் அநுக்கிரகமும். கூடாது இனி அச்சரீரங்கள் முத்தொழிற்படுமிடத்து அதில் ஆன்மாக்கள் அழுந்துவதினாலும், ஆன்மாக்களினுடைய இரண்டுதொழில் சரீரங்கட்கில்லாமையினாலும், பஞ்சகிருத்தியமும் ஆன்மாக்களுக்கேயாம். ஆனால் நாம் பஞ்சகிருத்தியத்தை ஆன்மாக்களிடத்தில் நடத்துவதெவ்வாறெனில் - அவர்கட்குமாயாகருவிகளைப்படைத்து அறிவையுண்டாக்குவதேசிருட்டி, அவர்கட்கு மாயாகருவிகளை நிறுத்தி அறிவை நிலைபெறச்செய்வதே திதி, அவர்கட்குமாயாகருவிகளையொடுக்கி அறிவைப்போக்குவதேசங்காரம், அவர்களுடைய அறியுந்தொழில்களை அருளைக்கொண்டு மலசத்திகளால் மறைப்பித்து அவ்வவர்கள் கன்மங்களைத்தக்கபடிநிறுத்தலே திரோபவம், அவர்களுக்கு இன்பதுன்பங்களைப்புசிப்பித்துப்புண்ணிய பாவங்களாகிய வினைகளைபறுத்தலே அநுக்கிரகம்எனவறிக. ஆனால் ஆன்மாக்கள் அப்பஞ்சகிருத்தியப்படுதலெவ்வாறெனில். அவர்கள் அறியுந்தொழிலேசிருட்டி, அவர்கள் அறியுந்தொழிலில்நிலைநிற்றலே திதி, அவர்கள் அறியுந்தொழில் நீங்கலேசங்காரம், அவர்கட்குஅறியுந்தொழில்நீங்குமிடத்துள்ள அறியாமையே திரோபவம், அவர்கள் இன்பதுன்பங்களைப்புசித்துப் புண்ணியபாவங்களைகழித்தலே அநுக்கிரகம் எனவறிக. ஆனால்நமது பஞ்சகிருத்தியமும் அவற்றிலான்மாக்கள் படுதலும் இவ்வாறாகியிருக்க அவர்கள் பிறந்தார் இறந்தார்-நரகமுற்றார்-மோக்கமடைந்தார்-என்று வேதாகமங்களிற் கூறுகின்றதெவ்வாறாமெனில்-ஆன்மாக்கள் மாயாகருவிகளைப்பற்றிப்பதிந்திருத்தலேபிறப்பு, அம்மாயாகருவிகளை நீங்கிஅறியாதிருத்தலே இறப்பு, ஆயாசமுற்றிருத்தலே நரகம், அநாயாசமுற்றிருத்தலே மோக்கம் எனவறிக. ஆனால் ஆன்மாக்கள்மோக்கமடையுமிடத்துக் கெட்டுக் கூடுவரோ கெடாதுகூடுவரோவெனில்-கெட்டால்கூடத்தக்கதேயில்லை, கெடாதிருந்தாற்கூடவேமாட்டார்கள், ஆதலால்-ஆன்மா கெடாமல் விடயத்திற்செல்லும் அவ்வான்மபோதம் நிகழ்ச்சிகெட்டுக்கூடுமென்றறிக. ஆனால் அவ்வான்மாக்கள் அனந்தராயிருப்பதனால் அவர்களுள் பேதமுண்டோவெனில், விஞ்ஞானகலர்-பிரளயாகலர்-சகலரென மூன்றுபேதங்களாயிருக்கின்றனர். இவற்றுள் ஆணவமலமொன்றுடையிருக்கின்ற ஆன்மாக்களுக்கு விஞ்ஞானகலரென்றும், ஆணவம

ளும் கன்மமலம் என்னு மிவ்விரண்டோடு கூடியிருக்கின்ற ஆன்மாக்களுக்குப் பிரளயாகலரென்றும், ஆணவமலம் கன்மமலம் மாயாமலம் என்னும் இம்மூன்றோடு கூடியிருக்கின்ற ஆன்மாக்களுக்குச் சகலரென்றுஞ் சொல்லப்படும். இம்மூவகையான்மாக்களையு நாமாட்கொள்வதெவ்வாறெனில், விஞ்ஞானகலருக்கு ஒளியுருவாயும் பிரளயாகலருக்குத் தேவவுருவாயும சகலருக்கு மனிதவுருவாயு மிருந்து ஆட்கொள்வோம். ஆனால் ஆன்மாக்களுக்கு மலப்பிணியினால் சரீரங்கள் உண்டாயின நின்மலனாகிய நமக்குண்டாவதற்குக் காரணமென்னவெனில் - பிள்ளைக்குப் பித்தமுண்டானால் அப்பித்தத்தைத் தீர்க்கவேண்டுமென்று பிதாவுக்கு ஆசைப்பிணியுண்டானாற்போல ஆன்மாக்களுக்குள்ள மலப்பிணியை நீக்கவேண்டி நமக்கு ஆசைப்பிணியுண்டாயது. அதனால் சரீரங்கள் உண்டாயின. ஆனால் அவ்வான்மாக்களுக்கு மலப்பிணியை எவ்வாறு நீக்குவோமெனில், அவர்கட்கு இருவினையொப்பு வந்தகாலத்து வண்ணான் வத்திரத்திலுள்ள அழுக்கை உழமண்ணைக்கொண்டு நீக்குவதுபோல மாயாகருவிகளைக்கொண்டு நீக்குவோம். ஆனால் இருவினையொப்பாவதியாதெனில், ஒருவன்றான் * விரும்பப்பட்ட பதார்த்தங்களையும் வெறுக்கப்பட்ட பதார்த்தங்களையுங் கண்டால் விருப்பும் வெறுப்புமற்ற பதார்த்தங்களைக் கண்டாற்போல, நல்வினைப்பயனுந் தீவினைப்பயனும் வந்தால் அவ்விரண்டனிடத்தும் விருப்பு வெறுப்பின்றி நிற்றல். அஃதெவ்வாறெனில், ஒருவன் வைப்பாட்டியிடத்திற் சிறிதுநாளும் மனையாட்டியிடத்திற் சிறிதுநாளுமாகக் காலங்கழித்துவருகையில் இல்லறநூல் கேட்டவிடத்து வைப்பாட்டியை விடுத்து மனையாட்டியோடு வாழ்வதே சரியென்றும் துறவறநூல் கேட்டவிடத்து அம்மனையாட்டியும் பாசபந்தத்திற் கேதுவாகலான் அவளை விடுத்துத் துறவுபூண்பதே சரியென்றுங் கண்டு பின்னர் அவ்விருவரிடத்தும் விருப்பு வெறுப்பற்றதுபோல, ஒருவன் பாவமும் புண்ணியமுஞ் செய்துவருகையில் அறநூல் கேட்டவிடத்துப் பாவத்தைநீக்கிப் புண்ணியஞ்செய்வதே சரியென்றும் ஞானநூல் கேட்டவிடத்து அப்புண்ணியமுஞ் சனனம

* விரும்பப்பட்ட பதார்த்தங்கள் - பொன் - வெள்ளி - முதலாயின. வெறுக்கப்பட்ட பதார்த்தங்கள் - தரித்திரம் - வியாதி - முதலாயின. விருப்பு வெறுப்புமற்ற பதார்த்தங்கள் - திரணம் - பதர் - முதலாயின.

ரணத்திற் கேதுவாகலால் அதனைவிடுத்து ஞானத்தை யடைவதே சரியென்றுங் கண்டு, பின்னர் இரண்டினிடத்தும் விருப்பு வெறுப்பின்றிநிற்றலே இருவினை யொப்பென்றறிக.

இவ்வாறு இருவினை யொப்பின்கணுண்டாகின்ற மலநிவர்த்திக்குக் காரணம்யாதெனில், அநாதிதொட்டு மோட்சபரியந்தம் ஆன்மாக்களாலுண்டாகின்ற சிவபுண்ணியங்களாம். அவைகள் அபுத்தி பூர்வ சிவபுண்ணியம் - புத்தி பூர்வ சிவபுண்ணியம - உபாயசரிதை உபாயகிரியை - உபாயயோகம் - உபாயஞானம் - உண்மைச்சரிதை உண்மைக்கிரியை - உண்மையோகம் - உண்மைஞானம் - எனப் பத்துவிதமாயிருக்கின்றன. இவற்றுள் முந்தின வொன்பதும் மலநிலை அவைகள் ஆன்மாக்களால் செய்யப்படுவன. பிந்தின ஒன்று அருணிலை. அஃது தத்துவரூபம் - தத்துவதரிசனம் - தத்துவசுத்தி - ஆத்மரூபம் - ஆத்மதரிசனம் - ஆத்மசுத்தி-சிவரூபம் - சிவதரிசனம் - சிவயோகம் - சிவபோகம் எனப் பத்துவிதமாயிருக்கும். இந்தப்பத்தையும் பரிபக்குவனானவனுக்கு நாம் ஞானசாரியராக எழுந்தருளி சுத்தாவத்தையின் காரியமாகிய நின்மலசாக்கிரமுதலாயுள்ள ஐந்தவத்தைகளிலடக்கி அந்த உண்மைஞானத்தை யறிவிப்போம். இவ்வாறு அளவற்ற காலம் ஆணவமலத்தினால் மறைபட்டிருந்த ஆன்மாக்களை முத்தியில் விடவேண்டுமென்று கடல்போன்ற பெருங்கருணையினாலே திருமேனிகொண்டு அவர்களை அவ்வாணவ விருளினின்று மெடுத்து விஞ்ஞானகலர்முதலிய மூன்றுவகையாகத் தொகுத்துத் தனுமுதலிய மாயாகருவிகளைக்கொடுத்து அவைகளினிடமாக நல்வினை தீவினையென்னு மிருவகை வினைகளையூட்டி அவ்விருவினை யொப்பில் மலபரிபாகமுண்டாக்கி முத்தியிற்சேர்ப்பவனாகிய சர்வஞ்ஞன் நாமாயிருக்க, அறிவித்தாலன்றிச் சுயமாயில் ஒன்றையுமறிவதற்கில்லாத கிஞ்சிஞ்ஞனாகிய நீயோபிரமமாவாய். பிரமம் நீயேயென்பையாயில் சந்திர சூரியர் நட்சத்திரங்கள் - மேகங்கள் - சமுத்திரங்கள் - மலைகள் - காடுகள் - சராசரங்கள் - பஞ்சபூதங்கள் - முதலானயாவையும் உன்னால் ஏன் உண்டாக்கக்கூடாது. உனக்குப் புலன்களோ துக்க. சாக்கிராதி அவத்தைகளேன். நீ விரும்பியவண்ணம் வினைப்போகங்கள் சித்தியாத காரணமென்ன. உனக்கு நினைப்பு மறப்புகள் எங்ஙனமிருக்குந் தித்தனை

சனகனை ( அவனன்றி ஓரணுவுமசையாது ) என்று உலகத்தார் கின்ற பழமொழியையேனுங் கேட்டதில்லையோ.

மேலும் - சந்திர சூரியர்முதலிய கிரகங்கள் தத்தமுறைப்படி ஆகாயத்திற் சுழன்று உலாவுதலினாலும், மேகமானது சமுத்திர நீரையுண்டு பூமியிற்பொழிதலினாலும், அக்கினியுங் காற்றும் அளவு மீறியுண்டாகாமையினாலும், கார்முதலிய அறுவகைக்காலங்கள் முறைதவறாமல் வருகையினாலும், பாம்புமுதலிய துஷ்டஜெந்துக்கள் மந்திரத்தினால் வசமாதலினாலும், எல்லாஉயிர்களுமபரம்பரையாறாமல் வருதலினாலும், சுக்கிலமும் சுரோணிதமுங்கூடி ஒருவருஞ்செய்யாமல் சிசுவாய்ப் பிறத்தலினாலும், ஆனைமுதலிய சகலஜெந்துக்களும் ஆணும்பெண்ணுங் கூடினால் அந்தந்த ரூபமேகொண்டு உற்பத்தியாவதினாலும் சிலவுயிர்கள் ஆணும்பெண்ணுங் கூடாமலே உண்டாகையினாலும், வித்தின்வருக்கப்படி விருட்சமுதலியவைகள் முளைப்பதினாலும், ஆன்மாக்களெல்லாம் ஒருபடித்தாயிராமல் சிலர் இந்திரியபங்கமுடையவர்களாயும் சிலர் அவயவபங்கமுடையவர்களாயும் சிலர் சுகமுற்றவர்களாயும் சிலர் துக்கமுற்றவர்களாயும் சிலர் செல்வமடைந்தவர்களாயும் சிலர் வறுமையடைந்தவர்களாயும் சிலர் அறிவுள்ளவர்களாயும் சிலர் அறிவில்லாதவர்களாயும் சிலர் புண்ணியஞ்செய்தவர்களாயும் சிலர் பாவஞ்செய்தவர்களாயுமிருத்தலினாலும், ஒன்பது வழியுடன் பின்னுமொரு வழியுண்டாக்கிக்கொண்டு உடலில் உயிர் வாசஞ்செய்யக் கூடாமையினாலும், ஒருறுப்பு நீங்கினால் அதனை உடனே உயிர்கள் உண்டாக்கிக்கொள்ளமாட்டாமையினாலும், ஆண்குழவிவேண்டுநர்க்குப் பெண்குழவி பிறத்தலினாலும், பெண்குழவி வேண்டுநர்க்கு ஆண்குழவி பிறத்தலினாலும். இவ்விரண்டிலொன்று வேண்டுநர்க்கு அலிக்குழவி பிறத்தலினாலும், எதையும் வேண்டாதவர்க்கு எண்ணற்ற குழவிகளுண்டாதலினாலும், பசிக்குப் பாலையூட்டக குழவி யிறத்தலினாலும், ஒருவனை யொருவன் வெட்டும்போது மற்றொருவன் வந்து விடுவித்தலினாலும், சிலர் மாற்றார்க்குப் பயந்து மறைந்திருத்தலினாலும், சிலர் அம்மாற்றார் கரத்திலகப்பட்டு மடங்குதலினாலும், நித்தியமாயிருக்கவேண்டுகின்ற சங்கமங்களெல்லாம் விரைவில் இறத்தலினாலும், அதை வேண்டத்தக்க விவேகமில்லாத தாபரங்களெல்லாம் அழிவில்லாமல் நீடித்திருத்தலினாலும், உயிர்கள் தமது முற்சனனத்தையும் வருஞ்சனனத்தையும் அறிந்துகொள்ளக் கூடாமையினாலும், இவைகட்கெல்லாஞ் சற்சுதந்தரராக யாமொருகடவுளிருக்கின்றேமென்று உறுதியா யறிந்துகொள்ளக் கடவை. அந்தநாமே

தான் எவ்வளவேனுந் தற்சுதந்தரமில்லாமல் அளவற்றபேதமாயுள்ள ஆன்மாக்கள்செய்த நல்வினை தீவினைகட்கீடாகக் கம்மாளன் ஆபரணங்களை யுண்டாக்குவதும் குயவன் குடங்களை யுண்டாக்குவதுமாகிய காரணத்தைப்போல நிமித்தகாரணமாயிருந்து தனுவாதிகளைக்கொடுத்து அம்முறையே ரட்சித்துச் சங்கரிப்பதுமன்றி, அவ்வான்மாக்களுக்குப் பக்குவம்வந்தகாலத்தில் அநுக்கிரகமுஞ்செய்வோம். ஆதலால் இனியேனும் யாமுபதேசித்த சித்தாந்தத்தைக் கருதி வேறுபாடற்று ஏகமாகியும் அபாவமாகியு மிருந்து, முன்னர் ஆணவமலத்தில் எவ்வாறு சார்ந்துநின்றனையோ அவ்வாறு நம்மிடத்திற்சார்ந்து துவிதபாவனையற்றுச் சுகமாயிருக்கக்கடவையென்று திருவாய்மலர்ந்து தமது திருவுருவைக் கரந்தருளினார்.

இப்பால் சனகராசன் அவையனைத்தையுந் தெளிவுபெறக் கேட்டுச்சிந்தித்து நிதித்தியாசனஞ்செய்து நிஷ்டைகூடி, இவ்வாழ்வு நாரதமுனிவரால் வந்ததல்லவாவென்று நினைந்துநினைந்து,உருகி உருகி யாவருமெய்ஞ்ஞானியென்று சொல்லும்படியாகஉலகத்தைக்காத்துச் சீவன் முத்தனாகியிருந்தனன். அருந்தவர்களே - ஓராறுகினால் திரிசிரனென்னும் அந்தணனுடைய வறுமையெல்லா நாசமாகிப் பெறுதற்கரிய பெருஞ்செல்வம் அவனுக்குண்டானதன்றி அளவற்ற அற்புதங்களும் விளங்கினவென்றால், அதை எண்ணளவிற் கொண்டுவந்து ஆகமமுறைமைப்படி யருச்சிப்போர்களடையும் பயன் எம்போலிகளா லளவிட்டுரைக்கற்பாலதோ. என்று தேவகணங்கள் முனிவர்கணங்களுக்குச் சொன்னதாகப் பீதிர்தேவனுக்குப் பிரமதேவன் சொல்லியபடி தேவேந்திரன் சூரசேனமகாராஜனுக்குச் சொன்னான்.

௨எ - வது. தூர்வையாசகப்படலம்.

முற்றிற்று.



உ

கணபதி துணை.

இருபத்தெட்டாவது.

## தூர்வைதுலையேற்றுபடலம்.

கரிசிரனைக் கரிசிரனாய்க் காய்ந்தோன்முன் னொருநாரணைக் கழறுநிற்குந், திரிசிரனைச்சனகனைநல் லறுகேற்றுக் காத்ததிறஞ் செப்பினமால், அரிசிரனாய்க் கனகனுயி ரருந்தினவுமானுமைய னுதியொருநுஞ், சுரிசிரராய்த் துலையருகுக் கிணையாகக் கதைநவத்தீர் சொல்வோங் கேண்மின்.

---

ஓ சவுனகாதி முனிவர்களே! விநாயகமூர்த்தி தூர்வையாசகஞ்செய்து திரிசிரனென்னும் அந்தணனுக்கு அளவற்ற செல்வங்களை யளித்துச் சனகராசனுக்குப் பரத்துவநிச்சயத்தை யுணர்த்தியருளிய திருவிளையாடலைச் சொன்னோம். இப்பால் அத்தூர்வையைத் துலையேற்றிய வரலாற்றைச்சொல்லுவோங் கேட்பீராக. பின்னுந் தேவேந்திரன் சூரசேனமகாராசனைநோக்கி, அரசனே? தேவகணங்கள் முனிவர்கணங்கட்கு வேறொருகதையுஞ் சொன்னதாகப் பிரமதேவன் பிதிர்தேவனுக்குச் சொல்லுவதாவது. முற்கூறிய கவுண்டின்னியமுனிவர் ஐங்கரக்கடவுளாகிய கணேசமூர்த்தியை அநுதினமும் அன்போடு பூசித்துவருகின்ற நாளையில் ஓர்நாள் அவர்பத்தினியாகிய ஆசிரியையென்பவள் மிக்க மனமகிழ்ச்சியோடு தனது கணவனைநோக்கி ஒருகதை அடியாட்கு விளம்பல்வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனள். அதற் கம்முனிபுங்கவர் சந்தோஷங்கொண்டு முன்னர் விநாயகமூர்த்தி மிதுலைநகரிலிருக்கின்ற திரிசிரனிடத்திற் றூர்வைவிருந்துகொண்டு அவனுக்கு அளவற்ற பாக்கியங்களை யளித்தருளிய கதையைச்சொல்ல அதனை அவ்வாசிரியைகேட்டு, சுவாமி-அம் மிதுலாபுரி யந்தணனைப்பார்க்கிலும் யாமத்தூர்வையை வெகுவாய்க் கொண்டுவந்து கணேசமூர்த்திக்கு அருச்சிக்கின்றோம் அவர் நமக்குமாத்திரம் பாக்கியந் தராமலிருப்பதற்குக் காரணமென்னவென்றுகேட்டனள். நினைத்தமாத்திரத்தில் எல்லாச்செல்வங்களையும் ஏவலாகக்கொள்ளத்தக்க கவுண்டின்னியமுனிவர் அதற்குப் புன்னகைகொண்டு, இப்பிரபஞ்சத்துள்ளோர்களும் அத்தூர்வையின் மகிமை

யையுணர்ந்து சுத்தபவித்திராரூம்படித் தமது மனதின்கணினைத்தவராய்ப், பெண்ணே - நாமோரறுகு தருகின்றோம் அதனை நீயெடுத்துக்கொண்டு தேவேந்திரனிடஞ் சென்று அதனிடை யெவ்வளவோ அவ்வளவு பொன்தரக் கேட்டு வாங்கிவரக்கடவையென்று சொல்லித் தாமருச்சித்த அறுகுகளி லொன்றை யெடுத்துக்கொடுத்தனர். அதற்கவ்வாசிரியை இசைந்துவாங்கி உடனே சொர்க்கலோகத்திற்குச் சென்று இந்திரனைக்கண்டு தனது காதலராக்கியாபித்ததை அவனுக்குத் தெரிவித்தனள். அதைக் இந்திரன்கேட்டவுடன் மிகவுமற்புதங்கொண்டு அவ்விருடிபத்தினியைச் சாஷ்டாங்கமாக வணங்கிப் பூசித்துத், தாயே? நீர் இதனைக் குபேரனிடத்திற் கொண்டுபோவீராயின் உமக்கு வேண்டியபொன்னைப் பெற்றுக்கொள்ளலாமென்று சொல்லிச் சிலதூதுவரைத் துணையாகக் கூட்டியனுப்பினன். அவ்வாறே ஆசிரியை குபேரனிடத்திற் செல்ல அவன்கண்டவுடன் இருடிபத்தினியென் றறிந்துகொண்டு அனந்தமுறை தீர்க்கதண்டஞ்செய்து பூசித்தனன். உடனே கூடவந்ததூதர்கள் அக்குபேரனைப்பார்த்து, இந்த அம்மான்கரத்திற் கொணர்ந்துவந்திருக்கின்ற ஓரறுகம் புல்லினிடைக்குச் சரியானபொன்னைக் கொடுப்பிக்குமாறு இந்திரரெங்கட் காக்கியாபித்தனரென்றறிவிக்க அதனைக் குபேரன்கேட்டு, இதற்காகவா நம்மிடத்திற்குவந்ததென்று குறுநகைசெய்து அளவற்ற சொர்ணங்களை மலைபோலக்குவித்து, அன்னையே - உமக்குவேண்டிய பொன்னை இவைகளிற் கொண்டுபோகலாமென்று சொன்னான். அதை ஆசிரியைகேட்டுத் தன்னெதிரில் மலைபோலக் குவித்திருக்கின்ற பொற்குவையல்களைப்பார்த்து, ஐயா - எனது காதலர் இவ்வறுகினிடைக்குச் சரியான பொன்னையே வாங்கிக்கொண்டுவருமாறு உத்தரவுசெய்தன ராதலால் இவ்வறுகை ஓர் துலையின்கணிட்டு அதற்கிணையான பொன்னைத் தூக்கித்தரல்வேண்டுமென்றனள். அதற்குக் குபேரனிசைந்து உடனே துலாவையெடுத்து மேலேதூக்கினன். அதில் ஆசிரியைத் தனது அறுகம்புல்லை ஓர்தட்டில்வைத்தனள். குபேரனுடைய ஏவலாளர்கள் ஓரிம்மியளவு பொன்னைக்கொண்டுவந்து மற்றோர்தட்டிலிட்டனர். இப்பால் அறுகிட்டதட்டானது நிலத்திலும் பொன்னிட்டதட்டானது ஆகாயத்திலுமாகிநிற்க அவ்வற்புதத்தை அளகேசன்கண்டு தனது ஏவலாளர்களை நோக்கி, இவ்வறுகு மகா தைவீகமுள்ளதாயிருந்து. இஃது நமது பொக்கிஷத்தி லிருக்கின்ற பொன்னையுமே

யன்றி நம்மையுங் கொள்ளாதபோற் றோன்றுகின்றது. ஆகலாலெவ்
வளவு பொன்னைக்கொண்டேனும் இரண்டு தட்டுகளையுஞ் சமஞ்செ
ய்யுங்களென்று கட்டளையிட்டனன். அதைக்கேட்ட ஏவலாளர்கள் மீ
ட்டும் ஓர் தொடியளவு பொன் கொண்டுவந்து வைத்தார்கள். அதற்கு
ஞ் சமனாகாமையால் பின்னர் ஓர் தூக்களவு பொன்கொண்டுவந்து
வைத்தார்கள். அதற்குஞ்சமனாகாமையால் அதோடோர்துலாட்பொன்
கொண்டுவந்து வைத்தார்கள். இவ்வாறு அளவற்றபொன்னை வரிசை
வரிசையாகக் கொண்டுவந்து மாறாமல் வைத்திருந்தார்களேயன்றி
அறுகின் தட்டானது சிறிதேனு நிலத்தினின்று மேலெழும்பக்கண்
டவரல்லர். மற்றொரு தட்டுமாத்திரம் பொன்னைக் கொண்டுவந்து இ
டுந்தோறும் இடங்கொடுத்துக்கொண்டு வளர்ந்துவந்தது. இப்பால்
அவர்கள் குபேரனுடைய அரண்மனையி லடங்கியிருக்கின்ற அவன்
சொந்த நிதிகளையெல்லாங் கொண்டுவந்து நிரப்பினார்கள். அதனாலும்
அத்தட்டுகள் ஒன்றுக்கொன்றுசமனாகாமலே யிருந்தமையால் அதைக்
குபேரன்கேட்டு ஆச்சரியமடைந்து, உடனே தனது நகரத்திலுள்ள
பொருள்களையெல்லாம் வரவழைத்துக் குவித்தனன். அதனாலும் அ
த்தட்டு நிலத்தினிறங்கக்கண்டிலனாகிப் பின்னர் தனது மனைவியோடு
ம் வந்து துலாவைவணங்கி ஏறினன். அப்போதும் அவைகள் சமனா
காமையால் அவ்வற்புதத்தைத் தேவேந்திரன் கேள்வியுற்றுத் தனது
நிதிகளையுந் தனது நகரத்துள்ள நிதிகளையுங்கொண்டுசென்று அத்த
ட்டின்கணிறப்பித் தானுமேறினன். அதற்கு அஃது சிறிதுமிறங்கா
திருந்தமையால் பின்னரத்தேவேந்திரன் மும்மூர்த்திகளும் வருமாறு
தன்மனதிலவர்களைத் தியானித்தான். அவ்வாறே அம்மூவர்களுந் த
ங்கடங்கள் பரிசனங்களோடும் வந்து ஏறினார்கள். அப்போதும் அ
வ்வறுகின் தட்டு முன்னிருந்தவண்ணமே சற்றுமசையா திருந்தது.

ஓ முனிவர்களே - அற்ப வரத்தினையுடைய பலபேர்கள் தங்கட
ங்கள் அளவற்ற செல்வத்தோடுவந்து கூடினாலும் பெருந்தவத்தினை
யுடையோரது ஓர் சிறியபொருளுக் கொப்பாவரோ. இப்பால் இந்தி
ரன்முதலிய சகலதேவர்களும் இவ்வறுகு விநாயகமூர்த்தியினுடைய
திருவடிகளில் அருச்சனைசெய்து மேன்மைபெற் றிருக்கின்றதெனத்
தெரிந்துகொண்டு யாவரும் அத்தட்டினை விட்டிறங்கி முப்பத்துமுக்
கோடிதேவர்களும் புடைசூழ்ந்துவரும்படியாக அவ்வவர்களுடைய
வாகனங்களிலேறி ஆகாயவெளியெங்கு நிரம்பவெருந்து பூவுலகில்

கண் வசிக்கின்ற கவுண்டின்னியமுனிவர் காணும்படி வந்திறங்கினார்கள். இவ்வாறு எல்லாத்தேவர்களுந் திரண்டுவந்ததைக் கவுண்டின்னியமுனிவர்கண்டு திடுக்கிட்டெழுந்து சாஷ்டாங்கமாகவணங்கி இருகரங்களையுஞ் சிரமேற்குவித்து ஆடிப்பாடி ஆனந்தக்கண்ணீர் சொரிந்து பலமுறை வலம்வந்து அடியேனியற்றிய தவத்தின் பயன்களை இன்றல்லவோ எனதுகையிற் கிடைக்கப்பெற்றேனென்று அளவற்ற வேதாகமங்களினாற் றுதிசெய்து, ஓ சர்வஞ்ஞமூர்த்திகளே - அடியேனிடத்திற் குற்றங்கள் சேர்ந்தனவாயினும், அவைகளைத் தேவரீர்களது நிறைந்த கிருபையினாற் பொறுத்தருளல்வேண்டும். தொண்டர்க்குத்தொண்டனாகிய சிறியேன் இது காறும் அறுகின் பெருமையைக் கண்டவனல்லன். இப்போது சுவாமிகளெல்லாம் ஆகாயவெளியினின்றும் வரக்கண்டமாத்திரத்தில் அதனது மகிமை இவ்வகைத்தென அறிந்துகொண்டேனென்று சொல்லினர். அதனைச் சந்திரசூடாதரமூர்த்தியாகிய சிவபிரான் செவியுற்று, அன்பனே - அறுகின் பெருமை இம்மாத்திரமேயன்று. அதை யாவராலும் அளவிட்டுரைத்தலுமரிது. உத்தமமைத்தாகிய அறுகினைத் தரித்திருக்கின்ற விநாயகமூர்த்திக்குப் பத்திசெய்பவருக்குள் உன்னையொப்பவரெவ்வுலகங்களினுமில்லையென்று திருவாய்மலர்ந்து அனந்த வரங்களையுமளித்துச் சென்றனர். மற்றைத்தேவர்களும் அவ்வாறே அம்முனிபுங்கவரைப் புகழ்ந்து வெவ்வேறு வரங்களைக்கொடுத்து அவ்வவர்கள் பதவிகளை யடைந்தனர். இப்பால் சிவபிரானது கட்டளையின்படி காமதேனு கற்பகவிருக்ஷமுதலியவைகள் வந்து அம்முனிபுங்கவர்க்கு ஏவல்செய்திருந்தன. இவையனைத்தையும் அவர் பத்தினியாகிய ஆசிரியைகண்டு அவரை தீர்க்கதெண்டஞ்செய்து, சுவாமி-கணேசமூர்த்திமகிமையையும் அவரது அறுகின்பெருமையையும் இப்போதறிந்துகொண்டேனென்று துதித்து அன்றுமுதல் தானும் அவ்வறுகினாற் கணேசமூர்த்தியை யருச்சித்து இகபரசாம்பிராச்சியத்திற் குரித்தானவளாகி வாழ்ந்திருந்தனள். ஆதலால் அறுகம்புல்லினது பெருமையை அவ்விநாயகமூர்த்தியேயன்றி இவ்வுலகத்தின்கண் யாவரால் கணிக்கக்கூடும். நீங்களும் அவ்வறுகைக்கொண்டு விநாயகக்கடவுளை யருச்சியுங்களென்று சொல்லித் தேவகணங்கள் விமானத்தைச்செலுத்திக்கொண்டு கணேசலோகத்திற்போய்ச் சேர்ந்தார்கள். அவ்விமானத்தி லேறிச்சென்ற ...ப்புலைச்சியாகிய மூவரும் சனனவாதனையை யொழித்து

விநாயகமூர்த்தியினுடைய பெருங்கருணையால் அளவற்றநாள் சொர்க்காதிபோகங்களை யநுபவித்து முடிவில் அவரது திருவடிகளிற்கலந்தார்கள். இப்பால் தேவகணங்களால் அவ்வறுகின் பெருமையைக் கேட்ட முனிவர்களெல்லாம் முருந்தோடு மூன்றிதழ்விட் டிருக்கின்ற அறுகுகளைக்கொண்டு விநாயகமூர்த்தியை யருச்சித்தார்கள். உடனே கணேசமூர்த்தியினுடைய கிருபையால் அவ்வவர்கட்கு வேறுவேறு தெய்வவிமானங்கள்வர அவைகளிலவர்கள் ஆரோகணித்து விநாயகருலகத்திற் சேர்ந்தார்கள். அதனை அந்நகரத்துள்ளோர்களறிந்து அவ்வாறே அத்தூர்வையைக்கொண்டு இடைவிடாம லருச்சித்து சொர்க்கலோகத்தை யடைந்து அளவற்ற போகங்களை யநுபவித்தார்கள். ஆதலால்-உன்புத்திரனாகிய கிருதவீரியனையும், அவ்வறுகைக்கொண்டு சங்கடசதுர்த்திவிரதத்தை நிறைவேற்றச்செய்யென்று பிரமதேவன் பிதிர்தேவனுக்குச் சொல்லியதாகத் தேவேந்திரன் சூரசேனமகாராஜனுக்குச் சொன்னான்.

௨௮ - வது - தூர்வை துலையேற்றுபடலம்

முற்றிற்று.

௨

கணபதிதுணை.

இருபத்தொன்பதாவது

## வன்னிமகத்துவப்படலம்.

கவுண்டின்னியனுலகோர்முன் றுளறுகேற்றுந்
துவுண்டென்னவாசுரியையாற்றுலையிலிட்ட
துவலன்சொல்லினுமரிமுகற்குறுவர்காண்மற்
றியண்சொல்லுவாஞ்சமியினேற்றருளேற்றே.

ஓ சவுனகாதிமுனிவர்களே; கவுண்டின்னியமுனிவர் விநாயகமூர்த்தியினுடைய தூர்வையைத் துலையின்கணேற்றி அதன் மகத்துவத்தைத் திரிலோகங்களினும் விளங்கச்செய்த சரித்திரத்தைச் சொன்னேம், இப்பால் வன்னிமகத்துவத்தைச் சொல்லுகின்றேங் கேட்பீராக

பின்னுந் தேவேந்திரன் சூரசேனமகாராசனைநோக்கிச்சொல்லுவான். அரசனே; பிதிர்தேவன் மீளவும் பிரமதேவனைத் தொழுதெழுந்து சுவாமி; ஓரறுகேனுங் கிடையாவிடின் அக்காலத்துவிநாயகக்கடவுளை எவ்வாறு பூசிக்கவேண்டியதென்று வினவ அதற்குப் பிரமதேவன் மனமகிழ்ந்து, விநாயகமூர்த்திக்குப் பல பூசாதிரவியங்களிருந்தகாலத்தும் அறுகைப்போல இன்றியமையாச் சிறப்பினதாக இருப்பது வன்னிபத்திரமும் மந்தாரமலருமாகும். இவற்றுள் வன்னியையன்றிப் பூசனைசெய்தோர்க்கு அக்கணேசமூர்த்தி இரங்கி வரங்கொடுப்பதில்லை. எந்தத்திரவியங்களில்லாவிடினும் வன்னியொன்றனாலவனைப் பூசனைசெய்தால் எத்தன்மைத்தாகிய பயனையும் எளிதிற்கொடுப்பர். அறுகு இல்லாமற் செய்கின்ற பூசைக்கு வன்னியொன்று கூடியிருந்தால் எல்லாப்பயனும் உண்டாகும். அவ்வன்னிக்குரிய பயனையளிக்கும்பொருள் வேறொன்றுமில்லை. அதனைக்கொண்டு பூசித்தவர்களடைந்த பேற்றினையுஞ் சொல்லுவோங் கேட்பாயாக. எல்லாவுயிர்களுந் துன்பமற வாழ்கின்ற விதர்ப்பதேயத்தில் சகலசெல்வங்களு நிறைந்து அஷ்டதிசைகளினும் புகழ்பெற்றுவிளங்கியிருக்கின்ற ஆதேயமெனுமோர் நகரமுண்டு. அந்நகரத்தில் வீமனென்னும் பெயரினையுடைய ஓர்வேடன் தீமையேயன்றி நன்மையென்பதைச் சிறிதும் அறியாதவனாகி எந்நாளும் வழிப்போக்கர்களையெல்லாமடக்கிப் பொருள்பறித்தும் மிருகங்களையலறக்கொன்று அவைகளை விலைக்குமாறியும் வாழ்ந்துவருகின்றநாளையில், அந்நகரத்திலுள்ளோர்கள் அங்கிருக்கின்ற ஓர் தேவாலயத்தில் திருவிழாவைச்செய்ய அதனைக்காணுமாறு அயலூரின்கணிருக்கின்ற சில வேதியர்கள் வந்து தரிசித்துமீட்டுந் தமது பதியினைநோக்கிச் சென்றனர். அவர்களையவ்வேடன் வழிமடக்கிக்கொன்று அவர்கள் வைத்திருந்த பொருள்கள் அனைத்தையுங் கொள்ளையிட்டுத் திரும்பினன். உடனே அவ்வந்தணரைக் கொன்ற பிரமஹத்தி அவனைப்பிடித்ததுபோலக் கொலையிற் றன்னினுஞ் சிறந்தவனாகியும், வலியில் மதயானையையொத்தவனாகியும், நிறத்திற் பொன்மைகலந்த சிவப்பினனாகியு மிராநின்ற ஓரரக்கனானவன் மானைத் தொடர்ந்து செல்லும் வேங்கையைப்போல அவ்விடனைப் பின்றொடர்ந்து துரத்தினன். அதுகண்டவ்வேடன் அஞ்சி ஓட்டங்கொண்டு ஓர் வன்னிவிருக்கத்தைக்கண்டு அதி லேறினன். அவனேறியவன்னியினு விருக்ஷத்தினின்றும் ஓரிலையானது அதனி லெழுந்தருளியிரு

க்கின்ற விநாயகமூர்த்தியினது திருவடிகளில் விழுந்தது. உடனே அரக்கனும் அவளைப் பின்றொடர்ந்தேறினன். அதனால் மற்றொரிலை அவரது திருமுடியில் வீழ்ந்தது. இவ்வாறு ஏறிய இருவரும் ஒருவரையொருவர் கைகளாலிறுகப் பிணித்துக்கொண்டு நிலத்தில் வீழ்ந்து தங்கள் பாவதேகத்தினின்றுநீங்கித் தெய்வவுருவம்பெற்றுக் கணேசமூர்த்தியினுடைய திருவருளினாற் பொன்விமானம்வர, அதிலவ்விருவர்களும் ஆரோகணித்து விநாயகலோகத்திற்போய்ச்சேர்ந்தார்கள்.

பிதிர்தேவனே? இவர்கள் பூர்வத்திற்செய்தவினையையுஞ் சொல்லுவேனாய் கேட்பாயாக. மேற்கூறிய விதற்பதேயத்தில் அரசாட்சிசெய்துகொண்டிருந்த புண்ணியகீர்த்தியென்னு மியற்பெயரையுடைய ஓரரசன் வேதாகமங்களில் வல்லவனாகியும், தண்ணிய கொடையையுடையவனாகியும், அளவற்ற யாகங்களைமுடித்தவனாகியும், சத்துருக்களை நாசஞ்செய்து நாட்டிய வெற்றிக்கொடியையுடையவனாகியு மிருந்தனன். அவன் தன்மனைவியாகிய மதனாவதியென்பவளோடு மன்மதனும் ரதியும்போல மருவிச் சந்தோஷசாகரத்தின்மூழ்கி வாழ்கின்ற நாளையில், தனதுவாழ்நாள் முடிவெய்தினவனாகி இகலோக வாசாசக்தியை யொழித்தனன். உடனே அவன் மனைவியும் அநுமரணஞ்செய்தனள். இப்பால் அவர்களுக்கு நற்கதியைச்சேர்ப்பிக்கவல்ல புத்திரப்பேறில்லாமையால் அவர்கட்காற்றவேண்டிய கருமங்களையெல்லாம் அமைச்சர்கள் நிறைவேற்றி, ஒருமாதஞ்சென்றபின்னர் இந்நகரத்தையாளத் தக்கவர்கள் யாவரென்று தமக்குள் ஆராய்ந்து, இறந்துபோன புண்ணியகீர்த்தியென்னு மரசனுக்கு ஞாதியாகிய சுத்திரிடராசனுடைய குமாரனாகி மிக்க வலிமையுற்றிருந்த சாம்பனென்பவனை யோசித்து அவனே பகைவரைக் களையவல்ல பராக்கிரமசாலியென நிச்சயித்து, அவன்பிறப்பை சிறிதுமுணராது விதிப்படி மகுடாபிஷேகமுதலியவைகளைச்செய்து சிம்மாதனத்தி லேற்றுவித்து மதித்தற்கரிய சிறப்புக்களனைத்தையு நிறைவேற்றித் தங்கட்கு அரசாக்கிக்கொண்டார்கள். பின்னர் அச்சாம்பனென்பவன் நாடுநகரங்களிலுள்ள எல்லாச் சனங்களுந் தன் னருகில்நின் றேவல்செய்யக் குபேரனைப்போல அளவற்ற செல்வத்தோடு வாழ்ந்துவருகின்றநாளையில், அவன்தனது செங்கோல் நிலைமையிற்றவறிப் பிராணிகளைவருந்துவதும் உயிர்க்கொலைசெய்து உண்பதும் பரஸ்திரீகளைப்புணர்வதும் பிறர்பொருளைக் கவர்வதுமாகி, உலகத்தையெல்லாந் தனக்குப்பற்றிய கட்டைப்

போலச்செய்து தனது நெறிதப்பியநடைக்கு ஒத்துவராத மந்திரிகளைச்சிறையில்வைத்து, ஒத்துவருகின்ற துற்புத்தியென்னும் பெயரினையுடைய ஒருவனை மந்திரியாக்கி அவனிஷ்டப்படி நடவாதவர்களைச் சுதாவில் தண்டிக்குமாறு அவனுக்கதிகாரமுமீய்ந்து தான் சதாகாலமும் ஸ்திரீபோகத்தில் அழுந்திக்கிடந்தனன். இவ்வாறு மதிமிகுந்த மந்திரிகள் சிறைக்கண்ணிருக்கத் தான் எக்காலத்தும் பரஸ்திரீபோகத்திலிருக்கத் துற்புத்தியென்பவன் தனதுபெயரினுக்கேற்க நடத்தும் பாவச்செய்கைகளால் உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் மனவாட்டமுறச் செய்துவந்தனனென்று பிரமதேவன்சொல்லலும், பிருதுதேவன் அவனைப் பணிந்தெழுந்து, சுவாமி! தேவரீர் முன்னர் சாம்பனுடைய பிறப்பை யோசியாது அரசாக்கிக்கொண்டார்களென்று திருவாய்மலர்ந்தருளியதால் அவன்பிறப்பு எவ்வகைத்தோ அதனையுங் கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்குப் பிரமதேவனிசைந்து, அன்பனே! அச்சாம்பனுடையதந்தையாகிய தூக்கரிடனென்பவன் தனக்கு நெடுநாள் ஒரு புத்திரப்பேறின்மையால் வருந்தமுற்று அளவிறந்த தவங்களையுந் தானங்களையு நிறைவேற்றிவந்தனன். ஆயினும்-அவன் இராக்கதர்களோடுகூடி வெவ்விய தொழில்களையெல்லா நடாத்திவந்தமையால் தான் விழைந்தபயனையடையாமற்போயினன். பின்னர் அவன் மனைவியானவள் சோரஞ்சென்று ஓர்வலைஞனுக் கவனைப்பெற்றனள். இவ்வாறு வலைஞனது வீரியத்தினின்றும் உற்பவித்த குற்றத்தினால் அச்சாம்பனானவன் அரசகுலமாகவிருந்தும், நல்ல கலைஞர்களையும் ஒழுக்கத்தினையுங் காய்ந்து துன்மார்க்கநடையிற் செல்லுவதாயினன். இதுதான் அவன் பிறப்பின்பேதமென் றறியக்கடவை. இப்பால் மேற்கூறியவண்ணம் அச்சாம்பன் தனது மறத்தாற்றினாற் சகலவுயிர்களு மனங்கலங்கச்செய்கின்ற காலத்தில், ஒருநாள் அவன் மந்திரியோடுங்கூடி வேட்டையாடித் திரும்பிவரும்போது என்னை யடிமையாகவுடைய விநாயகக்கடவுளாலயமொன்று வானத்தையளாவிய கோபுரத்தோடு அருகில்பலமறுகள்சூழப்பெற்று அளவற்ற வளப்பங்களைப் பொருந்தி அழகுற்றிருப்பக் கண்டனன், அவ்வாலயத்தி லெழுந்தருளியிருக்கின்ற கணேசமூர்த்தியோவெனில், முன்னொருகாலத்தில் வசிட்டமுனிவரால் மிக்க பத்தியாய்ப் பிரதிட்டை செய்ததாகும். பின்னொருகாலத்தில் அம்மூர்த்தி தசரதராசன் வந்திக்கப் பத்தெழுத்துள்ள மந்திரத்தைக்கணி



த்துப் புத்திரப்பேற்றினை யடைந்தனன். மேலும் அவ்விநாயகமூர்த்தியானவர் தம்மை விண்ணுலகர் மண்ணுலகர்முதலிய யாவர்களும் இடைவிடாதுபூசிக்க அவ்வவர்கட்கு வேண்டியபடிவரங்களையளித்து வருகின்றமையால், அவருக்கு யாவரும் வரதகணபதியென்னுந் திருநாமஞ்சாற்றித்துதிப்பர். இத்தன்மைத்தாகிய கணேசமூர்த்தியினது திருக்கோயிலைக்கண்ட சாம்பனானவன் தன்னமைச்சர்முதலிய பரிசனங்களோடும் அதற்குள்ளே நுழைந்து, அங்கு தரிசனஞ்செய்ய வந்திருந்த அளவற்ற சனங்களுள் சிலர் பொங்கலிடவும், சிலர் தேங்காயுடைக்கவும், சிலர் எண்ணெய்முதலிய திரவியங்களைக்கொண்டபிஷேகிக்கவும், சிலர் வேதாகமமாதிகளாற் றுதிசெய்யவும், சிலர் ஆனந்தக்கூத்தாடவும், சிலர் அற்புதமென்றுபாடவுங்கண்டு; தானுந் தனது மந்திரியுங் காட்டிற்பறித்து மள்ளர்கள்தலையிற் கொணர்ந்துவந்த தேன் கனி முதலிய வருக்கங்களை ஓர் விளையாட்டினாற் கணேசமூர்த்திக்கெதிரேவைத்து, சுவாமி! யாங்களு முனக்கடிமையென்றுசொல்லிக் கோயிலைப் பிரதக்ஷணஞ்செய்துபோயினர்.

இப்பால் முன்போலவே தாங்கள் மலைபோலவுங் கடல்போலவும் புவிபோலவும் நெடுநாள் அளவற்ற பெரும்பாதகங்களைச் செய்து வருகின்றநாளையில் இவர்கட்கு இறுதிநாள்சம்பவிக்க, உடனே யமதூதர்கள் வந்துநெருங்கிச் சிலர் இருவர்கரங்களைப் பின்புறமாகப் பிடித்துக்கட்டியும், சிலர் நீண்ட முருக்கூசிகளைக்கொண்டு - செவி - அண்ணம் - நா - முன்கை - ஆண்குறி - அகங்கை - உந்திமுதலியவிடங்களிற் குத்திச் சங்கிலிகளில் மாட்டியிழுத்தும், சிலர் நீண்ட கதாயுதங்களைக்கொண்டு மாறிமாறிப்புடைத்தும் வழிநடக்கச்செய்தார்கள். இவ்வாறு அவர்களைக் கொடுமையென்று சொல்லும்படியான நடத்தைகளுள் ஒன்றினுள்ளுந் தப்பவிடாது எல்லாத்துன்பங்களையுஞ் செய்து கொண்டுசெல்ல, ஆயுதம் அக்கினி, கல்-முதலியவைகளைச் சொரிகின்றமழையினாலும், யாளி - புலி - கரடி - முதலிய மிருகசாலங்கள்செய்கின்ற இம்சையினாலும், முட்களைப் பரப்பியிருக்கின்ற வழிதோறும் அடிக்கடி அடிபெயர்த்து நடக்கலினாலும், ஊர ஊர அவர்கள்பட்ட பாடுகள் யாவரால் வாய்விட்டுரைக்கற்பாலன. பின்னர் அந்தயமதூதர்கள் தமது அரசனுடைய சந்நிதானத்தில் அவர்களைக்கொண்டுபோய்விட அவர்கள் அந்த யமதருமராசனைப் பார்த்தளவில் புலியைக்கண்ட மான்போலவும், கருடனைக்கண்ட பாம்புபோலவும், சிம்மத்தை

க்கண்ட யானைபோலவும், பதை பதைத்துச் சோர்ந்துவீழ்ந்தனர். இப்பால் யமதருமராசன் சித்திரகுப்தனைக்கூவி இவர்கள் இதுகாறுஞ்செய்த புண்ணியபாவங்களைத் தெரிந்துசொல்லக் கடவையென்று கட்டளையிட, அவ்வாறே அவன் ஓர்கணப்போதில் அவைகளைத் தெரிந்துகொண்டு, ஓ தருமமூர்த்தியே! இவர்கள் சீவித்திருந்த நாண்முழுவதும் பாவங்களையே செய்துவந்தனர். ஓர்தினம் விளையாட்டால் கணேசமூர்த்திக்குச் சிறிது வந்தனை செய்திருக்கின்றார்களென்றுசொல்லினன். அதனை யமதருமராசன்கேட்டு அவர்கள்செய்த அச்சிறுபுண்ணியமானது பயனுக்கு முன்வராமையும் பெரும்பாவங்களெல்லா முற்றி முன்வந்திருக்கின்றமையையுஞ் சீர்தூக்கிக் கண்டு உடனே கண்களில் அனற்பொறி பறக்கும்படியான கோபத்தோடு இடியைப் போன்ற தனது பெருங்குரலினாற் கிங்கரர்களைக்கூவி, இவர்களை எல்லா நரகங்களினும்போட்டு வதைசெய்யக்கடவீர்களென்று ஆக்கியாபித்தனன். அதனைத் தறுகண்ணர்களாகிய அக்கிங்கரர்கள்கேட்டு வடவாமுகாக்கினியுமஞ்சத்தக்க கோபத்தோடு கையைப் பிறைபோல விரித்து அவ்விருவரையும் பிடரியைப்பிடித்து நிலத்தில்விழத்தள்ளிக் கரங்கொண்ட மட்டுமோதிக் காலாலுதைத்து, உலகத்தோரை முறைமையோடுகாவாது அலையச்செய்த மகாபாவிகாள். யாங்கள்செய்கின்ற முறைமையிற் படக்கடவீர்களென்றுசொல்லிச் சிலர் கூறிய வேலாயுதங்களைப் பரப்பியிருக்கின்ற நிலத்தின்மீது மல்லாக்கத்தள்ளி முட்களையுடைய தண்டாயுதத்தினால் உடலானது பள்ளமாகும்படி யெறிவார்கள். சிலர் இரண்டு உள்ளங்கால்களினும், ஊசிகளைக்கடாவுவார்கள். சிலர் வெளுத்தபொறியைப்போலத் துள்ளிவிழும்படியாகச் சுடுநிலத்திலிடுவார்கள். சிலர் நாறுமொத்துவதுபோல உதிரம்-மூளை - தசைமுதலியவைகள் சிதறும்படியாகத் தூணில் மொத்துவார்கள். சிலர் - பருந்து - கழுகு - காக்கை - நரி - நாய் முதலியவைகள் தங்கள்பசிகெடக்கூறிட்டுப் புசிக்கும்படியாக அவைகட்குமுன் அகப்படுத்துவார்கள். சிலர் உச்சியிலிருந்து மலவாயில்வரையில் ஊடுருவும்படியாக வச்சிரத்தினாற்செய்த முள்முளைகளைச் சொருவுவார்கள். சிலர் விடந்தங்கிய பற்களையுடைய சர்ப்பத்தின் வாயிற்கொடுப்பார்கள். சிலர் தசைகளைத் துண்டந்துண்டமாகவரிந்து புசிக்கச்செய்வார்கள். சிலர் நுங்கைத்தோண்டுவதுபோலக் கண்களைத்தோண்டுவார்கள். சிலர் கைகள் துள்ளிவிழும்படியாக ஆயுதங்களைக்கொண்டு தறிப்பார்கள்.

சிலர் வில்லுகளில் அழலுக்கொப்பான அம்புகளையேற்றி உடலிற்றைக்கும்படிவிடுவார்கள். சிலர் முடக்கிரும்புகளை மேல்வாய்களில் ஊடுருவக்குத்தி உயர்விற்றூக்கிச் சுற்றிலுநெருப்பைமூட்டித் துன்பப்படுத்துவார்கள். சிலர் மதம்பொழிகின்ற யானையினதுகால்களில் முடிகள் யிடறவிடுவார்கள். உதிரமொழுகுகின்ற இரும்புலக்கைகளைக்கொண்டு மோதுவார்கள். சிலர் கிருமிகள் கிண்டும்படியாக அவைகள் நிரம்பிய கிடங்குகளிலிடுவார்கள். சிலர் சீயுஞ்செந்நீருங் குழம்பியிருக்கின்ற கிணற்றுகளில் எறிவார்கள். சிலர் உடலமானது இரண்டுபிளவாகும்படி இரண்டுபக்கத்திலும் இரண்டுபேரிருந்து ஈர்வாளைக்கொண்டு அரிவார்கள். சிலர் உருக்கப்பட்டிருக்கின்ற செம்பை ஒன்பது துவாரங்களிலும் ஒழுக்குவார்கள். சிலர் கரும்பைப்போலத்தூக்கி நெருங்கிய ஆலையிற்சொருகுவார்கள். சிலர் முறுக்கியிருக்கின்றசெக்குகளில்வைத்தாட்டுவார்கள் சிலர் உடலிற் செதிலெழும்படி வாச்சியைக்கொண்டுசேதித்து நெருப்பிலிட்டுக் கோபிப்பார்கள். சிலர் உடலையும ஈயத்தையும் ஒன்றாக அகலிற்சேர்த்து நெருப்பின்மீதுவைத்துஉருக்குவார்கள். சிலர் கொதிக்கின்றநெய்யில் மூழுகும்படியாக விடுத்து அனலைமூட்டுவார்கள். சிலர் ஊசிகளையெடுத்து ஆண்குறிகளிலும் நகக்கண்களினுஞ் சொருகுவார்கள். சிலர் அழலிற் காய்ச்சப்பட்டிருக்கின்ற இரும்புகளை உள்ளங்கையில் வைப்பார்கள். சிலர் உருகியிருக்கின்ற செம்பொன்னையள்ளி உடன்முழுவதும் பூசுவார்கள். இவ்வாறு யமகிங்கரர்களெல்லாம் அவர்களை ஒவ்வொரு நரகங்களில் ஆயிரவருடம் பதினாயிரவருடம் நூறாயிரவருடமென்கின்ற கணக்கின்படி போட்டு வதைசெய்ய அவ்விருவரும் பூனைவாய்ப்பட்ட புறாவுங்கிளியும்போலவும் பாம்பின்வாய்ப்பட்ட தேரையுந் தவளையும்போலவும் வருத்தமெய்தி எல்லாநரகவேதனைகளையு மநுபவித்துவருகின்ற காலையில் அவர்கள் செய்த கொடும்பாதகங்களெல்லாங் குறைந்துபோயின. இப்பால் நின்றசேடத்தினை உலகத்திற் சனனமெடுத்து அநுபவிக்கும்படியாக அவ்விருவருங் காகமுங்கூகையுமாகவும், ஓந்தியும் வல்லூறுமாகவும், நாகமுந் தேளுமாகவும், நாயும் பூனையுமாகவும், கீரியும் பன்றியுமாகவும், நரியும் செந்நாயுமாகவும், குதிரையுங்கழுதையுமாகவும், ஒட்டகமும் யானையுமாகவும், மச்சமும் முதலையுமாகவும் புலியும் மானுமாகவும், எருதும் எருமையுமாகவுஞ் சனமித்தனர். இவ்வாறு இழிந்த யோனிகளெல்லாம் பலமுறை பிறந்து பின்னர் அரக்கருமாகவு

கிராதனுகவும் உற்பவித்து வன்னிமரத்திலேறிப் பாவங்களையொழித்தனர். ஆதியிலே இவ்வேடன் சாம்பனென்னு மரசனாயிருந்தபோது தானுந் தனதுமந்திரியும் ஓர் விளையாட்டாக வரதகணபதிக்கெதிராகக் காய்கனிமுதலியவைகளை வைத்து நாங்களும் உனக்கடிமையென்றுசொல்லிக் கோயிலைப்பிரதட்சணஞ்செய்துசென்ற புண்ணியத்தால் பிறவிகள்தோறும் பெரிய தீவினைகளைச் செய்திருந்தும் இச்சனனத்தில் அவர்கள் வன்னிவிருட்சத்திலேறவும், அதனிலையுதிர்ந்து அதற்கடியில் வாமனரால் பூசைசெய்யப்பட்டிருக்கின்ற வாமன கணேசர் பேரில்வீழவும், அதை அவர்கள் அபுத்திபூர்வகமாய்ச்செய்த பூசையென்று கணேசர் ஒப்புக்கொண்டு மோட்ச சாம்பிராச்சியத்தைக் கொடுத்தருளவுமாயது, என்றுபிரமதேவன் பிருதுதேவனுக்குச் சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச்சொன்னான்.

உக - வது - வன்னிமகத்துவப்படலம்

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

முப்பதாவது

## வன்னிவிநாயகர்வரலாற்றுப்படலம்.

மோனமுறுமெய்ஞ்ஞானக் கடல்படிவிர்சமித்தருவின் முடி மீதே
றிக், கானவனு மரக்கனுமைங் கரவடிக ளருளடைந்த காதைசொன்
னோம், ஊனமிலத் தருக்கீழவ் வும்பன்முகன் வதிந்ததுவு முவனைப்பல்
லோர், ஈனமற வருச்சித்தங் கிளிபபே றடைந்ததுவு மினிச்சொல்
வோமால்.

ஓ சவுனகாதிமுனிவர்களே! வன்னிமகத்துவத்தால் ஓரரக்கனுங் கிராதனு முத்தியடைந்த வரலாற்றினைச்சொன்னோம். இப்பால் அவ்வன்னிக்கீழலில் வீற்றிருக்கின்ற விநாயகர் வரலாற்றினைச் சொல்லுவோம் கேட்பீராக. பின்புந் தேவேந்திரன் சூரசேனமகாராசனைநோக்கிச் சொல்லுவான். அரசனே! பிருதுதேவன் பிரமதேவனைத் தொழுது சுவாமி! வாமனர் என்பவர் யார், அவர் வன்னிமரத்தடியி

லே விநாயகமூர்த்தியைப் பூசைசெய்த காரணமென்ன அதனையும் அடியேற்குச் சொல்லியருளல்வேண்டுமென்று பிரார்த்திக்கப் பிரமதேவன் சொல்லுவான். பிதிர்தேவனே! வாசியோகமுடையோர்க்கு வரம்பில் ஆனந்தத்தை யளிக்கவல்ல தேசிகனுகியும் தேவதேவனுகியும் நிகம்பரனுகியுமிருக்கின்ற சிவபெருமானது பஞ்சாட்சரத்தைச் சதாகாலமுந் தியானித்துத் திருவெண்ணீறுபூசி உருத்திராட்சகண்டிகைபுனைந்து அரியதவங்களைச் செய்கின்ற காசிபமுனிவரானவர் அதிதி-திதி-என்னுந் தமது இரண்டு பத்தினியரோடுங்கூடி வாழ்கின்றநாளையில், அதிதியென்கின்ற பத்தினியானவள் தனது புத்திரர்களாகிய இந்திரன்முதலிய தேவர்கட்கு உதவியாக இலக்குமிமணாளராகிய விண்டு தனக்குப் புத்திரனுகிவரவேண்டுமென்னும் அவாவினுல் பெரிய தவங்களைச்செய்துகொண்டிருந்தனள். அதனை யவட்கு மாற்றாளாகிய திதியென்பவளறிந்து தேவர்களினுஞ்சிறந்த மேன்மையையும் திரிலோகத்தினையுங் காக்கவல்ல திறத்தினையுமுடைய புத்திரர்களைப்பெறவேண்டி யோசித்து அந்நிவேளையிற் றனது கணவராகிய காசிபரைத் தொழுதெழுந்து, சுவாமி! யாதுகாரணத்தினுலோ காமநோயானது என்மனத்தைச்சுடுகின்றதால் தேவரீரடியாளைக்கூடிச் சுகந்தராவிடின் இனி எனதுயிர்வாழ்வதும் அரிதாயிருக்கின்றது. இந்நிமிடத்தில் அதற்கொரு தடைசொல்லாமற் கூடியருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்கம் முனிவரிசைந்து, விறகின்கணுண்டானதீ அவ்விறகினையே சுட்டெரிப்பதுபோல அவளகத்தின்கணுண்டாகிய விரகநோய் பின்னரவளையே வருத்துகின்றதைநோக்கிக் கூடினர். உடனே விண்ணுலகமுதலிய யாவு நடுங்கும்படியாகவுந் தானவர்குலங்கள் தழைத்தோங்கவும் இரணியகசிபன் - இரணியாக்கதனென்னும் இரண்டசுரர்கள் உற்பவித்தனர். அவருள் இரணியகசிபனென்பவன் சிவபிரானைநோக்கி அரிய தவங்களைச்செய்து அத்திரம் சத்திரம்-உள்-புறம்-பூமி-ஆகாயம்-இரா-பகல் உயர்திணை - அஃறிணை- என்னும் இந்த இரண்டுபகுதிகளினுந் தனக்கு மரணமுண்டாகா திருக்கவுந் தனது உதிரம் பூமியில்வீழ்ந்தால அதில்நின்று தன்னைப்போல உருவுண்டாகிவரவும் வரம்பெற்று, வேதவொழுக்கத்தினைக் கடந்து திரிலோகங்களையும்ஆண்டு குறைவற்றிருக்கின்ற செல்வமென்னும் குன்றிலேறித் தனக்கெவ்விதத்தினும் மரணமில்லையென்கின்ற உறுதியோடு இறுமாப்புற்றிருந்தான். அந்நாளையில் மகாவிஷ்ணுவானவர்

அவ் விரணியகசிபனைக் கொல்வதற்கான ஒருபாயத்தினை யாம் தேடவேண்டுமென்று மனத்தின்கணினைத்தவராய் ஒருநாள் பூமியின்கணெழுந்தருளி, ஓர் வன்னிவிருக்கத் தடியில் விநாயக மூர்த்தியைப் பிரதிட்டைசெய்து ஆகம விதிப்படி பூசனைபுரிந்து ஓராதனத்திலிருந்து ஐம்புலாதிகளையுமடக்கிச் சடாக்கரமந்திரத்தைச் செபித்துவந்தனர். இவ்வாறு தவஞ்செய்துவருகின்றநாளையில் ஐங்கரக்கடவுளாகிய கணேசமூர்த்திக்குக் கிருபைகூர்ந்து அவரெதிரிற் பிரத்தியக்ஷமாயினார். உடனே மகாவிஷ்ணுவானவர் தொழுதெழுந்து அனந்தமுறை தோத்திரஞ்செய்து, சுவாமி! எல்லாவுலகங்களையும் அறத்தாறுகடந்து அரசாட்சிசெய்துவருகின்ற இரணியகசிபனுடைய வுயிரை வாட்டுமாறு அடியேற்கு வரந்தரவேண்டுமென்று பிரார்த்திக்க அதற்கு விநாயகக்கடவுளிசைந்து, விண்டுவே! உயர்திணையும் அஃறிணையுமல்லாத உருவத்தினைக்கொண்டு உள்ளும்புறம்புமல்லாத வாய்தலிலிருந்து பகலுமிரவுமல்லாத மாலைப்போதில் விண்ணும் மண்ணுமல்லாத மடியிலவனை வைத்து அத்திர சத்திரமல்லாத நகத்தினாலே கீறிப் பிளந்து அவனுயிரைப் பூமியில் விழாதபடி வாயால் உறிஞ்சக்கடவையென்று திருவாய்மலர்ந்து, அதற்கேற்ற வலியுங் கிருபைசெய்து தமது திருவுருவைக் கரந்தருளினார். இப்பால் மகாவிஷ்ணு நரசிம்ம அவதாரங்கொண்டு, அவ்வுபாயத்தின்படி இரணியகசிபனைக்கொன்றார். அவனுக்குப் பின்னர் அந்த அரசாட்சி இரணியாக்கதன் ஆண்டுவந்தான். அவனையும் விநாயகமூர்த்தியினுடைய பெருங்கருணையால் மகாவிஷ்ணு வராக அவதாரமெடுத்து ஒழித்தருளினர்.

ஓ பிதிர்தேவனே! அண்டர்பெருமானாகியகணேசமூர்த்தியானவர் அவ்விடத்திலெழுந்தருளி விண்டுவுக்குவேண்டிய வரங்களை யளித்தமையால், விண்டுவிநாயகனென்னுந் திருநாமத்தினைக் கொண்டனர். பின்னொருகாலத்தில் விண்டு வாமனவதாரங்கொண்டு அந்த விநாயகமூர்த்தியை வந்தித்து வரம்பெற்றிருக்கின்றனர். அதனால் வாமனகணேசனென்னுமற்றொருபெயர் விளங்கிநிற்கின்றது. அதன் வரலாற்றையுஞ் சொல்லுவோம் கேட்பாயாக. முன்னர் விண்டுவினுடைய வராக அவதாரத்தினாற் கொலைபட்ட இரணியாக்கனுடைய புத்திரனாகிய விரோசனனென்பவன் சூரியனைக்குறித்து அனேகநாள் தவ[illegible]கொண்டிருக்க, அதற்குச் சூரியன் மனமிரங்கி அவனெதிரில்

வந்து ஓர் சொர்ணக்கிரீடத்தை யவன்கையிற்கொடுத்து, இக்கிரீடத்தை உனது முடியிற் சூடிக்கொண்டிருப்பையாயின் மூன்றுலகமும் உனதாக்கினைக்குள்ளாகும் உனக்கு ஓராபத்தும்வருவதில்லை. இக்கிரீடத்தினைத்தரியாமல் உனது சிரத்தின்பேரில் மற்றொருவர்கரம் படுமாயின், உடனே உனதுசிரம் நூறுபிளவுகளாய்ப் பிளக்கப்பட்டு உயிரும் ஒழிந்துபோகும். ஆதலால் இதை மறவாமல் சாக்கிரதையாயிருக்கக் கடவையென்று சொல்லிச் சூரியன் தனதுகதியைநோக்கிச்சென்றனன்.

இப்பால் விரோசனன் அப் பொன்முடியைச்சூடித் திரிலோகங்களுந் தனதேவல்கேட்க அரசாட்சிசெய்து மாவலியென்னும் ஓர் புதல்வனைப்பெற்று வாழ்ந்து வருகின்ற நாளையில் இந்திரன்முதலிய தேவர்கள் வைகுந்தத்திற்குச்சென்று மகாவிஷ்ணுவைத் தொழுதெழுந்து, சுவாமி! மூவுலகங்களினும் அவுணராக்கினை யதிகரித்திருப்பதால் அதனைப் போக்கியருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குக் காயாம்பூநிறத்தினையுடைய மகாவிஷ்ணுவானவரிசைந்து, ஸ்திரீகளும் அன்புகொண் டிச்சிக்கத்தக்க அழகினோடு மோகினியவதாரங்கொண்டு விரோசனனெதிரிற் சென்றனர். உடனே அம்மோகினியினுடைய பார்வையாலும், புயத்திற்சுமந்திருக்கின்ற புட்பவில்லினாலும், மிருதுவாகிய வசனத்தினாலும், குழலசைத்தன்முதலிய தொழில்களினாலும், தன்மனதிற் பெண்ணென்றேநினைத்து மோகக்கடலின் மூழ்கினவனாகிப் பின்சென்றனன். அதற்குப் பெண்வடிவங்கொண்டு வந்த விண்டுவானவர், அரசனே! நீ - கலவித்தொழிலிற் கைகண்டவனென்று கேள்வியுற்று உன்னைக் கூடவேண்டுமென்னு மிச்சையால் இங்ஙனம் வந்தனன். ஆனால் எனதுநீர்மையாதெனில், தயிலமாடாதவர்களதுதோளை எஞ்ஞான்றும் சார்வதில்லை. இப்போது தயிலமாடுவையாயின் என்கொங்கைகள் நினதங்கையவாகும். ஆதலால் விரைவில் தயிலத்தை வருவிப்பாயெனில், யானே அதனைத்தேய்க்கின்றேனென்று திருவாய்மலர்ந்தனர். இவையனைத்தையும் விரோசனன்கேட்டுத் தானடைந்திருக்கின்றமோகத்தினால் முன்பு சூரியன்சொல்லிய சொற்களையுமறந்து விரைவிற் றயிலங்கொண்டுவருமாறு ஏவலாளர்களுக் காக்கியாபித்துத் தயிலம் வந்தவுடன் தனதுகிரீடத்தை வாங்கி நிலத்தில்வைத்தனன். பின்னர் விண்டுவானவர் நமக்கு நல்ல சமயம் வாய்த்ததென்று சந்தோஷித்து அவனுக் கெதிரில்நின்று, ஒரு

கையா லவன் சிரத்தைப்பிடித்து மற்றொருகையாற் றயிலத்தை யள்ளிவிட்டுத் தேய்த்தனர். இவ்வாறு அவன் சிரத்திற் றமது கரத்தை வைத்தமாத்திரத்தில் சுண்ணாம்புக்கல்லின்மேல் சலத்தை விடுத்தாற் போல அவன் சிரமானது நூறுபிளவுகளாய்ப் பிளந்து இறந்துபோயினன். பின்னர் தேவர்களெல்லாம் வீறுகொண்டு தம்மைப் போற்றும்படியாக விண்டுவானவர் வைகுந்தத்தையடைந்தனர். இப்பால்மேற் கூறிய விரோசனனுடைய அரசாட்சியனைத்தையும் அவன் புத்திரனாகிய மாவலியென்பவன் கையேற்று, பிரமகபாலமேந்தி அனலாடும் பெருமானாகிய சிவபெருமானது திருவடிகளை இரவும் பகலும் விட்டுப்பிரியாத சிந்தையோடு தனதுசேமியை நீதிமுறைப்படி உலகமெங்கணுஞ்செலுத்தி வாழ்ந்துவருகின்றநாளையில் ஒருநாள் தனதுகுருவாகிய சுக்கிரனைவரவழைத்து அவனுக்கு வந்தனைமுதலிய வழிபாடுகளைநடத்திப் பின்னர் ஓராதனத்தின்கணிருக்கவைத்துப் பலவுபசாரங்களுடன் பூசைகளும்புரிந்து, சுவாமி! நாதியாகிய தேவேந்திரன் மாத்திரஞ் சொர்க்கலோகத்திற் கரசனாகி அளவற்றபோகங்களை ஆவலீர வநுபவித்திருக்க அவைகள் எனக்கில்லாமற்போனதற்குக்காரணமென்ன அதனை யடியேற்குத் திருவாய்மலரவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனன். அதற்குச் சுக்கிரன் சொல்லுவான்-அரசனே! தருமஞ்செய்தபேர்கள் போகத்தையநுபவிப்பது இயற்கையாகும். அப்படி தருமஞ்செய்யாது தனது வல்லமையினாலும் பிறவிமேம்பாட்டாலும் அடைகின்ற போகமெல்லாஞ் செயற்கையவாகும் அவைகள் நீடித்தும் நிற்கமாட்டா. சுரலோகசக்கிராச்சுரனாகியஇந்திரனேவெனில், நூறுமகங்கள்செய்து சகலபோகங்களையுந் தடையின்றி யநுபவிக்கின்றான். அவனைப்போல நூறுமகங்கள்சரியாகச்செய்யாது அளவற்றபேர்கள் அவனோடெதிர்த்து மாய்ந்துவிட்டனர். உனக்கப் போகங்களை யநுபவிக்கக் கருத்திருக்குமாயின் வினாவிலவனைப் போல நூறு மகத்தையு முடிக்கக்கடவையென்றனன். இவ்வாறு சுக்கிரன்கூறிய உண்மைகளை மாவலிகேட்டு மனமகிழ்ந்து உடனேவசிட்டர்முதலிய பெரியோர்களை வரவழைத்து, தொண்ணூற்றொன்பது அஸ்வமேதயாகங்களைச் செய்துமுடித்து இப்பால் நூறாவது யாகத்தையு முடிப்பதற்கு யத்தனங்கொண்டிருக்கின்றநாளையில், அதைத் தேவேந்திரனறிந்து, ஐயோ! இனி யென்செய்குவோம்? நமதுஅரசையும், அளவற்றபோகங்களையும், இன்றொழிந்தனமே நாம் எவ்வாறு

மாவலியைவாட்டவல்லேனாட்? ஆயினும்முன்னர் நமதுபாக்கியங்களைக் கவர்ந்த பாதகர்களையெல்லாம் இமைப்போதிற் கண்டதுண்டமாக்கி யருளிய கமலக்கண்ணரிருக்கின்றாரல்லவாவென்று தேறி விலாவிற் சர்ப்பசயனத்திற் பள்ளிகொண்டிருக்கின்ற விண்டுவைக்கண்டு அவரது திருவடித்தாமரைகளைப் பலமுறைவணங்கி அளவற்ற தோத்திரங்கள்செய்து, அண்ணலே! இதுகாறும் என்னை யெதிர்த்துவந்த தானவர்களையெல்லாம்மண்ணுக்கிரையாக்கி அடியேனை விண்ணுலுக்கரசாக்கிவைத்தது தேவரீர்பெருங்கருணையன்றோ. இப்போதும் ஓரவுணனாகிய மாவலியென்பவன் எனது பதவியையிச்சித்து மகஞ்செய்து வருகின்றனன். அவனுயிரையுந் தேவரீர்குடித்தருளி யான்விண்ணுலகத்திலிருக்குமாறு அருள்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்கு விண்டுவானவர் புன்னகைகொண்டு, இந்திரனே! நீ கூறியது நன்றாயிருக்கின்றது. பலமுறை பொல்லாங்குகள்செய்தும்வேத வொழுக்கங்களிற் றவறியும முனிவர்களையுந் தேவர்களையுந் துன்பப்படுத்தியு மிருந்தபேர்களையெல்லாம் இதுகாறுஞ் சங்கரித்து உனது பதவிக்கு யாதொரு தீங்குநேரவொட்டாமற் காப்பாற்றிவந்தனம். இப்போது நீ கூறிய மாவலியோவெனில் வேதாகமமுறைப்படி யாகஞ்செய்துவருகின்றான். தனக்கெக்காலத்தும் அழிவுநேராதவண்ணஞ் சிவபெருமானிடத்திற் றீர்க்காயு ளடைந்திருக்கின்றான். மேலும் எல்லாவிதத்துங் குற்றமற்ற குணத்தையுடையனா யிருக்கின்றான். இத்தன்மையவான மேம்பாட்டினையுடைய அவனை நாம் எவ்வாறு சங்கரிக்கக்கூடும்? ஆயினும் நீ நம்மிடத்துவந்து பிரார்த்தித்தனை யாதலால் உனது பதவிக்குக் குறைவுவராமற் காப்பாற்றுவோம், இனி யுனது மனக்கவலையை யொழித்திருவென்று திருவாய்மலர்ந்து இந்திரனுக்கு விடைகொடுத்தனுப்பிப் பின்னர் தமது மனத்தின்கண் இதனை யோசிப்பதாயினர்.

இப்பவும் மாவலியானவன் நீதிநெறியினும் வேதவொழுக்கத்தினுந் தவறாது யாகஞ்செய்துவருகின்றானாகலால் அந்த யாகத்தையழிப்பதற்கு அவன் ஞாதியாய்ப்போனால் வெற்றிபெறுவாலாமேயன்றி மற்ற சதுர்விதவுபாயத்தினாலும் ஏனைய வெவ்வேறு எதுவினாலுங்கூடாது. இனியாம் இதனையே செய்யத்தக்கதென்றுயோசித்து, முன்னர் தம்மைப் புத்திரனாகி வருவதற்கு எண்ணங்கொண்டு அரிய தவத்தினைச் செய்திருந்த அதிதிக்குப் பயனளிப்பவர்போல அவள்

கருப்பத்தில் வாமனராய்த்தங்கி, நான்கு திருக்கரங்களுங் காயாம்பூ நிறத்தினையுமுடையவராய் யாவரும் இலக்குமிமணாளர் இவரேயென்று சொல்லும்படியாக அவதாரஞ்செய்தனர். இப்பால் தந்தையாகிய காசிபர் அளவற்ற மகிழ்ச்சியையடைந்து தமது புதல்வருக்குச் சாதகன்மாதிகளைச் செய்து மூன்றாமாண்டிற் சவளச்சடங்கினை நடத்தி ஐந்தாமாண்டில் உபநயன கல்யாணத்தை முடித்து வேதாத்தியயனமுஞ்செய்வித்தனர்.

பின்பு வாமனரானவர் சகலவேதாகமபுராணங்களிலுஞ்சாமர்த்தியராகித் தமது தந்தையாகிய காசிபரிடத்துவந்து மிக்க பேரன்பினோடும் அவரைப்பணிந்தெழுந்து, அய்யனே! இந்திரபோகத்தையடையுமாறு மாவலி மகஞ்செய்துவருகின்றமையால் அவனைவென்று இந்திரனுக்குச் சுகத்தைமருவிக்கும்வகையாதென்றுவினவினர். அதற்குக் காசிபர் தமது புத்திரனை நோக்கி, குழந்தாய்! நீ - கூறியது விநாயகக்கடவுளுடைய திருவருளில்லாமல் முடிவதன்று. அவ்வருளைப் பெறுவதற்கு அவரது சடாக்கர மநுவைச்செபிக்கவேண்டுமென்றுசொல்லி வேதாகமவிதிப்படி தீக்ஷைசெய்து அந்தச்சடாக்கரத்தையு முபதேசித்தனர். இப்பால் வாமனர் அவ்விடத்தினின்று நீங்கி விதர்ப்பதேசத்தை யடைந்து ஆதேயநகரத்தில் தென்புறத்தில் வன்னிவிருக்கத்தினிழலில் வீற்றிருக்கின்ற என்னை யடிமையாகவுடைய விண்டு விநாயகமூர்த்தியினது திருவடித்துணைகளைத் தொழுது தினந்தோறும் பூசனைசெய்து, ஒருவருடபரியந்தஞ் சடாக்கரமந்திரத்தை யுருட்டித்துவந்தனர். அவ்வுருட்டிப்பிற்கு அடியவருள்ளத்தில ஒளிக்கொளியாக விருக்கின்ற சோதி ஸ்வரூபராகிய விநாயகமூர்த்தி திருவைபகூர்ந்து, நீலவெற்பின்மீது மாணிக்கக்குன்றிருந்தாற்போல மயில்வாகனத்தின்மீது பத்து திருக்கரங்களோடும் யானைமுகத்தோடுந்தோன்றி அளவற்றதேவகணங்கள் புடைசூழும்படியாக அவரெதிரிற் பிரத்தியட்சமாயினர். உடனே-தம்மைப்பிழைப்பிக்கவல்ல தயாபரமூர்த்தியினுடைய உருவத்தைக்காண்டலும் வாமனர் தமது தீமையனைத்துங்கீழே விழுந்தனபோல நிலத்தில் வீழ்ந்துபணிந்து நன்மையனைத்து மேலேயெழுந்தனபோல மீளவுமெழுந்து ஆனந்தக்கூத்தாடி, அளவற்ற வேதாகமங்களினாற் றுதிசெய்து கொழுந்துவிட்டெழுந்த அன்பினால் சிரத்திற் குட்டிகொண்டு கர்த்தன் சந்நிதானத்திற்கெதிராகக் கைகூப்பி மெய்க்கட்டிநின்றனர். அதற்கு விநாயகமூர்

த்தி மனதிரங்கி, வாமனனே! நீ-ஒரு வருடபரியந்தம் ஆகாரமுதலியவைகளை நீத்து மிக்க உள்ளன்பினோடும் நம்மையருச்சித்தனையாதலால் உனக்குவேண்டிய வரங்களைக்கேளென்று திருவாய்மலர்ந்தனர். உடனே வாமனர் பணிந்தெழுந்து, சுவாமி! எளியேற்குத் தேவரீரது திவ்விய சரணாரவிந்தங்களில் இடைவிடாதபத்தியும் தேவேந்திரனுக்கு அழிவில்லாத அரசும் தேவரீர்க்கு அடியேனுடைய காயமும் அடியேன் நினைத்தவெல்லாம் எளிதிற்கைகூடி வருந்திறமும் அறிந்துமறியாமல் ஏதேனும் பிழைசெய்வேனாயின் அதனை யானடிமையென்னுஞ் சுதந்தரத்தாற் றேவரீர் திருவுள்ளத்திற் பொறுக்கும்பொறுப்புங் கிருபைசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்குத் தேவதேவராகிய கணேசமூர்த்தி அவ்வாறே அநுக்கிரகஞ்செய்து தமது திருவுருவைக் கரந்தருளினர்.

பின்னர் மீளவும் வாமனர் அவ்வன்னிவிநாயகமூர்த்தியை யருச்சனைசெய்து அவ்விடத்தினின்று நீங்கித் தமது தந்தையிலிருப்பிடஞ் சேர்ந்து, அவரிடத்திற்றாம்பெற்றுவந்த வரங்களனைத்தையுங்கூறி முன்போலவே மிக்க மனக்களிப்போடு சடாக்கரமந்திரத்தைப்பிரதிதினஞ் செபஞ்செய்துவந்தனர். இப்பால் மாவலியானவன் மற்றொருவேள்வியுஞ் செய்துவருகையில் வாமனர் அவனிடத்திற்குச்செல்ல அவனவரை எதிர்கொண்டழைத்துவந்து தீர்க்கதண்டஞ்செய்து, ஓமகாதவசிரேஷ்டரே! தேவரீர்யாவர்? தாமரைமலரையொத்த தமது திருவடிவருந்தும்படி இவ்விடத்திற்கு வந்தகாரியமென்ன? அதனை யடியேற்குத் திருவாய்மலரவேண்டுமென்று கேட்டுக்கொண்டனன். அதற்கு வாமனர் மாவலியினுடைய அன்பை நோக்கி, அரசனே! யான்காசிபமுனிவருடைய புத்திரன், நீசிறந்தவேள்வியைச்செய்து வருகின்றனையாதலால் இச்சமயத்தில் யானிருந்து தவஞ்செய்வதற்கு மூன்றடிநிலந் தானஞ்செய்யுமாறுகேட்கவேண்டி நின்னிடத்திற்குவந்தனன். அவ்வாறே யளிப்பது நினது கடமையாகுமென்றனர். அதனைக்கேட்ட மாவலி பெருமகிழ்ச்சிகொண்டு அவ்வாறே உமக்குக் கொடுத்தோமென்றுசொல்ல அவனாசிரியனாகிய சுக்கிரன் அதனைத்தடுத்து, அரசனே நின்பாற் றானம்வேண்டிவந்தவன் தவசியல்லன். மாலே இம்மாயவுருவங்கொண்டு உன்பால் இவ்வுலகமனைத்துங் கைக்கொள்ளவந்தானென்றனன், அதனை மாவலி மறுத்து, கொடுப்பதனாலுருங் கேடானது கொடாமையால்வருஞ் செல்வத்தினு மேலானதென்றுகூறித் தாரா

பாத்திரத்தை யெடுத்துத் தத்தஞ்செய்யச் சென்றனன். அத்தருணத்தில் சுக்கிரனானவன் ஓர் சூக்குமவடிவங்கொண்டு அத்தாராபாத்திரத்தினின்றுஞ் சலமவரவொட்டாமல் அதன்மூக்கின்வழியை யடைத்துக்கொண்டனன். அவ்வஞ்சத்தை வாமன ரறிந்துகொண்டு, கொடுப்பதைத் தடைசெய்தலால்வரும்பயன் இதுதானென்றுசொல்லும்படி ஓர் தருப்பையை உள்ளேவிட்டுக்குத்தினர். அதனால் அச்சுக்கிரன் தனது விழிகளி லொன்றை இழக்கப்பெற்று அதினின்றும் அப்பாற்செல்ல உடனே வாமனர் மாவலிவிட்ட தத்தநீரைக் கையேற்றுக்கொண்டவராய் கொடைசெய்தலாலுண்டாகும்பயன் இவ்வளவிற்றென்று சொல்லும்படி அண்டகடாகங்களினும் ஊடுருவ ஓர்விசுவரூபங்கொண்டு தமது திருவடிகளினால் மூவுலகத்தினையும் ஈரடியாகவளந்து மூன்றாமடிக்கு அம்மாவலிசென்னியிற் றமதுபாதத்தைவைத்து அவனைப் பாதலலோகத்திற் செல்லும்படி யழுத்தித் தமது மனத்திற்கொண்டவஞ்சத்தை நிறைவேற்றிக்கொண்டு, இந்திரனுக்குச் சொர்க்கலோக அரசாட்சியை நிலைபெறச்செய்தனர். இப்பால் மாவலியானவன் முன்பு சிவபிரானை வழிபட்டிருந்த மகத்துவத்தினால் தனதாக்கினையைச் சகலலோகங்களினும் அப்பாதலலோகத்தினின்றுஞ் செலுத்தி மநுநீதிமுறைமைப்படி அரசாட்சிசெய்து தேவேந்திரனைப்போல அளவற்றபோகபாக்கியங்களை யநுபவித்துவந்தனன். இம்மாவலி பரமசிவகடாட்சத்தைப் பூரணமாகப் பெற்றிருந்தும் தனது உலகங்களையெல்லாங் கணேசமூர்த்திக் கன்பராகிய வாமனருக்குத் தத்தஞ்செய்து தான் அவரிட்ட சிறைக்கணிருக்கப் பெற்றனனாதலால், வன்னிவிநாயகர்-விண்டுவிநாயகர் - வாமனவிநாயகர் - என்னும் இம்மூன்று திருநாமங்களை யாவரோனு நினைத்தாலும் துதித்தாலும் பூசித்தாலும் அவர்கட்குத் தேவேந்திரனைப்போல அளவற்ற செல்வத்திலிருக்கும்படி வரங்கொடுத்தது எல்லா விடர்களையும் இமைப்போதிற் கொடுத்தருளுவர் என்று பிரமன் பிருகுதேவனுக்குச் சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொனனன்.

௯ ௰வது, வன்னிவிநாயகர் வரலாற்றுப்படலம்

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

முப்பத்தோராவது

# வன்னியால்விடநீங்குபடலம்.

சம்பவமைந்தின்மால் சமிக்கணேசனை
நம்பிமாவலியைவெல் நாட்டங்கூறினும்
ஐம்புலன்வென்றுளீ ராலம்வன்னியால்
வெம்பியவாறினி விளங்கக்கூறுவாம்.

ஓ. சவுனகாதிமுனிவர்களே! விநாயகமூர்த்தி வன்னிவிருக்கத்தினடியில் வீற்றிருக்கின்ற வரலாற்றினையும் அவ்வன்னிவிநாயகருக்கு விண்டுவிநாயகரென்றும் வாமனவிநாயகரென்றுந் திருநாம முண்டானமையுஞ் சொன்னோம். இப்பால் அவ்வன்னியால் விடநீங்கிய வற்புதத்தைச் சொல்லுவோங் கேட்பீராக. தேவேந்திரன் பின்னுஞ் சூரசேனமகாராசனைநோக்கி, அரசனே! பிரமதேவன் பிதிர்தேவனுக்கு மற்றொரு கதையுஞ் சொல்வதாயினன். அதாவது-முன்னொருகாலத்தில் சகலதேவர்களுங்கொண்டாடத்தக்க கைலையங்கிரியில் நவரத்னமயமாயிருக்கின்ற திருவோலக்க மண்டபத்தில் திரிசூலபாணியாகியுங் கங்காதரமூர்த்தியாகியு மிராநின்ற சிவபெருமானானவர் கொலுவீற்றிருக்கின்றபோது பர்வதராசன் புத்திரியாகிய உமாதேவியார் அவரைத் திரிக்கரணசுத்தியுடன் தண்டன்செய்து சுவாமி! கணேசமூர்த்திக்கு எல்லாப்பத்திரங்களினும் வன்னிப்பத்திரத்தில் அதிக விழைவுண்டாகியிருப்பதற்குக் காரணம்யாதோ அதனை யடியாட்குத் தேவரீர் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனர். அதற்குப் பரமன் கிருபைகூர்ந்து, பெண்ணே? விண்ணுலகத்தினரு மதிக்கத்தக்க மண்ணுலகத்தில் எண்ணற்ற தருமங்களையுந் தானங்களையு மிடைவிடா தியற்றி வறியார்களுக்கெல்லாம் வரையாதுகொடுத்துப் பகையாயினாரையு மடிபணிப்பிக்கவல்ல பராக்கிரமத்தோடு சகல நற்குணங்களினுஞ் சிறந்தவனாகிய பிரியவிரதனென்னும் ஓர் அரசனிருந்தான். அவனுக்கு இரண்டு மனைவியரிருந்தனர். அவருள் முன்னர் விவாகஞ்செய்யப்பட்டவளைக் கீர்த்தியென்றும், பின்னர் விவாகஞ் செய்யப்பட்டவளைப் பிரபையென்றுஞ் சொல்லுவார்கள். மேற்கூறிய பிரியவிரதனென்னும் அரசன் இளையாளாகிய பிரபையென்பவ

ளிடத்திற் பிரியம்வைத்து அவளிடத்திற்றானே கலவி இன்பங்களையநுபவித்து அவளுக்கே எல்லாச்சிறப்புகளையுங் கொடுத்துவந்தனன். அவனவ்வாறிருந்தபோதிலும் மூத்தாளாகிய கீர்த்தியென்பவள் சிறிதேனும் மனவருத்தங்கொள்ளாது கற்பையேகலனாகமதித்துத் தனது கணவனுக்குரிய பணிகளில் தினையளவுங் குறைவில்லாதபடி நடாத்திவந்தனள். இப்பால் பிரியவிரதன் இளையாளோடு நாளுக்குநாள் நூதனவிழைவோடும் புணர்ந்துவருநாளையில், அவள் கருப்பத்திற் கருவுண்டாகிப் பத்தாந்திங்களில் ஓராண்பிள்ளையைப் பயந்தனள். பின்னர் அப்பிள்ளை பதுமநாபனென்னும் பெயரைவகித்துப் பருவமுற்றகாலத்தில் பாஞ்சாலனென்கின்ற ஓரரசன் இலக்குமிபோன்ற தனதுகுமாரத்தியைச் சகலவிதசிறப்போடும் அவனுக்கு விவாகஞ்செய்து கொடுத்தனன். இத்தன்மைத்தான பெருமிதத்தினால் இளையாள் தனது மூத்தாளைக் கிருமியினுங்கீழ்ப்பட்டவளாக மதித்தொழுக, ஓர்நாள் கற்புக்கயிற்றாற் கட்டுண்ட கீர்த்தியானவள் தனது காதலனுக்குப் பணிசெய்யவேண்டினவளாய் அவன் இளையாளொடுங்கூடியிருக்குமிடத்திற்சென்றனள். அதை இளையாள் நோக்கி ஞெரேலென்றெழுந்து, இங்கேன்வந்தனையென்று அவளை எட்டியுதைத்தனள். அதனை அவ்வரசன்கண்டுங் காணாதவனைப்போல விருந்தனன். பின்னர் இளையாள் தன்னைக் காலாலுதைத்ததையும் அவளிடத்துவைத்தமோகத்தினால் தனதுகாதலன் என்னகாரணமென்று விசாரியாது சத்துருவைப்போல விருந்ததையும் கீர்த்தியென்பவள் நினைந்துநினைந்துமனநொந்து, அவ்விடத்தினின்று நீங்கி இனிச் சரீரத்தைவாட்டியேனும் விடத்தையுண்டேனும் வரையுருண்டேனும் குளத்தில் வீழ்ந்தேனும் உயிரைத்தொலைத்து நமதுடலையொழித்துக்கொள்வோமென்று யோசித்து, நினைக்குந்தோறும் உள்ளத்தினின்று பெருகின்ற வெப்பமானது சற்றும்நீங்காமையால் மனம்புழுங்கி கண்களில் நீர்த்தாரைகளைச் சொரிந்து, சந்திரபிம்பம்போன்ற தனது முகாரவிந்தத்தினுடையவொளியெல்லாம் மழுங்கும்படியான கவலையோடு வெளிப்படுவதாயினள். அத்தருணத்தில் அவளது நற்றவப்பயனென்று சொல்லும்படி மிக்க தெய்வத்தன்மையையுடைய ஓர் புரோகிதன் யாசிக்கவந்து அப்போது அவள்கொண்ட மனக்கவலைகளை முகக்குறிப்பினாலறிந்து பின்னர் அவளால் யாவையுந்தெரிந்துகொண்டு, அம்மணீ; உனது மனக்குறை "இன்றுடனொழித்துவிடு, உனக்கு எல்லாநன்மைகளுங் கிடைக்

குமாறு எனதையனாகிய கணேசமூர்த்தியை விரைவில் மெய்ப்பத்தியோடும் பூசனைசெய்யக்கடவை, அதனால்பின்பதியாகிய பிரியவிரதன் நினது மாற்றாள்வசம் எவ்வாறிருக்கின்றானோ அவ்வாறே நின்வசமாகுவனென்று சொல்லி அவளை யருச்சிக்குமுறைமையையும் போதித்துச் சென்றனன். இப்பால் கீர்த்திபானவள் மனக்கவலைகளை யொழித்து விதிப்படி ஸ்நானஞ்செய்து தனது பூசனைக்குவேண்டியதிரவியங்களைக் கொண்டுவருமாறு பாங்கியருக்குக் கட்டளையிட்டு அவ்வாறே அவர்கள் கொணர்ந்துவந்த திருமஞ்சனமுதலிய திரவியங்களைக் கொண்டு முன்னர் பிரமனாதியர்களாற் பூசிக்கப்பெற்று மந்தாரவிருக்ஷ நீழலில் வீற்றிருக்கின்ற விநாயகமூர்த்தியைப் பிரதிதினம் அறுகைக் கொண்டு பூசித்துவருகையில், ஓர்நாள் அவ்வறுகு எங்கணுமகப்படாமற்போக அதனாற் பாங்கியர் இதற்கென்னசெய்வோமென்று திகைத்து தமக்கெதிரில் ஓர் வன்னிவிருக்ஷமிருப்பக்கண்டு காலதாமசமாகாதபடி அதனிலையைப் பறித்துக்கொண்டுபோய் கீர்த்தியினிடத்திற் சென்று, எமதிறைவியே! இத்தினம எங்கும் அறுகு அகப்படவில்லை அதற்குப்பதிலாக வன்னிப்பத்திரங் கொண்டுவந்தோம், அஃது அருச்சனைக்கு உதவும் உதவாதென்பதை யறிந்திலேம், ஆயினும் அதனைக் கொண்டே இத்தினத்தில் பூசனைசெய்து நிறைவேற்ற வேண்டுமென்று சொல்லினர். அதனைக் கீர்த்திகேட்டலும் மனம்வருந்தி அறுகைக் கொண்டருச்சிக்குமுறைமை இன்றொழிந்ததேயென்று துயருற்று அவ்வன்னிப்பத்திரத்தைக்கொண்டே அத்தினங் கணேசமூர்த்திக்கு அருச்சனைபுரிந்தனள். இவ்வாறு பூசனைநிறைவேறியும் அறுகாலருச்சனைசெய்யாத குறைநீங்குமாறு உணவினையொழித்திருந்தனள். அன்றைய விடியற்காலத்தில் அவள் கனவின்கண், ஒற்றைக்கோட்டினையுடைய யானைமுகக்கடவு ளெழுந்தருளி தமது பொன்போன்ற சடாமகுடத்தில் அவளருச்சித்த வன்னிப்பத்திரங்களெல்லாந் தோன்றும்படிஎதிர்நின்று, பெண்ணே! நீவன்னியாற்செய்த அருச்சனையை நாமேற்றுக்கொண்டனம். அஃது நமது சடைமீதிருக்கின்றதுபார்-இனி அறுகு அகப்படாமையினாலுனக்குண்டான மனக்கவலையை யொழித்துவிடு. நாம் உனதுபரிசுத்தமான பூசனைக்கு உவந்துவந்தோம். உனக்குவேண்டிய வரங்களைக்கேள் தருகின்றோமென்று திருவாய்மலர்ந்தருள கற்பிற்சிறந்த கீர்த்திபானவள் அவரைக்கண்டவுடன் நாணமுற்று வாய்திறந்து தீர்க்கதண்டஞ்செய் தெழுந்து ஐந்துகரனின்பக்க





மாக ஒதுங்கி நின்றனள். அவ ளொழுக்கத்தினை விநாயகமூர்த்தி
கண்டு அவள்கொண்ட எண்ணங்களெல்லா நிறைவேறுமாறு தாமே
வரங்கொடுப்பதற்கிசைந்து, பெண்ணே! நினது நாயகன் இந்நாண்மு
தல் நின்னிடத்தில் மிகுந்த அன்புவைத்திருப்பன். உனது மாற்றாட்
கு நோய்கள்வந்துநோகச்செய்யும்; ஓர்வருடத்திற்குள்ளாக நின்வயிற்
றிற் புத்திரனுண்டாவன், அவனுக்குக்கிப்பிரப்பிரசாதனென்று பெய
ரிடக்கடவை. உனதுமாற்றாள் அவனுக்கு நான்காம்வயதில் போசன
த்தில் விடங்கலந்திடுவள். அதனாலவன் மூர்ச்சையடைந்து உடனே
நிருச்சமதருடைய சேவையினால் அதனை யொழிகுவன். என்று இவ்
வாறு திருவாய்மலர்ந்து தமது மெய்யடியாருடைய மனக்கோயிலிற்
சென்று வாசமாயினர். உடனேகீர்த்தியானவள் கண்விழித்து தனது
கனவின்கண் விளைந்தவைகளை நன்றாய்க்கவனித்து எல்லாக் கவலைக
ளையு மொழித்து மகிழ்ச்சிகொண்டு பொழுதுவிடிந்தவுடன் காலைக்க
டன்களை முடித்துப் பாங்கியர் அன்போடுகொணர்ந்துவந்த சந்தனம்
புஷ்பமாதிகளால் விநாயகமூர்த்தியைப் பூசித்து, சிவம் - சத்தி-விண்டு
கதிர்-கணேசர்-என்று வேதங்களாற் சொல்லப்பட்டிருக்கின்ற கடவு
ள்யாதோ அதுவேஎமது கனவின்கணெழுந்தருளியதென்றுமதித்து,
ஓசர்வபுவனாதாரஸ்வரூபியாகிய விநாயகமூர்த்தியே! அளவிடற்கரிய
அகிலங்களுந் தேவரீரோ, அதன்காரணங்களுந் தேவரீரோ, சகலதத்து
வங்களுந் தேவரீரோ, அடியாளையாட்கொள்ளவந்த சுவாமியுந் தேவ
ரீரோ, எனக்குத் தாய்தந்தைமுதலிய யாவருந் தேவரீரோஎன்று மிக்க
உள்ளன்பினோடும் அனந்தமுறை தோத்திரஞ்செய்து யதாப்பிரகாரந்
தனதிருக்கையைச்சேர்ந்து வாழ்வுற்றிருக்கு நாளையில்; கணேசமூர்த்
தியினுடைய திருவருளினால் அவள் மாற்றாளாகிய பிரபையென்பவ
ட்கு வெப்பநோயுண்டாகி அதன்மூலமாய் அளவற்ற வியாதிகள் வந்
து உபத்திரவஞ்செய்ய அதனாலவள் தனதழகனைத்துமிழந்தவளாயின
ள்இடைவிடாது கணேசமூர்த்தியைப்பூசனைசெய்யுமகிமையால் கீர்த்
தியென்பவள் மிக்க பேரழகினையுடையவளாயினள்.

பின்னர் பிரியவிரதன் இளையாளிடத்தில் வெறுப்புற்று இலக்கு
மியையொத்த மூத்தாளிடத்தில் விருப்புற்றிருக்க, உடனே அவள்வயி
ற்றிற் கருவுண்டாகி அதுமுதல் ஓராண்டிலுள் புத்திரனுற்பவித்தன
ன். அதனால் பிரியவிரதனுங் கீர்த்தியும் பெருமகிழ்ச்சியடைந்துவேத
பாரகராகிய பிராமணர்களைக்கூவி அவர்கட்கு ஆடையாபரண முத

ஷிய திரவியங்களைத் தானங்கொடுத்து அப்புதல்வனுக்குக் கிப்பிரப்பிரசாதனென்று நாமகரணஞ்செய்தனர். அவனும் நாளுக்குநாள் சந்திரனைப்போலத் தினமொருமேனியாக வளர்ந்துவந்தனன், இவனிவ்வாறு வளர்ந்துவருங் கீர்த்தியைப் பிரபையென்பவள்கண்டு மிகுந்த பொறாமைகொண்டு, இவன் சீவித்திருக்கின் நமது குமாரனுக்குப்பட்டமில்லாமற்போமேயென்று நினைப்போடு அவனுக்கு நான்காவதுவயதாகுங்காலத்தில் போசனத்தில் விடங்கலந்து கொடுத்தனள். உடனே விடமானது தலைக்கேறலும் அவ்விளமைப்புத்திரன் அதனைச் சகிக்கமாட்டாதவனாய்ப் பூமியில்வீழ்ந்து சோபமாயினன். அதனை அவன்றந்தையாகிய பிரியவிரதன்கண்டு நடுநடுங்கி மணிமந்திர அவுடதிகளாற் பலவிதபரிகாரங்களைச் செய்துவந்தும் அது தீராமையை அவன் தாயாகிய கீர்த்தியென்பவள்கண்டு முன்னர் தனக்கு விநாயகமூர்த்தி கட்டளையிட்டிருப்பதை நினைத்து, நெஞ்சமே! நமதருச்சனையை அன்போடு மேற்றருளிய விநாயகமூர்த்தியிருக்கின்றனர். அவர் திருவாய் மலர்ந்த கிருச்சமதமுனிவரு மிருக்கின்றார் நீயேன் வீணிற் கவலையுற்றழிகின்றனையென்று தனது மனதைத் தானேதேற்றிக் கீழேசோபித்து வீழ்ந்திருக்கின்ற மைந்தனையெடுத்துக்கொண்டு கிருச்சமதமுனிவருடைய ஆசிரமத்தைநோக்கிச் செல்வதாயினள். அவ்வாறு செல்கின்றபோது சோபத்தோடிருந்த மைந்தன் சிறிதும் உயிரின்றி நடுவழியில் இறந்துபோயிருக்கின்றமையைக்கண்டு, மார்பு - நாசி - கை - கால் முதலிய விடங்களில் தனதுகரத்தைவைத்து முத்தினைப்போன்ற அவன்பற்கள் சரிந்துகிடக்கின்றமையையும் கண்கள் பஞ்சிட்டிருக்கின்றமையையும்பார்த்து, ஒன்னார்நகையையும் உற்றார்நகையையும் ஒழிவித்தமகனே! அடா எனது கண்மணியே! இளமைபொருந்திய ஆண்சிங்கத்தையொத்த குமாரனே நின்னால் மும்மைப்பயனும் பெறலாமென்றெண்ணியிருந்த என்னை ஆறாத்துயரி லழுந்தவிட்டிறந்தனையே மாற்றாந்தாயே கூற்றாமென்கிற வாக்கியத்தைத் தெளியவைத்தனையே. அடா எனது தபோபலத்தினால்வந்த அருமருந்தே! என்னையும் எனது நெஞ்சத்தையும்நிலைகுலையச்செய்து நீற்றுகின்றனையே. உன்னை எவ்வாறு யான்கொண்டுபோய் இனி நீற்றவல்லேன். ஐயோ! உன்னை விடமிட்டுக்கொன்ற பாதகி நீ இறக்கக்கண்டு ஆனந்தக்கண்ணீர் விடவொட்டாமலா நீ இக்காட்டின்கண் வந்துமடிந்துபோயினை. அடா எனது அருமைச்செல்வனே! என்றிவ்வாறு அக்காட்டிலுள்ள மிரு

கங்கள் பறவைகள் விருட்சங்கள் முதலானவைகளுங் கண்ணீர்விட்டிரங்கும்படியாகப் பிரலாபித்தனள்.

அதற்கு எனைத்தன்னைக் கொப்பானவராகிய கணேசமூர்த்திக்குத் திருவுளமிரங்கியதுபோல அவையனைத்தையுங் கிருச்சமதமுனிவர் தமது ஞானநோக்கினாலறிந்துகொண்டு மனமிரங்கிப் பொள்ளென்று தமதாசிரமத்தை விட்டெழுந்து அவள் வருந்துகின்றவிடத்தையடைந்து இறந்தமைந்தனை மடியின்மீதுவைத்து எதிரில்வருவோருந் தெரியாமல் மதிமயங்கி யழுதுகொண்டிருக்கின்ற கீர்த்தியைக் கூவினர். உடனே தனது புதல்வனைப் பூமியில்வளர்த்தி மிக உருக்கத்தோடும் அம்முனிபுங்கவருடைய திருவடிகளைப்பணிந்தனள். அதற்கம்முனிவர் கிருபைகூர்ந்து. அம்மணி? நீயார், நீவிம்மி விம்மி அழுதுகொண்டிருக்கின்றகாரணமென்ன? அதனைச்சொல்லென்று வினவலும் கீர்த்தியானவள் சிறிதுமனந்தேறி, சுவாமி! அடியாள் பிரியவிரதனென்னும் அரசன் மனைவி. இப்புத்திரனோ அடியாட்கு அரியதவப்பேற்றினாலுண்டானவன். இவன் எனது மாற்றாளொருத்தியிட்டவிடத்தினால் உணர்வழிந்தனன். அடியாட்கு விநாயகமூர்த்தி புத்திரவரந்தந்தபோதே இவன் ஈரைந்தாம்வயதில் விடமூட்டப்படுவனென்றும் அதுகிருச்சமதமுனிவராற் றீருமென்றுந் திருவாய்மலர்ந்திருக்கின்றனர். அத்திருவருளைத் தலைமேற்கொண்டு உணர்வழிந்திருக்கின்ற மைந்தனோடுந் தேவரீர் ஆசிரமத்தைநோக்கி இவ்வனத்தை வழிக்கொண்டு வரும்போது நடுவழியில் உயிருமிழந்தனன். அதைக்காண்டலும் எனது மனமானது கவலைக்கடலினின்றுங் கரையேறமாட்டாமையால் எமதாண்டவராகிய கணேசமூர்த்தியினுடைய திருவாக்கினையுமறந்து பிரலாபிப்பதாயினேன். தேவர்களெல்லா மதிக்கத்தக்க பெருங்கீர்த்தினைவாய்ந்த தேவரீரோ அடியாட்கிரங்கி வந்தமையால் நஞ்சுண்டு நமன்கையிலகப்பட்ட எனது குமாரனை யெழுப்பி எளியேனையும் ஆட்கொண்டருளவேண்டுமென்று பிரார்த்தித்து மீட்டுந் தீர்க்கதண்டஞ்செய்தனள்.

அதற்கு அக்கிருச்சமதமுனிவர் மனமிரங்கி, நீ இனி ஒன்றற்கும் அஞ்சலையென்று அபயஸ்தந்தந்து, இலக்குமியொத்தவளே! முன்னர் வன்னிப்பத்திரத்தால் கணேசமூர்த்தியைப் பூசைசெய்திருக்கின்றனையாதலால் அப்பூசையின்பயனை உனது புத்திரன்கையிற் றத்தஞ்செய்கடவையென்றனர். அதற்குக் கீர்த்தி இதுவோ எனக்கரிதென் றாலித்து அவ்வாறே தான்செய்த பூசையின்பயனை அவன்க



ரத்தில் தத்தஞ்செய்தனள். உடனே அச்சிறுவன் உறங்கிவிழித்தவன் போலவெழுந்து கிருச்சமதமுனிவருடைய திருவடிகளைச் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து அவர்பேரருளைப் பூரணமாகப் பெற்று வாழ்ந்திருந்தனன். என்று சிவபிரான் உமையவட்குச்சொன்னதாகப் பிருதிர்தேவனுக்கு பிரமதேவன்சொல்லியபடி தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச்சொன்னான்.

௩௧ - வது. வன்னியால்விடநீங்குபடலம்

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

முப்பத்திரண்டாவது

## வன்னிமந்தாரஉற்பத்திபடலம்.

பொன்னிகர்கீர்த்திசெய் பூசைத்தொன்றுளேனென்
றின்னலேச்சமியினை விசைந்தோதினும்
பன்னருவிசொலிப் பரியற்காகுறும்
வன்னிமந்தாரத்தின் வரனையோதுவாம்.

ஓ! சவுனகாதிமுனிவர்களே கீர்த்தியென்பவள்விநாயகமூர்த்திக்கு வன்னிப்பத்திரத்தா லருச்சனைசெய்ததும் அவ்வருச்சனைப்பயனால் விடமுண்டிறந்துபோன அவள்புதல்வனாகிய கிப்பிரப்பிரசாத னுயிர்த்தெழுந்ததுஞ் சொன்னோம், இப்பால் அவ்வன்னியுமந்தாரமும் உற்பவித்த வரலாற்றினைச் சொல்லுவோங்கேட்பீராக. தேவேந்திரன் பின்னுஞ் சூரசேனமகாராசனைநோக்கி, அரசனே! சிவபிரான்உமையவட்கு மற்றொருகதையுஞ் சொன்னதாகப் பிருதிர்தேவனுக்கு பிரமன் சொன்னதாவது. முற்கூறிய கீர்த்தியென்பவள் மீட்டுங்கிருச்சமதமுனிவரைப் பணிந்தெழுந்து, சுவாமி! வன்னிப்பத்திரத்தினுடைய மகத்துவந் தெரியாமலே ஒருநாளதனைக்கொண்டு விநாயகமூர்த்தியை யருச்சித்தேன், அதனால் விடமுண்டிறந்த எனது மைந்த னெழுந்தானாயின் அதனது பெருமையை யடியாட்கு விளம்பியருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்கம்முனிபுங்கவரிசைந்து, மலையிற்

சிறந்த மாதவத்தோர்க்கும் எட்டுதற்கரிய கணேசமூர்த்தியினுடைய திருவடிகளுக் கன்புவைத்திருக்கின்ற அரிவையே! யாவரேனும் ஒருக்கால் வன்னியென்று வாக்கினாற் கூறுவாராயின் அவ்வாக்கினால் அனந்தம் பிறவிகள்தோறுஞ் செய்துமுற்றிய அவர்கள் தீவினைகளெல்லாம் அழலிற்பட்ட பஞ்சுபோலாகும். அதனை நினைப்பாராயின் மனத்தாற்செய்த பாவங்களெல்லா நிவிர்த்தியாகும். அதனைவலம்வந்தாலும் நேரிற்சென்று தரிசித்தாலும் கைகளைக்கூப்பித் தொழுதாலும் காயத்தாற்செய்த பாவங்களெல்லாம் மாறிவிடும். பஞ்சாக்கினிமத்தியினின்று தவஞ்செய்வதனா லுண்டாகின்ற பேறும் ஆடையாபரணாதிகளைத் தானஞ்செய்வதனால் அடைகின்றபேறும் விரதம் யாகம் முதலானவைகளைச் செய்வதனால் வருகின்றபேறும் ஒருவன்னிபத்திரத்தாற்செய்த அருச்சனையா லுண்டாகும் பயனுக்கொவ்வாது. அன்றியும் - இம்மையில் அளவற்றபோகங்களை யோர்கணப்போதிலூட்டுவிக்கும். மறுமையில் விண்டுமுதலாயினோருடைய பதவிகளிற் சேர்ப்பிக்கும். ஆணவமுதலிய மும்மலங்களையும் போக்கி மெய்ஞ்ஞானபோகத்தை யளித்து கணேசமூர்த்தியினுடைய உளத்தில் மேவச்செய்யும். ஒருகோடி கற்பகாலவரையிற் சொன்னாலு முடிவுறாச்சிறப்பினைவாய்ந்த அவ் வன்னிமான்மியத்தைத் தேவேந்திரனுக்கு நாரதமுனிவர் உபதேசித்திருக்கின்றனர். அதனை உனக்குச் சொல்லுவோங் கேட்பாயாக. முன்னொருகாலத்தில் நந்திகோத்திரனென்னும் ஓர் முனிபுங்கவரிருந்தார். அவருக்கு வேதாகமாதிகளையோதி யுணர்ந்தவராகியும் எல்லாமேன்மைகளு மியல்பாயுள்ளவராகியு மிராநின்ற அவுரவனென்னும் ஒருபுத்திரரிருந்தனர். அவருக்கு சுமேதையென்னும் பெயரினையுடைய ஒருமனைவியிருந்தனள். அவுரவமுனிவருஞ் சுமேதையுங் களித்து வாழ்வுற்றிருக்கு நாளையில் இவர்கட்குச் சமியென்னும் பெயரினையுடைய ஓர்பெண்குழந்தையுண்டாகி அதற்கு மணப்பருவமுண்டாகவும், தாய்தந்தையர் அப்பெண்ணிற்கேற்ற புருடனை நாடிக்கொண்டிருந்தனர். அக்காலத்தில் - தவுமியமுனிவர் புத்திரனாகியும் மகா தவசிரேஷ்டர்களுக்குள் மடங்கலேறொத்தவனாகியும் சவுனகமுனிவரையடுத்து அவர்க்குச் சேவல்செய்துகொண்டு தவம்புரிபவனாகியும் மந்தாரனென்னும் இயற்பெயரையுடைய ஓர் முனிபுத்திரனிருந்தான். அவனைமேற்கூறிய அவுரவமுனிவரும் அவர்பத்தினியுங்கண்டு இவனே நமது தவச்செல்விக்கேற்ற மணாளனென்று நிர்ணயித்துப் பிர

மம் - பிரசாபத்தியம் - ஆரிடம் - தெய்வம் - காந்தருவம் - அசுரம்-இராக்கதம் - பைசாசம் - என்னும் * எண்வகைமணத்தினுஞ் சிறந்த தன்மமணத்தினால் அவனுக்கு விதிப்படி விவாகஞ்செய்துகொடுத்தார்கள்.

பின்னர் அம்மந்தாரனென்பன் அப்பெண்ணைத் தாய்வீட்டிற்றானேயிருத்தித் தான் முன்போலவே சவுனகமுனிவரையடைந்து அவரேவல்செய்துகொண்டு தவத்திலிருந்தனன். இவ்வாறு சின்னாளாகலும் மந்தாரன் அம்முனிவரிடத்தில் விடைபெற்று அவ்வாசிரமத்தையடைய, அப்போது சமியென்பவள் புட்பவதியாயிருந்தமையால் உடனே அவ்விருவருக்குஞ் சாந்திமுகூர்த்தஞ்செய்தார்கள். பின்னர் மந்தாரன் மனைவியையழைத்துக்கொண்டு தனது தந்தையாதியர்வாழ்கின்ற ஆசிரமத்தையடையுமாறு வனத்திற் செல்லுகையில் கணேசமூர்த்தியினுடையசாரூபத்தைப்பெற்றிருக்கின்றபுருசுண்டிமுனிவரெதிரே வந்தனர். அப்போது இரண்டுபேருந் தமது தொலையாத் தொல்வினை தொடருங்காலம் நேரிட்டவர்களாய் அவரது துதிக்கரத்தைபுந் தொந்தியையும் பார்த்து நகைத்தனர். அதனை அப்புருசுண்டி முனிவர் கண்டு, அறிவீனர்களே! என்னைப் பார்த்து ஏளனமாய் நகைத்தீராதலால் நீங்கள் இவ்வுலகத்திலே ஒருயிருக்கும் உதவியற்ற மரங்களாகக்கடவீர்களென்று சபித்தனர். அதைக்கேட்ட சமியும் மந்தாரனும் நடுக்குற்று உடனே அவரது பாதபதுமங்களில் சாஷ்டாங்கமாகவிழுந்து, சுவாமி! அடியேங்கள் சுத்தசாட்குண்ணியமூர்த்தியாகிய தேவரீர் மகத்துவம் தெரியாமல் அறிவின்மையாற்செய்த பிழையினைப் பொறுத்தருளி, அடியேங்கள் அச்சாபத்தினி

* இவற்றுள் - பிரமசாரிக்குக் கன்னியைத் திமுன்னர்கொடுப்பது பிரமமணம். தலைமகனினத்தார் வேண்டத் தலைமகளினத்தாருட்பட்டு அவளைத் தீமுன்னர்க்கொடுப்பது, பிரசாபத்தியமணம். ஒன்றிரண்டு பசுவும் எருதும்வாங்கிக்கொண்டு கன்னியைத்திமுன்னர்க்கொடுப்பது ஆரிடமணம். வேள்வியால் வந்த கன்னியைத்திமுன்னர்கொடுப்பது தெய்வமணம். கொடுப்பாருங் கேட்பாருமின்றி இருவருந் தனியிடத்தெதிர்ப்பட்டுத் தாமே கூடுவது காந்தருவமணம். பெண்ணுக்குப் பொன்சூட்டிச் சுற்றத்தார்க்குப் பொன்வேண்டுவன கொடுத்துக்கொள்வது அசுரமணம். பெண்ணும் பெண்ணினத்தாரும் உடம்படாமல் வலிதிற்கொள்வது இராக்கதமணம் துயின்றாளைச்சென்று கூடுவது, பைசாசமணம்.






ன்றுநீக்கிக் கிருதார்த்தர்களாகும்படி தேவரீர் கிருபைசெய்யவேண்டுமென்று பலமுறை இரந்து துதிசெய்தார்கள். அதற்கு அப்புருசுண்டி சிந்திரங்கி, நீங்கள் எனது துதிக்கரத்தையுந் தொந்தியையும் பார்த்து மெய்குலுங்க நகைத்தீராதலால் இத்துதிக்கரத்தையுந் தொந்தியையுமுடைய விநாயகப்பெருமான் உம்மிடத்தில் எழுந்தருளுவர் அப்போது நீங்கள் சிறப்பெய்தி இம்மாவுருவம் நீங்காமலே அவருக்குரிமையாவீர்கள். அதுமுதல் உலகமுள்ளளவும் உங்களை யாவரும் பணிந்து போற்றுவார்கள். முடிவில் அந்தமில்லாத முத்தியையும் பெறுவீர்கள். ஆகலால் நீங்க ளிவ்வனத்திற்றானே வசித்திருங்களென்று சொல்லித் தமதாசிரமத்திற்குச்சென்றனர். இப்பால் மந்தாரனென்பவன் மந்தாரமரமாகவும், சமியென்பவள் வன்னிமரமாகவு மிருக்கச் சிலநாள்சென்றபின்பு சவுனகமுனிவர் மந்தாரனைநினைத்துக்கொண்டு மனைவியை யழைத்துவருகின்றேனென்று சென்றனன் இதுகாறும் வரக்காணோமே அவனைப்போல குணத்தில் விசேடப்பட்டவர்களும் நமது பணிவிடைகளிற் பெரிய விருப்பமுடையவர்களும் ஒருவருமில்லையே யாதோவோ ரிடையூறின்றி இத்தனைநாள் நம்மை விட்டிரானேயென்று மனம்வருந்தி எல்லாவற்றையுந் தூதரால் அறிந்துகொள்வோமென்று நினைத்து அவர்களை விடுத்தனர். அவர்களும் அவ்வாறே மனோவேகத்தினும் விரைவாகச்சென்று அவுரவ ராசிரமத்தினையடைந்து அவரதுதிருவடிகளைப் பணிந்தெழுந்து, சுவாமி! இங்ஙனந் தமது மருகராகிய மந்தாரமுனிவர் எங்கு எவ்வாறுசென்றனரென்று வினவ அதற்கு அவர் தமது மனைவியை யழைத்துக்கொண்டு அப்போதே போய்விட்டாரே இற்றைநாள்வரையில் அவிடத்திற்கு வரவில்லையா இன்னு நன்றாய்த் தேடிப்பாருங்களென்று தமதுபெண்ணின் மீதுவைத்திருக்கின்ற பெருங்காதலால் தாமுஞ் சிலதூதுவரைக்கூவி யேவினர் அவர்களும் வனங்களெங்குந் தேடிச்சென்றுங் காணாதவர்களாயினர். அதனை மற்றையதூதர்கள் அறிந்துகொண்டு, உடனே அவ்விடத்தினின்றுநீங்கிச் சவுனகமுனிவரையடைந்து யாவையு மறிவித்தார்கள். அதனால் காருண்ணியமூர்த்தியாகிய அம்முனிவர் மனம்வருந்தி சிறிதுநேரம் யோகத்திலிருந்து அவர்கள் புருசுண்டி முனிவரை யவமதித்ததும் அவர்சாபத்தால் அவர்கள் மரங்களானதும் பின்பு அம்முனிவர் அவர்கள்செய்த வந்தனை வழிபாட்டிற்கிரங்கி உங்களுக்கு யானைமுகக்கடவுள் பிரத்தியட்சமாகுங்காலத்தில் எல்லாநன்மைகளுமுண்




டாகுமென்று திருவாய்மலர்ந்ததுந் தெரிந்துகொண்டனர். அவுரவ முனிவரும் அவ்வாறே யறிந்துகொண்டனர். மந்தாரனுடையதந்தை யாகிய தவுமியமுனிவரும் அவ்வாறே யறிந்துகொண்டு தமதுபுதல்வனுக்கு நேர்ந்த வருத்தத்தைச் சகிக்கமாட்டாது இறந்தனர். இப்பால் சவுனகமுனிவர் தமது அருமையவனுடைய மந்தாரனைக்குறித்தும் அவுரவ முனிவர் தமதுகுமாரத்தியாகிய சமியைக்குறித்தும் கணேசமூர்த்தியை மனதிற்றியானித்து சடாக்கரமந்திரத்தைச் செபித்துக்கொண்டு பன்னிரண்டுவருடம்வரையிற் றவத்திலிருந்தார்கள். பின்னர் கணேசமூர்த்திக்கு மனதிரங்கி, யானைமுகமும் பதுக்கைகளும் விளங்கும்படி சிங்கவாகனமூர்ந்து சவுனகமுனிவருக்கெதிரில் பிரத்தியட்சமாயினர். உடனே சவுனகமுனிவரெழுந்து கர்த்தன் திருவடித்தாமரைகளிற் சாஷ்டாங்கமாய்ப் பணிந்து அனந்தமுறை தோத்திரஞ் செய்தனர்.

அதற்குக் கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து அம்முனிவரது நெகிழ்ந்தவுள்ளத்தையும் நீர்பெருகிவருகின்ற கண்களையும்பார்த்து சந்தோஷித்து, அன்பனே! உனக்கு வேண்டிய வரங்களைக்கேள் தருகின்றோமென்று திருவாய்மலர்தலும் முனிபுங்கவர் மீட்டுந் தொழுதெழுந்து ஐயனே! ஒழுக்கத்திற்சிறந்த மந்தாரனென்பவனும் அவன்பத்தினியாகிய சமியென்பவளும் புருசுண்டிமுனிவருடைய சாபத்தினாற் றங்கள் பெயராற் றானே மரங்களாகியிருக்கின்றனர். அவர்கள் அவிவேகத்தாற்செய்த பிழையினைப் பொறுத்தருளி அம்மரவுருவினின்று மீட்டும் மானிடவுருவில் வருமாறு தேவரீர் கிருபைபுரியவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனர். அதற்கு விநாயகமூர்த்தி புன்னகை கொண்டு, தவசீலனே! நமதுசாபநம்மாற்றீரினும் நமதுபத்தர்களிட்ட சாப நம்மாற்றீர்வதரிது. மேலும் அஃது தவத்திற்சிறந்த புருசுண்டியிட்ட சாபமாதலால் அதை எல்லாத்தேவர்களும் ஒருமிக்கக்கூடி விலக்கினும் விலகாது. ஆயினும் நீ நம்மிடத்தில் அன்புசெலுத்தினமையால் அவர்கள் அம்மரமாகவேயிருந்து எல்லாச்சிறப்புகளையு மெய்துமாறும் யாவரும் வணங்குமாறும யாம் அவர்கள்கீழ் வசித்திருக்கின்றோம். தருமமுதலிய நான்குபுருஷார்த்தங்களை யடையவேண்டினரும் தீவினைவயத்தால் வருகின்ற இடையூறுமுதலிய துன்பங்களை நீக்கிக்கொள்ள வேண்டினரும் அம்மரங்களின் கீழ் வந்து நம்மை வழிபடக்கடவர்கள். பத்தியில்லாதவர்களாயினும் பாக்கியமில்லாத





வர்களாயினும் உத்தமகுலத்தி லுதிக்காதவர்களாயினும் ஊக்கமுதலிய குணமில்லாதவர்களாயினும் அவ்வன்னிவிருக்கத்தினுடைய பத்திரத்தினாலும் மந்தாரவிருக்கத்தினுடைய புட்பத்தினாலும் நம்மையருச்சிப்பார்களாயின், அவர்கள் வேண்டியவரங்களில் ஒன்றொழியாமற் றருவோம். இதனை நீ அறிந்துகொள்ளக்கடவையென்று திருவாய்மலர்ந்து ஒருகொம்பும் இரண்டுசெவியும் மூன்றுகண்ணும் நான்குபுயமும் உடையவராய் அம்மரங்களினிழலி லெழுந்தருளினர். அதுமுதல் சவுனகர்முதலிய எல்லாமுனிவர்களும் அவ்விருக்ஷங்களையடுத்து அவைகளின் பத்திரத்தினாலும் புட்பத்தினாலும் விநாயகமூர்த்தியையருச்சித்துவந்தனர். இப்பால் சமியென்பவள் தாயாகிய சுமேதையானவள் வன்னிவிருக்ஷத்திலெழுந்தருளிய கணேசமூர்த்தியைப்பூசித்து ஆணவப்பகையை அடியோடுகளைந்து அவரது லோகத்திற்சேர்ந்து வாழ்வுற்றிருந்தனள். அவள் தந்தையாகிய அவுர்வமுனிவரானவர் அவள்மீது அதிக விழைவுள்ளவராதலால் உடனே தமது யோகத்தினால் பிராணவாயுவைக் கும்பித்து, சூக்ஷ்ம சரீரத்தால் அவ்வன்னியின்கருப்பத்திற்குள் புகுந்து விண்ணுலகத்தார்க்கெல்லாம் அவிவாங்கி யளிக்குந்தொழிலில் அகலாதிருந்தனர். அதுமுதல் அதனைச் சமிகருப்பரென்று சான்றோர்களழைத்துவந்தனர். ஆதலால் விநாயகமூர்த்திக்குரிய அறுகுமந்தாரைவன்னியென்னும் இவற்றின்பெருமைகள் என்போலிகளால் அளவிட்டுரைக்கற்பாலனவன்று. அறுகில்லாக் குறையை மந்தாரமலர் நிரப்புவதாலும் அறுகும் மந்தாரமும் இல்லாக்குறையை வன்னிப்பத்திரம் நிரப்புவதாலும் யாகாக்கினியானது எப்போதும் இவ்வன்னியில் வாசமாயிருத்தலாலும் உலகின்கணுள்ள எல்லாப்பத்திரங்களினும் வன்னிப்பத்திரம் விசேடமாயது. அன்றியும் அதனைச் சிவபிரானும் ஓர்கூறாகத் தமது சடாமகுடத்தில் அணிந்திருக்கின்றனர். என்று கீர்த்திக்குக் கிருச்சமதமுனிவர்சொன்னதாகச் சிவபிரான் உமையவட்குக்கூறியபடி. பிரமதேவன் பிருகுதேவனுக்குச் சொல்லினன். அதை இந்திரன் சூரசேனமகாராசனுக்குச்சொன்னான்.

௩௨ - வது - வன்னிமந்தார உற்பத்திப்படலம்

முற்றிற்று.





உ

கணபதி துணை.

முப்பத்துமூன்றாவது

# வன்னியருச்சனைப்படலம்.

பொங்குமந்தணீர் புருசுண்டியான்முனிச் சிறுவர்
தங்கணுமக்காற் றருக்களாமையங்கர னருளாற்
றெங்குமியாவரும் பூசிப்பவிருந்தமை யிசைத்தாம்
புங்கவாதியர் வன்னியாற்பூசித்த திசைப்பாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே! விநாயகமூர்த்திக்குரிய வன்னியும் மந்தாரமும் உற்பவித்த வரலாற்றினைச்சொன்றோம் இப்பால்அவ்வன்னியருச்சனையைச் சொல்லுவோம் கேட்பீராக. தேவேந்திரன் பின்னுஞ் சூரசேனமகாராசனைநோக்கி, அரசனே! கிருத்சமதமுனிவர் கீர்த்தியென்பவட்கு மற்றொருகதையுஞ் சொன்னதாகச் சிவபிரான் உமையவட்குத் திருவாய்மலர்ந்தருளியபடி பிதிர்தேவனுக்குப் பிரமதேவன் சொல்லுவதாவது. முன்னொருகாலத்தில் பிரமனானவன் தனது பத்தினிமார்களிரண்டுபேருள் சாவித்திரியைவீட்டிலிருத்திக்காயத்திரியையழைத்துக்கொண்டு சையவரைச்சாரலையடுத்து, அட்டபுயாசலங்களைவீசி ஆனந்தநிருத்தஞ்செய்கின்ற சதாசிவமூர்த்தியைப்பாவித்துத் தேவர்களெல்லாம் புடைசூழும்படியாக ஓர் சிறந்த வேள்வியைச் செய்வதாயினன். அப்போது பிள்ளைமதியையும் வெள்ளையறுகையும் புனைந்த சடாமகுடத்தினையுடைய கணேசமூர்த்தியை வழிபடாமல் வேள்வியைச்செய்ய யத்தனித்த குறைவால், சாவித்திரியானவள் தன்னைமாத்திரம் வீட்டிலிருத்திக் காயத்திரியோடுசென்று வேள்வியைச்செய்து வருவதைக்கண்டு மனமழுங்கிச் சொல்லுதற்கரிய வெகுளியோடும் யாகசாலையையடுத்து திருமால் இந்திரன்முதலிய தேவர்களைக்கண்டு, எனதுநாயகன் என்னையன்றி செய்துவருகின்ற யாகத்திற்கு நீங்கள்யாவரும் உடம்பட்டிருந்தீர்கள். ஆதலால் இவ்விடத்தில் நீங்கள் வெவ்வேறேசலவுருவாகக்கடவதென்று சபித்தனள். உடனே அவளது கோபசாபத்தினால் திருமான்முதலிய யாவரும் வெவ்வேறே சலவடிவாகிச் சுழிசுழித்து அளவற்ற அலைகளைப்பரப்பி யாகசாலைமுழுவதும் வெள்ளமாகிப் பரந்து அங்குறைந்திருந்த எல்லாப்பொருள்

சனையுந் தழுவி பொழுதுகொண்டிருந்தார்கள். இவ்வாறு யாகத்திற்குவந்த திருமான்முதலிய தலைவர்களெல்லாஞ் சலவடிவாய்ப் போனதை அவ்வமரர்கள் மனைவியர்கேட்டுமனங்கலங்கி, இலக்குமி முதலிய எல்லாமாதர்களுஞ் சையரவனைச் சாலைபடுத்து பிரமனைக் கண்டு ஆ-ஆ! நீர்செய்யுங்காரிய மிகநன்று. நீர்யாகத்திற்குத் தீயை வளர்ப்பவாபோல உமது பத்தினிக்குக் கோபத்தீயை யுண்டாக்கி எங்கள் தலைவர்கட்கெல்லாந் தண்ணீர்வடிவைக்கொடுத்து எமதுவயிற்றினுந் தீயைவளர்த்திக் கொதிக்கவிட்டீர். இனி அவர்கள் தண்ணீர்வடிவம் மாறுவதற்கு யாதுசொல்லுகின்றீரென்றார்கள்.

அதற்குப் பிரமன் ஒன்றுந்தோன்றாதவனாகி அவர்கட்கு இனிய வார்த்தைகளைக்கூறி, நீங்கள் சிறிதுமாத்திரம் பொறுத்திருங்கள். விரைவில் அதுமாற வேண்டிய முயற்சிகளைச்செய்து உங்கள்வருத்தத்தையெல்லாம் ஒழித்துவிடுகின்றோமென்று திடஞ்சொல்லி உமாபரமேஸ்பரிமணாளராகிய சிவபிரானை மனதிலிருத்தி அரியதவத்திலிருந்தனன். அந்தவத்திற்குச் சதுர்வேதங்களாலுங்காண்டற்கருமையராகிய சிவபெருமான் கிருபைகூர்ந்து அவனெவ்வாறு தம்மைப்பாவித்தானோ அவ்வாறே அவனெதிரிற் பார்ப்பதிசமேதராயெழுந்தருளி இடபவாகனரூடராய்க் காட்சிகொடுத்தனர். உடனே பிரமனெழுந்து யமனுயிரைவாட்டிய அவரது பாதபதுமங்களைப் பணிந்தெழுந்து கற்பக மலராதிகளாலருச்சனைசெய்து, சுவாமி! தேவர்கள் முதலியோரடைந்திருக்கின்ற தண்ணீர் வடிவை மாற்றியருளவேண்டுமென்று பிரார்த்திக்க அதற்குக்கர்த்தன் புன்னகைகொண்டு, பிரமனே! கணேசமூர்த்தியினுடைய கோபந்தணியும்படி அவரைப் பூசனைசெய்யக்கடவை நீ யாகஞ்செய்ய ஆரம்பித்தபோது முதலில் அவரைப் பூசனை செய்திருப்பையாயின் இவ்விதசாபம் யாருக்கு நேருறாது. உனது வேள்வியும் இடையூறுறாது. அவரைச்சிறிதும் மனத்திற்கருதினையில்லை. ஆதலால் இவ்வித ஆபத்துகள்வந்து நேர்ந்தனவென்று திருவாய்மலர்ந்து தமது திருவுருவைக் கரந்தருளினார்.

இப்பால் பிரமன் கர்த்தனெழுந்தருளிய திசையைப் பலமுறை வணங்கித் தனது மனக்கோட்டத்தினை யொழித்துத் திருமான் முதலானோருடைய பத்தினிகளைக்கூவி உங்கள் தலைவர்க்குண்டாகிய சாங்காலமேரிட்டது, நீங்கள்யாவரும் விரைந்து கணேசமூர்த்

திமையை உள்ளன்போடும் பூசனைசெய்யக் கடவீர்களென்று செப்பினன். அதனைக்கேட்ட மாதர்களெல்லாம் உய்ந்தோம் உய்ந்தோமென்று மகிழ்ச்சியுற்று, கருனாடதேசத்திலே மந்தாரமரத்து நீழலிலே முன்னொருகாலத்தில் அரக்கர்குறும்பினை யடக்குமாறு மகாவிஷ்ணுவினாற்றாபித்துப் பூசிக்கப்பெற்றிருக்கின்ற வக்கிரதுண்டவிநாயகரை யடுத்து, சிலபேர் பால் - தயிர் முதலியவைகளைக்கொண்டு அபிஷேகித்தார்கள். சிலபேர் பரிமளமிகுந்த புட்பங்களைக்கொண்டு அருச்சித்தார்கள். சிலபேர் ஏகாட்சரமுதலிய மந்திரங்களைச் செபித்தார்கள். சிலபேர் வேதாகமமாதிகளாற் றுதித்தார்கள். சிலபேர் அட்டாங்கபஞ்சாங்கத்துடன் பணிந்தார்கள். சிலபேர் ஆனந்தபரவசங்கொண்டு நடித்தார்கள். இவ்வாறுயாவரும் ஒவ்வொரு செயல்களைக்கொண்டு மந்தாரநிழலில் வீற்றிருக்கின்ற கணேசமூர்த்திக்கு நெடுநாள்வரையில் அன்புசெய்துவந்தும் தங்களெண்ணம் நிறைவேறாதவர்களாய்ப் பின்னர் யாவரும் ஒருமிக்கக்கூடி, இதுகாறுங் கணேசமூர்த்தி நம்பாலெழுந்தருளவில்லை யாதலால் நாம் செய்துவருகின்ற தவங்களில் யாதேனுங் குறைநேர்ந்ததோ வென்று மனங்கலங்கி யிருக்கின்ற சமயத்தில் - விநாயகமூர்த்தியை வன்னிப்பத்திரத்தால் பூசிக்கக்கடவீர்கள் - என்று ஒருவாக்கு ஆகாயத்திலுண்டாயது. அதனை அம்மாதர்கள்கேட்டு அவ்வாறே சிலநாள்வரையில் அருச்சனைசெய்தார்கள். அதற்கு எமது ஆணவக்குறும்பை நீக்கி ஆட்கொள்ளவல்ல விநாயகமூர்த்திக்குக் கிருபைகூர்ந்து மூஷிகவாகனத்தின்மீது அவர் ளெதிரிற் பிரத்தியட்சமாயினர். உடனே யாவரும் ஆனந்த சாகரத்தின்மூழ்கி அனந்தமுறை சாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்து துதித்தார்கள். பின்னர் விநாயகக்கடவுள் அம்மாதர்கட்கெல்லாங் கிருபைசெய்து அவர்கள் தலைவர்கட்கெல்லாஞ் சலவுருவினைமாற்றி அவ்வவர்களுள்ளமே ஆலயமாகக்கொண்டு வீற்றிருந்தனர். இப்பால் தேவர்களெல்லாம் மற்றொரு மந்தாரமரநீழலில் விநாயகமூர்த்தியைப் பிரதிட்டைசெய்து குளிர்ச்சிபொருந்திய வன்னிப்பத்திரத்தால் அருச்சனைபுரிந்து அனேகமுறை வேதாகமங்களாற் றுதிசெய்து, அம்மூர்த்திக்கு ஏரம்ப விநாயகனென்று திருநாமஞ்சாத்தித் தங்கடங்கள் பதிகளைச்சேர்ந்து வாழ்ந்திருந்தனர். தேவேந்திரன் தனதுசோலையிலிருக்கின்ற மந்தாரமரத்தடியில் விநாயகமூர்த்தியை ஸ்தாபித்துப் பூசித்தனன். ஏனையோருந்தங்கடங்கள் மனையில் மந்தாரவிருட்சத்தை உண்டாக்கி அதனடியிற்

கணேசமூர்த்தியைப் பிரதிட்டைசெய்து பன்னிரண்டு வருடம்வரை யில் வன்னிப்பத்திரத்தா லருச்சித்து, அவர் பெருங்கருணையால் சாவித்திரியினுடைய மனக்குறையை நீக்கிப் பின்னரவளையுங் கூடவைத்துக்கொண்டு முன்தொடங்கிய யாகத்தை மீட்டுந்தொடங்கி நிறைவேற்றிச் சகலசந்தோஷத்துடன் தனது சத்தியலோகம்போய்ச் சேர்ந்தனன். வன்னிப்பத்திரத்தினுடைய மகிமை இவ்வாறாகும். இன்னு மதன்பெருமையைப் பெரியோர்கள் சொல்லப்புகின் மேலுமேலும்வளரும். புலையர்களாயினுங் காலையிலெழுந்து அவ்வன்னிவிருக்கத்தைத் தரிசிப்பார்களாயின் உடனே - சகல பாதகங்களுமொழிந்து பிராமணகுலத்திற் பிறப்பார்கள். அவ்வாறு பிராமணர் தரிசிப்பார்களாயின் வேதாந்தரகசியங்க ளனைத்தையுமுணர்ந்து மெய்ஞ்ஞானியாவார்கள். க்ஷத்திரியர் தரிசித்தால் இவ்வுலகமெல்லாந் தமது ஆக்ஞாசக்கரத்துளடக்குவார்கள். வைசியர் தரிசித்தால் நிறைந்தசெல்வத்தைப்பெறுவார்கள். சூத்திரர் தரிசித்தால் மேலான கதியையடைவார்கள். ஆதலால் கணேசமூர்த்தியை அவ்வன்னிப்பத்திரத்தால் இன்னும் அருச்சிப்பையெனில் உனது இஷ்டகாமியார்த்தங்கள் உடனே சித்திபாகும். என்று கீர்த்தியென்பவட்குக் கிருச்சமதமுனிவர் சொன்னதாகச் சிவபிரான் உமைபவட்குச் சொல்லியபடி பிரமதேவன் பிதிர்தேவனுக்குச் சொல்லினன். அதைத் தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொன்னான்.

௩௩ - வது, வன்னியருச்சனைப்படலம் முற்றிற்று.



உ

கணபதிதுணை.

முப்பத்துநான்காவது

## க்ஷிப்பிரப்பிரசாதன்உபாசித்தபடலம்

ஒப்பிறந்துவச் சிந்தையிரும்பன்மா முகனைத்
துப்பணங்கியர் வன்னிபாற்றெழுதுகந் துணைவர்
அப்புருக்கடந் திடச்செய்தவாறிது தப்பால்
க்ஷிப்பிரப்பிர சாதனை ... திறங் கேண்மின்.

ஓ சவுனகாதி முனிவர்களே! தேவர்பத்தினிகள் வன்னிப்பத்திரத்தால் விநாயமூர்த்தியை யருச்சித்துத் தங்கள் தலைவர்களடைந்த சாபத்தை நிவிர்த்திசெய்துகொண்ட வரலாற்றினைச்சொன்னோம்,இப்பால் கீர்த்தியின் புத்திரனாகிய கிப்பிரப்பிரசாத னுபாசித்த சிறத்தினைச் சொல்லுவோங் கேட்பீராக. தேவேந்திரன் பின்னுஞ் சூரசேனமகாராசனைநோக்கி, அரசனே! சிவபிரானை உமையவள் மீளவுந் தொழுதெழுந்து, சுவாமி, தேவரீரது கிருபையினால் வன்னிப்பத்திரத்தினுடைய மேன்மையையும் அஃது விநாயகமூர்த்திக்கு உவப்பாகி யிருக்கின்றமையையுந் தெரிந்துகொண்டேன். இப்பால் அக்கீர்த்தியும் அவள் புத்திரனாகிய கிப்பிரப்பிரசாதனும் எவ்வாறாயினரென்று கேட்க அதற்குச் சிவபிரான் விடைகொடுத்ததாகப் பிரமதேவன் பிதிர்தேவனுக்குச் சொல்லுவதாவது. ஓ மலையரையன்புத்திரியே! கீர்த்தியென்பவள் கிருச்சமதமுனிவரை மீளவுந்தொழுதெழுந்து, சுவாமி! அடியாள்புதல்வனாகிய இக் கிப்பிரப்பிரசாதனுக்கு எக்காலத்துமோரிடையூறு நெருங்காமல் எல்லாவுலகமும் இவனுக் கேவல்செய்யும்படியாக கணேசமூர்த்தியினுடைய திருமந்திரங்களில் செபித்தற்கெளிதாகியும் விரைவிற் பயனைத்தருவதாகியு மிராநின்ற ஓர்மந்திரத்தை இவனுக்குபதேசித்தருள வேண்டுமென்று விண்ணப்செய்துகொண்டனள். அதற்கு அக்கிருச்சமதமுனிவரிசைந்து அவளைக் குளித்துவருமாறுகட்டளையிட்டு, அவ்வாறு செய்துவந்தவுடன் விநாயகமூர்த்தியினுடைய நாலெழுத்துள்ள மந்திரத்தை யுபதேசித்து அதனையநுட்டிக்குமுறைமையினையுந்தெருட்டி, இம்மந்திரத்தைக் காசித்தலத்தி லெழுந்தருளியிருக்கின்ற துண்டிவிநாயகர் சந்நிதியிற்சென்று செபிக்கக்கடவையென்று சொல்லினர். அதனைக் கீர்த்திகேட்டு, சுவாமி! தேவரீர் உபதேசித்தருளிய மந்திரத்தைக் காசித்தலத்திற்சென்று துண்டிவிநாயகர் சந்நிதியிற் செபிக்கவேண்டுமென்று திருவாய்மலர்ந்தபடியால் இவ்வுலகின்கணுள்ள எல்லாத்தலங்களினுங் காசித்தலம் அவ்வளவு விசேடப்பட்டதென்ன? அதனையும் அடியாட்குத் தெரிவித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்குப் பஞ்சேந்திரியங்களையுநிக்கிரகித்த கிருச்சமதமுனிவர் சொல்லுவார். ஓ பெண்கள்சிகாமணியே! நால்வகைத்தோற்றம் எழுவகைப்பிறப்பு எண்பத்துநான்குநூறாயிரம் யோனிபேதங்களினும் ஒருவன் மானுடயோனியிற் பிறத்தலரிது. அம்மானுடயோனியிற் பிறக்கினும் அந்தணர்முதலியநால்வகைவருணத்துள்

பிறத்தலரிது. அங்ஙனம் நால்வகை வருணத்திற் பிறக்கினும் அறிவுடையோராயிருத்தலரிது. அறிவுடையோராயிருக்கினும் பாசபந்தங்கள் நீங்கிப் பிரமஞானத்தையறிந்து எமதாண்டவருடைய திருவடிகளைச் சேர்தலரிது. இவ்வாறு எமதாண்டவருடைய திருவடிகளைச்சேரத்தக்கவர்களும் மேற்கூறிய யோனிபேதங்களிற் பிறப்பவர்களும் வியாதியடைந்து வருத்தமுறுகின்றபேர்களும் துற்புத்தியினாற்றுன்மார்க்கநடையிற் செல்லுகின்றவர்களும் அவயவ பங்கமுற்றவர்களும் எளிதில் முத்தியடையுமாறு, மான்மழுசதுர்ப்புஜ காளகண்ட திரிசூல பாணிநேத்திராவதாரியாயெழுந்தருளியிருக்கின்ற சிவபிரானென்பவர் தாமே இவ்வுலகமெங்கணும் அனந்த மூர்த்திகளாகவும் அனந்த தலங்களாகவும் அனந்த தீர்த்தங்களாகவும் வதிந்திருக்கின்றனர். இவ்வாறு அனந்தமாயிருக்கின்ற மூவகையுள்ளுமுண்டாகின்ற பயனை ஒன்றனந்தமாகத் தருவதற்கு ஓர்மூர்த்தியும் ஓர்தலமும் ஓர்தீர்த்தமுமாக விருக்கின்றனர். அவை விசுவநாதரென்கிற மூர்த்தியும் அவிமுத்தமென்கின்ற தலமும் மணிகர்ணிகையென்கின்ற தீர்த்தமுமாம். அந்த அவிமுத்தமென்கின்ற காசித்தலத்தி லெழுந்தருளிய விசுவநாத மூர்த்தியை ஒருகற்பத்தில் பிரமன்முதலிய மூவரும் வழிபட்டு சிருட்டிமுதலிய தொழில்களைப் பெற்றதன்றி மேலானவரங்களையும் பெற்றிருக்கின்றார்கள். இந்திரன்முதலிய திசைக்காவலரும் மற்றையதேவர் அரக்கர் தானவர் உரகர்முதலிய யாவரும் ஒவ்வொருகாலங்களிற் பூசித்துத் தங்கடங்கள் பதவிகளை நிலைபெறச்செய்துகொண்டார்கள். முன்னொருகாலத்தில் விண்டுவானவர் அத்தலத்திற் பூசைசெய்துகொண்டிருக்கின்றபோது விசுவநாதமூர்த்திக்கு அபிஷேகிப்பதற்காகப் பாதலலோகவரையில் ஆழமுண்டாகும்படி ஓர் தடாகத்தைத்தொட்டு அத்தடாகநீரைக்கொண்டு விசுவநாதமூர்த்திக் கபிஷேகித்து அதன் கரையிற்றானே ஓர்பீடத்திலிருந்து அரிய தவஞ்செய்துகொண்டிருந்தனர். அதற்கு விசுவநாதமூர்த்திகிருபைகூர்ந்து உமையவள்சமேதராய் இடபவாகனத்தின்மீதெழுந்தருளி அவரெதிரில் ஆகாயமார்க்கமாகப் பிரத்தியட்சமாயினர். உடனே திருமாலானவர் விரைந்தெழுந்து அவரது திருவடிகளில் அனந்தமுறை சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து சோனைமழைபெய்வதுபோல அளவற்ற வேதாகமங்களாற் றுதித்து நின்றனர். அவரன்புக்கு விசுவநாதமூர்த்தி வியந்து தமது திருமுடியசைத்துளக்க, உடனே அவரது செவியிலணிந்திருந்த உரகத்து

ண்டலத்தினின்றும் ஒரு மணியான துசிதறி அத்தடாகத்தில் விழுந்த மூர்ந்தியது. அதுமுதல் அத்தீர்த்தத்திற்கு மணிகர்ணிகையென்னும் பெயருண்டாயது.

பின்னொருகாலத்தில் பகீரதன் ஆகாயகங்கையைக்கொண்டுவந்து அதில் விடுத்தனன். அதனால் பகீரதியென்கிறபெயரும் அதற்கு வழங்குகின்றது. ஆதலால் அத்தீர்த்தத்தில் வசித்திருக்கின்ற சீவசெந்துக்களும் அதிற்படர்ந்து வளர்கின்றகொடிகள் மரங்கள் முதலியவைகளும் அதில்வீழ்ந்த எலும்பினையுடைய சீவராசிகளும் அதின் சலமானது மேலேதெறிக்கப்பட்ட மற்றெல்லாவுயிர்களும் முத்தியடையும் எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கின்ற சிவபெருமான் அத்தலத்தில் எக்காலத்துநீங்காது வீற்றிருக்கின்றமையால் அங்கு சதாகாலமுந் தேவர்கள் முனிவர்கண்முதலாயினோர் வசித்திருக்கின்றனர். மேலும் விசுவநாதருக்கிணையான மூர்த்தியும் மணிகர்ணிகைக்கிணையான தீர்த்தமும் காசிநகருக்கிணையானதலமும் மூவுலகங்களினுமில்லை. அக்காசி விசுவநாதர் சந்நிதியிலெழுந்தருளியிருக்கின்ற துண்டிவிநாயகமூர்த்தியை அளவற்றதேவர்கள் வன்னி அறுகு மந்தாரை இவைகளினற்பூசித்துப் பெறுதற்கரிய மேலானவரங்களைப் பெற்றிருக்கின்றார்கள். கற்பிற்சிறந்த கீர்த்தியே! முன்னொரு காலத்தில் இவ்விதிகாசத்தைச் சுப்பிரமணியக்கடவுள் அகத்தியமுனிவருக் குபதேசித்தனர். நீமிகவுஞ் சித்தசுத்தியுடையவளாதலால் உனக்கு அதனை உபதேசித்தோம். இனி நீயும் உன்புதல்வனுங் காசித்தலத்திற்குச்சென்று அங்கெழுந்தருளியிருக்கின்ற துண்டிவிநாயகருடைய திருவடிகளையடைந்து வன்னிப்பத்திரம் மந்தாரைமலர் அறுகம்புல் இவைகளைக்கொண்டு அருச்சித்து யாம்கூறிய நாலெழுத்துள்ள மந்திரத்தைச்செபித்து நீங்கள் கருதியவரங்களைப் பெறக்கடவீர்களென்று விடைகொடுத்துத் தமதாசிரமத்தை நோக்கி யெழுந்தருளினர். இப்பால் கீர்த்தியென்பவளும் அவள் புதல்வனும் பெருமகிழ்ச்சிகொண்டு உடனே இருவருங் காசித்தலத்தையடைந்து மணிகர்ணிகையில் ஸ்நானஞ்செய்து துண்டிவிநாயகருடைய திருவடிகளைப்பணிந்து அத்தினமுழுவதும் ஆகாரநித்திரையைநீத்து மாசிமாத அபரபட்ச சதுர்த்தசிவருகின்றவரையில் அத்தலத்திற்றானே வசித்திருந்து, பின்னர் அதுவருதலும் அன்றுகாலையில் நித்தியநியமாதிகளைமுடித்து நாலெழுத்துள்ள மந்திரத்தை வன்னிமரத்தடியிலிருந்து செபித்துச் சந்திரோதயமானவுடன் சகல

திரவியங்களோடும் விநாயகமூர்த்தியை வழிபட்டு அறுகு வன்னி மந்தாரம் இவைகளினா லருச்சனைபுரிந்து அவரது திருவுருவங்களை மனதில் தியானஞ்செய்துகொண் டிருந்தனர். அதற்கு விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து ஐந்துமுகங்களும் பத்து கரங்களுமுடையவராய்சிங்கவாகனமூர்ந்து அவர்களெதிரிற் பிரத்தியட்சமாயினர். உடனேகீர்த்தியானவள் தனது மைந்தனோடும் பணிந்தெழுந்து, ஓ தேவதேவோத்தமராகிய துண்டிவிநாயகமூர்த்தியே! பிரமனாதிய மூவருக்கு முத்தொழிலளித்தவரே! ஆதிமத்தியாந்தரகிதமாயிராநின்ற கடவுளே! தேவரீரது பெருங்காட்சியால் அடியேங்கள் மேலாகிய தவத்தினையுடையவர்களாயினோம். யாங்கள் பலபிறவிகடோறுஞ் செய்துவந்த பாவங்களனைத்தும் பாறின. எல்லாப் பயன்களையும் எளிதிற் பெற்றனம். தேவரீருடைய பேரருளால் நிலைபெற்றிருக்க வுதித்த எனது மைந்தனாகிய இவனுக்கு எனதுமாற்றாளூட்டிய விடத்தைத் தேவரீர்பெருங்கருணையால் கிருச்சமதமுனிவர்தீர்த்து மீட்டும் உயிரையளித்தனர். இனி இப்புத்திரன் எக்காலத்தும் ஓர் இடையூறில் வருந்தாமல் தீர்க்காயுள் கல்வி செல்வமுதலானவைகளைப்பெற்று யாவருக்குந் தலைமையாயிருக்கத்தக்க மேன்மையும் பகையாயினும் ஏவல்செய்யத்தக்க பரிசும் அளவற்ற போகங்களைப் பொருந்தி வாழும்படியான வரமுந் தேவரீர் கடாட்சித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்கு விநாயகப்பெருமான் கிருபைகூர்ந்து அவள் கருதிய எல்லா வரங்களையுந்தந்து, அன்பிற்சிறந்த அரிவையே! உனதுபுதல்வனாகிய இவன் இவ்வுலகத்தில் ஆயிரம் வருடம்வரையி லுயிர்பெற்றிருந்து ஆயிரமகங்கள்செய்து அந்தியகாலத்தில் தத்துவஞானத்தையுணர்ந்து நம்மைச்சேருவனென்று திருவாய்மலர்ந்து அப்புதல்வன்கரத்தில் மூவுலகத்தாரு மஞ்சத்தக்க வச்சிராயுதத்தினையளித்து அவனுக்குப் பரசுபாணியென்னும் ஓர் நாமமுந்தந்து யதாப்பிரகாரந் துண்டிவிநாயகமூர்த்தியிற் கலந்தருளினர்.

இப்பால் கீர்த்தியும் அவள்புத்திரனும் மறுநாள் காலையிலெழுந்து கங்கையில் ஸ்நானஞ்செய்து துண்டிவிநாயகமூர்த்தியைப் பேரன்பினோடும் பூசித்து விடைபெற்று, அக்காசித்தலத்தைவிட்டுப் பிரிவதற்கு மனமில்லாமற் பிரிந்து வழிக்கொண்டு அநேக அடவிகளைக்கடந்து துர்நாயகனை அரசாட்சிசெய்கின்ற கன்னபுரிக்குச் சமீபமாயினர். அவ்வரசனறிந்து உடனே அவர்களை யழைத்துவருமாறு மந்

திரிகளை ஏவினன். அவர்களும் இப்பூதலஞ்செய்த பாக்கியமே வந்ததென்று மனக்களித்துப் புஷ்பங்களாலும் மணிகளாலும் வீதிகளெல்லாம் அலங்கரித்து எண்ணற்ற வரிசைகளோடும் எதிர்கொண்டு செல்லக் கீர்த்தி சிவிகையின்மீதும் கிப்பிரப்பிரசாதன் யானையின்மீதும ஆரோகணித்து வீதிகள் யாவுங்கடந்து தமது அரசமனையிற்பிரவேசித்து இருவரும் பிரியவிரதனுடைய பாதங்களிற் பணிந்தெழுந்தனர் உடனே அவ்வரசன் ஆனந்தவாரிதியின் மூழ்கினவனாய்த் தனதிரண்டுகரங்களாலும் புத்திரனைத் தழுவியெடுத்து அவனைத் தன் மடிமீதிருத்தி அவர்கள் வெளிச்சென்றதுமுதல் நடந்த செய்திகளையெல்லாங் கீர்த்தியாற் சொல்லிவரக்கேட்டு ஆம்மூவரும் அளவளாவிய அன்பினோடும் ஆனந்தசாகரத்திற்றிளைத்து வாழ்ந்துவந்தனர்.

அந்நாளையில் பிரிய விரதனெனவன் தனது குமாரனாகிய பாசுபாணிக்குப் பட்டாபிஷேகஞ்செய்து தனதரசுரிமையை அவன் தோளிலிறக்கி மிக்க சித்த சுத்தியோடும் வனத்திற்சென்று தவஞ்செய்து கொண்டிருந்தனன். பின்னர் அவன்புதல்வன் ஒளிவீசுகின்ற மணியினால் விநாயகமூர்த்தியினுடையதிருவுருவஞ்சமைத்து அதைத் தனது கண்டத்திலணிந்துகொண்டு சகஸ்திரயாகங்களைக் குறைவில்லாமல் முடித்து சகஸ்திரவருடபரியந்தம் தனதரசாட்சியைத் திசையனைத்துஞ்செலுத்தி அந்தியகாலத்தில் ஏரம்பருடைய கிருபாகடாட்சத்தினாற் றெய்வவிமானம்வர அதில் ஆரோகணித்து விநாயகலோகத்திற்சென்று அனந்தகற்பகாலம்வரையில் ஆங்கேயிருந்து எல்லாப்போகங்களையும் இடையூறின்றி யனுபவித்து முடிவில் பேரின்பமுத்தியினையுமடைந்தனன். பெண்மணே! விநாயகமூர்த்திக்கு வன்னிப்பத்திரத்தில் விழைவுண்டான காரணத்தையும் அவ்வன்னி வரம்பெற்றிருக்கின்றமையுஞ் சொன்னோம். அவ்விநாயகமூர்த்தியையும் நம்மையும் வேறாகநினையற்க. அவ்வன்னிப்பத்திரம் அவருக் கிஷ்டமாகியதால் யாமும் அதனை அணிந்துகொண்டனம். அப்பத்திரத்தால் எம்மைப் பிராமணர்க ளருச்சிப்பார்களாயின் சாயுச்சியபதவியை யடைவார்கள். க்ஷத்திரிய ரருச்சித்தால் சாரூபபதவியை யடைவார்கள் வைசியரருச்சித்தால் சாமீபதவியையடைவார்கள். சூத்திரரருச்சித்தால் சாலோகபதவியை யடைவார்கள். என்று சிவபெருமான் உமாதேவிக்குத் திருவாய்மலர்ந்தருளி யிருக்கின்றமையால் அறுகுகிடையாவிடின்





வன்னிப்பத்திரத்தினாலாவது மந்தாரமலரினாலாவது விநாயகமூர்த்தியையருச்சிக்கவேண்டும். என்று பிரமதேவன் பிரிதிர்தேவனுக்குச்சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேனமஹாராசனுக்குச் சொன்னான்.

௩௪-வது. கிப்பிரப்பிரசாதன் உபாசித்தபடலம் முற்றிற்று.



உ

கணபதிதுணை.

முப்பத்தைந்தாவது

## கிருதவீரியன் உபாசித்தபடலம்.



கீர்த்திமைமந்தன் வன்னியாற்கேடிலானைமுகனை
ஆர்த்தியோடு பூசனையாற்றிய தானைத்தனம்
சார்த்தவீரியன் பிதாசருகரிட்ட சதுர்த்தி
னோற்றவண்மை யந்தணீர்நுவலக் கேண்மினீரரோ.

ஓ சவுனகாதி முனிவர்களே! கிப்பிரப்பிரசாதன் விநாயகமூர்த்தியை வன்னிமந்தாரை அறுகு இவைகளாலருச்சித்து அளவற்றவரங்களைப் பெற்ற வரலாற்றினைச்சொன்னோம். இப்பால் கிருதவீரியன் உபாசித்த திறத்தினைச் சொல்லுவோங்கேட்பீராக. தேவேந்திரன் பின்னுஞ் சூரசேனமகாராசனைநோக்கிச் சொல்லுவான், அரசனே! பிரமதேவனாற் சங்கடசதுர்த்தி விரதத்தின் பெருமைகளையெல்லாந் தெளிவுபெறக்கேட்ட பிரிதிர்தேவன் மீளவும் அவனைப்பணிந்தெழுந்து, சுவாமீ! அவ்விரதத்தைமுடித்தபின்பு நடத்தவேண்டிய முறைமையாதோ அதனையுந் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்குப் பிரமனிசைந்து, அன்பனே! அவ்விரதத்தினைத் தொடங்கிய திங்களிலாவது ஐந்தாந்திங்களிலாவது ஏழாந்திங்களிலாவதுவருகின்ற சதுர்த்தியில் மேற்கூறியபடி ஓர்கலசஸ்தாபித்து அதன்மீது ஓர்பட்டையிருத்தி அதன்மீது வஸ்திரத்தைவிரித்து அதன்மீது யந்திரம்வைத்து அதன்மீது சித்திபுத்திசமேதராயிருக்கின்ற மூர்த்தியைப் பொன்னாற்செய்தமைத்து வேதாகமமுறைப்படி

பூசித்து பதினாயிரம் ஐயாயிரம் ஓராயிரம் நூற்றெட்டென்னுந்தொகையில் தனக்கியன்றபட்டும் ஆகுதிகொடுத்து குறணி எள்ளைத்தானஞ் செய்தல்வேண்டும். பொருளுடையோனாயின் கோதானமுதலியவைகளையுஞ் செய்தல்வேண்டும். அந்தணர் இருபத்தொருபேருக்கு அன்னதானஞ்செய்து விநாயகமூர்த்தியை மனதிற்றியானித்து அவர்களருந்தி மிகுந்த சேடத்தைத் தானருந்தல்வேண்டும். பின்னர் அவ்வியந்திரத்தையும்உருவத்தையும்ஆசிரியருக்குதானஞ்செய்தல்வேண்டும் இந்தக்கிரமத்தின்படி செய்தால் அவ்விரதபலன் ஈடேறிவரும். இவ்விரதத்தை உமாதேவியார் ஆறுமாதமநுட்டித்துச் சிவபிரானுடைய இடப்பாகத்தையடைந்தனர். தமயந்தியென்பவள் நாலுமாத மநுட்டித்து வனத்திற்சஞ்சரித்திருந்த தன்கணவனாகிய நளராசன் மீட்டுந் தன்னிடத்துவரப்பெற்றனள். அகத்தியமுனிவர் மூன்றுமாத மனுட்டித்துக் கடல்நீரையெல்லாந் தமது கரத்திலடக்கியுண்டனர். கிருஷ்ணமூர்த்தி ஒருநாளனுட்டித்து வாணாசுரன் ஆவியையுண்டு வெற்றிகொண்டனர். இதுவன்றி இவ்விரதத்தை யானும் விண்டுவும் இந்திரன்முதலிய எல்லாத் தேவர்களும் இடையூறுற்ற காலத்திலெல்லாம் அனந்தமுறை யனுட்டித்து வேண்டியவைகளைப்பெற்றனம். கொன்றைப்பூமாலையைத் தரித்த யானைமுககடவுள் விரதத்தினைப்போல மேலாகிய பயனைத்தரும் விரதம் ஒன்றுமில்லை. இதனை நன்றாய்க்கவனிக்கக்கடவையென்றுபிரமன்சொல்ல பிதிர்தேவன்பேரானந்தங்கொண்டு, அடியேனும் அடியேனுடைய வம்சமும் ஈடேறினேமென்று பலமுறைதுதித்து, மீட்டுந் தொழுதெழுந்து விடைபெற்று, தனக்குப் பிரமதேவனுரைத்த சங்கடசதுர்த்தி விரதமுதலான சகலமகத்துவங்களையும் ஓர்புத்தகத்திலெழுதி,யானைகள் திரியும்படியான காட்டில் மனமென்கின்ற யானையை யடக்கித் தவஞ்செய்திருக்கின்ற தனது புதல்வனாகிய கிருதவீரியனுடைய கனவிற்சென்று அந்தப்புத்தகத்தை அவன்கையிற்றந்து,மைந்தனே! இப்புத்தகத்தில் விநாயகமூர்த்தியினுடைய மேலானவிரத மெழுதியிருக்கின்றது, இதனை அந்தணர்களால் வாசிப்பித்தறிந்து அவ்வாறே விரத மநுட்டிப்பையாயின் உனக்குப் புத்திரசம்பத்துண்டாகுமென்று சொல்லித் தனதுலோகம்போய்ச் சேர்ந்தனன்.

உடனே கிருதவீரியன்விழித்து கனவிற்கண்டதந்தையை நனவிற் காணாதவனாய் வருந்தித்தனதுகையி லமர்ந்திருக்கின்ற புத்தகத்தைக்க

ண்டு அத்தியந்த சந்தோஷங்கொண்டு அதுகாறுந் தான்கொண்டிருந்த
மனக்கவலையையும் சந்தானத்திற்குத் தடையாயிருந்த பாவங்களையு
ம் சத்துருக்களாலுண்டான பழியையும் சரீரத்தாலடைந்திருந்த வரு
த்தத்தையும் ஒழித்தவனாய் உடனே தனது சமீபத்திற்றவஞ்செய்திரு
ந்த மனைவியைக்கூவி அவளுடன் தான்கண்ட கனவினைக்கூறிப் பி
ன்னர் அவ்வனத்தைவிட்டு நகரத்தினையடைந்து தனது மந்திரிமுத
லாயினோருக்கும் அதனைத்தெரிவித்துப் பிராமணர்களைக்கூவித் தை
வீகமுள்ள அப்புத்தகத்தை அவர்கள் கையிற்றந்து வாசிக்கச்சொல்லி
னன். அதையவர்கள்கையேற்றுச் சோடசவுபசாரங்களோடும் பூசித்
து அதன்காப்பையவிழ்த்துவாசித்து,ஓ பூலோகசக்கிரேஸ்வரா! இதில்
விநாயக மூர்த்தியினுடைய விரதத்தைப் பிரமதேவன் சொல்ல
எழுதியதாயிருக்கின்றது. யாங்கள் இதுகாறும் எவ்விடத்திலும் இவ்
விரதத்தினைக் கேட்டதில்லை. இப்போது உமது தபோமகிமையால் யா
ங்களறிபவராயினேம் என்று தங்கள் உள்ளன்பினோடும் உவகை
க்கொண்டாடி அப்புத்தகத்தை அவன்கையிற்றந்து விடைகொண்டு
போயினர். இப்பால்கிருதவீரியன் மாசிமாத அபரபட்ச அங்காரக சது
ர்த்தசியன்றுவுடன் அன்றுதயத்திலெழுந்து ஸ்நானாதிகடன்களை முடித்
து திருவெண்ணீறணிந்து உருத்திராக்கமாலைபூண்டு சங்கடசதுர்த்தி
விரதத்தையாரம்பித்து, சிரசாதிபாதம்வரையில்விதிப்படிநியாசஞ்செய்
து காமாக்கினியாதிகளைத் தணித்துக் கணேச மூர்த்தியினுடைய திரு
வடிகளை மனதிலிருத்தி, ஏகாக்ஷரம் ஷடாக்ஷரமுதலிய மந்திரங்களைச்
செபித்துக்கொண்டு ஏழாந்திங்களில் தனது குலகுருவாகிய அத்திரி
மகாமுனிவரை யழைத்து, அபிஷேகத்திற்குரிய திரவியங்களையும் அரு
ச்சித்தற்கேற்ற மலர்களையும் நிவேதனத்திற்குத்தக்க பதார்த்தங்களை
யும் தூபதீபங்கட்குவேண்டிய பொருள்களையுஞ் சேகரித்துப் பூசாம
ண்டபத்திற்குவந்து ஆசமனம் பிராணாயாம முதலிய கிரியைகளைமுடி
த்து (ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் சுபதிதௌ அஸ்மாகம்
குடும்பானாம் க்ஷேமஸ்தைர்ய விஜயாயுராரோக்யைஸ்வர்யாபிவிருத்
த்யர்த்தம், தர்மார்த்த காமமோக்ஷ சதுர்வித பலபு
ருஷார்த்தசித்த்யர்த்தம், ஸகலஸங்கட பரிஹாரார்த்தம் ஸ்ரீஸங்கட
ஹரண கணபதிமுத்திஸ்ய, ஸ்ரீஸங்கடஹரண கணபதிப்ரீத்யர்த்தம்
போகப்பாகாசனை, ஸங்கடஹரண சதுர்த்திவ்ரதங் கரிஷ்யே)
சங்கற்பங்கூறி வைரத்தினமயமாயிராநின்ற ஓர்வேதிகையையமை

த்து அதன்மீது தண்டுலம்பரப்பி, அதன்மீது இழைசுற்றி நீர்நிரப்பி யிருக்கின்ற பொற்கும்பத்தை ஸ்தாபித்து அதற்குச் சந்தனம் புஷ்பம் அட்சதை முதலானவைகளை யணிந்து, கலசஸ்யமுகேவிஷ்ணு கண்டேருத்ரஸ் ஸமாஸ்ரித மூலேதத்ரஸ்திதோப் ரம்ஹமாத்யே மாத்ருகணா ஸ்ம்ருதா குக்ஷோதுஸகராஸ்ஸர்வேகல சாம்புஸமாஸ்ரித அயாந்து கணேசபூஜார்த்தம் துரிதக்ஷயகாரக கங்கேசயமுநேசைவ கோதாவரி ஸரஸ்வதி நர்மதேசிந்துகாவேரி ஜலேஸ்மின் ஸந்நிதிங்குரு என்று கலசபூசைசெய்து அதன்மீது ஓர்தட்டையவைத்து அதன்மீது வஸ்திரம்விரித்து அதன்மீது யந்திரம்வைத்து அதன் மீது சித்தி புத்தி சமேதராயிருக்கின்ற விநாயகமூர்த்தியை எழுந்தருளச்செய்து அபிடேக திரவியமுதலியவைகளை மந்திரபூர்வகமாகச் சுத்திசெய்து.

ஓம் பூர்வத்வாரேத்வ ரஸ்ரீயைநம
ஓம் தக்ஷிணத்வாரேத்வாரஸ்ரீயை நம:
ஓம் பச்சிமத்வாரேத்வாரஸ்ரீயைநம
ஓம் உத்தரத்வாரேத்வாரஸ்ரீயைநம
ஓம் தேஹளியைநம:
ஓம் த்வாரசோபாயைநம:
ஓம் பீடமத்யேவாஸ்துபுருஷாயநம:
ஓம் மஹாமண்டோயநம:
ஓம் காலாக்கினிருத்ராயநம:
ஓம் கூர்மாயநம:
ஓம் வராஹாயநம:
ஓம் அனந்தாயநம:
ஓம் ப்ருத்திவ்யைநம:
ஓம் அங்குசாயநம:
ஓம் ஸப்தத்வீபேப்யோநம:
ஓம் ஸப்தஸமுத்ரேப்யோநம:
ஓம் கந்தாயநம:
ஓம் நாளாயநம:
ஓம் பத்ரேப்யோநம:
ஓம் கேஸரேப்யோநம:
ஓம் கர்ணிகாயைநம:

ஓம் ரத்நஸிம்ஹாசநாயநம:
ஓம் இலட்சுசமுத்ராயநம:
ஓம் ஸ்வர்ணத்வீபாயநம:
ஓம் ரத்நமண்டபாயநம:
ஓம் கல்பவ்ருக்ஷாயநம:
ஓம் காமதேனவேநம:
ஓம் க்ஞானாயநம:
ஓம் வைராக்யாயநம:
ஓம் ஐஸ்வர்யாயநம:
ஓம் தர்மாயநம:
ஓம் அக்ஞானாயநம:
ஓம் அவைராக்யாயநம:
ஓம் அநைஸ்வர்யாயநம:
ஓம் அதர்மாயநம:
ஓம் தீப்தாயநம:
ஓம்மத்யேசந்த்ரோமாஸ்கிதாங்கட, ஹாரணகணபதயேநம:
ஓம் ரஜஸேநம:
ஓம் தமஸேநம:
ஓம் அக்கினிமண்டலாயநம:
ஓம் அக்கினி மண்டலாதிபதயேநம:
ஓம் வஹ்நயேநம:

ஓம் அர்க்கமண்டலாயநம:
ஓம் அர்க்கமண்டலாதிபதயேசூர்
,, யாயநம:
ஓம் சோமமண்டலாயநம:
ஓம் ஸோமமண்டலாதிபதயே சந்
த்ரமஸேநம:
ஓம் க்ரஹமண்டலேப்யோநம:
ஓம் க்ரஹமண்டலாதியதிப்ய ஆதித்
,, யாதிநவக்ரகேப்யோநம:
ஓம்தன்மத்யே த்ருவமண்டலாயநம
ஓம் த்ருவமண்டலாதிபதயே த்ரு
வாயநம.
ஓம் மாயாதத்வாயநம:
ஓம் ஆத்மதத்வாயநம:
ஓம் வித்யாதத்வாயநம:
ஓம சிவதத்வாயநம:
ஓம் ஆத்மனேநம:
ஓம் அந்தராத்மனேநம:
ஓம் சிவாத்மனேநம:
ஓம் பரமாத்மனேநம:
ஓம் மத்யேருத்ராயநம:
ஓம் பகவதைநம:
ஓம் தேஜோவதைநம:
ஓம் மத்யேவிக்னநாசினேநம:
ஓம் சர்வசங்கடநிவாரிணேநம:

என்று த்வாரபீட பூசைசெய்து, கரத்திற் புஷ்பமும் அக்ஷதையுங் கொண்டு (லம்போதரம் சதுர்ப்பாகும்த்ரிநேத்ரம் ரக்தவர்ணகம் ஸர்வாபரணசோபாட்யம் ப்ரசன்னாஸ்யம்விசிந்தயே. ஸ்ரீலம்போதராயநம: த்யானம்ஸமர்ப்பயாமி) என்று சிந்தனைசெய்து (ஆகச்சவிக்னராஜேந்த்ர-ப்ரஸன்னோத்ரஸ்திரோபவஅத்ராதயாமிபகத்யாஹம் பரம் தம்ஸர்வஸித்தயே. ஸ்ரீவிக்னநாசினே நம: (ஆவாஹனம்ஸமர்ப்பயாமி) என்று ஸ்தாபனஞ்செய்து (ஆஸிஸ்த்தார்தகசித்யர்தம் பூஜிதையஸ்சுராரபி ஸர்வவிக்னச்சிதேதஸ்மை கணாதிபதயேநம: ஸ்ரீவக்ரதுண்டாயநம: ஆஸனம்ஸமர்ப்பயாமி. என்று பீடமிட்டு (கணாதிநமஸ்தேஸ்து ஸர்வசித்திப்பிரதோபவ பாத்யங்க்ருஹாணதேவேச சுராசுரபூஜித. ஸ்ரீகணாதிபாயநம: பாத்யம்ஸமர்ப்பயாமி. ரக்தசந்தனஸம்யுக்தம் ரக்தபுஷ்போபசோபிதம் அர்க்யங்க்ருஹாணபகவன் - மயாதத்தம் இபக்திதம். ஸ்ரீசந்த்ரார்த்தகாரிணேநம: அர்க்யம்சமர்ப்பயாமி. சுராசுரஸமாராத்ய - ஸர்வசித்திப்ரதாயக மயாதத்தம் சுரஸ்ரேஷ்ட-க்ருஹாணசமனீயகம். ஸ்ரீவிஸ்வப்ரயாயநம: ஆசமனம் ஸமர்ப்பயாமி) என்றுபாத்யம் அர்க்யம் ஆசமனங்கொடுத்து (சுதயங்கித்ரவ்யமாத்ராணிகங்காதோயைகணாதிப அபஸ்நாநயத்தோயம் ஸ்வீகுருஷ்வமயார்ப்பிதம். ஸ்ரீஸர்வசித்திப்ரதாயகாயநம: ரஜோபகர்ஷண ஸ்னானம் சமர்ப்பயாமி) என்று திருமஞ்சனமாட்டி (சமஸ்தோகணநாதாயநமோ

மூஷிகவாஹன உமாசுத நமஸ்துப்யம் மதுபர்க்கம் க்ருஹாணபோ. ஸ்ரீப்ரம்மசாரிணே நம: மதுபர்க்கநைவேத்யம் சமர்ப்பயாமி) என்று தேன்கலந்த பால்பழமுதலியவைகளை நிவேதனஞ்செய்து 'ததிக்ஷீராஜ்யமதுபி-சாக்கராசஹிதைரபை பஞ்சாம்ருதைஸ்நாபயாம் கணாத்யக்ஷ நமோஸ்துதே, பஞ்சாம்ருத ஸ்நானம்சமர்ப்பயாமி. கவ்யபேயம்மகாதிவ்யம் பவித்ரம் புஷ்டிவர்த்தனம் - ஸ்நாநாயதேமயாதத்தம் க்ருஹீஷ்வசுதத்தமம் க்ஷீர ஸ்நானம் ஸமர்ப்பயாமி-மதுஸ்வாதுசமாயுக்தம்-ப்ரசித்தம்பரமாற்புதம்-ஸ்நாநாயதேமயாதத்தம்-ததீதம் ப்ரதிக்ருஹ்ஹதாம் ததிஸ்நானம் ஸமர்ப்பயாமி. தேவர்ஷீணம் ப்ரயம்புண்யம் பவித்ரம் புஷ்டிவர்த்தனம - ஸ்நாநாயதேமயாதத்தம் - க்ருஹாணாஜ்யம் நமோஸ்துதே க்ருதஸ்நானம் ஸமர்ப்பயாமி. அநேகவ்ருக்ஷநிசய, குசுமோத்பூதமதுபம்-ஸ்நாநாயதேமயாதத்தம் - கணேசப்ரதிக்ருஹ்யதாம், மதுஸ்நானம் ஸமர்ப்பயாமி, இக்ஷுகண்டஸமுத்பூதா-பராஸ்வாத்யதராசுபா சர்க்கரேயம்மயாதத்தா - ஸ்நாநார்த்தம் பரதிக்ருஹ்யதாம் சர்கராஸ்நானம ஸமர்ப்பயாமி கங்காயாஸ்ஸலிலம்சுத்தம் சுவர்ணகலசேஸ்திதம் சுவாஸிதம்பரிமள்யோ ஸ்நாபயாமி கணேஸ்வரசுத்தோதகஸ்நானம் சமர்ப்பயாமி) என்று பஞ்சாமிர்தம்-பால் தயிர்-நெய்-தேன் சர்க்கரை-சுத்தோதகம் என்னு மிவைகளை அபிஷேகித்து (ரக்தவஸ்திரம்த்வயம்திவ்யம்-ஸர்வலோகப்ரஸாதனம்-மயாதத்தம்கணாத்யக்ஷக்ருஹாணமங்கலப்ரதாவஸ்த்ரம்ஸமர்ப்பயாமி(குங்குமாக்தம்மயாதத்தம்-க்ருய்ஹதாமுபவீதகம் உத்தரீயேணஸம்யுக்தம் சுபதம்கணநாயகா யக்ஞோபவீதம் ஸமர்ப்பயாமி. கோடிசூர்யப்ரகாசீச ரக்தவண்ண சதுர்ப்புஜ மயாஸமர்பிதானீஹா பூஷணானிக்ருஹணபோ ஸர்வாபரணானி ஸமர்ப்பயாமி. சந்தனகருகர்ப்பூர குங்குமாதிஸமவ்யதம் கந்தங்க்ருஹாணதேவேச-ஸர்வசித்திப்ரதாயக, கந்தம்ஸமர்ப்பயாமி, அட்சதாம் சச்சுரஸ்ரேஷ்ட குங்குமாக்ருஸம்யுதாம் க்ருஹாணவிக்னராஜேந்த்ர மயாதத்தாவிபக்திதம அக்ஷதாம்ஸமர்ப்பயாமி. ரக்தபுஷ்பாக்ஷ விக்னேசசைகவிம்சதிசங்க்யயா க்ருஹாணகமுகோபூத்வா-மயாதத்தான்யு மாசுதா,புஷ்பாணிபூஜயாமி. சுகந்திசமால்யானி-க்ருஹாணகணநாயக விநாயகநமஸ்துப்யம், சிவசூனோநமோஸ்துதே, மால்யானி சமர்ப்பயாமி.) என்று வஸ்திரம் யக்ஞோபவீதம்-சர்வாபரணம்-கந்தம் - அட்சதை-புஷ்பம்-மால்யம்-இவைகளைத்தரித்து.

| | |
|---|---|
| ஓம் கஜானனாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் விக்னராஜாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் லம்போதராயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் சிவாத்மஜாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் வக்ரதுண்டாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் சூர்ப்பகர்ணாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் குப்ஜாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் கணேசாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் விக்கினநாசினேநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் விகடாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் வாமதேவாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் சர்வதேவாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் சர்வார்த்திநாசினேநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் விக்னஹர்த்ரேநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் தூம்ராயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் உமாபுத்ராயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் க்ருஷ்ணபிங்களாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் பாலசந்த்ராயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் சந்த்ரார்த்ததாரிணேநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் கணாதிபாயநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |
| ஓம் சங்கரகௌரீசூனவேநமஃ | தூர்வாயுக்மம்பூஜையாமி |

என்று இரண்டிரண்டாக இருபத்தோராறுகையெடுத்து அருச்சனை செய்து.

| | |
|---|---|
| ஓம் சங்கடநாசனாயநமஃ | பாதௌபூஜையாமி |
| ஓம் ஸ்தூலஜங்காயநமஃ | ஜங்கேபூஜையாமி |
| ஓம் ஆகுவாஹனாயநமஃ | ஊருபூஜையாமி |
| ஓம் வரம்பாயநமஃ | கடிம்பூஜையாமி |
| ஓம் லம்போதராயநமஃ | உதரம்பூஜையாமி |
| ஓம் ஸ்கந்தாக்ரஜாயநமஃ | ஸ்தநௌபூஜையாமி |
| ஓம் பாசஹஸ்தாயநமஃ | ஹஸ்தான்பூஜையாமி |
| ஓம் ஸ்தூலகண்டாயநமஃ | கண்டம்பூஜையாமி |
| ஓம் சர்வேஸ்வராயநமஃ | சிரம்பூஜையாமி |
| ஓம் சங்கடஹாரிணேநமஃ | சர்வாங்காநிபூஜையாமி |

என்று பாதம்-கணைக்கால்-தொடை-நிதம்பம்-வயிறு-கழுத்தடி-கரம்-கண்டம் சிரம்-சர்வாங்கம்-என்னும் பத்திடங்களினும் அங்கபூஜைசெய்து.

ஓம் கணாதிபாயநம:
ஓம் உமாபுத்ராயநம:
ஓம் அகநாசனாயநம:
ஓம் ஏரம்பாயநம:
ஓம் லம்போதராயநம:
ஓம் கஜவக்த்ராயநம:
ஓம் ஏகதந்தாயநம:
ஓம் தூமகேதவேநம:
ஓம் பாலசந்த்ராயநம:
ஓம் ஈசபுத்ராயநம:
ஓம் இபவக்த்ராயநம:
ஓம் குமாரகுரவேநம:
ஓம் மூஷிகவாஹனாயநம:
ஓம் சங்க நாசனாயநம:

என்று ப்ரதமாவரணபூஜைசெய்து.

ஓம் விகனகணபதயேநம:
ஓம் விநாயககணபதயேநம:
ஓம் வீரகணபதயேநம:
ஓம் வரதகணபதயேநம:
ஓம் இந்த்ரகணபதயேநம:
ஓம் லம்போதரகணபதயேநம:
ஓம் ஏகதந்தகணபதயேநம:
ஓம் சூரகணபதயேநம:
ஓம் சூர்ப்பகர்ணகணபதயேநம:
ஓம் க்ஷிப்ரப்ரசாதகணபதயேநம:
ஓம சித்திகணபதயேநம:

என்றுத்விதியாவரணபூஜைசெய்து.

ஓம் ரமாயைநம:
ஓம் ரமேசாயைநம:
ஓம் உமாயைநம:
ஓம் வ்ருஷாங்காயநம:
ஓம் ரத்யைநம:
ஓம் புஷ்பபாணாயநம:
ஓம் மாயையைநம:
ஓம் வராஹாயநம:
ஓம் ஸதாசிவாயநம:

என்று த்ருதியாவரணபூஜைசெய்து.

ஓம் ஆதித்யாயநம:
ஓம் ஸோமாயநம:
ஓம் அங்காரகாயநம:
ஓம் புதாயநம:
ஓம் சுக்ராயநம:
ஓம் சனைஸ்வராயநம:
ஓம் ப்ரகஸ்பதயேநம:
ஓம் ராகுக்ரஹாயநம:
ஓம் கேதுக்ரகாயநம:

என்றுசதுர்த்தாவரண பூஜைசெய்து.

ஓம் த்ரத்தைய்நம:
ஓம் சமர்த்தைய்நம:
ஓம் காந்தைய்நம:
ஓம் மதத்ரவாயைநம:







ஓம் சுகாதாராயைநம:　　　ஓம் வசுமத்யையநம:

ஓம் தராவிண்யைநம:

என்றுபஞ்சமாவரண பூஜைசெய்து.

ஓம் இந்த்ராயநம:　　　ஓம் வருணாயநம:

ஓம் அக்னயேநம:　　　ஓம் வாயவேநம:

ஓம் யமாயநம:　　　ஓம் குபேராயநம:

ஓம் நிருதயேநம:　　　ஓம் ஈசானாயநம:

என்று ஷஷ்டாவரண பூஜைசெய்து.

ஓம் கணாதிபாயநம:　　　மாலதீபத்ரம் ஸமர்ப்பயாமி

ஓம் சுமுகாயநம:　　　ப்ருங்கராஜபத்ரம் ஸமர்ப்பயாமி

ஓம் உமாபுத்ராயநம:　　　பில்வபத்ரம் ஸமர்ப்பயாமி

ஓம் கஜவக்த்ராயநம:　　　தூர்வாபத்ரம் ஸமர்ப்பயாமி

ஓம் லம்போதராயநம:　　　பதரீபத்ரம் ஸமர்ப்பயாமி

ஓம் ஹரசூனவேநம:　　　தத்தூரபத்ரம் ஸமர்ப்பயாமி

ஓம் குஹாக்ரஜாயநம:　　　துளசீபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் கஜகர்ணகாயநம:　　　அபாமார்க்கபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் ஏகதந்தாயநம:　　　ப்ருஹதீபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் இபவக்த்ராயநம:　　　சமீபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் மூஷிகவாஹனாயநம:　　　கரவீரபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் விநாயகாயநம:　　　வேணுபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் கபிலாயநம:　　　அர்க்கபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் பின்னதந்தாயநம:　　　அர்ச்சுனபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் பத்னியுக்தாயநம:　　　விஷ்ணுக்ராந்தபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் விக்னேசாயநம:　　　தாடிமபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் பாலசந்த்ராயநம:　　　தேவதாருபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் ஹேரம்பாயநம:　　　மருகபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் சுராக்ரகண்யாயநம:　　　ஜாஜீபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் சித்திவிநாயகாயநம:　　　சிந்துவாரபத்ரம் சமர்ப்பயாமி

ஓம் சங்கடநாசினேநம:　　　ஏகவிம்சதிபத்ராணி சமர்ப்பயாமி

என்று - திருசண்டகம் - சரசாங்கனி- வில்வம் - அறுகு - இலந்தை ஊமத்தை - துளசி - நாயுருவி - சிறுவழுதி - வன்னி - அலரி - மூங்கில் - வெள்ளெருக்கு - மருதம் - விஷ்ணுக்கிராந்தி - மாதுளை - மந்தா



ை - மருவு - சாதிமல்லி - வெண்ணொச்சி - என்னு மிவற்றின் பத்திரங்களைக்கொண்டு அருச்சித்து,

| | |
|---|---|
| ஓம் சுமுகாயநமஃ | ஜாதிபுட்பம் சமர்ப்பயாமி |
| ஓம் ஏகதந்தாயநமஃ | சாவந்திபுட்பம்சமர்ப்பயாமி |
| ஓம் கபிலாயநமஃ | மல்லிகாபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் கஜகர்ணகாயநமஃ | சம்பங்கிபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் லம்போதராயநமஃ | கல்லாரபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் விகடாயநமஃ | கேதகிபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் விக்னநாசினேநமஃ | வகுளபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் விநாயகாயநமஃ | சதபத்ரபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் தூமகேதவேநமஃ | புந்நாகபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் கணாத்யக்ஷாயநமஃ | ஆத்தாரபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் பாலசந்த்ராயநமஃ | மாலதிபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் பத்னிஹஸ்தாயநமஃ | விஷ்ணுக்ராந்தபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் உமாபுத்ராயநமஃ | கிரிகர்ணிகாபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் கஜாநநாயநமஃ | நாகபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் ஈசபுத்ராயநமஃ | மந்தாரபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் சர்வஸித்திப்ரதாயகாயநமஃ | கோவிதாரபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் மூஷிகவாஹநாயநமஃ | அருமோற்பலபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் குமாரகுரவேநமஃ | ரக்தபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் தீர்க்கதுண்டாயநமஃ | அர்க்கபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் இபவக்த்ராயநமஃ | முனிபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் ஸங்கடநாசிநேநமஃ | ஏகவிம்சதிபுஷ்பாணி சமர்ப்பயாமி |

என்று - சிறுசண்பகம் - சாமந்தி-மல்லிகை - சம்பங்கி - செங்குவளை தாழை - மகிழம் - தாமரை - புன்னை - ஊமத்தை - முல்லை - விஷ்ணுக்ராந்தி - வெள்ளைக் காக்கணம் - நாகை. மந்தாரை - குரா - கோங்கு செம்பரத்தம் - வெள்ளெருக்கு - அகத்தி - என்னுமிவற்றின் புஷ்பங்களைக்கொண்டு அருச்சித்து,

ஓம் சுமுகாயநமஃ
ஓம் ஏகதந்தாயநமஃ
ஓம் கபிலாயநமஃ
ஓம் கஜகர்ணகாயநமஃ
ஓம் லம்போதராயநமஃ
ஓம் விகடாயநமஃ
ஓம் விக்னராஜாயநமஃ
ஓம் கணாதிபாயநமஃ





ஓம் தூமகேதவேநம:
ஓம் கணாத்யக்ஷாயநம:
ஓம் பாலசந்த்ராயநம:
ஓம் கஜாநநாயநம:

என்று த்வாதசநாம பூஜைசெய்து,

ஓம் விநாயகாயநம:
ஓம் விக்னராஜாயநம:
ஓம் கௌரிபுத்ராயநம:
ஓம் கணேஸ்வராயநம:
ஓம் ஸ்கந்தாக்ரஜாயநம:
ஓம் அவ்யயாயநம:
ஓம் பூதாயநம:
ஓம் தக்ஷாயநம:
ஓம் அத்யக்ஷாயநம:
ஓம் த்விஜப்பிரியாயநம:
ஓம் அக்கினிகர்பச்சிதேநம:
ஓம் இந்த்ரஸ்ரீப்ரதாயநம:
ஓம் வாணீப்ரதாயநம:
ஓம் ஸர்வஸித்திப்ரதாயநம:
ஓம் ஸர்வதநயாயநம:
ஓம் ஸர்வப்ரியாயநம:
ஓம் ஸர்வாத்மகாயநம:
ஓம் ஸ்ருஷ்டிகர்த்ரேநம:
ஓம் தேவாயநம:
ஓம் அநேகார்ச்சிதாயநம:
ஓம் சிவாயநம:
ஓம் சுத்தாயநம:
ஓம் புத்திப்பிரியாயநம:
ஓம் சாந்தாயநம:
ஓம் ப்ரம்மசாரிணேநம:
ஓம் கஜாநநாயநம:
ஓம் த்வைமாத்ரேயாயநம:
ஓம் முனிஸ்துத்யாயநம:
ஓம் பக்தவிக்னவிநாசாயநம:
ஏகதந்தாயநம:
ஓம் சதுர்பாஹவேநம:
ஓம் சதுராயநம:
ஓம் சக்திஸம்யுதாயநம:
ஓம் லம்போதராயநம:
ஓம் சூர்ப்பகர்ணாயநம:
ஓம் ஹரயேநம:
ஓம் ப்ரம்மவித்தமாயநம:
ஓம் காலாயநம:
ஓம் க்ரஹபதயேநம
ஓம் காமினேநம
ஓம் சோமசூர்யாக்னிலோசநாயந
ஓம் பாசாங்குசதராயநம:
ஓம் சண்டாயநம:
ஓம் குணாதீதாயநம:
ஓம் நிரஞ்சநாயநம:
ஓம் அகல்மஷாயநம:
ஓம் ஸ்வயம்சித்தாயநம:
ஓம் சித்தார்ச்சிதபதாயநம:
ஓம் அவ்யயாயநம:
ஓம் பீஜபூரபலாஸக்தாயநம:
ஓம் வரதாயநம:
ஓம் சாஸ்வதாயநம:
ஓம் க்ருதினேநம:
ஓம் பராயநம:
ஓம் வீதபயாயநம:
ஓம் கதினேநம:
ஓம் சக்ரிணேநம:
ஓம் இக்ஷுசாபத்ருதேநம:
ஓம் அஜாயநம:
ஓம் உத்பலகராயநம:

ஓம் ஸ்ரீதாயநம:
ஓம் ஸ்ரீபதயேநம:
ஓம் ஸ்துதி ஹர்ஷிதாயநம:
ஓம் குலாத்ரிபேத்ரேநம:
ஓம் ஜடிலாயநம:
ஓம் சந்த்ரசூடாயநம:
ஓம் காந்தாயநம:
ஓம் பரமஹரிணேயநம:
ஓம் சமாஹிதாயநம:
ஓம் ஆஸ்ரிதாயநம:
ஓம் ஸ்ரீகராயநம:
ஓம் சௌம்யாயநம:
ஓம் பக்தகர்மட்சிதாயநம:
ஓம் ஓஷதிபதயேநம:
ஓம் அமயகாயநம:
ஓம் கைவல்யசாயநம:
ஓம் சச்சிதானந்தவிக்ர ஹாயநம:
ஓம் க்ஞானினேநம:
ஓம் தயாயுதாயநம:
ஓம் தாந்தாயநம:
ஓம் ப்ரம்மத்வேஷவிவர்ஜிதாயநம:
ஓம் பிரம்மத்ரைதய்யபயதாயநம:
ஓம் அமரேஸ்வராயநம:
ஓம் நாகயக்ஞோபவீதினேநம:
ஓம் ஸ்ரீகண்டாயநம:

ஓம் விதயேநம:
ஓம் ராமார்ச்சிதாயநம:
ஓம் ஸ்தூலகண்டாயநம:
ஓம் ஸ்வயங்கர்த்ரேநம:
ஓம் சாமகோஷப்ரியாயநம:
ஓம் பரஸ்மைநம:
ஓம் ஸ்தூலகண்டாயநம:
ஓம் அக்ரகண்யாயநம:
ஓம் தீராயநம:
ஓம் வாகீசாயநம:
ஓம் சித்திதாயகாயநம:
ஓம் தூர்வாபில்வப்ரியாயநம:
ஓம் வியக்தமூர்த்தயேநம:
ஓம் அமூர்த்திமதேநம:
ஓம் பாவதத்துட்ஸ்வங்கேலனே
,, ஸ்துகமானசாயநம:
ஓம் சங்கரோஸ்தங்கேலனேஸ்து
,, கமானஸாயநம:
ஓம் சம்ஸ்தஜகதாதாயநம:
ஓம் ஹர்ஷாயநம:
ஓம் மூஷகவாஹனாயநம:
ஓம் ஹருஷ்டாயநம:
ஓம் துஷ்டாயநம:
ஓம் ப்ரஸன்னாத்மனேநம:
ஓம் சர்வசித்திப்ரதாயகாயநம:

என்று அஷ்டோத்தரசதநாமபூஜைசெய்து (வனஸ்பத்துப்பளம்தூபம்-தசாங்காகருஸம்யுதம் - க்ருஹாணமங்களதிவ்யம்மயாதத்தம்" விநாயக ஸ்ரீஉமாசுதாயநம: தூபம்சமர்ப்பயாமி க்ருதாக்தவர்த்திசம்யுத்தம் தீபஞ் சர்வப்ரகாசகம் க்ருஹாணமயாதத்தம் தேசோராசே ஜகத்பதே, ஸ்ரீருத்ரப்ரியாயநம: தீபஞ்சமர்ப்பயாமி அன்னைஸ்சதுர்விதைஸ்வாதுரசைஷட்பிஸமன்விதம்-பக்தியாநிவேதிதம்தேவா நைவேத்யம்ப்ரதிக்ருஹ்யதாம். போஜைர்நாநாவிதைர்யுக்தோ நானேமோதகான் க்ருதபாசிதான் - க்ருஹாணவிக்னராஜேந்த்ர சர்வகார்யார்த்த சித்த





யே ஸ்ரீவிக்னநாசினேநம: நைவேத்யம்சமர்ப்பயாமி பலானீ மானிரப் யாணிஸ், காமிதார்தவாக்ர,த-ஹேனமேசபலாவாப்தி, பலேசன் மவிச யன்மணி ஸ்ரீசங்கடநாசினேநம: பூர்ணபலசமர்ப்பணம் சமர்ப்பயாமி பூகிபலசமாயுக்தம நாகவல்லீதளைர்யுதம் கற்பூரசூர்ணசம்யுக்தம் தாம் பூலம ப்ரதிக்ருஹ்ஹ நாம் ஸ்ரீசித்திவிநாயகாயநம! தாம்பூலம்சமர்ப்பயா மி பூசாபல சம்ருத்யர்த்தம். ஸ்வர்ணபுஷ்பம் மயேஸ்வர - ஸ்தாபிதம் தேனமேப்ரீத்யை பூர்ணக்மருமனோரதான். ஸ்ரீவிக்கினேசாயநம: ஸ்வ ர்ணபுஷ்பம் சமர்ப்பயாமி) என்று தூபம்-தீபம்-நைவேத்யம்-பூர்ணபல சமர்ப்பிதம் தாம்பூலம் ஸ்வர்ணபுஷ்பம் என்னு மிவைகளைக்கொடுத்து

ஓம் கணாதிபாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் உமாபுத்ராயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் அகநாசினேநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் ஏகதந்தாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் இபவக்த்ராயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் மூஷகவாஹனாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் விநாயகாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் ஈசபுத்ராயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் ஸர்வசித்திப்ரதாயகாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் குமாரகுரவேநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் ஸர்வசங்கடநாசனாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி

என்று இப்பதினொரு நாமங்களாற் றூர்வை யருச்சனைசெய்து (கணாதிபநமோஸ்தேஸ்து உமாபுத்ராசஜானனு ஏகதந்தேபவக்த்ரேதி ததாமூஷகவாஹன விநாயகேஸ்புத்ரேதி சர்வசித்திப்ரதாயக குமாரகு ரவேதுப்யம் சர்வசங்கடநாசன இதயேகாத சதூர்வாயுக்மபூஜாம்சமர் ப்பயாமி.

என்று திபானஞ்செய்து,

ஓம் கணேசாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் வக்ரதுண்டாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் உமாபுத்ராயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் விக்னராசாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் கௌரிமலசமுத்பவாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் ஏகிதுயேயாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் சுந்தகுணபநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி



ஓம் மகாகாயாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் சித்திராயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் மகோதராயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் கஜவக்த்ராயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் பீமாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் பரசுதாரிணேநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் சரிகும்பாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் விஸ்வமூர்த்தயேநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் சித்திகணேசாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் உக்ரதேஜசேலம்போதராயநம தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் காமதாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் விக்னேஸ்வராயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் சீமுகாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி
ஓம் சக்திசமயுக்தாயநம: தூர்வாயுக்மம்சமர்ப்பயாமி

என்று மீட்டும் இவ்விருபத்தொருநாமங்களாற் றூர்வையருச்சனை செய்து (கணேசோவக்ரதுண்டஸ்ச உமாபுத்ரஸ்த்தைவச விக்னராசா காமதஸ்சவிக்னேஸ்வரயிதீஸ்மூர்தா சீவமுதஸ்சக்திசம்யுக்தோ சௌரீமலஸ் மத்பவா ஏசிந்யேயஸ்ச சுத்தகுணே மகாகாய யிதீஸ்மூர்தா கதிஸ்சசித்திதா ப்ரோகதோ மகோதராயிதீஸ்மூர்தா கஜவக்த்ரஸ்தபீமஸ்ச ததாபரசுதார்யபி சரிகும்போவிஸ்வமூர்த்தி உக்ரதேஜாஸ்ததைவச லம்போதரஸ்தத்சித்தி கணேசச்சைகவிம்சதி இத்யேவிம்சதி தூர்வாயுக்மம்பூஜாம்சமர்ப்பயாமி) என்று தியானஞ்செய்து (நாமானி ரம்ணீயானி - ஜபேதயிஸ்சபூஜயேத் கணேசாத்தஸ்ய வஸ்யந்தி சங்கடானிமகாந்த்யபி மகாசங்கடதத்கோஹம் கணேசசரணம்கதம் தஸ்மான்மனோரதம்பூர்ணம் குருவிஸ்வேஸ்ப்ராயா தஸ்வர்ணமயம் புஷ்பம் விக்னேசாயநிவதயேத் ஸ்ரீகணேசாயநம: நைவேத்யம் சமர்ப்பயாமி கணதிபநமஸ்தேஸ்துசத்யஞானப்ரகாசக நீராஞ்சனம் ப்ரதாஸ்யாதேஜோராஜோநமோஸ்துதேஸ்ரீகணதிபாயநம: உத்தரநீராஞ்சனம் சமர்ப்பயாமி-யானிகானிசபாபாணி ஜன்மாந்தரக்ருதானிசதானிதானிவிநஸ்யம்திப்ரதட்சணபதேபதே பாபோஹம் பாபகர்மாஹம் பாபாத்மா பாபசம்பவாதராஹிமாங்-க்ருபயாதேவ-சரணாகதவஸ்தல அன்யதாசரணம்நாஸ்தி தவமேசரணம்மம தஸ்மாத்காருண்ய பாவேன-ரட்சரட்ச கணதிப-ஸ்ரீகணதிபட்சாயநம: ப்ரதட்சணம்சமர்ப்பயாமி நமோஸ்து

தேவதேவேச ஐக்தானும் பயப்பிரதாவிக்னானாம் நாசகர்த்ரே தே - அராத்மஜாயமோநம: ஸ்ரீவிக்னநாசினே நம: நமஸ்காராம் சமர்ப்பயாமி வக்ரதுண்ட மகாகாயசூரியகோடி சமப்ரப நிர்விக்னம்குருமேதேவசர்வகார்யேஷுசர்வதா ஸ்ரீவக்ரதுண்டாயநம: ப்ரார்த்தனம் சமர்ப்பயாமி. என்று நைவேத்யம் - உத்தராநீராஞ்சனம் - ப்ரதக்ஷணம் நமஸ்காரம் ப்ரார்த்தனம்-இவைகளைச்செய்து கணேஸ்வரநமஸ்துப்யம் சர்வஸித்திப்ரதாயக-சங்கஷ்டம்ஹரமேதேவ - க்ருஹாணார்க்யம் நமோஸ்துதே ஸ்ரீகணேசாயநம: இதமர்க்யம்சமர்ப்பயாமி க்ருஷ்ணபக்ஷேசதுர்த்யாம்து பூஜிதோஸிவிதூதயே - க்ஷிப்ரப்ரசதாதேவேதேவ க்ருஹாணார்க்யம் நமோஸ்துதே ஸ்ரீவிக்னநாசினேநம: இதமர்க்யம் சமர்ப்பயாமி. திதீனாமுத்தமேதேவி கணேசப்ரியவல்லபே சங்கஷ்டம் ஹரமேதேவி க்ருஹாணார்க்யம்நமோஸ்துதே ஸ்ரீசதுர்த்திதேவ்யைநம: இதமர்க்யம் சமர்ப்பயாமி. என்று அர்க்கியங்கொடுத்து க்ஷீரோதார்ணவசம்பூத - லட்சுமிபந்தோநிசாகர-க்ருஹாணார்க்யம்மயாதத்தம் ரோஹிண்யாசஹித:சசிந். ரோஹிணீஸஹிதசந்த்ராயநம: இதமர்க்யம்சமர்ப்பயாமி. யோமாயத்விசவர்யாய தேவராசாயசின்னே - ரோஹிணீசஹிதாயர்ப்பி க்ருஹாணார்க்யம்நமோஸ்துதே. ரோஹிணீஸஹிதசந்த்ராயநம: இதமர்க்யம் சமர்ப்பயாமி. ககனார்ணவமாணிக்ய க்ஷீராப்திமதனோத்பவ பாபாசித்திகந்தாய சோமராஜநமோஸ்துதே. ஸ்ரீசந்த்ராயநம:நமஸ்காரம்சமர்ப்பயாமி. என்று சந்த்ரபூசைசெய்து மோதகாம்ஸ்தபலாம்ஸ்தஸ்யபரிபூர்த்தயே ஸ்ரீசந்த்ராயநம: உபாயதானம் சமர்ப்பயாமி ப்ரதிமாங்குரவேதத்யாதாசார்யயசதக்ஷிணம் வஸ்த்ரம்கும்பசமாயுக்தா மாதௌளமந்த்ரமிமம் படேத் கணேஸ்வரப்ரசாதேன மமசந்துமனோரதா துப்யம்சம்பாதே தேவப்ரதிமாம்துகஜானன இஷ்டகாமார்த்தஸித்யர்த்தம புத்ரபௌத்ரப்ரவர்த்தன கணேசப்ரீதயே விக்னநாசவிநாயக தவப்ரீதிப்ரதானேனப்ரசன்னோபவசர்வதா ஸ்ரீசந்த்ராயநம: கலசப்ரதிமாதானம் சமர்ப்பயாமி.

என்று ஆசிரியபூசைசெய்து அவருக்குத்தக்கபடி தானங்கொடுத்துப் பூசைசெய்த கலசமுதலியவைகளையும் அவருக்களித்து வேதப்பிராமணர்கட்குப் பதினொரு பலகாரங்களையும் அவைக்கேற்ற பொருள்களையுந் தானஞ்செய்து யதாப்பிரகாரந் தனது அந்தணமனைவியைச்சேர்ந்து அநாசாரமிகின்றிருக்கின்றகாலையில், தனது மனைவியாகிய சுகந்தையென்பவள் கருப்பமுற்றுப் பத்தாந்திங்களில் ஒருபுத்திரனைப்பெற்ற

னள். அப்புத்திரனுக்குக் காலுங்கையுமில்லாமல் ஏனைய அவயவங்களெல்லாம் மிக்க அழகுவாய்ந்திருப்பக்கண்டு சுகந்தை மனங்கலங்கி ஐயோ! எமதுபங்கிற்றானா இப்பங்கமானபிள்ளை வரவேண்டுமென்று துக்கித்திருந்தனள். அதை அரசன் கேள்வியுற்றுத் தானும்அப்புதல்வனைவந்துபார்த்து அதிகதுயரங்கொண்டு தன்மனையைத் தானேதேற்றிப், பெண்ணே! இப்புத்திரன் விநாயகப்பெருமானுடையவிரதபலத்தினாலுண்டானவனாதலால் இவனுக்குண்டாகிய உடற்குறையை அவ்விநாயகப்பெருமானேவிலக்கியருளுவர். நீயொன்றற்கும் அஞ்சலையென்று தனது மனைவிக்குத் தேறுதல்சொல்லிப் பின்னர் அக்குழந்தைக்குச் சாதகன்மாதிகளைச்செய்து வேதப்பிராமணர்கட்கெல்லாம் இரத்தினங்களையும் பொன்னையும் மழைபோலச்சொரிந்து கார்த்தவீரியனென்று நாமகரணஞ் சாற்றினன். இப்பால் கார்த்தவீரியனுக்குப் பன்னிரண்டு வருடமானபோது தேத்தாத்திரியமுனிவர் தற்செயலாய் கிருதவீரியனிடத்தில்வர அவரை யவ்வரசன் எதிர்கொண்டுபணிந்து ஓராதனத்திலிருத்தி, சுவாமி! அடியேன்பலநாள் அரியதவங்களைச்செய்து ஓர் புதல்வனைப்பெற்றேன். அவனோ பகைவர்களெல்லாங்கண்டு நகைக்கும்படியாகக் காலுங்கையுமில்லாதவனாய்த் தோன்றினன். யானியற்றிவந்ததவங்களில் குற்றம்யாதாயினுமுண்டோ அறிந்திலேன். வெகுநாள்புத்திரனில்லாமல் வருந்தினேன். பின்னர் ஓர்புத்திரனைப்பயந்தும் என்மனக்கிலேசந்தீர்ந்தேனல்லேன். என்னசெய்குவேன்? அடியேன்மீது தேவரீர் கிருபைவைத்து அப்புதல்வனுக்கு முடம் நீங்குமுபாயமொன்றை யநுக்கிரகித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன்.

அதற்குத்தேத்தாத்திரியமுனிவர் மனமிரங்கி, அரசனே! யாம் உனது புதல்வனைக் காணவேண்டியே இங்குவந்தோம், ஆதலால் - அவனை விரைவிற்கொண்டுவரக் கட்டளையென்றுசொல்ல, அவ்வாறே அப்புதல்வனைக் கொண்டுவந்து எதிரில்விட, அவனை அம்முனிபுங்கவர் பார்த்தருளி, அரசனே! நீ - இப்புதல்வனைக்குறித்து யாதொரு துயரமுங் கொள்ளவேண்டியதில்லை, இவன் இவ்வுலகத்திற்கெல்லாஞ் சக்கிரேஸ்வரனா யிருப்பனென்றுசொல்லி, அப்புதல்வனுக்குத் தீக்ஷை செய்து, விநாயகமூர்த்தியினுடைய ஏகாட்சரமந்திரத்தை யுபதேசித்துப்போயினர். பின்னர் கார்த்தவீரியன் தன்தந்தையாகிய கிருதவீரியனைப்பார்த்து, பிதாவே! யான் தேத்தாத்திரியமுனிவருடகே

சித்தமந்திரத்தை யருட்டித்து வரம்பெறுதற்கு என்னை வனத்திற் கொண்டுபோய் விடவேணுமென்று கேட்டனன். அவ்வாறே அரசன் சகலபரிசனங்களையுங் கூட்டி, அனுப்பத்தக்க வரிசையோடும் அவனை வனத்திலனுப்பினன். இப்பால் அப்புத்திரன் வனத்திலிருந்து, அன்னபானாதிகளை நீத்துக், கணேசமூர்த்தியைக் கருத்திலிருத்தி, ஐம்பொறிகளையு நிக்கிரகித்து ஒப்பற்ற ஏகாட்சரமந்திரத்தை இடைவிடாது தியானித்துவந்தனன். இவ்வாறு பன்னிரண்டு வருடஞ் சென்றபின்பு, அவன் செய்துவருகின்ற தவத்திற்கு விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து, அவ்விடத்திலுள்ள ஓர்தடாகத்திலிடமாக அளவற்றதேவர்களோடுந் தோன்றி பிரத்தியக்ஷமாயினர். உடனே - தானெழுந்து வணங்கக்கூடாமையால், தனது மனத்தாலனந்தமுறை வணங்கினன். அதற்கு விநாயகப்பெருமான் சந்தோஷித்து, அன்பனே - நீகருதிய வரங்களைக் கேளென்று திருவாய்மலர்தலும், சுவாமீ! முடவனாகிகிய எனது முகத்தைநோக்கி முற்றினுங்காத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன். உடனே - விநாயகமூர்த்தி அவனுக்கு இரண்டுகால்களையும் ஆயிரங் கைகளையுந்தந்து, அதற்கேற்ற வலிமையையுங்கொடுத்துக் கரந்தருளினர். பின்னர் அவ்விநாயகமூர்த்தியுடன் வந்திருந்த பிரமன் முதலிய எல்லாத்தேவர்களும் அக்கார்த்தவீரியனைப்பார்த்து, ஓ விரதசீலனே நீ - ஒரு கற்பகாலம்வரையில் ஆயுள்பெற்றிருந்து யாவர்க்கும் இதமேசெய்து எதிர்த்துவருகின்ற சத்துருக்களையெல்லாம் ஐந்நூறுபாணங்களினால் செயித்து வாழ்ந்திருக்கக்கடவையென்று அநுக்கிரகித்தார்கள். இப்பால் தனக்குக் கணேசமூர்த்தி வரங்கொடுத்ததனுமுன்னமே, இரண்டுகால்களும் ஆயிரங்கைகளுமுண்டாகத்தன் னிகர்த்தனுடைய கிருபையை நினைந்துநினைந்து, மனமுருகி, ஆனந்தக்கண்ணீர்சொரிந்து, முடிவற்ற அன்பினால் அவர்கரந்தருளிய திசையைப்பலமுறைவணங்கி, சிற்பசாத்திரவிதிப்படி பொன்னினாலும் மணியினாலும் ஓராலயஞ்சமைத்து சந்திர சடாதரமூர்த்தியாகிய விநாயகப்பெருமான் தனக்குப்பவளவொளியோடு மெழுந்தருளிக் காட்சிகொடுத்தமையால், பவளத்தினால் ஓர் மூர்த்தியைச்செய்து அம்மூர்த்தியை அவ்வாலயத்திற் ஸ்தாபித்துப் பூசித்துவந்தனன். அம்மூர்த்தி பவளத்தினாற் செய்திருக்கின்றமையால் அதற்குப்பிரவாள விநாயகரென்றும் அவ்வனத்திற்குப் பிரவாளவனமென்றும் பெயர் வழங்குகின்றது. அப்பிரவாள விநாயகருடைய பெருமைகளை முழுவதும் யாவராற்பே

சக்கூடும். பின்னொருகாலத்தில் ஆதிசேடன் பூபாரம் பொறுக்கும்படி அவ்வனத்தின்கண் வந்து வந்தித்தனன். அதற்கவர் கிருபைகூர்ந்து அவன் பூபாரம்பொறுக்கும்படி வரங்கொடுத்தருளினர். பின்னர் ஆதிசேடன் அவ்வனத்தின்கண் ஓர்நகரமுண்டாக்கி அதற்குத் தரணிதரநகரமென்று திருநாமமிட்டுத் தன்னையாட்கொண்ட பிரவாளவிநாயகமூர்த்திக்குத் தரணிதரவிநாயகரென்று மற்றொரு திருநாமமுஞ்சாத்தினன். இராவணனும் அம்மூர்த்தியைப் பூசித்து இலங்காதிபத்தியம் பெற்றனன். பஞ்சபாண்டவர்களும் அவரையேபூசித்துத் துரியோதனாதிகளைச்செயித்து அரசாட்சிபெற்றனர். அரசனே-இத்தன்மைத்தான சிறப்பினைவாய்ந்த சங்கடசதுர்த்தி விரதஞ்செய்தபலனிலே, ஒருநாள் விரதபலனை யாராகிலும் நமதுகையில் தத்தஞ்செய்தால் இவ்விமானம் விண்ணிலெழும்பும் என்று தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொல்லினன்.

௩௫-வது கிருதவீரிய னுபாசித்தபடலம் முற்றிற்று.

உ

கணபதி துணை.

முப்பத்தாறாவது

## சூரசேனன் உபாசித்தபடலம்.

காரமீக்கொடங் காரகசதுர்த்தியைநாடி
வாரமார்சுகந்தைப் பெருங்காதலன்வந்தித்
தீரசிந்தையனொரு சேயுறவிதுமேற்
சூரசேனன் மற்றதையுபாசித்ததுஞ்சொல்வாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே! கிருதவீரியமகாராசன் விநாயகமூர்த்தியினுடைய சங்கடசதுர்த்தி விரதத்தையனுட்டித்துக் கார்த்தவீரியனைப் பெற்றகாரணத்தைச்சொன்னோம். இப்பால் சூரசேனமகாராசனுபாசித்ததிறத்தினைச் சொல்லுவோங்கேட்பீராக; அச்சூரசேனமகாராசன் தேவேந்திரனைப் பணிந்தெழுந்து, ஓ-சுரலோக சக்கிரேஸ்வரரே! அங்காரகசதுர்த்தி விரதத்தின் மகிமையையும் அதற்கு வன்னி

மந்தாரை இவைகளின் பெருமையினையும் அடியேற்கு அங்கைநெல்லிக்கனிபோல அறிவித்தீர். அவையெல்லாம் ஐயமில்லாமல் அறிந்துகொண்டேன். இத்தன்மைத்தான மேலாகிய விரதத்தை இம்மூவுலகின்கண் ஒருவருஞ்சொல்ல யான்கேட்டதில்லை. தேவரீர் அடியேன்மீது கிருபைகூர்ந்து திருவாய்மலர்ந்தருளினீர். அதற் கடியேன்புரியுங் கைம்மா றென்னவிருக்கின்றது? என்று பலமுறை உபசரித்து எவ்வாறேனும் அங்காரகசதுர்த்தியை யனுட்டிக்கின்ற ஓர் விரதியைக் கண்டுபிடித்து இவ்விமானத்தை விண்ணிலெழுப்பவேண்டுமென்று உத்தேசித்து அவ்விரதியைக் கண்டுபிடிக்குமாறு நாற்றிசைகளினுந் தூதுவரை யேவினன். அத்தூதுவரும் அவ்வாறே சென்று வீடுகடோறும் விசாரித்துக்கொண்டு வருகின்றபோது மற்றொரு விமானம் ஆகாயத்தினின்றிழிந்து பூமியிலிறங்கக்கண்டு அதன்வரவை யறிவோமென்று அதனிற்சென்றனர். பின்னர் அவ்விமானத்துளிருந்த தேவகணங்கள் அந்நகரத்திலிருந்த ஓர் புலைச்சிக்குத் தெய்வசரீரங்கொடுத்து அவளை ஆடல்பாடல் முதலிய சிறப்புகளோடு அவ்விமானத்தி லேற்றக்கண்டு இதென்ன அற்புதமென்று ஆச்சரியங்கொண்டவர்களாய் உடனே அவர்களைப்பணிந்தெழுந்து, ஓ - கணநாதர்களே! இவள் இப்பிறவியிற் புலைச்சியாயிருந்தனள் எவ்வளவேனுந் தருமமென்பதைச் செய்தறியாள். முற்பிறவியில் யாதேனுஞ் செய்திருக்கின்றனளோ அதனையறிகிலேம். அறிவுடைத்தோர்கட்குங் கிடைத்தற்கருமையதாகிய இத்தெய்வவிமானத்தை இவளுக்குத் தந்தீர்களாதலால் இவளது புண்ணியபலனை இன்னதென்று அடியேங்கட்குத் தெரிவித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குத் தேவகணங்களிசைந்து சொல்லுவார். வங்காளதேயத்தில் அரசாட்சிசெய்துவந்த சாரங்கதரனென்னும் ஓரரசனிருந்தான் அவனுக்குச் சுந்தரியென்கின்ற ஒருபுதல்வியிருந்தனள். அவள் சித்திரனென்னும் அரசகுமாரனுக்கு மனையாட்டியாயினள். ஆயினும் - அவளது இசைக்ஞானத்தினாலும் மருண்டபார்வையினாலும் உருவலட்சணத்தினாலும் தேவர்களாயினும் அவளுக்கெதிர்ப்படுவோர்களாயின் உடனே மயங்காமற் செல்கின்றதில்லை. இவளுங் கற்பென்பதைக் கனவிலுங் கண்டறியாளாகி இவ்வகை யொழுக்கத்தை நீத்துத் தன்னை விழைந்தோர்களையெல்லாந் தானும் விழைந்து ஒருவர்க்கொருவர் தெரியாவகையாக் கலந்திருந்தனள். அதை [illegible]ட்டியாய் விவாகஞ்செய்த அவள்கணவன் அறிந்து, அதனைத்

றவளே-எனது குலத்தைக்கெடுப்பதற்காகவா எனக்கு வந்து சேர்ந்தனை? இனி இல்லைவிடுத்து வெளியிற்செல்லுவையெனில் உன்றலையை உனக்கே இரையாக்குவனென்று கோபித்து அவளைக் காவலில் வைத்தனன். அவ்வாறே சிலநாள் அடங்கி யிருப்பவள்போலிருந்து மனதிற்கபடங்கொண்டு தனது கணவன் நித்திரைசெய்யுஞ் சமயத்தில் வாளைக்கொண்டு அவனுயிரைமாய்த்துப் பரபுருடனிடத்திற்போய்ச் சுகித்திருந்தனள். அதைக்காவலாளர்கள் அறிந்து சித்திராசனைக் கொலைசெய்தவள் இவளேயென்று தீர்மானித்து அவள்கைகளைக்கட்டி யிழுத்துக்கொண்டுசென்று அரசனுத்தரவின்படி யவளைச் சேதித்தனர். உடனே அவளை யமதூதர்கொண்டுபோய் அளவற்றகாலங்கொடிய நரகங்களிற் செலுத்தி வதைசெய்து பின்னர் இந்நகரத்திலுள்ள சேரியிலே புலைச்சியாய்ப் பிறக்கும்படி விடுத்தார்கள். இவள் முன்ஜெனமுழுவதும் பாவமேசெய்தனளல்லாமல் ஓர் தினையளவும் புண்ணியஞ்செய்ததில்லை. இச்சனனத்தில் இதுகாறும் ஒரு புண்ணியமுஞ்செய்தறியாள். இவள் இத்தன்மைத்தான மகாபாதகியா யிருந்தபோதிலும், இன்றுதயகாலத்திற் கள்ளருந்திப் பகலெல்லாம் அதிகவெறியினாற் றலையெடுக்கமாட்டாதுகிடந்து பொழுதுபோனபின்பு சிறிது வெறிநீங்கிப் பசியதிகரிக்க அதனால் இரைதேடி ஓர்வீட்டினருகிற்சென்றனள். அவ்வாறு செல்லுகையில் இத்தினம் விநாயகசதுர்த்தியாதலால் அச்சதுர்த்தி விரதத்தை யவ்வீட்டி லுள்ளோர்கள் அநுட்டித்துக் கணேசமூர்த்திக்கு நிவேதித்த பதார்த்தங்களிற் றாங்கள்புசித்து மிருந்த சேடத்தைத் தெருவிற்கொண்டுவந்து வீசினார்கள். உடனே இப்புலைச்சியானவள் அதனையெடுத்துத் தனதுபசிதீரப் புசித்தனள். மேலு மவ்வீட்டி லுள்ளோர்கள் கணபதி கணபதி கணபதியென்று துதிசெய்தார்கள். அதனைக்கேட்ட தானுங் கணபதி கணபதி கணபதியென்று முக்காற்கூறினள். இவள் சங்கடசதுர்த்தியிற் றமது திருநாமத்தைச் சொன்னாளென்று விநாயகமூர்த்திக் கிருபைகூர்ந்து இவளை அன்புடன் கொண்டுவருமாறு எங்களுக்காக்கியாபித்தனர். அவ்வாறே யாங்கள்வந்து இவளுக்குத் தெய்வசரீரந்தந்து விமானத்திலேற்றினோம். இதுதான்புலைச்சியை விடுதலைசெய்தகாரணமென்று தேவகணங்கள்கூற அதைக்கேட்டதூதர்கள் மீட்டும் அவர்களைத்தொழுதெழுந்து, ஓ கணத்தலைவர்களே! இந்திரன் ஆகாயத்திற்செல்கின்றபோது ஓர் கோபாளியினுடையபார்வையால் அவனுடையவிமானங் கதித

ப்பி இப்பட்டணத்திலிறங்கியது. அம்முதுமீட்டும் ஆகாயத்திலெழும்பும்படியாக நீங்கள் காட்சிகொடுத்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தார்கள். அதற்குத் தேவகணங்களிசையாமல். எமதுகர்த்தாவினது கட்டளையாதோ அதனை யாங்கள் செய்துவருவதேயன்றி எங்கள்சுதாவில் மற்றொருகாரியமுஞ் செய்யோமென்றுசொல்லித் திடலென்றெழுந்து ஆகாயமார்க்கமாக விமானத்தைச் செலுத்திக்கொண்டு போனார்கள்.

இப்பால் - சிறகுற்றெழுந்த மலைபோல் ஆகாயவீதியைக்கிழித்துச் செல்கின்ற அவ்விமானத்தில் புலைச்சரீரமொழிந்து தெய்வசரீரம்பெற்றிருக்கின்றவளது பார்வையானது இந்திரனுடைய விமானத்தின்மீதுபட உடனே ஆண்டவனுடைய திருக்கண்ணோக்கத்தால் ஆணவமலத்தினின்று மெழுந்தவர்கள்போல அவ்விமானமும் எழும்பி ஆகாயமார்க்கத்திற் சென்றது. பின்னர் அத்தூதர்கள் தங்களரசனிடத்திற் சென்று பணிந்தெழுந்து ஆகாயத்திலிருந்து மற்றொருவிமானம்வந்ததையும் அதுமீட்டுந் தனது கதியிற்சென்றதையும் அதனால் இந்திரவிமானம் விண்ணிலெழுந்ததையும் விவரமாகச் சொல்ல. அவையனைத்தையும் அரசன்கேட்டு அவ்விரண்டுவிமானத்தையுஞ் சாஷ்டாங்கமாகத் தொழுதெழுந்து பிறவித்தரித்திரனொருவன் பெருநிதியங்கிடைத்ததுபோல ஆனந்தமுற்றுத் தனது அரண்மனையிற்சென்று வசிட்டமுனிவரையழைத்து மாசிமாதம் அமாவாசையிலொருகின்ற அங்காரக சதுர்த்தியில் கணேசமூர்த்தியை பஞ்சோபசாரத்தால் பூசித்து வேதாகமமுறைமைப்படி விரதமநுட்டித்து மாதமாதம் வருகின்ற சதுர்த்திதோறும் இடையிடாது பூசித்துவாராநின்றானையில், விநாயகமூர்த்தியினுடைய பெருங்கருணையால் தேவகணங்கள் ஓர் விமானத்தைக் கொண்டுவந்து அவ்வரசனெதிரில் நிறுத்தினார்கள். உடனே அரசன் ஆனந்தங்கொண்டு நன்றேயென்று அவ்விமானத்தருகில்வந்து மும்முறைவலஞ்செய்து சாஷ்டாங்கமாகப்பணிந்து நின்றனன். அவனைத் தேவகணங்கணோக்கி, அரசனே! உன்னையழைத்துவருமாறு கணேசமூர்த்தி எங்கட் காக்ஞாபித்திருக்கின்றாராதலால் விரைவில் இவ்விமானத்திலேறவேண்டுமென்று சொன்னார்கள். அதனையரசன்செவிக்கமுதாகக்கேட்டு, ஓ கணநாதர்களே! இவ்வூரிலுள்ளோர் ஒருசனைப் போலத்துயர்கைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டார்களாதலால் அவர்களையுமென்னோடு அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று இரக்

தனன். அதற்கு உனதிஷ்டப்படியே செய்யலாமென்று விடைகொடுத்தனர். உடனே அந்நகரிலுள்ளவர்களெல்லாம் அவ்விமானத்தின்கணேறினர். சூரசேனமகாராசன் தனது சுற்றத்தினர்முதலிய சகலபரிசனங்களோடுமேறினன். முன்னர் நகரத்தார் வந்தபோது தொழுநோய்கொண்டிருக்கின்ற ஓர் வணிகனுமேறினன். அவ்வணிகன் மகாபாவியாதலால் அவ்விமானம் பூமியைவிட்டெழாமல் முன்னர் இந்திரவிமானம் எவ்வாறழுந்தியிருந்ததோ அவ்வாறிருந்தது. அதன்காரணத்தைக் கணநாதர்களுணர்ந்து, அரசனே! இவ்விமானத்தி லேறியிருக்கின்ற சனங்களிற் குட்டநோய்கொண்ட ஒருவணிகன் இருக்கின்றான் அதனால் இவ்விமானஞ் சற்றும் எழவில்லை அவ்வணிகன்முற்பிறவியிற் பெரும்பாதகஞ்செய்தவனாதலால் இப்பிறவியில் இக்குட்டநோய்க்கு இரையாயிருக்கின்றனன் அவனது வரலாற்றினையுஞ் சொல்லுவோங் கேட்பாயாக.

சவுடதேயத்திலே தவசீலனென்னொருவேதியரிருந்தார். அவருக்குச் சானகியென்னு மனைவியிருந்தனள். இவ்விருவருஞ்சுகித்து வாழ்கின்றநாளையில் இவர்கட்கு ஓர் புத்திரனுண்டாயினன். அப்புத்திரனுக்குச் சாதகம்பார்த்துப் புதனென்னு நாமமிட்டனர். அவனும் அப்பெயருக்கேற்றபடி விதிவளர்ந்து வேதக்களையோதிக் கலைகளை யாராய்ந்து அறிஞர்களெல்லாம் புகழத்தக்க மேதையாயினன். இப்பால் அவன் மணப்பருவமுற்றகாலையில் அவன் தாய்தந்தையர் தங்கள்வருணத்திற்கேற்ற குலங்கோத்திரமுதலானவைகளைவிசாரித்துச், கை-கால்-உதடு-நா-தோள்-தனம்-முதலிய எல்லா அவயவங்களினுந் தெய்வஸ்திரீகளையும் ஒப்பிடக்கூடாத வனப்பினைவாய்ந்த சாவித்திரியென்பவளை விவாகஞ்செய்துவைத்தார்கள். அவளோடு அப்புதனென்பவன் கூடி வாழ்கின்றநாளையில் ஊழ்வினைவயத்தனாய்ப் பரத்தையிடஞ்சென்று பரிவுற்றிருந்து கள்வெறிகொண்டவன்போல மதிமயங்கி அவளிடத்திற்றானே புசித்தலையுஞ் செய்திருந்தனன். அவனிவ்வாறிருக்க அவன்தாய்தந்தையரவனைக் காணாதுவருந்தி வெளியிற்சென்றுதேடுவதற்கும் தமது விருத்தாப்பியதசையினால் கூடாதவர்களாகிஆகாரத்தினையின்றி மிகவும் ஏக்கமுற்றிருந்து சின்னாள்சென்றபின்பு இவனு நமதுபுதல்வன்வரக்காணோமே எங்கு எவ்வாறுயினனோவென்று திகைத்து ஓர்நாள் அவன் தந்தையாகிய தவசீலர் தடியூன்றிக்கொண்டு மெல்லமெல்ல வீதியின்வழியாய் நடந்து தேடிக்கொண்டு செல்லு

கையில் எதிரில் வீமனென்பவன் வரக்கண்டு அவனைத் தமதுகுமார னைக்குறித்து விசாரித்தனர். அவன் உமதுகுமாரன் வேசையாசை யில் மூழ்கியிருக்கின்றனனென்று சொல்ல அது கேட்டவுடன்மனமு ழுங்கிப் பின்னும் புத்திரசோபம்விடாமையால் அவ்வேசையிருப்பிட த்திற்குத் தள்ளாடிச்சென்று அவள் வீட்டின் தலைவாயிலில்நின்று த னதுபுத்திரனைக்கூவி, மைந்தனே! பொய்யை மெய்யாகக்கொண்டிரு க்கின்ற வேசையர் மையலில் விழலாமா நின்னைப்போன்ற அறிவினர் களும் இவ்வுலகின்கணுண்டா நல்லொழுக்கங்களையெல்லாம் கைவிட் டனை நான்மறையோதுதலுந் தவிர்த்தனை அழகுவாய்ந்த குலஸ்திரீ யைமறந்தனை நமது வருணாசிரமத்தினுக்கேற்ற எல்லாச்சன்மார்க்க ங்களையு மொழித்தனை - ஆயினும் உன்னை அருமையாயீன்றெடுத்த எங்களையும் விட்டிருக்கலாமோ அப்பா உனதுமனம் மரமோ கல்லோ இரும்போ பேதைமனத்தையுடைய ஸ்திரீகளும் வயதின் மூத்தவர் களை விட்டுப்பிரிதல் தருமமன்றென்று அவர்கள் சமீபத்திற்றானே காத்திருப்பார்கள் சகலநூல்களையும் உணர்ந்த நீ இவ் விருத்தாப்பிய காலத்தில் எங்களை விட்டிருப்பது தருமமா இனியேனும் வீட்டில்வ ந்திருவென்று இவ்வாறு அனந்தமுறை மிகுந்த பரிவோடுங்கேட்டு க்கொண்டனர். அதற்கப்பாதகன் கோபித்தெழுந்து எனக்குப் புத்தி கூறவா இங்குவந்தனையென்று கோபித்துத் தனது உரங்கொண்டம ட்டும் அவர் தாடையிலறைந்தனன். உடனே அவர் சுபாவத்திற்று னே விருத்தாப்பியதசையையுண்டாயிருந்ததன்றிப் புத்திரசோபத் தினாலுங் கிரமமான புசிப்பில்லாமையினாலும் வாடியிருந்தமையால் அவனறைந்ததைத் தாளமாட்டாது ஒருசார்புமின்றி இறந்தனர். பின் னர் அக்கொடும்பாவி இதுதானுமக்குச் சரியான தண்டனை என்றுகூ றி யாவர்க்குந்தெரியாதபடி நிலத்தைக்கீறி அவரையடக்கஞ்செய்தன ன். இப்பால் அப்பாவி அவரது பொருளையெல்லாங் கொண்டுவந்து வேசைக்களிப்போமென்று நினைத்துத் தனது வீட்டிற்குச்செல்ல அ வன் தாயானவள் அவனைக்கண்டு கண்ணாவென்று தழுவிக்கொண்டு அப்பா நீ இதுகாறும் எங்குபோயிருந்தனை போகின்றபோது இங்கு போகின்றேனென்று சொல்லிவிட்டுப்போனால் உனது வாய்முத்தஞ் சிந்திப்போமோ உன்தந்தை உன்னைக்காணாது ஆகாரநித்திரையற்று இரவும் பகலும் ஏக்கங்கொண்டு தனது தள்ளாமையோடும் உன்னைத் தேடிக்கொண்டு சென்றாரோ அவர் எங்குற்றாரோ தெரியவில்லையே



நீயவனை விரைவிற் கண்டுபிடித்து அழைத்துவாவென்று சொன்னான். அதனை அப்பாதகன்கேட்டு ஆ-ஆ! நன்றாயிருக்கின்றது போனவனை யழைத்துக்கொண்டு வருவதற்கா யானிங்கு வந்தனனென்று கோபித்து நமனைப்போல ஒரு தடிகொண்டு மொத்தினான். அதனால் அவனுயிரிழந்துவிழ அவ்விடத்திற்றானே ஓர்குப்பையை யகற்றி அவனைப் புதைத்துவிட்டனன்.

அதனை யவன்மனைவி கண்டு ஆ - என்னகாரியஞ் செய்தனை என்னகாரியஞ் செய்தனையென்று விலபித்து, ஐயோ என்றவர்களையுங் கொல்வாருண்டோ பழிபாவமென்றும் பார்த்திலையே பாதகையரின்பமே பெரிதாகப் பாவித்தனையே இதனை அரசனறிந்தால் இப்போதே கழுக்கரியுந் தண்டனைசெய்வானே நீ - அத்தண்டனையிற் பட்டு இறப்பையாயின் அப்பாதகத்தை யின்பத்தைத்தான் எவ்வாறு அநுபவிக்கவல்லை யாவரும் அஞ்சத்தக்க கொடுங் காரியத்தையல்லவோ செய்தனை ஐயையோ - இதற்கென்னசெய்வேன் என்று துக்கித்துப் பின்னும் அவனைநோக்கிச் சொல்லுவாள், இனி நீ கடைத்தேறிச் சுகத்தை யநுபவிக்கும்படியான மார்க்கத்தினைச் சொல்லுகின்றேன் அதை இனிமேலாயினுங் கேள் உனக்கு வேசையர் மீதிருந்த ஆசையிலே வீட்டிலுள்ள பாக்கியங்களையெல்லா மழித்தனை வயது முதிர்ந்த தாய்தந்தையையுமிழந்தனை இருக்கிறவீடு இன்றைக்கோ நாளைக்கோ நம்மைவிட்டு ஒழியப்போகின்றது இனிமேல் நாம் காட்டிற்போய்ப் பிழைக்கநேருமோ அல்லது நாட்டிற்போ யிரக்கநேருமோ இவையனைத்தையும் நீ எவ்வளவும் யோசித்தனையில்லை இவன்வேசையராசைகொண்டவனென்று அரசனறிவானாயின் உடனே தண்டனைவிதிப்பன் பின்னர் அத்தண்டனையை நீக்கிக்கொள்ளுமாறு பொருப்பினையொத்த பொருளிருந்தாலும் அவையனைத்தும் பொய்யையுடையவர் புகழ்போன்று நாசமாகும் இவ்வாறு திரவியங்களழிந்தபின்பு அவ்வேசை அவனை நாயினுங்கடையாக நினைத்துத் தனது குற்றேவலுக் காளாக்கிவைப்பளன்றி முன்போல இன்பந்தருவளோ வேசையரின்ப மநுபவித்தவிருல் சிலநாளைக்குள் உடலையும் உயிரையும் வாட்டும்படியான தீராநோய்வந்துசேரும் விவேகிகள் வெறுக்கத்தக்க குற்றங்களெல்லாம் இப்போது வந்ததுபோலவரும் அகத்தன்[illegible]கண்களைக் கூடும்

மின்போல் வார்க்கு அன்னந்தான்கிடைச்

அழகினாலும் கற்பினாலும் கலை

ன ஸ்திரீகளுமுண்டோ நீ உணர்வுறுதவண்ணம் அளவற்றபோகங்களை அப்பரத்தையர்போல வுனக்களிப்பேன் நீ என்னிடத்திற்றானே சதாகாலமும் இன்புற்றிருக்கலாம் மேலுங் கூடுவதற்கு விலக்காகச் சொல்லியிருக்கின்ற ஆனிமுதலிய நான்கு திங்களினும் அட்டமிமுதலிய பஞ்சபருவங்களினும் திக்கடோறுந் தீண்டுதற்குக் கூடாத மூன்று நாள்களினும் மற்றைந்தக்காலங்களினும் நீ புணரவேண்டுமென்றிச்சைகொள்ளில் உனதிச்சையின் வண்ணம் யானிசைவேனேயன்றி அதை மறுக்கவல்லனோ நீ என்னிடத்தி லெவ்வாறிருக்கினும் பழிபாவங்களில்லை அதனால் கீர்த்தியுமுண்டு மற்றொருவர் தலைவாயிலே மிதிக்கின் எல்லாப் பழிபாவங்களும் உடனே யுண்டு ஆதலா லிவையனைத்தையுந் தீர்க்காலோசனைசெய்து இனியேனும் கடைத்தேறு மார்க்கத்தை கடைப்பிடியாகக் கொள்ளுவை யென்று சொல்லலும், அதுகாறும் அப்பரதகன் உள்ளே அடங்காத கோபத்தினை யடைக்கிவைத்துக்கொண்டு மேலுக்கு உடன்பட்டுக் கேட்பவன்போலவிருந்து பின்பு சுபனைப்போலவெழுந்து மெல்லமெல்ல எனக்கா புத்திசொல்லவந்தனையென்று பூமியில் விழும்படி அவளைத்தள்ளி உதைத்துக்கொண்றனன். பின்னர் அப்பரதகன் இக்காரணத்தை அரசனறியின் வருத்துவனென்று பயந்து வீட்டிலுள்ள ஆபரணமுதலிய எல்லாப்பொருள்களையு மெடுத்துக்கொண்டு அன்றிரவிற்றானே அந்நகரத்தைவிட்டு நீங்கிப் பரத்தையை யழைத்துக்கொண்டு முனிவர்கள் வாசஞ்செய்கின்ற ஓர் வனத்தைநோக்கிச்சென்றனன்.

அவ்வனத்தில் தாலவமுனிவர் வசிக்கின்ற ஆசிரமத்தின் வழியாகச்சென்று அம்முனிவர் ஸ்நானஞ்செய்யச்சென்ற சமயத்தில் உள்ளே நுழைந்து அவர் பத்தினியாகிய சுலபையென்பவளைக் கைப்பிடித்தனன். உடனே அவள் அதிககோபங்கொண்டு அவன்கையை யுதறியெறிந்து விழிகளில் தீப்பொறி யெழும்பும்படியாகச் சீறி, அடா துராத்மனே - எனது பெயரில்மாத்திரம் சுலபையேயன்றி உனக்கு நான் சுலபையா - உனது காளைப்பருவத்தினாலும் காயத்திடத்தினாலும் வேளையொத்த பேரழகினாலு மல்லவா மாதரின்பத்தை மறந்தாற்போலனுபவிக்கின்றனை இனியவ்வின்பத்தை மறந்தும் அநுபவிக்காதவண்ணம் ஊனொழுகின்ற குஷ்டரோக முனக்குண்டாகக் கடவதென்று சபித்தள். அவ்வாறு சபித்தலும் அவன் அந்நிலைமைக்கு அடிவாங்குதற்கு முன்ம் அழுதவாய்த்த மேனியெல்லாங் கலங்கித்துயக் கண் மூழ

வதும் இரண்மாகிச் சீயுஞ் செந்நீரும்பெருகி முகம் வேறுபட்டுப் பா
ர்த்தவர்கள் பயமுறும்படியான விகாரரூபத்துடனே அவ்வாசிரமத்தி
னின்றும் வெளிப்பட்டுப் பரத்தையிடத்தில் வந்தனன். அவள் அவனை
க்காண்டலும் அருவருப்புற்றவளாகி யொழிந்தனள். பின்னர் அப்
பாதகன் பாதுகாப்பவரில்லாமல் அக்காட்டிற்றனே அலைந்து திரிந்
து இறந்தனன். உடனே அவனை யமதூதர் கட்டியழைத்துக்கொண்
டுசென்று தங்களரசனெதிரிலே விட அவன் இப்பாதகன் குற்ற நீங்கு
மளவும் கொடிய நரகங்களிற்போட்டு வதைசெய்யக் கடவீர்களென்று
ஆக்கியாபித்தனன் அக்கட்டளையின்படி அத்தூதர்கள் அவனைப்ப
டுத்தியபாட்டை ஹரஹர - யாவர் சொல்ல வல்லவர்கள்? பின்னர்
அவனை எல்லா நரகங்களிலுந் தப்பவிடாமல் வதைசெய்து பூமியிற்பி
றக்கும்படி விடுத்தார்கள். அதனால் அவனனுபவித்து மிருந்த பாடச்சே
டத்தினாலும் கலைபயிட்ட சாப வெச்சத்தினாலும் இப்பிறவியினுங்
குட்ட நோயினை யுற்பவித்தனன். அரசனே பாவங்களென்னவற்றி
ற் பயமில்லாது செல்பவனாகிய அவ்வணிகனைப் பிறன்கடை நிற்பா
ரைப் பேணுதொழிப்பதுபோல ஒழித்துவருவையெனில் இவ்விமான
ம் விண்ணிலெழும்புமென்று தேவகணங்கள்கூற, சூரசேனமகாராச
ன் ஈதனைத்தும் உண்மையேயென்று நிச்சயித்து மீட்டும் அவர்களைப்
பணிந்தெழுந்து என்னையாட்கொள்ளவந்த மகாநுபாவர்களே! அவ்வ
ணிகன் வரலாறிவ்வாறாயினும் அவனுக்குக் குட்டநோ யுண்டாவத
ற்கேதுவாயிருந்த பாவங்களைத் தீர்த்துச் சுத்தபவித்திரனாக்கி எம்மோ
டு அவனையுங் கூடவழைத்துக்கொண்டு போகும்படியான உபாயத்
தையே தேடவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்கத்தேவகண
ங்க ளிசைந்து அக்குட்டவணிகனை அருகிலழைத்து அவன்மீது தம
து கிருபாநோக்கத்தைப்பரப்பி அவனது பாவங்களனைத்தும் பாறும்
படியாகக் கணபதியென்னுந் திருமந்திரத்தை மூன்றுதரம் அவன்செ
வியில் உபதேசித்தனர். உடனே அவன் குட்டசரீரத்தினின்று ம
ன்று தெய்வசரீரம்பெற்றுச் சுத்தபவித்திரனாகினன். பலர்நடுவில் வீழ்
ந்த பாம்புஞ்சாகாதென்கின்ற முதுரையின்படி பலபேருடன்கூடியே
றிய பாதகன் மீட்டும் பூமியிற்பிறந்து வருந்தாமல் நற்கதியையடைந்த
னன். பின்னர் சூரசேனமகாராசன் தனது நகரத்திலோர் முதலாயி
னோர் புடைசூழும்படி விமானத்தோடுமெழுந்து ஆகாயவெளியெல்
லாங் கடந்து விநாயகலோகம்போய்ச் சேர்ந்து அனந்தகாலம் அள

ற்ற போகபாக்கியங்களை யநுபவித்து முடிவில் சகல தத்துவ காரணனாகிய கணேசமூர்த்தியினுடைய திவ்விய சரணாரவிந்த நிழலையடைந்து அரிபிரமேந்திரர்களாலு மளவிடக்கூடாத பேரின்பசாகரத்தில் மூழ்கியிருந்தனன்.

௩௬-வது - சூரசேன னுபாசித்தபடலம்

முற்றிற்று.



உ

கணபதிதுணை.

முப்பதேழாவது

## பரசுராமன் உபாசித்தபடலம்.

சூரசேனனங் காரகசதுர்த்தியிற் றேறுய்ந்து
பாரிடம்பரி சனமொடும்பர் பாவனியனார்
சாரலோகமுஞ் சவுனகாதியபெருந் தவத்தீர்
காரறுமயனைத் தநுட்டித்தமை கவில்வாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே! விநாயகமூர்த்தியினுடைய சங்கடசதுர்த்தி விரதத்தைச் சூரசேனமகாராச னநுட்டித்து தன்னினத்தினருடன் முத்தியடைந்த வரலாற்றினைச் சொன்னோம் இப்பால் பரசுராமன் உபாசித்த திறத்தினைச் சொல்லுவோம் கேட்பீராக-முன்னர் பவளவனத்தில் பவளகிரியில் ஓர் விநாயகமூர்த்தியைப் பிரதிட்டைசெய்து பூசித்துவந்த கார்த்தவீரியனானவன் பின்னர் தனது தந்தையாகிய கிருதவீரியனிடத்தில் வந்து பணிந்தனன். அதற்குக்கிருதவீரியன களிப்பெய்தி பல ஆசீர்வசனங்களைக் கூறித் தனதுகுமாரன் விநாயகமூர்த்தியினுடைய பெருங்கருணையால் இரண்டுகால்களையும் ஆயிரங் கைகளையும் ஐந்நூறுமுகங்களையும் பெற்றுவந்ததனையறிந்து மிகக் களிக்குமனமகிழ்ந்து தனதுராசவிருக்கையை யவன்பாலொப்பிவித்து விநாயகமூர்த்தியினுடைய திருவருளையே துணையாகக்கொண்டு அவரது திருவடித்தாமரைகளைச் சதாகாலமும் இடைவிடாது தியானித்தனன். அதற்குத் தம்மைச் சரணடைந்தோர்கள் ஆண்பாலரா பெண்பாலராயினும் அவர்கட்கு இம்மைக்கு முன் எண்ணாற்ற

வரங்களை யளிக்கத்தக்க விநாயகப்பெருமான் கிருபைகூர்ந்து அவனைத் தம்மிடத்தி லழைத்துவருமாறு தேவகணங்களை யேவ, அவர்கள் ஆகாயமார்க்கமாக ஓர்தெய்வ விமானங்கொண்டுவர, உடனே கிருதவீரியன் தன்மனைவியாகிய சுகந்தையென்பவளோடும் மற்றைப்பரிசனங்களோடுந் தெய்வரூபம்பெற்று அவ்விமானத்தின்மேலேறி அகண்டபரிபூரண சச்சிதானந்தஸ்வரூபியாகிய கணேசலோகம்போய்ச் சேர்ந்து மனவாக்குக்காயங்கட்கு எட்டுதற்கரிய பேரின்பசாகரத்தின் மூழ்கினன். இப்பால் கார்த்தவீரியன் அரசர்களெல்லாங் கொண்டாடத்தக்க பராக்கிரமத்தோடு உலகமுழுவதையுந் தனது ஆக்ஞாசக்கரத்துள் அடக்கி அடங்காரையெல்லாம் ஐந்நூறுபாணங்களால் விசும்பேற்றி இந்திரனுங்கண்டு நடுங்கும்படியாகவும் கவிவாணர்களெல்லாம் புகழும்படியாகவும் அளவற்றபோகங்களோடும் அரசாட்சிசெய்து தேவர்களெல்லாம் ஏவல்கேட்கும்படி வாழ்ந்திருந்தனன். அவனிவ்வாறிருக்குநாளையில், பொழில்களாலும் பொய்கைகளாலுஞ் சூழப்பட்டிருக்கின்ற சையவனாச்சாரலில் ஐம்பொறிகளையும் நிக்கிரகித்து அரிய தவங்களைச் செய்துகொண்டிருந்த சமதக்கினியென்னும் ஒரு முனிபுங்கவரிருந்தனர். அவருக்குக் கற்பில் தன்னோடொப்பாரு மிக்காருமில்லாதபெருமையினைவாய்ந்த ரேணுகையென்னும் ஓர்மனைவியிருந்தனள். இவர்கட்கு மகாவிஷ்ணுவே முன்னொருகாலத்தில் பிருகுமுனிவர்கொடுத்த சாபத்தினால் பிள்ளையாகப்பிறந்து இராமனென்னும் பெயரைவகித்துத் தனது தாய்தந்தையரிடத்தில் இவனின்மிக்கா ரொருவருமில்லையென்று சொல்லும்படி மெய்யன்புவைத்துச் சகலமுனிவர்களுங்கொண்டாடத்தக்கதாக அவர்கட்குப்பணிசெய்து வாழ்கின்றநாளையில், அவன் ஓர்நாள் நைமிசாரண்ணியத்திற்குச்சென்று அவ்விடத்திலுள்ள அருந்தவர்களோடுஞ் சின்னாள் வசித்திருந்தனன். அக்காலத்தில் கார்த்தவீரியனென்பவன் பலபடைகளோடும் பரிசனங்களோடு மெழுந்து காட்டிற்சென்று வேட்டையாடுவான் கருதி சையவனாச்சாரலை யடுத்த வனங்களிற்சென்று அவ்விடங்களிலுள்ள துஷ்டமிருகங்களையெல்லாங் கொலைசெய்து மீட்டுந் திரும்பிவருகையில், தனக்கெதிராகவோர் தபோவனந் தோற்றக்கண்டு அவ்வனம் யாவரை யுடையதென்று விசாரித்துப் பின்னர் சமதக்கினிமுனிவருடைய ஆசிரமமென்று தெரிந்துகொண்டு ஆயுதபாணிகளோடிருக்கின்ற தனது சேனைகளையெல்லாம் அவ்விடத்திற்றானே நிறுத்திக் தனது மந்திரியர் நால்வ

ரோடும் அவ்வாசிரமத்தில் நுழைந்து சமதக்கினிமுனிவரைச் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, சுவாமி! தேவரீரை இங்கு பரமசிவத்தைப்போலக்கண்டு தரிசிக்கப்பெற்ற பேற்றினால் அடியேன் சுத்தபவித்திரனாயினேன் எல்லா நன்மைகளும் அடியேற்குண்டாயினவென்று துதித்தனன். உடனே அம்முனிவர் அவனுக்காதனங்கொடுத்து, அரசனே! நீயார் இவ்விடத்திற்குவந்தகாரணம் யாதென்றுவினவ. சுவாமி! அடியேன் கார்த்தவீரியன் யான் வனத்தில் மிருகவேட்டையாடிவரும்போது முன்செய்த தபோபலத்தினால் எனக்கெதிரே தேவரீர் ஆசிரமந்தோற்றக்கண்டதன்றி இங்குவந்து தேவரீர் சினேகமுங்கிடைக்கப்பெற்றேன் இனி இதைவிட மேலானபாக்கியம்யாதென்றனன். அதற்கு முனிபுங்கவர் மனமகிழ்ந்து, அரசனே! இதுகாறும் நினது புகழுடம்பைப் பலகால் கேள்வியுற்றிருந்தனன். இப்போது நினது பூதவுடம்பையுங் காணப்பெற்றேன். நின்வரவினால் என் மனமானது மதுபானஞ்செய்தவனையொத்து மகிழ்ச்சியடைந்திருக்கின்றது. சூரியன் உச்சியில்வந்தனன். நீயும்வேட்டையாடி மிகவும் இளைப்புற்றிருக்கின்றமையால் இவ்விடத்திற்றானே அமுதுகொண்டு சாவகாசமாய் நகரத்திற்குச் செல்லலாமென்று சொல்லினார்.

அதைக் கார்த்தவீரியன்கேட்டு, சுவாமி! தேவரீரையொத்தவர்களிடத்தில் தண்ணீரேனும் அருந்திச் செல்லுவது தபோபலனுக்கும் யானே ஒருவனாய்வந்தவனல்லன். என்னுடனே அளவற்றபேர்வந்திருக்கின்றனர். எனது நகரமும் இதற்கு நெடுந்தூரமன்று - ஆதலால் சுவாமிகள் கிருபையோடும் விடைகொடுத்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தனன். அதற்குப் பொன்னுலகத்தையும் இம்மண்ணுலகத்தில் வரவழைக்கத்தக்க வல்லமையுடைய அம்முனிபுங்கவர் புன்னகைகொண்டு, அரசனே! நின் சேனைகட்காகயாதொருசிந்தனையுஞ்செய்யவேண்டுவதில்லை உன்னோடுவந்தவர்கள் எத்தனைபேராயினும் அவர்கட்கெல்லாம் அமுதுபடைப்போம் இதனருகிற் காம்யமென்றுஓர்தடாகமிருக்கின்றது நீங்கள்யாவரும் அந்தத்தடாகத்தைச்சேர்ந்து சிறிதுநேரம் இளைப்பாறிக்கொண்டிருக்கலாமென்று சொல்லி விடைகொடுத்துத் தமதுபத்தினியாகிய ரேணுகையைக்கூவி, இத்தினம் அரசன் விருந்துண்ணவருகின்றானென்று அறிவித்துக் காமதேனுவைத் தியானித்தனர். உடனே அக்காமதேனுவும் வந்தது, அதனைச் சமதக்கினிமுனிவரும் ரேணுகையும்பணிந்து பூசைசெய்து அதன்பால் தங்கள்விழை

வை விண்ணப்பஞ்செய்துகொள்ள, அஃது உடனே அவ்விடத்தில் விண்ணுலகமுங்கண்டு நாணத்தக்க ஒரு நகரமுண்டாக்கி அதில் நவரத்தினமயமாயிராநின்ற மாடமாளிகைகள் கூடகோபுரங்கள் முதலான சிறப்புகளைநிருமித்து அறுசுவைகளோடுங் கூடிய நால்வகையுண்டிகளையும் தாசர்தாசியர்களையும் அறைகடோறும் அளவற்ற பொற்பாத்திரங்களையும் அமைத்து அம்முனிபுங்கவருக் கறிவித்தது. அவையனைத்தையும் அவர்கண்டு சந்தோஷித்து அரசனையழைத்து வருமாறு ஏவலாளர்களுக் காக்கியாபிக்க, அவர்கள் அவ்வாறேசென்று அரசனையழைத்தனர். உடனே அரசன் தனதுபரிசனங்களோடுமெழுந்து வருகையில் நூதனமாக ஓர்நகரத்தைக்கண்டு ஈதென்ன அற்புதமென்று ஆச்சரியங்கொண்டு அந்நகரத்து வீதியின்வழியாகநடந்து, அவ்வீதிகளெல்லாம் ஓர்பால் பஞ்சகருவிகள்முழக்கமும் ஓர்பால் பரதநாட்டியமுழக்கமும் ஓர்பால் சங்கீதப்ரசங்கமுழக்கமும், ஓர்பால் சத்தசுரங்களின் முழக்கமுமாக விருக்கக்கண்டு முனிவர் ஆசிரமத்தினருகில்வந்து, அவ்வாசிரமத்தில் இதுகாறும் தான் எவ்விடத்திலுங் கண்டிராத அளவற்ற விசித்திரங்களோடு நாவிற்சலமூறும்படி உண்டாகின்ற அறுசுவைபதார்த்தங்களினுடைய பரிமளங்கள் நாற்றிசைகளிலும்வீசக்கண்டு ஈதென்ன விபரீதமென்று மதிமயங்கி அவையனைத்தையும் தன்னாற் கண்டறியக்கூடாதவனாகி உள்ளேநுழைந்து சமதக்கினிமுனிவருடைய திருவடிகளிற் சாஷ்டாங்கமாக வணங்கி அவரது உத்தரவின்படி தனது பரிசனங்களோடு மிருந்து போசனஞ்செய்து கையலம்பி உண்ட விளைப்பாறிய பின்னர் மீட்டுஞ் சமதக்கினிமுனிவரையடைந்து, சுவாமி! நான் முன்னர் வந்தபோது இவ்வாசிரமங் காடாகவிருந்ததே- மீட்டும் யான் சுற்றிச்சென்று திரும்பிவருவதற்கு முன் அளவற்ற மாட்சிமையோடு நகரமாயிற்றே - அன்றியுங்கிடைக்கிடையாத திரவியங்களெல்லாம் எங்குநிறைந்திருக்கின்றனவே, ஒருவனுக்கொருத்தினின்று உபசரிப்பதுபோல அவ்வவர்களுக்கு அவ்வவரிச்சைப்படி அமுதூட்டத்தக்க பரிசாரகர் அளவற்றபேர்களிருக்கின்றார்களே இவையனைத்தும் ஓர் நிமைப்போதில் எவ்வாறுண்டாயினவோ? மாயாவிசித்திரமோ? அல்லது தேவரீருடைய தவமகிமையோ இவ்வற்புதத்தை யடியேற் குணர்த்தியருளவேண்டுமென்று கேட்டுக்கொண்டனன்.





அதற்கம் முனிபுங்கவர் புன்னகைசெய்து, அரசனே! இவையனைத்தும் மாயாவிசித்திரமென்றெண்ணற்க. நமது தவமகிமையினால் இவ்வளவுங் காமதேனுவைக்கொண்டு நடத்தியிருக்கின்றனமென்றறியக் கடவையென்றனர். அதனை யரசன்கேட்டலும் நெட்டுயிர்ப்பெறிந்து மனதிற் பொறாமைகொண்டு எவ்விதத்திலேனும் அக்காமதேனுவை நாம் கைக்கொள்ளவேண்டுமென்று நினைத்தவனாய் உடனே முனிவரைப்பார்த்து, பசிக்குக் காய்கனி முதலியவைகளையருந்திச் சரீரத்தை யொடுக்கி வனத்திற் றவஞ்செய்துகொண்டிருக்கின்ற தேவரீர்க்கு அக்காமதேனுவினால் யாதொரு பயனுமில்லை. எல்லாவுலகங்கட்கும் ஏகசக்கிராதிபனாயிருக்கின்ற எனக்கு அக்காமதேனுவைக் கொடுத்தீராகில் அஃது அநேககாரியங்கட் குபயோகமாகும். மேலும் அஃது என்னிடத்திலிருப்பது நியாயமாகவுமிருக்கின்றது. ஆதலால் எனக்கு நீர் அதனைத் தயவுசெய்து கொடுத்தருளல்வேண்டும் கொடாவிட்டால் பின்னர் பலாத்காரமாய்க் கொண்டுபோவேனென்று சொன்னான். அதைக்கேட்ட முனிபுங்கவர் மிகுந்த கோபத்தோடும் பெருமூச்செறிந்து, அரசனே! (பிச்சைக்குவந்தவன் பெண்டிபிடித்ததுபோல) நீ நினைத்தகாரியம் மிகநன்று ஆ-ஆ! எல்லாவுலகத்தையும் ஏகசக்கரத்தினாலாளுகின்ற மன்னவர்களுக் குணர்த்திய நீதிநூல்களில் அன்னியருடையபொருளை யபகரிக்குமாறு கூறியிருக்கின்றனவோ? நின்னைக் கல்வியிற் சிறந்தவனென்றும் மநுநீதிதவறாதவனென்றும் ஒழுக்கமுதலிய நன்னடைகளை யுடையவனென்றுங் கருதியிருந்தனன். நீ இராப்போதினுற்ற நீழலைப்போல அற்பகுணத்தையுடையவனாயினை - ஆயினும், எனதுவசமாயிருக்கின்ற அக்காமதேனுவை நினது வசமாக்கிக் கொள்ள நெறியுண்டாயிருக்குமாயின் அதைக்குறித் தென்னைக்கேட்பதென்னை? தாமதமில்லாமல் நின்வசமாக்கிக்கொள்ளலாமென்று சொல்லினர். அதை அவ்வஞ்சநினைவைக்கொண்ட அரசன்கேட்டு உடனே தனது பரிசனங்கட்குக் கண்சைகைகாட்டினான். அதை அப்பரிசனங்கள்கண்டு காமதேனுவினருகிற் சென்றார்கள். அதனால் அரசன் சமதக்கினிமுனிவருக்குப் பகையாயினானென்று காமதேனு வறிந்துகொண்டு மிகுந்த கோபத்தினால் நெட்டுயிர்ப்பெறிந்தது. அந்த உயிர்ப்பினால் அருகில்வந்த எல்லாச்சனங்களுஞ்சுருண்டு மாய்ந்துபோயினர். அதைக்கண்ட கார்த்தவீரியன் மிகுந்த கோபாவேசங்கொண்டு அளவு நால்வகைச்சேனைகளை வரவழைத்து அதன்பேரிலேவினன்.




அவைகளைக் காமதேனுவானது தனது மயிர்களைச் சிலிர்க்க உடனே ஒவ்வொரு மயிரினின்றும் அளவற்ற வீரர்கள் சர்வாயுதபாணியாராயுதித்தனர். ரதகஜதுரகபதாதிகளும் உண்டாயின. பின்னர் இரண்டு சேனைகளுங் கலந்து போர்செய்து வருகையில் காமதேனுவின் சேனைகள் அரசனுடைய சேனைகளையெல்லாங் கொன்று எங்கும் உதிரவெள்ளம் ஓடும்படியாகச் செய்தன. அதில் எஞ்சிநின்ற சேனைகள் மீட்டு மெதிர்ப்பதற்கஞ்சியோட அதனை அரசன் கண்டு நமக்குத் தோல்வியுமாகுமாவென்று அச்சேனைகட்குக் கையமர்த்தி ஊழிக்காலத்திலுண்டாகின்ற பேரொலியைப்போலச் சங்கநாதஞ்செய்தான். அதனால் மலைகள் சமுத்திரங்கள் முதலானவைகளெல்லாங் கலங்கிச் சகமெல்லாந்தாழியிட்ட தயிர்போலத் தளர்ந்தன. இவ்வாறு சகமெல்லாந்தளர்ந்துங் காமதேனுவினுடைய சேனைகள் சிறிதுந் தளராதிருக்கின்றதை அரசன்பார்த்து நமது வெற்றி நன்றாயிருக்கின்றதென்று நகைத்துமிகுந்த கோபாவேசங்கொண்டு கரத்தில் வில்லையெடுத்து ஒவ்வொரு எல்லைக்கு ஐந்நூறு ஐந்நூறு பாணங்களைப் பிரயோகித்தான். அப்பாணங்கள் ஊழிக்காலத்திலுண்டாகின்ற மேகங்களையெல்லாங் கலங்கச்செய்ய வல்லவைகளாயிருந்தும் அவைகளை அக்காமதேனுவின் சேனைகள் ஒதுக்கி அரசன்மீது அளவற்ற பாணவருஷங்களைப் பொழிந்தார்கள். இவ்வாறு தனது படைகளை நாசஞ்செய்ததன்றித் தன்மீதும் அளவற்றபாணங்களை ஏவியதனால் கார்த்தவீரியனுக்குப் பலங்குன்றி இனி எந்தவிதத்தினும் அம்முனிவரைக் கொல்லவேண்டுமென்று தன்மனதில் வயிரங்கொண்டு ஓடிப்போயினன். அக்காமதேனுவும் அரசன் இனித் திரும்பானென்று நிச்சயித்துக்கொண்டு சமதக்கினி முனிவரிடத்தில் விடைபெற்றுத் தனது சேனைகளோடுஞ் சொர்க்கலோகம் போய்ச்சேர்ந்தது. பின்னர் சமதக்கினிமுனிவர் முன்போலவே பஞ்சாட்சரத்தைச் செபஞ்செய்துகொண்டு தவத்திலிருந்தனர். இவ்வாறு சிலநாள்செல்ல ஓர்நாள் கார்த்தவீரியனானவன் அம் முனிபுங்கவர் தவத்திலிருக்கின்றசமயத்தில் அவரருகிற்சென்று ஓர்வாளினால் அவருயிரை மாய்த்துவிட்டனன்.

அதையம்முனிவர் பத்தினியாகிய ரேணுகைகண்டு, அடா துரோகி! உண்டவீட்டிற்கு இரண்டகஞ்செய்வோருள் உனக்கொப்பானபாவி எவ்விடத்தேனுமுண்டோ. உனது குலமெல்லாம் நாசமாகும்படியான வகையைத் தேடிக்கொண்டனையே. இந்த அநியாயம் எந்த அர

ர்கட்கேனு மடுக்குமோ. தவஞ்செய்வோரைக் கொல்வதோ தரணிவேந்தர்களுடைய முறைமையென்றுசொல்ல அவள்மீதும் இருபத்தோரம்புகளை ஏவினன். பின்னர் அவள் அவைகளைச் சகிக்கமாட்டாது கண்களில்நீர்த்தாரை பெருகும்படியாகச் சோர்ந்து பூமியில்வீழ்ந்து தனது காதலனைத் தியானஞ்செய்துகொண்டு வைதிசவனத்திற்குச்சென்ற தனது புத்திரனாகிய ராமன்வருமளவும் உயிர்வைத்திருந்தனள். அவனுந் தற்செயலாய் அவ்விடத்தைவிட்டு நீங்கித் தனது ஆசிரமத்திற்கு வந்தனன். அப்போதவ்வாசிரமமானது அன்னபானமில்லாத ஊரைப்போலவும் - மகமேருவில்லாத உலகம்போலவும், இந்திரனில்லாத வசந்த மண்டபத்தைப்போலவு மிருந்ததன்றி? வேதகோஷமில்லாமலும் வேள்விப்புகை எழாமலும் தனது தந்தையைச் சதாகாலமும் தொழுதுசெல்கின்ற சீடர் கூட்டநெருங்காமலும் புல்லென்றிருக்கக்கண்டு, என்ன துன்பங்கள் நேர்ந்தனவோவென்கின்ற மனவருத்தத்தோடு உள்ளேநுழைந்து தந்தையானவர் உயிர் நீங்கியிருப்பதையும் தனது தாய் அம்புகள்பாயப்பட்டுச் சோர்ந்து வீழ்ந்திருப்பதையுங்கண்டு இவர்களை இவ்வாறுசெய்தோர்யாவரென்று நினைந்துநினைந்து அழுதழுது புழுதிகள் உடலெங்கு மூடும்படியாகப் பூமியில்வீழ்ந்து புரண்டு மூர்ச்சையாகி எழுதப்பட்ட சித்திரம்போலச் சிறிதுநேரமசைவற்றிருந்து பின்னர் தெளிந்தெழுந்து அவர்கள் திருவடிகளைப் பலமுறைதொழுது துக்கசாகரத்துண் மூழ்கி, ஐயோ! இந்திரன்முதலாயினோரும் இறைஞ்சி வழிபடத்தக்க உங்கள் தவமகிமையுங் கற்பின் பெருமையும் இவ்வாறு உங்களுயிர் பிரியுமாறு எங்ஙனமொளித்தனவோவென்று அலறிச் சிறிது உயிர்தாங்கிக் கண்களில் நீரைக் கவிழ்த்துக்கொண்டிருக்கின்ற தாயினருகில் வந்து அவள் சிரத்தைத் தனது துடையின்மீது வைத்து, என்னை யருமையாயீன்றெடுத்த அன்னையே உங்கட்கு யாதுகாரணத்தால் இவ்வாபத்துநேர்ந்ததோ அதனை எனக்குச் சொல்லவேண்டுமென்று புலம்பித் தனது கையினாற்றடவ அதை அழகில் இலக்குமியை வென்றவளாகிய ரேணுகைகேட்டுச் சிறிது தெளிவுற்று, மைந்தனே! இவ்வுலகத்திற்கரசனாகிய கார்த்தவீரியன் வேட்டையாடிவருகையில் மதாசிரமத்தைநோக்கிவர அவனுக்குக் காமதேனுவினால் சகல சிறப்போடும் யாங்கள் விருந்தூட்டப் பின்னரவன் அக்காமதேனுவைக் கைக்கொள்ளுமாறு அதனோடு யுத்தஞ்செய்து தோல்வியுற்றனன். அதனால் எங்களை எவ்விதத்தேனுங்கொல்ல

வேண்டுமென்கிற வெஞ்சினத்தால் சமயம்பார்த்துக் கொன்றுவிட்டுச் சென்றனன். இக்காரணத்தை யுனக்கறிவிக்கு நிமித்தமே இதுகாறும் எனதுயிரைத் தாங்கியிருந்தனன். அப்பாதகன் எனதுடலில் இருபத்தோரம்புகளை யெய்தானாதலால் அவன் வம்சத்தில் முடிசூடுமன்னர்களை மூவேழ்தலைமுறைவரையிற் சாடி அவர் சரீரங்களைச் சத்த பூமிகளினும் பரவும்படி வீசி அந்தணர்குலத்தைத் தெய்வகுலமென்று சொல்லுமாறு விருத்திசெய்யக்கடவை. எங்கட்கு நிறைவேற்ற வேண்டிய கிரியைகளைத் தேத்தாத்திரியமுனிவரால் செய்து நிறைவேற்றக்கடவை. யானுன்னைக் கண்டலும் புத்ரமுகங்கண்டவட் கொப்பாயினேன். இனியெனது காதலர்மாட்டுச் செல்லுகின்றேனென்று விடைகொடுத்து உயிர்பிரிந்தனள்.

இவ்வாறு ரேணுகை உள்ளமுடைந்து கூறிய வசனங்கள் இராமன் செவியிலேறலும் துள்ளியெழுந்தழற் கொழுந்துக்கொப்பாகிய கோபமானது தலைக்கேறி வெளுத்த விழிகள் சிவக்கும்படியாகச் சினந்து எல்லாவுலகத்தையும் எடுத்து விழுங்கிவிடுவான்போலத் துள்ளி அரசன் அந்தணரைக் கொன்றானென்று சொல்லுஞ் சிறுமைமாறவும் அந்தணரே தவத்திற்சிறந்தவரென்று சொல்லும் பெருமை மீறவும் இனி நமது தாய்தந்தையரை யமனைப்போலிருந்து கொன்ற மகாபாதகனுடைய குலமாத்திரமேயன்றி அரசர்களென்று சொல்லப்படுகின்ற எல்லாக்குலங்களையும் வேருடன்கெல்லிக் கொல்லுவேனென்று சபதங்கொண்டு அடுத்தவனத்தில் அரிய தவஞ்செய்துகொண்டிருக்கின்ற தேத்தாத்திரிய முனிவரையடைந்து நடந்தகாரியங்களனைத்தையும் அவருக்கறிவித்துப் பின்னர் அவரைத் தமதாசிரமத்தி லழைத்துவந்து அவரால் தனது தாய் தந்தையர்க்கு நிறைவேற்றவேண்டிய நித்தியக்கிரியைகளைப் பிரதிதினம் வேதாகம முறைமைப்படி நிறைவேற்றிவருகையில், ஐந்தாநாளிரவில் தான் நித்திரைசெய்யுங்காலத்தில் தன்மீதோர் புலிவந்துபாய சொப்பனங்கண்டு வாய்குழறித் தேகநடுக்குற்று, அம்மா-அம்மா-என்றுகூவி விழித்துக்கொண்டனன். அக்கூக்குரலை அவன்தாயாகிய ரேணுகைகேட்டுத் தன்னையிடையிலழைத்தகாரணத்தால் இருண்டுசுருண்டு நெய்த்தொழுகித் தொடையலணிந்திருக்கின்ற கூந்தலும் ஒள்ளிய நுதலைச் [illegible]

ழல்களையணிந்த செவியும் வேலெறிக
ணையொத்த நாசியும் பவளம்போன்ற





னெதிரிற் றனது முகத்தைமாத்திரம் ஆகாயவெளியிற் காட்டியிருந்தனள். அதனைத் தேத்தாத்திரிய முனிவருங்கண்டு, அன்பிற் சிறந்த இராமனே! உனது தாயைப் பதின்மூன்றுந்தினத்திலழையாது மத்தியிலழைத்தனையாதலால் தனது முகத்தைமாத்திரம் ஆகாயவெளியிற்காட்டினள் ஆயினுங் குற்றமில்லை. இனிநடத்தவேண்டிய கருமங்களையுஞ் சிறப்பெய்த நடாத்துவையாயின் மற்ற அவையவங்களுஞ் சரியாகி இப்பூவுலகில் மதசம்பந்தப்பட்ட எல்லாமனிதர்களுந் தொழற்குரிய தேவதையாக வாழ்குவளென்றுகூற அவ்வாறே இராமன் மற்றைய நாட்களின் கிரியைகளைக் குறைவில்லாமற் செய்துமுடித்தனன். பின்னர் தனது தந்தையாகிய ஜமதக்கினிமுனிவர் பிரமனுலகம் போய்ச்சேர்ந்தனர். இரேணுகையானவள் தனது வடிவமுழுவதுமடைந்து உலகமெல்லாம் வணங்கும்படியாகத் தெய்வத்தன்மையையடைந்தனள். தேத்தாத்திரியர் தமதாசிரமத்திற் கெழுந்தருளினர். இப்பால் அரசகுலங்களை அடியுடன்களையச் சபதங்கொண்டிருக்கின்ற இராமன் ஒருநாள் தனது அன்னையைவருமாறு தியானிக்க அவ்வாறே அவள் வந்து, மைந்தனே - நீநினைத்தகாரிய மறிந்துகொண்டனன் அதனை முடிக்கும் வகையினைச்சொல்லக்கேள் நீ இந்தக்கணத்தில் கைலாயவரையையடுத்து அரவையுஞ் சந்திரனையுமிலைந்த சடாமகுடத்தினையுடைய சிவபெருமானைப்பணிந்து அவர்பேரருளைப்பெற்று உன்னிஷ்டத்தை இடையூறின்றி நிறைவேற்றக்கடவையென்றுசொல்லி யகன்றனள். அச்சொல்லை இராமன் சிரமேற்கொண்டு உடனே கைலாயவரையிற்சென்று சிவபெருமானுடைய திருவடிகளைப் பலமுறை பணிந்து துதிசெய்ய அதற்குக் கர்த்தன் கிருபைகூர்ந்து அவன்மீது தமது கடைக்கண்சாத்திச் சடாக்ஷரமந்திரத்தை ஆகமமுறைமைப்படி அவனுக்குபதேசித்து, இராம தத்துவகாரணமாகியும்-தத்துவசொருபமாகியும் - தத்துவமுதலாகியும் - தத்துவமுடிவாகியும் இருந்து பிரமன்முதலிய எங்கள்மூவருக்கு முத்தொழிலளித்தவர் விநாயகப்பெருமானாகும். அவரை நின்மனதிற்றியானித்து அவருக்குரிய இம்மகாமந்திரத்தை இடைவிடாதுசெபித்து வருவையெனில் நீகருதிவந்த கோரல் வினையில் நிறைவேறுமென்று திருவாய்மலர்ந்தனர். அதனை இராமன் செவிக்கமுதாகக்கேட்டு மீட்டுந் தொழுதெழுந்து விடைபெற்று இம்மையிற்றானே எல்லாநன்மைகளையுந் தரத்தக்க பழநேரமென்கின்ற தலத்தையடைந்து விநாயகமூர்த்தியினுடைய திருவடித்தா



மறைகளைப் பூசனைசெய்து மிக்கபேரன்பினோடுஞ் சடாக்கரமந்திரத்தை முறைமைப்படி தியானித்து ஐம்புலாதிகளையும் அடக்கி அரிய தவஞ்செய்துகொண்டிருந்தனன். அத்தவத்திற்கு விநாயகக்கடவுள் கிருபைசுரந்து-பரசு - தாமரைமலர்-ஒற்றைக்கோடு - மோதகம்-என்னுமிவைகளை யேந்திய நான்கு திருக்கரங்களோடு பூமாலையினையேந்திய துதிக்கரமும் விளங்க அவனெதிரிற் பிரத்தியட்சமாயினர். உடனே தேவர்களெல்லாஞ் சயசயவென்று போற்றி புட்பவருடம்பொழிந்தார்கள். பின்னர் இராமன் சுவாமியைக்கண்டவுடன் திடுக்கிட்டெழுந்து விழிகளில் ஆனந்தபாஷ்பமுண்டாக அன்பு அகத்தையுருக்க உரைகள் தடுமாற்றங்கொள்ள உடலெங்கும் உரோமாஞ்சிதம் பூப்ப ஆன்மாக்களை ஆணவவிருளினின்றுமெடுத்து ஆட்கொள்ள வல்ல அவரது திருவடித்தாமரைகளை வணங்கி அனந்தமுறை வலம்வந்து தேன்மாரி பெய்தாலன்ன அளவற்ற வேதாகமங்களினுற் றுதிசெய்துநின்றனன். அதற்கு விநாயகக்கடவுள் சந்தோஷித்து, அன்பனே! உனக்குவேண்டியவரங்களைக் கேளென்று திருவாய்மலர்ந்தருள இராமன் மீட்டுந் தொழுதெழுந்து, சுவாமி! எனது குரவர்களைக்கொன்ற கார்த்தவீரியனுடைய குலமேயன்றி அரசர்குலமென்று சொல்லப்படுகின்ற யாவரையுங்களைந்து வெற்றிகொள்ளுமாறு அடியேற்குக் கிருபைபுரியவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டனன். அவ்வாறேகணேசமூர்த்தி திருவருள் பாலித்து மாறுதலவியும் மழுவாயுதமுந் தந்து என்றுஞ்சிரஞ்சீவியா யிருக்கும்படி வரங்கொடுத்து அவனுக்குப்பரசுராமனென்னுந் திருநாமமுமளித்து, உன்னையரா யிருக்கின்றபேர்கள் மிக்க பிழைகள்செய்தாலும் அவைகளைப்பொறுத்து ஆட்கொள்ளுகவென்று திருவாய்மலர்ந்து கரந்தருளினர். இப்பால் பரசுராமன் கார்த்தவீரியன்முதலாயுள்ள அரசர்குலங்களையெல்லாம் வதஞ்செய்து அவர்களாண்டுகொண்டிருந்த உலகங்களை அந்தணர்கட் களித்துத் தான்கொண்டிருந்த சபதத்தை நிறைவேற்றிச் சொல்லுதற்கரிய பெருந்தவங்களைச் செய்துகொண்டு என்றுஞ் சிரஞ்சீவியாக உலகத்தின்கண் வசித்திருக்கின்றனன்.

௩௭ - வது - பரசுராமனுபாசித்தபடலம்

முற்றிற்று.



கணபதி துணை.

# முப்பத்தெட்டவது

# இராவணன் உபாசித்தபடலம்.

பரஞ்சேர்தவத்தீர்கண பதிபரசிராமன்
சிரஞ்சீவியாகவரு ளட்டுமுறையீதால்
உரஞ்சேரிலங்கைகக ரோங்கலவற்பேணி
வரஞ்சேர்தருஞ்சரிதை வந்தமுறைகேண்மோ.

ஓ சவுனகாதி முனிவர்களே! சமதக்கினிமுனிவர் புத்திரனாகிய பரசுராமன் விநாயகமூர்த்தியை யநுட்டித்து முடிவற்றவரங்களைப்பெற்ற முறைமையைச்சொன்னோம் இப்பால் இராவணன் உபாசித்ததிறத்தினைச்சொல்லுவோங் கேட்பீராக. முன்னொருகாலத்தில் இலங்கைக்கரசனாகிய இராவணனானவன் ஆகாயமுகட்டைஅளாவிய வெள்ளியங்கிரியையடுத்து அதனின்மேலோர்சாரிருந்து அரியதவத்தினைச்செய்துகொண்டிருக்க, கொன்றையும் அறுகையும்புனைந்த சடாமகுடத்தினையுடைய சிவபெருமான் அதற்குக் கிருபைகூர்ந்து அவனெதிரிற் பிரத்தியட்சமாயினார். உடனே இராவணன் விரைந்தெழுந்து ஆடிப்பாடி அனந்தமுறை வலம்வந்து சயசயவென்று தோத்திரங்களாற் றுதிசெய்து விழிகளில் ஊற்றெடுத்ததுபோல ஆனந்த அருவிசொரிந்து உடலெங்கும் புளகாங்கிதமுற்று நெக்குவிட்டு நெஞ்சமுருகிக் கரங்களைச் சிரமீதுகூப்பி நின்றனன். அதனைக் கர்த்தர்கண்டு உனக்கு வேண்டுவனகேள் தருகின்றோமென்று திருவாய்மலர்தலும் இராவணன் மீட்டுந் தொழுதெழுந்து, சுவாமி! சொர்க்கமுதலிய எல்லாவுலகங்களுமழியுங்காலத்திலும் இலங்காபுரிமாத்திரம் அழியாதுநிலைபெற்றிருக்க வரந்தரவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்குக் கர்த்தன் அவ்வாறே கிருபைகூர்ந்து ஓர் சிவலிங்கத்தை யவன் கரத்திற்றந்து, இராவணனே! இவ்விலிங்கத்தை உனது இலங்கைப்பதியிற்பிரதிட்டைசெய்து பத்தியோடு பூசித்து வரக்கடவை அன்றியும் அதனையப்பதிக்குக்கொண்டு செல்கின்றபோது மிக்கசுத்தியோடு ஆகாயத்தின்மீதேறுது செல்லவேண்டும் அவ்வாறு செல்லும்போது வழியிற் பூமியின்கண் வைப்பையெனில் மீட்டும் உன்கையில் அகப்படாதழுந்தும் இதனை

நன்றாய்க் கவனிக்கக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளினார்
பின்னர் இராவணன் பெருமகிழ்ச்சிகொண்டு சிவபிரானளித்தருளிய
சிவலிங்கத்தைப் பயபக்தியோடுங் கரத்திலேந்தி ஆங்குற்ற காடுகளை
யும் மலைகளையுங்கடந்துகடல்மத்தியிலிருக்கின்றதனது இலங்காபுரியை
நோக்கிச் செல்லுகையில் இக்காரணத்தைத்தேவேந்திரனறிந்து, ஐயோ
இராவணன் அச்சிவலிங்கத்தை இலங்கையில் வைத்துப் பூசிப்பானா
யின் எக்காலத்திலும் அவன் அழியானே இனி இதற்கென்னசெய்ய
வல்லோமென்று பயந்து முப்பத்துமுக்கோடி தேவர்களுந் தன்னைப்
புடைசூழும்படியாகக் கயிலையங்கிரியையடைந்து அங்கெழுந்தருளி
யிருக்கின்ற விநாயகப்பெருமானுடைய திருவடிகளைப் பணிந்தெழுந்
து தெய்வகங்கையாலவருக் கபிஷேகமாட்டிக் கற்பகமலர்களைக்கொ
ண்டருச்சித்து அமுதத்தை நிவேதனஞ்செய்து சோடச வுபசாரங்க
ளோடும் பூசித்தனன். அதற்கு விநாயகப்பெருமான் கிருபை கூர்ந்து
இந்திரனே, நீ யாதுவேண்டிவந்தனையென்றுவினவ, இந்திரன் மீட்டு
ந் தொழுதெழுந்து, சுவாமி! இராவணன் சிவபெருமானிடத்திலிருந்து
ம் ஓர்லிங்கம்பெற்று அதனைத் தனது இலங்கைநகரில்வைத்துப் பூசிக்
கச்செல்கின்றனன். அவ்வாறே வைத்துப் பூசிப்பானாயின் அவனுக்கு
எக்காலத்து மரணமில்லையாம் ஆகவே தேவர்குலங்களை விருத்திசெ
ய்தவொட்டாது நாசமாக்குவான் ஆகலால் அவன் அப்பதியைச்சேரு
முன்னமே ஓரிடையூறவனுக்குண்டாக்கி யாங்களோர் துன்பமடை
யாதவண்ணந் தேவரீர் காத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன்.

அதற்குக் கணேசமூர்த்தி யிசைந்து உடனே வருணனைக்
நீ இராவணன்வயிற்றில் நீர்சுரப்பிக்கக்கடவையென்றுயேவினா
னும் அவ்வாறே அவன்வயிற்றில் நீர்சுரப்பிக்கக் கணேசமூர்த்தி
வர் ஓர் பிராமணப்பிள்ளை வடிவங்கொண்டு தமது திருவடிகளை நில
கள்சூடும்படியாக நடந்து இராவணனெதிரில் வந்தனர். அச்சமயத்தி
ல் இராவணன்சலோபாதையைச் சகிக்கமாட்டாது சிவபிரானருளிய
கட்டப்பாட்டை யெண்ணியெண்ணித் தன்னெதிரில்வருகின்ற பிராம
ணப்பிள்ளையைநோக்கிப் பின்னாகுங்காரியத்தை யறியாதவனாய் அப்
பிள்ளையோடு இனியவார்த்தைகளாடி, அப்பா! எனக்குச் சலோபாதை
மேலிட்டிருக்கின்றது ஊரோ நெடுந்தூரத்திலிருக்கின்றது - எதிரில்
யாவரையுங்காணேன் ஆதலால் நீ என்மீது கிருபைசெய்து யான்ஜல





ஸ்பரிசஞ்செய்து வருமளவும் இச்சிவலிங்கத்தை உனது கரத்திற்றாங்கி யிருக்கவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்கு அந்தணச்சிறுவனையொத்தெழுந்தருளிய கணேசமூர்த்தி சொல்லுவார், ஐயா! யானோ பிள்ளைப் ருவமுடையேன் எனக்கோ இச்சிவலிங்கத்தைத் தாங்கத்தக்கவலியில்லை நீயோ அதனை என்னிடத்திற் பலாத்காரமாய்த்தருகின்றனை, இவ்வித வாபத்துவேளையில் அதனைத் தாங்கவேண்டுவதே ஒருவனுக்குத் தகைமையாயினும் யான்மிகவும் பாலியனாயிருத்தலால் உன்னை முக்காற்கூப்பிடுவேன் அதற்குள் வந்து அதனைப்பெற்றுக்கொள்ளல்வேண்டும்பெறுமற்போவையேனில் உடனேநிலத்தில் வைத்துவிடுவேனென்று திருவாய்மலர்ந்தனர். அவை யனைத்தையும் இராவணன்கேட்டு அப்படியே ஆகவென்று அவர்கரத்தில் அச்சிவலிங்கத்தைக்கொடுத்து ஜலஸ்பரிசத்திற்குச்செல்ல அவன் வருதற்கு முன்னம் மூன்றுதரங்கூவி அதனை நிலத்தில்வைத்துவிட்டனர். பின்னர் இராவணன் விரைவிலோடிவந்து தனது மலைபோன்ற இருபது கரங்களினாலும் அதனைக் கெல்லியெடுக்க அஃது முன்னொருகாலத்தில் திருமால் வராகரூபமாய்ச்சென்று தேடியுங் காண்டற்கருமையனவாயிருந்த சிவபெருமானுடைய திருவடிகளைப்போல ஊடுருவி கற்பின்மகளிருள்ளத்தைப்போல அவன்கரங்களிற் சிக்காதிருந்தது. அதனைக் கெல்லுந்தோறும் அவன் கரங்கள் வாடும்படி நிலமும் நயப்பெய்தாதிருந்தது. அதனால் இராவணன் மனவருத்தமுற்று மீட்டுந் தனது கரங்களை வலியுடன்பாய்ச்சி யிழுக்க அப்போ தச்சிவலிங்கம் பசுவின்காதுபோற் குழைந்து பிரகாசித்தது. அக்காரணத்தால் விண்ணுலகர் மண்ணுலகர் முதலியயாவரும் அப்பதியைக் கோகர்ணமென்று சொல்லுவார்கள். பின்னர் இராவணன் தன்னாற்கூடியவளவாயில் முயன்றும் அச்சிவலிங்கந் தன்கரத்திற் சிக்காதிருந்தமையால், அம்மம்ம இஃது மகா பலமுள்ளதென்று வியந்தனன். அதனா லச்சிவலிங்கம் மாபலலிங்கமென்னும் பெயர்பெற்றது. இப்பால் இராவணன் அச்சிவலிங்கத்தை நிலத்தில்வைத்த பிராமணப் பிள்ளையின்மீது கோபங்கொண்டு தனதுகையால் அவர் சிரத்திலோங்கிக் குட்டினான்.

உடனே கணேசமூர்த்தி அப்பிராமணப்பிள்ளைவடிவத்தை மாற்றித் தமது நிசரூபத்தைக்கொண்டு அவ்விராவணனைத் துதிக்கரத்தினால் அவன் சிரமானது அண்டமுகட்டில் முட்டும்படி மேலேயெ



றிந்தும் மீட்டுந் தமது திருவடிகளால் அவன் பாதாளலோகத்திலழுந்தும்படி நிலத்திலிழுத் தள்ளியும் இவ்வாறு பந்தாடுவதுபோல அவன் சரீரத்துள்ள என்புகளெல்லாம் நெக்குவிடும்படி ஆடினார். அதனை இராவணன் சகிக்கமாட்டாது கூக்குரலிட்டு, பொய்தவிர்ந்த அடியவர்கள் செய்யும் புன்மையினைப் பொறுப்பவனே அபயம். கைதவமுடையோர்கள்செய்யுங் கடப்பாடையெல்லாம்வெறுப்பவனே அபயம் வேண்டி வந்தித்தோர்கட்கு விக்கினங்கெடுப்பவனே அபயம். வேண்டிவந்தியாதவர்கட்கு விக்கினங்கொடுப்பவனே அபயம். என்றிவ்வாறு அனந்தமுறை ஓலமிட்டு சுவாமி! அடியேன் செய்த பிழைகளை மன்னித்துக் காத்தருளவேண்டும் அடியேன்மீது சுவாமிகள் திருபாநோக்கஞ் செலுத்தியாளாவிட்டால் இனி யான்நாசமடைவேன் அப்படியாகாமுன்னம் அடியேற்கு உயிர்ப்பிச்சை தந்தருளவேண்டும் என்று துதிசெய்தனன். அதற்கு விநாயகக்கடவுள் மனமிரங்கி அவன் இரவாது பிழைத்திருக்கும்வண்ணந் தமது கடைக்கண்பார்வையினை அவன்மீதுசெலுத்தி நிலத்திலிட்டனர். பின்னர் இராவணன் பரிமளமிகுந்த புட்பங்களால் அவர்திருவடிகளை யருச்சித்து அனந்தமுறைவேதாகமங்களாற் றுதிசெய்து பூசித்தனன். அதற்குக் கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து, இராவணனே! உனதாஞையால் நமதுமுடியில் எவ்வாறு முன்னங்குட்டினையோ அவ்வாறு உன்முடியில் குட்டிக்கொள்ளுகவென்று கட்டளையிட உடனே தனது முடியில் உதிரமொழுகும்படியாகக் குட்டிக்கொண்டனன். அதனைக் கணேசமூர்த்தி கண்டு யாவரேனும் இவ்வாறு நம்மைக்கண்டவுடன் குட்டிக்கொள்வார்களாயின் அவர்கட்கு எல்லாத் துன்பங்களையு மொழித்தருளுவோமென்று திருவாய்மலர்ந்து அவனுக்குவேண்டிய பலவரங்களைத்தந்து தமது திருவுருவைக் கரந்தருளினார். பின்னர் இராவணன் அவ்வரங்களைச் சிரமேற்கொண்டு தனது இலங்கைப்பதியை யடைந்து இன்புற்றிருந்தனன்.

௩௮-வது. இராவணனுபாசித்தபடலம்

முற்றிற்று.



உ

கணபதி துணை.

முப்பத்தொன்பதாவது

## அகத்தியர் உபாசித்த படலம்.

அராவணிதருமிடை யைங்கைத்தேவனை
இராவணன்பூசித்த வியல்லையோதினும்
தராவணச்சிங்கையிர் தாழிசம்பவன்
சிராவணமெனத்திகழ்ந் தீத்தல்செப்புவாம்.

---

ஓ சவுனகாதிமுனிவர்களே! இராவணன் விநாயகமூர்த்தியை யநுட்டித்து வரம்பெற்ற வரலாற்றினைச் சொன்னோம் இப்பால் அகத்திய முனிவர் வந்தித்த திறத்தினைச் சொல்லுவோங்கேட்பீராக. முன்னங் கைலாசபதியாகிய சிவபெருமானிடத்தில்அளவற்றவரங்களைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களையு மாண்டுவந்த சூரபன்மனால் தேவேந்திரனானவன் தனதுபத்தினியாகிய இந்திராணியோடும் விண்ணுலகத்தைவிடுத்து இம்மண்ணுலகத்தில் அளவற்ற மகிமையுற்றிருக்கின்ற சீர்காழிப்பதியையடைந்து சிவபெருமானையருச்சித்தற்கோர் நந்தனவனம்வைத்து அதில் நின்றும் பிரதிதினம் பத்திரபுட்பங்களைக் கொய்து அருச்சித்து வாழ்ந்திருக்கின்றநாளையில், அச்சூரபன்மனுடைய ஆஞ்ஞையினால் மேகங்கள்சிறிதும் மழைபெய்யாமல்மாற அதனால் அந்த நந்தனவனமானது வாடி யுத்தகளம்போலாயது. பின்னர் இந்திரன் அதனைக் காணுந்தோறும் வருந்தி இதற்கினி என்னசெய்யவல்லோமென்று ஏங்கித் துயருற்றிருக்கின்ற சமயத்தில், சிவபிரானுடைய கிருபையினால் ஒருவாக்கானது (நதிவந்து நினது நந்தனவனத்திற் பாயும் அஞ்சாது பூஜைசெய்) என்று ஆகாயத்தின்கணுண்டாயது. அதனை இந்திரன்கேட்டு மனமகிழ்வுற்றிருக்கின்றபோது அவனிடத்து நாரதமுனிவர் தறசெயலாய்வர அவரை இந்திரன் பணிந்தெழுந்து, சுவாமி சூரபன்மன்செய்யுங் கொடுமைக்கஞ்சி மிகவுமனக்கவலையோடு மிப்பதியில் வந்தொளித்திருக்கின்றமையால் அக்கவலைதீரும்வண்ணம் சிவபிரானுடைய திருவடிகளை யருச்சிப்பதற்கு ஓர் நந்தனவனம்வைத் அஃதுமழையில்லாமல் வாடிப்போனதன்றி அதிலுள்ள மலர் மொட்டுமுதலானவைகள் கணவனை நீங்கியகற்பின் மகளிரைப்

போலாயின. ஆதலால் இனி அதற்குச் சமைம்பாயத்தக்க உபாயத்தினை யுணர்த்தி யருளவேண்டுமென்று பிரார்த்திக்க நாரதமுனிவர் மனமிரங்கி, இந்திரனே! கைலாயவரையிலிருந்த காவேரிநதியை முன்னர் சிவபிரான் அகத்தியமுனிவருக் களித்திருக்கின்றனர். அனையம்முனிவர் தமது கமண்டலத்திலடைத்துச் சையவரைச்சாரலில்வந்திருக்கின்றனர். அந்நதிபெருகிவருமாயின் உனது நந்தனவனம்பிழைக்கும். அது பாயும்படி செய்யவல்லவர் அவரேயாகும் ஆதலால் விரைவில் அவருடைய திருவடிகளை வழிபடக்கடவையென்று சொல்லிச்சென்றனர். இப்பால் இந்திரனானவன் தாயினுஞ்சிறந்த தயாநிதியாகிய விநாயகமூர்த்தியைப்பூசித்து அவரது திருவடித்தாமரைகளை அனந்தமுறை வேதாகமங்களாற்றுதிசெய்துநிற்க அதற்குக் கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து ஓ வலாரியே! நீ யாதுவேண்டி வந்தனையென்று திருவாய்மலர்ந்தனர் இந்திரன் மீட்டுந்தொழுதெழுந்து, சுவாமி! அடியேன் சிவபிரானைப் பூசிக்குமாறு நந்தனவனம்வைத்தேன் அஃது மழையில்லாமல் வாடுகின்றது அகத்தியமுனிவர் சையவரைச்சாரலில் வந்திருக்கின்றனர் அவர் தமதுகமண்டலத்திலடைத்துவைத்திருக்கின்ற காவேரிநதியை உலகமெல்லாம் போற்றும்படியாக இங்கு பெருகிவரச் செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்குக் கணேசமூர்த்தி அவ்வாறே செய்வோமென்று திருவாய்மலர்ந்து அவனுக்கு விடைகொடுத்து உடனே காகவடிவங்கொண்டு சையவரைச்சாரலையடைந்து அகத்தியமுனிவருடைய கமண்டலத்தின்மீதேறி யுட்கார்ந்தனர். அதை அம்முனிவர்கண்டு இனிவரும் விளைவையோசியாது தமதுகையாலோட்ட உடனே அக்கமண்டலநீரைக்கவிழ்த்து அக்காகவடிவத்தினின்றும் மாறிப் பிராமணப்பிள்ளை வடிவங்கொண்டு நின்றனர். அவ்வாறு நிற்பவரை அகத்தியமுனிவர்பார்த்து இவன் முன்னங்காகவடிவங்கொண்டு நமது கரகநீரைக்கவிழ்த்து இப்போது பிராமணப்பிள்ளைவடிவாகி நிற்கின்றானாதலால் இவன் அனுமானோ பிறனோவென்று சந்தேகித்து இவன்றிறத்தை முழுவதுமறிவோமென்றெண்ணி அவரைக்குட்டுமாறு தமது விரல்களைமடித்து ஓங்கிக்கொண்டு அவரருகிற்சென்றனர். அதற்கு விநாயகமூர்த்தி பயந்தவர்போலே வோட மீட்டும் அவரைப் பிடிப்பதற்கு அகத்தியர் பின்பற்றியோடினர்.

இப்பால் விநாயகமூர்த்தி அம்முனிவருக்கு அகப்படுவார்போலக் கிட்டியும் பின்னர் அகப்படாமல் அளவற்றதூரத்திலே எட்டியும் இவ்வாறு அம்முனிவர் தம்மைத்தொடர்ந்து வருந்தோறும் விட்டுவிட்டகன்று உலகமெல்லாந் திரிந்து ஓட்டங்காட்ட அதனால் அகத்தியமுனிவர் தமதுள்ளமுங் கால்களுந் தளர்வெய்தினர். அதனைக்கணேசமூர்த்தியறிந்து பிராமணப்பிள்ளை வடிவத்தைமாற்றி யானைமுகத்தோடும் அவரெதிரிற் பிரத்தியட்சமாகின்றனர். அவரைக்கண்டவுடன் அகத்தியமுனிவர் திகைத்து அன்பும் அச்சமுங்கொண்டு சாஷ்டாங்கமாகப்பணிந்தெழுந்து முன்னங்குட்டுதற்கு ஓங்கிய கரத்தினால் தமது சிரத்தில்உதிரம்குழம்பும்படியாகக் குட்டிக்கொண்டனர். அவ்வன்புக்கு விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து, ஓ தமிழ்முனியே! நீசெய்யுஞ்செய்கைக்கு மெச்சினோம் இனியதனைநிறுத்தி உனக்கு வேண்டியவரங்களைக் கேளென்று திருவாய்மலர்ந்தனர். அகத்தியமுனிவர் மீட்டுந்தொழுதெழுந்து, சுவாமி! சகளமாகியும் நிட்களமாகியும் சிருட்டிதிதி சங்காரமென்னு முத்தொழிலினை நடாத்த மும்மூர்த்திகளாகியும் அம்மும்மூர்த்திகட்கு மூலகாரணராகியு மிருக்கின்ற தேவரீர் திருவிளையாடல்கள் என்னாலறியப்படுவனவோ? சிவபெருமானாற்பெற்று கமண்டலத்திலடைத்துவைத்திருந்த காவிரிநீரைச் சிறிதுமில்லாதபடி தேவரீர் கவிழ்த்துவிட்டது யாதுகாரணங்கொண்டோ அறிகிலேன் அடியேன். சிவபிரானுத்தரவின்படி இப்போது பொதியைமலைக்குச்செல்கின்றேன் அங்கு அவரை யபிடேகிக்குமாறு அக்காவிரிநதியைக் கடாட்சித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்குவிநாயகமூர்த்தி மனமிரங்கி, ஓ குறுமுனியே! இந்திரன் சிவபிரானுக்கு அருச்சனைசெய்யுமாறு ஓர் நந்தவனம்வைத்தனன். அஃது மழையின்றி வாடுவதால் அதனைக்காப்பாற்றவேண்டி நினது கமண்டலநீரைக் கவிழ்த்தனம். இனி உனது கமண்டலத்தையு நிரப்பித் தருகின்றோமென்று திருவாய்மலர்ந்து மிக்கவிரைவோடு சென்று பாய்கின்ற அக்காவிரியின் சலத்தைத் தமது கரத்தினாலள்ளி அக்கமண்டலத்தில் வழியும்படியாக விடுத்துக்கொடுத்து பின்னும் அளவற்றவரங்களையுந்தந்து கரந்தருளினார். இப்பால் அகத்தியர் கணேசமூர்த்தி யளித்தருளிய தீர்த்தத்தைக் கைபற்றுப் பொதியமலைக்கெழுந்தருளினர் விநாயகமூர்த்தியினுடைய பெருங்கருணையால் அக்காவேரிநதியானது தேவேந்திரனுடைய நந்தனத்திற்பாய்ந்து கடலிற்போய்ச் சேர்ந்தது. இவ்வாறு விநாயகப்

பெருமானேவலாலுண்டான சக்காவிர்ந்தியானது இற்றைவரையில் அந்தந்தக் காலந்தோறும் முறைவழாது உண்டாகிவருமாயின் அவரது சரணாரவிந்தங்களையடுத்த அடியார்களுக்கு எக்காலத்தும் அவர் திருவருள் குறையுமோ குறையாது.

ஙகூ-வது. அகத்திய ருபாசித்தபடலம்

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

நாற்பதாவது

## காசிபர்முதலாயினோர்உபாசித்தபடலம்.

மூவரின்முதல்வனுக் காட்டமோனர்காள்
காசிரிகும்பசன் கண்டலோதினும்
தேவர்முனெழுவகைச் சீவர்தத்தமின்
மாவினன்முகவனை வழுத்தலோதுவாம்.

ஓ சவுனகாதிமுனிவர்களே! அகத்தியமுனிவர் விநாயகமூர்த்தியை வந்தித்து அளவற்றவரங்களைப்பெற்ற வரலாற்றினைச்சொன்னோம். இப்பால் காசிபர்முதலாயினோர் உபாசித்ததிறத்தினைச் சொல்லுவோங் கேட்பீராக. முன்னொருபிரளயமுடிவில் பிரமனானவன் தன்மனத்தால் ஏழுபுதல்வரையுண்டாக்கினான். அவருள் காசிபர் அறிவும் மேன்மையுமுள்ளவராகியிருந்தனர். அதனாலவருக்குப் பிரமன் ஏகாட்சரமந்திரத்தை உபதேசஞ்செய்து அதனைச் செபிக்குமுறைமையினையுந் தெருட்டி, மைந்தனே! நீ ஐம்பொறிகளையு மடக்கிக்கணேசமூர்த்தியினுடைய திருவடிகளில் மனதைநிறுத்தி நாம் உபதேசித்த அவரது ஏகாட்சரமந்திரத்தைச்செபித்துத் தவஞ்செய்து அவர்திருவருளால் சகல வான்மாக்களையுஞ் சிருட்டிசெய்யக்கடவையென் றனுப்பினன். அவ்வாறே காசிபர் சென்று தேவவருடம் ஆயிரவருடம்வரையிற் றவஞ்செய்துகொண்டிருந்தனர். அதற்குக் கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து, அங்குசம் - பாசம் - தாமரைமலர் - ஒற்றைக்கொடு என்னுமிவைகளைத் தாங்கியிருக்கின்ற நான்கு திருக்கரங்களோடு மார்பில் முத்தார

மும் மதம்பொழிகின்ற துதிக்கரமும் முடியில் இரத்நகிரீடமும் அத
ன்மீது மூன்றும்பிறையும் செவியிற்குழைகளும் விளங்க மூஷிகவா
கன மூர்ந்து அளவற்ற சூரியர்களை அழியச்செய்யவல்ல பிரகாசத்
தோடு அவரெதிரிற்பிரத்தியட்சமாயினர். உடனே காசிபர் விரைந்
தெழுந்து அனந்தமுறை வலம்வந்து மிக்கவுள்ளன்பினோடுந் துதிசெ
ய்து விழிகளில் ஊற்றெடுத்ததுபோல நீர்த்தாரைகளைச்சொரிந்து அ
ளவளாவிய அற்புதத்தொடும் ஆனந்தக்கூத்தாடி இருகரங்களையுஞ் சி
ரமேற்கூப்பிகின்றனர். அதனை விநாயகமூர்த்திகண்டு, காசிபனே! உ
னக்குவேண்டிய வரங்களைக்கேள் தருகின்றோமென்று திருவாய்மலர்
ந்தருள, சுவாமி! உலகத்தில் அடியேன் உயிர்த்தொகைகளைச்சிருட்டி
செய்யுமாறு வரங்கொடுத்து தேவரீர் கசியபநந்தனென்னும் பெயரோடு
எனக்குப் புத்திரராகி வரவேண்டுமென்று பிரார்த்திக்க, அதற்கவ்வா
றே கிருபைசுரந்து தமது அடியவருள்ளக் கோயிலையடைந்தனர். இ
ப்பால் காசிபர் தமது ஆசிரமத்திற்குச்சென்று தமது பத்தினியர் ப
தின்மரோடுங்கூடிச் சுகித்திருக்குங்காலையில் அவர்கள் கருப்பத்தி
னின்று தேவர்முதலிய அளவற்ற சராசரங்கள் உண்டாயின. அவர்க
ட்குக் காசிபர் விநாயகமூர்த்தியினுடைய திருமந்திரங்களைச் சோதித்
தெடுத்து-ஒன்று-நான்கு-ஐந்து-எட்டு-பன்னிரண்டு - பதினாறு - பத்
தொன்பது - என்னுமெழுத்துக்களையுள்ள மந்திரங்களை முறைமையப்ப
டி உபதேசித்தனர். பின்னர் அவர்கள்யாவரும் ஒவ்வொரு மந்திரங்க
ளைக் கடைப்பிடித்து விநாயகமூர்த்தியை வேறுவேறாகத் தங்களுள்
ளத்திற் றியானஞ்செய்து தேவவருடத்தில் ஆயிரவருடந் தவஞ்செய்
தனர். அதற்குக் கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து அவர்கள் தம்மை
எவ்வாறு தியானிக்கிறார்களோ அவ்வாறே சிலர் முன் சிங்கவாகனத்தி
ன்மீதும் சிலர் முன் மயில்வாகனத்தின்மீதும் சிலர் முன் பெருச்சா
ளிவாகனத்தின்மீதும் சிலர்முன் மான்வாகனத்தின்மீதும் சிலர்முன்சூ
ரியப்பிரகாசம்போலவும் சிலர் முன் சந்திரப்பிரகாசம்போலவும் சிலர்
முன்பவளநிறம்போலவும் சிலர் முன் மேகநிறம்போலவும் சிலர் முன்
இரண்டுகைகளோடும் சிலர் முன் நான்குகைகளோடும் சிலர்முன் ஆ
றுகைகளோடும் சிலர் முன் எட்டுக்கைகளோடும் சிலர் முன் பத்துக்
கைகளோடும் - சிலர் முன் - பன்னிரண்டு கைகளோடும் சிலர் முன்
பதினெட்டுக்கைகளோடும், சிலர் முன் - ஆயிரங்கைகளோடும், சிலர்
முன் வாலப்பருவமுற்றும், சிலர் முன்-தருணப்பருவமுற்றும், சிலர்

யாது வரங்களைக் கொடுத்துவிட்டனை. இனி உன்னாலும் நம்மாலும் அவன் அழிபவனன்று. கன்மவசத்தால் வருங்கலக்கங்களை யாவர் விலக்கவல்லவர்கள்? அந்தோ! தேவர்களனைவோர்க்குந் துன்பத்தினைவிளைத்துவிட்டனை. வேதாகமநெறிகளனைத்துங்கெடச்செய்தனை, நம்போலிகட்கெல்லா மிகுந்த தாழ்வினையுண்டாக்கினை, சகலதுட்டர்களையு நாசஞ்செய்வதற்குச் சிவபிரானையன்றி ஏனையோரால் முடிவதன்று, என்றிவ்வாறு இருவரும் வார்த்தையாடிக்கொண்டிருக்கின்ற சமையத்தில் தொலையாமல் வல்வினைதொடர்ந்து வருமாறுபோல அச்சிந்தூரன் அப்பிரமனையே தேடிவந்து, அவன் விண்டுவோடு வசனித்திருக்கின்றமையைக் கண்டனன். பின்னர் அவ்விண்டுவை அப்பாதகன் நோக்கி, ஓ மகாமாயனே! நீ என்னோடு யுத்தஞ்செய்யவாராமற் போவையெனில் உன்னையும் உன்னையடுத்திருக்கின்ற இவனையும் இந்நிமிடத்திற் சாம்பராக்கிவிடுவேனென்றனன். அதனைக்கேட்டலும் விண்டுவுக்கு மனநடுங்கி, அந்நடுக்கத்தை வெளியிற்றோன்றாபடி தம்முண்மறைத்துக்கொண்டு, இவனை வணக்கத்தோடு நல்லவார்த்தைகளாடித் தப்பித்துக்கொள்ள வேண்டுமென்று நிச்சயித்து, மிகுந்தவினயத்துடனே அவன் முகத்தைநோக்கி, ஓ சுத்தவீரனே! மலையோடு மலையுத்தஞ்செய்தால் மானமும்புகழுமுண்டாகும். அம்மலை புனலோடு யுத்தஞ்செய்தால் பராக்கிரமமுண்டோ? யானோ ஆலிலையில் ஒன்றிக்கொண்டிருக்கின்ற பொய்மையன். இவன் தன்பிராத்விகத்தொழிலினால் காவற்றலைமைபூண்டிருக்கின்றவன்-இப்பிரமனோவென்றால்வண்டேறத்தாங்காதபூவில் வசித்தலைக்கொண்டஎளியன்-இதல்லாமல் சாத்திரங்களைக்கூறி உலகங்களையுண்டாக்கும் ஓரோதொழிலினைக்கற்றவன். ஆதலால் யாங்களிருவரும் உன்னோடு யுத்தஞ்செய்யமாட்டோம். நீயோ எல்லாரையும் வெல்லத்தக்கபராக்கிரமசாலி. உன்னோடு யுத்தஞ்செய்வதற்கு உலகமனைத்தையுஞ் சங்கரிக்குந் தொழிலினையுடைய வொருவனிருக்கின்றான். அவனோ மகாபலத்தையுடையவன். இதுகாறும் அளவற்றபேரை அதஞ்செய்திருக்கின்றான். யாங்களிருவருங் கர்விக்கின்றபோதெல்லாம் அவன்வந்து எங்களாண்மைகளை யடக்கியிருக்கின்றனன். மலைகளுக்கெல்லா மேலான மகாமேருவை அவன்கரத்தில் வில்லாப்பிடித்திருக்கின்றான். பர்வதங்களனைத்தும் ஒன்றாய்த் திரண்டதற்பான புஜபலபராக்கிரமத்தை யுடையவன். அவனுடைய பத்தினிகள்யாவுக்கும் அரசனாகிய இமாசலராசன் புதல்வி. அவ

ன்வீற்றிருக்குமிடம்மா மௌளிமலை, இன்னும் இத்தன்மைத்தான அளவற்ற பெருமிதங்களினால் அவன் யாவருக்கு மிறைவனாகி யிருக்கின்றனன். ஆதலால் அவனோடு நீ எதிர்த்து யுத்தஞ்செய்து உனது பராக்கிரமங்களைச் செலுத்துவையாயின் அதனால் உனக்கு மானமும் புகழுமுண்டாவதன்றி. எல்லாவுலகமும் உனது கீர்த்தியைப்பாராட்டும். அவ்வாறின்றி ஓராலிலைக்கும் அரவிந்தத்திற்கும் இலக்கான குறைந்தவலியினையுடைய எங்களோடு நீ எதிர்ப்பது மிகவும் எளிமையென்றுசொல்லினர்.

அவ்வையனுரையுஞ் சிந்தூரன்கேட்டுச் சிவபிரானையே யுத்தஞ் செய்வதற்கு லட்சியமாக்கி விண்டுவின்சொல்லாகிய மதுவினைப்பானஞ்செய்து வெறிகொண்டவனைப்போலக் குதித்து ஊழிக்காலத்திலுண்டாகின்ற இடியேற்றினையொப்ப வார்ப்பரித்துக் கைலாயகிரியை நோக்கிப்பாய்ந்தனன். அப்பால் விண்டுவும் பிரமனும் அவன் செய்த கோலாகலத்திற்கஞ்சித் தமதுசெவிகளைப்பொத்திக்கொண்டு, மண்ணிற்செய்தமாவைப்போலவும் மரத்திற்செய்தபிரதிமைபோலவும் அசைவற்றுநின்றார்கள். தேவர்களெல்லாம் அறிவற்றுவீழ்ந்தார்கள். மற்றைய சீவராசிகளனைத்தும் எவ்வாறாயினவோ அதனை யாவராலுஞ்சொல்லிமுடிவதன்று. இவ்வாறுகயிலையைநோக்கிப் பாய்ந்துவந்தசிந்தூரனைச் சிவபிரான் யோகத்திலிருந்தமையால் அவன் வந்ததை அறிந்திலர் - அவர்க்கருகிருந்த சிவகணங்களிற் சிலர் அவ்வவுணனைக்கண்டமாத்திரத்தில் பயந்துசோர்ந்தார்கள் சிலர் நெடுமூச்செறிந்து ஓடிப்பதுங்கினார்கள் - உமாதேவியாரும் அவனைக்கண்டவுடன் மனங்குழைந்து படந்தனர். சிவபிரானை யுத்தத்திற்குவருமாறு அறைகூவிய சிந்தூரன் பின்னர் உமாதேவியைப்பார்த்து, அழகில் இவளின் மிகுத்தவர்களை ஒருவரையுங்காணேமாதலால் எவ்விதத்திலேனும் இவளைக்கொண்டுபோகவேண்டுமென்று நினைந்து அம்மனுக்குநேராகவந்தனன். அவன் வரவைக்கண்ட உமாதேவியார் நடுங்கிப் பூனைவரக்கண்ட கிளிபோலப்பயந்து அருகிலிருந்த தமது நாயகரைநோக்கி, சுவாமி! முனிவர்கள் தேவர்கள் முதலாயினோர் உருகிய உள்ளத்தோடு வழிபாடு செய்ய அவர்கட்குத் தருமாதிநாற்பொருள்களையு முதவவல்ல தேவரீர்க்கு நீண்டதியானத்திலிருக்கும்படியான *பொருள் வேறில்லையே இனிசெய்யாமற் செய்கின்ற இத்தியானத்தை விடுத்து, முன்னர்தே

வீரர்க்குப் பிழையினைச் செய்தவர்களையெல்லாங் கண்ணாலும்-நகையாலும்-உகிராலுங்-காலாலுங்கடந்து ஜயங்கொண்ட பராக்கிரமத்தினை இப்போது என்னைத் துன்பஞ்செய்ய அஞ்சாதுவருகின்ற மேலானவலியினையுடைய இப்பாதகனிடத்துங் காட்டியருளல்வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதைக்கேட்டலுஞ் சிவபிரான் விழித்தருளி, உடனேவேங்கையாதனத்தை விட்டெழுந்து, கரத்திற்றடியுஞ் சூலமேந்தி மகாஉக்கிரத்தோடும் அவனெதிர்சென்றனர். அவனும் சுவாமியை நீருக்குவேனென்று தனதுகையா லணைத்தழைப்போயினன். அச்சமயத்தில் அவ்விருவர்மத்தியினும் இமைக்குமுன் விநாயகப்பெருமான் பிராமணவடிவங்கொண்டு மிகுந்தபிரகாசத்தோடும் வந்துநின்று சிவபிரானையுஞ் சிந்தூரனையும்பார்த்து, நீங்களிப்போது ஒருவரையொருவர் தழுவிப்பிடித்தலைவிட்டு உங்கள்பராக்கிரமத்தை அத்திரசத்திரங்களினால் யுத்தஞ்செய்து காட்டுங்கள் பார்ப்போமென்று அவர்கண்மத்தியில் தமது பரசாயுதத்தினைநாட்டி ஒருபாரிசத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்தனர். அந்தணவடிவாய்வந்த விநாயகப்பெருமான் கூறிய வார்த்தைக்கு இருவருஞ்சம்மதித்து, அத்திரசத்திரங்களால் நெடுநேரம் யுத்தஞ்செய்தார்கள். பின்னர் சிந்தூரன் அதனைவிடுத்து, இவ்வாறு நீடித்து யுத்தஞ்செய்வதில் செயமடைவது அரிதென்று நினைத்து, சிவபிரானைத் தனது கையினாற் றழுவச்சென்றனன். அத்தருணத்தில் இருவர் மத்தியினு நாட்டியிருந்த பரசானது எழும்பிச் சிந்தூரன்மீது தாக்கித் தடுத்தது, அத்தடையைத் தடுத்துக்கொண்டு செல்லமாட்டாது மீண்டுந்திரும்பிய சிந்தூரனைப் பிராமணவடிவமாய்வந்த விநாயகப்பெருமான்பார்த்து, இனி நீ காலகாலராகிய சிவபிரானுடைய சூலாயுதத்தினால் நீறாகுவை. அமரர்முதல்யோரை ஆலபோசனஞ்செய்து ஆட்கொண்டருளிய கிருபாமூர்த்தியையும் பகைக்கலாமோ? திரிலோகங்களினும் அவரைப்பகைத்து வாழ்ந்தவர்கள் யாவரிருக்கின்றனர்? இனி தப்பியோடிப்போகும்வகையைத் தேடக்கடவையென்று திருவாய்மலர்ந்தனர், அதற்குமேல் சிந்தூரன்பயந்து இனியாமிங்கு நீடித்திருந்தால் இறுதிநேருவதும் ஐயமில்லையாதலால் இவ்வந்தணன்கூறிய சொல்லே உறுதியாகுமென்று மனத்தின்கணிச்சயித்து, உடனே அவ்விடத்தினின்று நீங்கிப் புவனத்திற்றனன். பின்னர் சிவபிரான்யுத்தத்தைநிறுத்திச் சந்தோஷமுற்றி

இப்பால் உமாதேவியார் அந்தணராய்வந்த விநாயகமூர்த்தியைப் பார்த்து, ஐயா! எதிர்த்துவந்த சத்துருவை எளிதிற்கொலையவிட்ட நீ யாரென்றுகேட்டனர். அதற்கவர் வாய்மொழியாலுத்தரங்கூறாது தாமெடுத்திருந்தபிராமணவடிவத்தைமாற்றி, இருமருங்கினுஞ் சித்திபுத்திகளோடும் நான்குதிருக்கரங்களோடுஞ் சிங்கவாகனமூர்ந்து தமது சுயரூபத்தைக்காட்டியருளி, ஓ புவனகாரணியே! உன்னைப்பிடிக்க அதிவேகத்துடனேவந்துசென்ற சிந்தூரனைச்சங்கரிப்பதற்கு யாம் உனது உதரத்தின்கண் அவதரிப்போம். இதனைமறக்கற்க. இனியாவர்க்கும் அஞ்சற்க. என்றுசிலஇனியவார்த்தைகளையாடிக் கரந்தருளினர். அதை உமாதேவியார்கேட்டுச் சந்தோஷமாயிருந்தனர். இப்பால் முன்னம் பூலோகத்தைநோக்கிச்சென்ற சிந்தூரனால் அளவற்றசோலைகள்-கால்கள்-ஆறுகள்-வனங்கள்-நகரங்கள்-நாடுகள்- முதலானவைகளோடு, அளவிறந்தவீரர்கள் வேதியர்கள் பெரியோர்கள் முதலாயினோரெல்லாந் தழுவப்பட்டு, சர்வசங்காரகாலத்தைப்போலே எங்கும்நீறாகிவிட்டது. வேதவொழுக்கங்கள்-தவங்கள்-தானங்கள்-மகங்கள் - தருமங்கள்-முதலியவைகளெல்லாஞ்செய்வாரின்றி, இந்திரன்முதலிய தேவர்கட்கு அவிற்பாகமுதலானவைகள் கிடையாமல் மிகுந்தபசியினால் வாடித்துயரமுற்றார்கள். பூவுலகமுழுவதும் பாழ்படுத்தியஅப்பாதகன் மீட்டும் வானுலகத்தையும் பாழ்செய்யவந்தனன். அதைத்தேவர்களறிந்து பயந்து, யாவரும்பிரமதேவனிடத்திற் சென்றுபணிந்து முறையிட்டார்கள். அதைக்கேட்ட பிரமதேவன்தானுந் துயரத்துளழுந்தி, இனிஇதற்கென்னசெய்யக்கடவோமென்று மனங்கலங்கி, பின்னர் ஒருவாறுதேறி எல்லாத் தேவர்களோடும் விநாயகமூர்த்தியைத் துதிசெய்வதாயினான்.

யாவனொருவனயனெடுமாலகிலாண்டமுமீன்றெடுக்கின்றான்
யாவனொருவன் குணமாயுமியம்புமூவருருவாயு
மேவுகுணாதீதனுமாயும்விளங்காநின்றானத்தகைய
தேவன்கமலத்தாளிணைக்குச்சிரமேயம்வணக்கஞ்செய்கின்றேம்.

பூதமைந்துமிருசுடரும்புகழ்சேர்துறக்கமுடிதிசைவெற்
போதுநதிகுப்பகரியக்கருரகராக்கர்மனிதர்கள்கோக்
காதிவிநகங்களுஞ்செந்துக்களுநானூகமுமுழுவ
மாதனிலைதவழ்தலைவனருளாலவற்குப்பணிகின்றாம்.

உலகமுழுதுந்தனதுதரத்துறைவித்திருக்கின்றான்யாவ
னிலகுமணுநிசித்தாந்தமாகியிருக்கின்றான்யாவ
னுலகில்பலவேறுமுருவமுடையான்யாவன்மலமறுஞா
வலகிலறிவன்யாவனவனடித்தாமரைக்குட்டணிகின்றாம்.

யாவனொருவனடியாரையெய்த்தவிடத்திற்புரக்கின்றான்
யாவனொருவன்றயித்தியராலினைவாரையழிக்கின்றான்
யாவனொருவன்வழிபடுவோரிடருக்கிடைப்புரிகின்றான்
யாவனிகரிலாவிறைவனவன்பொற்றாள்கட்டணிகின்றாம்.

இவ்வாறு பலமுறை தோத்திரங்கள்செய்து, சகல சீவராசிகட்கும் ஆதாரபூதமாயிருக்கின்ற கர்த்தனே! வேதவொழுக்கம் தருமம் தான முதலானவைகளெல்லாங் கெடுமாறும், சிறியோர்கள் பலவிடர்களுள் வீழுமாறும், இடைவிடாது தீங்குசெய்துவருகின்ற கொடும்பாவியாகிய சிந்தூரனென்பவன் எந்தவிதத்தாற் றேவரீருடைய திருவருளால் நிருமித்திடப்பட்டனனோ அறிகின்றிலேம். ஓ தேவேசா! ஓ மகாதேவா! தேவரீரைத் தீனரட்சகரென்று எல்லாவுயிர்களுந் துதிசெய்கின்றதால், பாதகங்களனைத்தும் ஓர் வடிவமாகிவருகின்ற சிந்தூரனைச் சங்கரித்து அடியேங்களைத் துன்பமணுகவொட்டாமற் காத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்கு விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து அவர்களெதிரிற் பிரத்தியட்சமாகி, மிக்கதுயரத்தோடும் பணிந்தெழுந்து தமக்கெதிரில்நிற்கின்ற தீனர்கண்மீது தமது கிருபாநோக்கத்தினைப் பரப்பி, தேவர்களே! நீங்கள்செய்த தோத்திரங்கட்கு மனமுவந்தோம். அத்தோத்திரங்களை யாவரேனும் நமது சந்நிதியிற் சொல்லுவோர்களாயின் - அவர்களது நோய் - வறுமை - இடர் - அல்லல் - முதலியதுன்பங்களனைத்தையுமறுத்து, அவ்வவர்கள் கோரிய இட்ட காமியார்த்தங்களைக் கொடுப்போம். பிரதிதினந்துதிப்போர்கட்கு எக்காலத்துந் துன்பமென்பதணுகாது. யாம் உமாதேவி வயிற்றிற் புத்திரனாக அவதரித்து உமக்கு துன்பத்தினை விளைத்துவருஞ் சிந்தூரனை சங்கரித்து, மீட்டும் பழையபடி திரிலோகங்களையுமளித்து ரட்சிப்போமென்று திருவாய்மலர்ந்து தமது திருவுருவைக் கரந்தருளினர். இவ்வாறு அண்டரண்டபுவனங்களாய் மற்றப்பொருள்களனைத்துமாய் எல்லாவுயிர்கட்கும் உயிராய் காரணபூதமாய்ப் பிரமமுமாகி, அவற்றிற்குக் காட்சியாயளவுபடாமல் விளங்குந் தேவைக்கமாகிய விநாயகக்கடவுள் திருவாய்மலர்ந்து காந்தனுடன்

உமாதேவியுதரத்திற் கருவாயினர். அக்குறிப்பை அத்தேவியாரறிந்து சிவபிரானைத் தொழுதெழுந்து, சுவாமி! அடியாள் வயிற்றிற் கருப்ப ந்தரித்திருக்கின்றமையால் அவ்வுட்டினந்தணியும்படியாகக் குளிர்ச்சியோடுங்கூடி வாசனைவீசுகின்ற பலவிருக்கங்களையுடைய சோலையும், அனந்தவளங்களை யுடைத்தாயிருக்கின்ற புனிதமுள்ள நதிகளுமெங்ஙனமிருக்கின்றனவோ அங்ஙனமடியாளைச் சேர்க்கவேண்டுமென்று பிரார்த்திக்க, அதைச் சிவபெருமான்கேட்டு உடனே விஷபவாகனத்தின்மீது தானுந் தேவியுமாக ஆரோகணித்து அளவற்ற தேவர்கள் புடைசூழ்ந்து வரும்படியாகப் பூவுலகத்திலிழிந்து, சோதிமரம்-அசோகு கடம்பு - சூதம் - நாகம் - வாழை-புன்னை - குருந்து - தேக்கு-ஆரம் - அகில்-குந்தமம்-வேங்கை - சண்பகம் - சாளம்-வன்னி-பலாசு அரசு-அத்தி - இலவங்கம் - நரந்தம் - புன்னை-பாடலம் - மந்தாரம்-முருக்கு - கொன்றை - தாதகி - வஞ்சி-கூதளம் - குரவு - கோங்கு-மாரதேற்று - வெள்ளில் - நெல்லி - வருக்கை - இலவு - தான்றி - வகுளம் - நெய்தல் - முன்னம் - வில்வம் - மாதளை - வெட்பாலை - குறிஞ்சி - வெட்சி - நொச்சி - கற்பூர வாழை - கமுகு - தேங்கு - கிரந்து-மயிலை - மாதவி - மல்லிகை - மௌவல் - முல்லை - பித்திகை - ஏலம் முதலாயுள்ள விருக்கசாதிகளும், கருங்குவளை - ஆம்பல் - கமலம்-உற்பலம்-அனிச்சமுதலிய புட்பங்கள் மலர்ந்து அன்னமுதலியபட்சிகள் நிறைந்து விளங்குகின்ற அளவற்ற பொய்கைகளும், ஒப்பற்றவளங்களோடு மலிந்து வெள்ளியதிரைகளைப் பரப்பி நுரைத்து விளங்குகின்ற அனந்தம்பொய்கைகளும், கொண்டல்க ளனைத்தும்வந்து மேய்தலைச் செய்யத்தக்க சிறந்தநதிகளும், சந்திரகாந்தம் பளிங்குமுதலியவைகளாற் கட்டப்பட்டிருக்கின்ற அளவற்ற உப்பரிகைகள் நிறைந்த வீடுகளும், குயில் - புறு - கிளி - பூவை - மயில் - கின்னரம்-வண்டு முதலியவைகள் உலாவிப் பலவகைப்பட்ட கீதங்களைப் பயில்கின்ற வெண்மணற் குன்றுகளும் சிங்கம் - புலி - காடி - யானை - முதலியவைகள் உல்லாசமாய் உலாவுதல்செய்கின்ற அனந்தம்பொதும்பர்களும், இன்னும் இத்தன்மைத்தான எண்ணற்றவளங்களை வாய்ந்த பரியிலி என்னும் வனத்தினையடைந்து; அரிச்சந்தனம்-கற்பகம்-சந்தானம்-பாரிசாதம்-மந்தாரமென்னும் ஐவகைத்தருக்கள் அளவற்றனவாக நெருங்கவும் பதுமநிதி சங்கநிதி என்னும் இருவகைநிதிகள் ஆயிரமாயிரமாக நிறைந்த பலபொய்கைகள் புடைசூழவுமாக வச்சிரம்-கோமே

தகம் - புட்பராகமுதலிய நவரத்நங்களைக்கொண்டு சிந்தாமணியினால் அழகுபொருந்தச் சமைத்திருக்கின்ற மண்டபத்தில் தாமுந் தமதுதேவியும் இடபவாகனத்தினின்றுமிறங்கி யமர்ந்தருளினர். இவ்வாறு அச்சோலையின்கணிறைந்த புட்பங்களின் பரிமளங்களோடு கூடிவருகின்ற சிறுதென்றலானது தமது திருமேனிகளிற் படும்படியாக அம்மண்டபத்தினடுவில் வீற்றிருக்கின்ற அம்மையப்பருடைய சந்நிதானத்தின்முன்னர், சிலர் ஆனந்தக்கூத்தாடினார்கள். சிலர் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்தார்கள். சிலர் கைகூப்பி எதிர்நின்றார்கள். சிலர் பாடல்களினாற் றுதித்தார்கள். சிலர் நான்மருங்கினுஞ் சூழ்ந்திருந்தார்கள். சிலர் பணிவிடைகளை நடாத்திவந்தார்கள்.

இவ்வித வைபவங்களோடு வீற்றிருக்கின்றகாலத்தில் சிலநாள் சிவபெருமான் யோகத்திலிருந்தனர். உமாதேவியார் தமது பாங்கியரோடு நடந்துசென்று வெண்மணற் குன்றுகளிலேறியும், பளிங்கு உப்பரிகைகளி லுலாவியும், மரநீழல்களிலிருந்தும் மலைகளின்மீதி லேவர்ந்தும் பொய்கைகள் ஓடைகள் நதிகள்முதலான விடங்களையடைந்தும், மிகுந்த இன்பத்தோடு தமக்கிஷ்டமானபடி விளையாடல் செய்திருந்தனர். இப்படியிருக்குநாளையில் ஒருநாள்சந்திர சடாதரமூர்த்திக்கு அன்பனாகிய கயமுகாசுரனென்பவன் அங்குவந்து, சிந்தாமணியாற் சமைத்திருக்கின்ற விசித்திரமான மண்டபத்தினையடுத்து, அதனைத் தனது கொம்பினால் முட்டியெடுத்து நிலத்தில் விழத்தள்ளினான். என்று சூதபுராணிகர் சொல்லலும் சவுனகாதிமுனிவர்கள் கைதொழுது, சுவாமி! சிவபிரானுக்கு அன்பனாயிருக்கின்றவன் கயமுகத்தையுடைய ராட்சசனானதற்குக் காரணமென்ன? அன்றியும் அவன் அன்பனாயிருக்கின் கயவனைப்போலச் சிவபிரானைச் சற்றுமதியாமல் அவரெழுந்தருளியிருக்கின்ற மண்டபத்தை முட்டி நிலத்தில் வீழ்த்தவேண்டுவதென்ன? அந்தவரலாற்றினையுஞ் சொல்லியருளல்வேண்டுமென்றுகேட்டார்கள். அதற்குச் சூதபுராணிகரிசைந்து, ஓ சவுனகாதிமுனிவர்களே! முன்னொருயுகத்தில் மயேசுரனென்னும் ஓரரசனிருந்தான். அவன் நான்கு வேதங்களையுமோதி வஸ்து நிச்சயந்தெரிந்து பதினெண்
ராணங்களையும் வழுவறக்கேட்டு தருமசாத்திரங்களை யறிந்து நடாத்
பூதி உருத்திராக்கமுதலியவைகளை யணிந்து திரிகாலங்களினுந்
சயில்வழாது முப்பத்திரண்டு லட்சணங்களையுங் குறைவறவா
சங்களைத் துறந்து மெய்ஞ்ஞானச் செல்வத்தினிலோங்கி,

அஷ்ட ஐசுவரியங்களோடு மநுநீதிமுறைமைப்படி உலகமுழுவதுந்
தனதாசாட்சியினைச் செலுத்திக் குறைவற வாழ்கின்றநாளையில், ஓர்
நாள் பிரகஸ்பதிதேவர் அவ்வரசனிடத்திற் செல்ல அவ்வரசன் அவ
ரை எதிர்கொண்டுசென்று அழைத்துவந்து விசித்திரமான ஓராதன
த்தின்கணிருக்கவைத்து அர்க்கியபாத்திய ஆசனமுதலியவைகளைக் கொண்
டு பூசித்து சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து மிக்கபத்தியோடு பலமு
றை தோத்திரஞ்செய்துநின்றனன். பிரகஸ்பதிதேவர் அவன்செய்த
வழிபாட்டிற்கு மனமுவந்து, அரசனே! யாம் உனது ஆண்மையையு
ம் - புகழையும் - நீதியையும் - ஊக்கத்தையும் - பண்பினையும்-பலவா
றுகேள்வியுற்று உன்னைக்காண்டுபோமாறு இங்குவந்தனம் ஆனால் இது
காறுங் கேட்டதைவிட இப்போது உனது குணாதிசயங்களை நேரிற்
காணுமிடத்து எண்மடங்கு அதிகமாகவிருக்கின்றன. நமதுபாதங்களி
லன்போடுவணங்கிய உனது சிரமானது முனிவர்கள் தேவர்கள் பெ
ரியோர்கள் முதலியோரால் வணங்கப்படுகவென் றநுக்கிரகித்தனர்.
அதை அவ்வரசன்கேட்டவுடன் அளவற்றமகிழ்ச்சிகொண்டு, சுவாமி!
தேவரீர் கொடுத்தருளிய திருவாக்கு எப்போது அடியேற்குப் பலித்
திடுமென்று கேட்டனன். அதற்கு பிரகஸ்பதி தேவர்சொல்லுவார்,
அரசனே! நீ எப்போது யானையினிடத்தி லுற்பத்தியாகின்றனையோ
அப்போது நமது வாக்கு பழுதிலாதுபலிக்கும். இதுவேயுமன்றி உட
னே நீ சிவானுக்கிரகத்தினால் முத்தியுமடைவை யென்று சொல்லி எ
ழுந்துபோயினர். பின்னர் ஓர்காலத்தில் மயேசுரராசன் தனது நாடுக
ளையெல்லாங் காத்தற்பொருட்டு அளவற்றசேனைகளோடும் பட்டண
த்தினின்றும் வெளிக்கொண்டு வழியிற்செல்லுகின்றபோது, அவனு
க்கெதிரே நாரதமுனிவர்வந்தனர். அப்போது முன்னர் அவ்வரசனுக்
குப் பிரகஸ்பதிதேவர் கொடுத்தருளிய வாக்கு பலிக்குங்காலஞ் சமீப
த்ததினாலோ, அல்லது அவனைப்புடைசூழ்ந்து அளவற்றசேனைகள் நெ
ருங்கிப்போவதினால் தனது பார்வையெட்டாமற் போனதினாலோ, நா
ரதமுனிவருக்கு அவ்வரசன் வந்தனைமுதலிய வழிபாடுகளைச் செய்யா
மற்சென்றான். அதனால் அம்முனிவருக்கு மிகுந்த கோபமுண்டாகி,
ஓ அரசனே! நீ காட்டிற்சஞ்சரிக்கின்ற யானைபோல என்னைவன
ங்காது செல்கின்றனையாதலால் இந்தச்சனனமொழிந்தபின்பு யானை
முகத்தினுள் யானைமுகனாகப் பிறந்து கஜமுகாசுரனென்னு நாம
னைக் கைக்கொண்டு சிலகாலத்தின் பின்னர் சிவபெருமான்கரத்

ல் உனது சென்னி அறுபட்டு மீட்டுமவருடைய கிருபையினாலே கயிலாயத்தின்கண் மேன்மைபெற்றிருப்பாயென்று சொல்லிச்சென்றனர் இவ்வார்த்தைகளனைத்தும் நீதியிற்சிறந்த மஹோசராசன் செவியிலேறலும், ஆ ஆ! என்ன அற்புதம் அற்புதமென்று சந்தோஷித்து, முன்னம் பிரகஸ்பதிதேவர் சொல்லியவாறும் இப்போது நாரதமுனிவர்கூறியசெய்தியுமொத்தாங்கதல்லவாவென்று ஆச்சரியமுற்று பின்னும் அளவற்றநாள் அந்தச்சரீரத்துடனே அரசுசெய்திருந்து தனது ஆயுள்முடிந்தபின்பு பரியவனத்தில் வாசமாயிருந்த யானையின்பால் யானைமுகனாகப்பிறந்து கஜமுகாசுரனென்னும் பெயரைவகித்து பூர்வக்கியானமுஞ் சிவபக்தியுமுடையவனாய் அளவற்றநாளிருந்து, முற்சனனத்தில் தனக்குப்பிரகஸ்பதிதேவரும் நாரதமுனிவருஞ் சொல்லியதையும் அச்சொல்லின்படி மறுசனனத்திலடைந்ததையும் யோசித்து தன்னையாட்கொள்ளவல்ல சாமியையுந்தியானித்துவந்து, சிவபிரானெழுந்தருளியிருக்க மண்டபத்தைத் தனது கோட்டினால் முட்டித்தள்ளினன். ஓ சவுனகாதிமுனிவர்களே! இனி அவன்பிரமானது முன்னம் பிரகஸ்பதிதேவர்கூறியபடி முனிவர்கள் தேவர்கள் பெரியோர்கள் முதலியோரால் பணியத்தக்க மேன்மையைப் பெற்றிருந்த வரலாற்றினையுஞ் சொல்லுவோம் கேட்பீராக.

இவ்வாறு கஜமுகாசுரனானவன் அன்பர்க்கெளியனாகிய சிவபிரானமர்ந்திருந்த மண்டபத்தை இரக்கமில்லாதவனைப்போலத் தள்ளுதலும் அங்கிருந்ததேவர்கள் முதலியோரெல்லாம் பயந்தார்கள். உல்லாசமாய்ச்சென்று உலாவல்செய்திருந்த உமாதேவியார் தமதுபாங்கியரோடு வந்து யோகத்திலிருந்த கர்த்தருக்கு அதனையறிவித்தனர். உடனே சிவபிரானுக்குக்கோபமுண்டாகி அவ்வசுரன்மீது தமதுசூலாயுதத்தை விடுத்தனர். அச்சூலமானது அவனுடல்முழுவதும் நொருங்கிப்போய, அதனாலவன் சோர்வுற்றுச் சிவாயநமவென்றுசொல்லி நிலத்தில்விழுந்தனன். இவ்வாறு கஜமுகாசுரனானவன் சோர்ந்துநிலத்தில் விழுந்தபோது சொல்லிய மந்திரமானது சிவபிரான்செவியிலேறலும் உடனே அவருக்கு அவன்மீது கிருபையுண்டாகி அச்சோ? கஜமுகாசுரன் நம்மைத்தியானிக்கு முள்ளத்தையுடையவனென்றறியாமல் மண்டபத்தைத் தள்ளினனெனக்கொண்டோமேயென்றுமனமிரங்கி, அவன்முகத்தை நோக்கிப் பார்த்தருளி, அன்பனே! உனக்குவேண்டிய வரங்களைக் கேளாயென்று திருவாய்மலர்ந்தனர். அதைப் பூர்வஞானத்

தினையுடைய கயமுகாசுரன்கேட்டலுஞ் சிவபிரானைப் பணிந்தெழுந்து, ஓ கிருபாமூர்த்தியே! தேவரீர் அடியேற்கு அழியாத முத்தியினைக்கொடுத்தருளல்வேண்டும். முற்சனனத்தில் அடியேனுக்குப் பிரகஸ்பதிதேவரும் நாரதமுனிவருங்கூறிய வாக்கின்படி இச்சனனத்தில் சம்பவித்ததன்றி வேறில்லை. அதனால் அடியேற்குத் தேவரீருடைய திருக்கரத்தினாலடிபடவுந் தேவரீருடைய பாதபதுமங்களைச் சேவிக்கவுங் கிடைத்ததென்று சொல்லினன். அதனைச் சிவபிரான்கேட்டு அவனுக்குச் சாரூப முத்தியினைக் கொடுத்து, அவனது பசிய தோலினையுஞ் சிரத்தினையும் உயிரைப்போலக் கைக்கொண்டு தோலினைத்தமது அரையிலுடுத்திச் சிரசைப் பத்மாஞ்சையினாற் பூசித்துவந்தனர். அக்கயமுகாசுரனுடைய தோலைச் சிவபிரான் தரித்தருளியதாலே அதுமுதல் அவருக்குக் கிருத்திவாசனென்னுந் திருநாமம் வழங்கிவருகின்றது, அத்திருநாமத்தை யாவரேனும் உச்சரித்தால் அஃது வருத்தமுறுத்துகின்ற சமுசார வாஞ்சையென்னும் பெரும்பிணிக்கு மருந்தாகி மெய்ஞ்ஞானமயமாகிய வீட்டைக்கொடுத்தருளும். இப்பால் சத்துருவைப்போலவந்து கயமுகாசுரன் முட்டிவிழத்தள்ளிய மண்டபத்தைக் கணங்கள் யாருங்கூடி எடுத்து முன்போலவே நிறுத்திவைத்தார்கள். சிவபிரானும்உமாதேவியும்மனமகிழ்ந்து பழையபடி திருவிளையாடல் செய்துகொண்டிருந்தார்கள். இவ்வாறு சுவாமியும் அம்மனும் வனத்திலிருக்குமளவில் சிந்தூரனென்பவன் எல்லாவுலகங்களினுஞ்சென்றுலாவி எதிர்த்து வந்தவர்களையெல்லாந் தழுவி நெருக்கி மீட்டுந் தனது அரண்மனையில் வந்துகொலுமண்டபத்தில் வீற்றிருந்து மனத்தில் மிகுந்த கர்வங்கொண்டு, பிரமன் விண்டு உருத்திரன் என்னு மூவர்களு நமக்குப் புறந்தந்து திரணமாயொழிந்தார்கள். இந்திராதிய தேவர்கள் அரக்கர்கள் தைத்தியர்கள் முதலியோரெல்லாம் நம்மைக்கண்டவுடனோடிப்பதுங்கினார்கள். ஏனையவீரர்கள் யாவரும் நமதுகரத்தாலழிந்தார்கள். உலகமனைத்தும் பஞ்சுக்கொப்பாகவும் நாம் அழலுக்கொப்பாகவுமிருக்கின்றோம் என்று சொல்லிக்கொண்டிருந்தனன். அப்பொழுது தற்செயலாய் அவனுக்குக் கேட்கும்படியாக ஒரு ஆகாயவாக்குண்டாகி, ஓ சிந்தூரா! தன்னைத்தானே வீணிற் புகழ்ந்துகொள்ளுவோனுக்கு உடனே அழிவுவரும். உனக்கு அழிவுகாலநேர்ந்ததனால் உன்னை நீயே புகழ்ந்துகொள்கின்றனை. நிலையில்லாதவுடலை நிலையாகக்கருதி ஏமா

வத்திறம் பேசுகின்றாய்? உன்னைக்கொல்லுவதற்கு உமாதேவிவயிற்றி
ல் ஒன்றான விநாயகமூர்த்தி கருவாகி வளர்கின்றனர். இன்னுஞ் சின்
னாளையுள் உனதுபெயருமில்லாமல் (முடிந்துபோவாய்) என்றுசொல்
லி அடங்கியது. அவையனைத்தையும் அழிவெய்துமாக்கையில் ஆசை
வைத்திருக்கின்ற சிந்தூரன்கேட்டு மனங்கலங்கி, சாவுநேர்ந்தால் எப்ப
டியென்று துயரங்கொண்டு, இவ்வார்த்தைகளைப்பேசினவன் யாவன்
அவனை இங்கிடத்திற்பிடித்து அடிக்கக்கடவீர்களென்று செல்விச்
சிலதூதுவரையேவினன். அவர்கள் அவ்வாக்கினியைக் கடக்கமாட்
டாமல் எவ்விடங்களினும் ஓடித்தேடிப்பார்த்து ஒருவரையுங் காணாம
ல் மீண்டுவந்துவிட்டார்கள். இப்பால் சிந்தூரனானவன் நம்மைக்கொ
ல்ல வளர்கின்றகருவை இப்போதே அறுத்து ஈஸ்வரியைத் துயரப்ப
டுத்தவேண்டுமென்று நினைத்தவனாய், உடனே தானிருந்த சபையை
விட்டெழுந்து கயிலாயமலையிற்போய்த் தேடிக்காணாதவனாகி அவ்வி
டங்களிலுள்ள மலைகள் திசைகள்முதலியவிடங்களிலெல்லாந் தேடிச்
சென்றனன். பின்னர் ஈஸ்வரியை எங்குங்காணாமல் மீட்டும் பூலோ
கத்திற்குவந்து வனங்கள்தோறுந் தேடிக்கொண்டு செல்லுகையில் தே
வர்கள் முனிவர்கள் முதலியோர் வசித்திருக்கும் பரியலகாசத்தாள்
நுழைந்து அகன்மத்தியிலிருக்கும பூங்காவில உமாதேவியார் விற்றி
ருக்கக்கண்டு, சிவபிரான் யோகத்திலிருக்கவும் உமாதேவியார் அயர்ந்
து நித்திரைசெய்திருக்கவுமான காலம்பார்த்து இதுவே நல்லசமய
மென்று நிச்சயித்து உடனே வாயுருபமெடுத்து உலகமாதாவாகிய உ
மாதேவியார் உதரத்திற் பிரவேசித்து, அங்கு நின்மல ஸ்வரூபமாயிரு
ந்து வளர்கின்ற கருவைச்சேதித்து சிரசை வெளியிற்கொணர்ந்துவந்
து விந்தவனாயினையடுத்து ஆவ்விடத்துள்ள, நிருமதைநதியின்பக்கத்
தில வைத்துவிட்டு மீட்டுந் தனது அரண்மனையிற் போய்ச்சேர்ந்த
னன், அண்டர்பிரானாகிய விநாயகப்பெருமானது சிரம்விழுந்தவிடம
பெரியபள்ளமாயிற்று. அப்பள்ளத்தை யாவருங் கணேசகுண்டமெ
ன்று சொல்லுவார்கள். அச்சிரத்தினின்றும் பெருகிய உதிரமானது
ஆறுபோடியபடியால் அஃது சோணமாநதியென்னும் பெயரினால் வ
ழங்கிவருகின்றது. கணேசகுண்டத்திற்குச் சமீபத்திலிருக்கின்ற மலை
களனைத்தும் அக்குண்டத்திற் சரிந்துவிழுந்து கணேசமூர்த்தியினு
டைய திருவுருவத்தை யடைந்து உலகமுழுவதும் பூசிப்ப அளவற்ற
பயன்களைக் கொடுத்துக்கொண்டிருக்கின்றன. ஆகலால் - ஆந்தச் சு

சுயம்புமூர்த்திகளை யெடுத்து யாவரேனும் வேதாகம முறைமைப்படி பூசித்துவருவார்களாயின் அவர்கட்குதருமமுதலிய நான்குபுருஷார்த்தங்களுங் கிடைக்கும். சிந்தூரன் வதுசெய்த இக்கொடியசெயல் அச்சிந்தூரனுக்குங் கருவாகிவளர்ந்த விநாயகமூர்த்திக்குத் தெரியுமேயன்றி உமாதேவியாரு மறியார், மற்ற சிவபிரான்முதலிய யாவருமறியார்கள். இத்தன்மைத்தாகிய கொடுந்தொழிலை நடப்பித்துக்கொண்ட விநாயகமூர்த்தியானவர் சிரம்போயுங் கருவனைத்து முற்றும்படியாக வேவளர்ந்தனர்.

இப்பால் உமாதேவியார்க்கு ஒன்பது திங்களுமாகப் பத்தாந்திங்களில் சிவபிரானவரைப்பார்த்து, பெண்ணே! உனதுவயிற்றிற் கருப்பநிரம்பியபடியால்; இனியாம் கயிலைக்குச்செல்லவேண்டுமெனச்சொல்லி உடனே அவரை ரிஷபவாகனத்தி லேற்றிக்கொண் டெழுந்தருளினர். யோகத்தி லிருப்போர்க்கு யோகியாகியும் போகத்திலிருப்போர்க்கு போகியாகியுமிருந்து அநுக்கிரகஞ்செய்யவல்ல சிவபிரான் பரியவிவனத்தைவிடுத்துத் தமதுகைலாயவரையையடைந்தபின்னர் உமாதேவியார் உலகத்தாரைப்போல நடத்துமாறு இச்சையுற்று, ஆதிமத்யாந்த ரகிதமாய்-அநாதிவஸ்துவாய்-சகலபிராணிகளிடத்துங் காரணபூதமாகப்பொருந்தி என்னையுமோர்பொருளாகக்கொண்டு நடித்துக்களித்திருக்கு மூலகாரணக்கடவுளாகிய விநாயகமூர்த்தியைப் பிரசவித்தனர். உடனே அவ்விநாயகமூர்த்தியானவர் ஞான சத்தியுத்தராய் அட்டமாசித்திகளையுந் தரித்தவராய்-சித்திபுத்திகள் சமேதராய்-சிங்கவாகனரூடராய் - பத்துதிருக்கரங்களோடும் ஆயுதங்களோடும் அவதரித்தருள, அவ்வவதாரக் கோலத்தைஉமாதேவியார்கண்டு முன்னமருளியபடியேவந்து அவதரித்தனரென்று மனமகிழ்ந்தனர். பின்னர் விநாயகமூர்த்தியானவர் தம்மையீன்ற உமாதேவியாரைநோக்கி, அன்னையே! உமக்குயாம் அன்றுசொன்னபடியே கொடுமையின்மிகுந்தசிந்தூரனைக்கொல்லவும், பத்தசனங்களாகிய தேவர்கள் முனிவர்கள்முதலியோர்படுந் துன்பத்தினை நீக்கவும், உமக்குப்பணிசெய்து ஆனந்தமாக்கிவைக்கவுமாக உமதுகருப்பத்தினின்று மவதரித்தோமென்று திருவாய்மலர்ந்து கரந்தருளினர். உடனே உமாதேவியார் திகைத்து மயங்கினர். மீட்டும்விநாயகமூர்த்தி சிரமில்லாதகுழந்தையாய்வீற்றிருந்தனர். அதனைக்கண்ட உமாதேவியார் ஆவிசோர்ந்து நிலமிசைவிழ்ந்து அவசமாகி நெட்டுயிர்த்து, நேத்திரங்களால் இதனைப்பாவி

யேன் பார்க்கப்படுவதோவென்று பதை பதைத்து, ஐயோ! எனது பு
த்திரனை யாரோ எடுத்துக்கொண்டுசென்று சிரத்தினைச் சேதித்துவி
ட்டு என்முன்னே கொண்டுவந்துவைத்தார்களே: நான் எல்லாவிதத்தி
னும் பாக்கியவதியாயிருந்தும் புத்திர சம்பத்திலே எளியவளானே
னே: இப்போது எனது கண்முன்னெழுந்தருளியிருந்த விநாயகமூ
ர்த்தி எங்ஙனமேனு மொளித்துச்சென்றனரோ? அல்லவென்று சொ
ப்பனமோ? மாய்கையோ? மோகனமோ? எனது அருமைப்புதல்வனு
க்கும் இவ்வாறுசம்பவிக்கலாமோவென்று புலம்பி; அன்று எதிர்த்துவ
ந்த சிந்தூரனால் நீறுகிப்போனேனாயின் இன்று இத்தன்மைத்தான
சம்பவத்தையாம்பார்க்கவேண்டுவதில்லையே: சுவாமி! அச்சிந்தூரனை
அன்று என் விலக்கினீரென்று சொல்லித் தேம்பித்தேம்பி யழுதனள்.
இவ்வாறு உலகமாதா அந்தப்புரத்திலிருந்து துயரப்படுவதைத் திரு
வோலக்கத்திலெழுந்தருளியிருந்த சிவபிரானறிந்து சபைவிட்டெழு
ந்து உமாதேவியாரிடத்தில்வந்து நடந்தசெய்திகளனைத்தையும் வின
விபறிந்து, முழுதுந்தேர்ந்த முதல்வராகிய முக்கண்மூர்த்தியானவர் இ
ப்போது முடிந்ததையும் இனிமுடியப்போகின்றதையும் இன்ன இன்
னபடியென்றறிந்திருந்தும் அவைகளைத் தமக்குள் மறைத்துக்கொண்
டு, திருமேனியிற்பழுதுகாட்டியருளிய தமது புதல்வரது மகிமையை
உலகத்தவரறிந்து கடைத்தேறுமாறு காட்டும்படி நினைத்தவராய் அ
கத்திலுள்ள மகிழ்ச்சியை அயலாரறியாதவண்ண மறைத்து உலகத்
தவரைப்போலமிருந்த முகவாட்டத்துடனே தமதுபுத்திரனைக் கரத்
திலெடுத்துத் துடையின்மீது வைத்துக்கொண்டிருந்தனர். அக்கு
றிப்பைநந்திதேவரறிந்து சிவபிரானைப் பணிந்தெழுந்துவிடைபெற்று
ப் பிரமன்-விண்டு-தேவேந்திரன்-முதலியோர்க்கு இவ்வற்புதத்தைய
றிவித்து அழைந்துவருமாறுசென்றனர். இந்திரன்முதலாயினோர் ந
ந்திதேவர் வரவையறிந்து உடனே அவரை யெதிர்கொண்டழைத்து ப
ணிந்து ஓராதனத்தி லிருத்திப்பூசித்து, சுவாமி! தேவரீர் இங்ஙனமெ
ழுந்தருளியகாரணத்தைத் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று பிரா
ர்த்தித்தார்கள். அவர்களை நந்திதேவர் பார்த்து, ஓ தேவர்களே! கயி
லாயத்திலே உமாதேவியார் திருவயிற்றில் ஓர் திவ்வியபாலகுழந்தை
சிரமில்லாமற்பிறந்தது. அதுகண்டு சிவபிரான் மிகவுந் துன்புற்றி
ருக்கின்றனர். ஆதலால்-நீங்கள்யாவரும் அங்கு வரவேண்டுமென்று
சொல்லினர் - அதனைவிண்டு முதலியோர்கேட்டதும் இரக்கமுற்று,

முன்னர்தாங்கள் அனைவருந் தோத்திரஞ்செய்தபோது பிரத்தியட்சமாகிவரங்கொடுத்தருளிய விநாயகமூர்த்தியே அவ்வாறு அவதரித்தனரென்று தெரிந்துகொள்ளாமல் அவ்வவர்களுடைய வாகனங்களிலேறிச்சென்று கயிலாயவரையையடைந்தார்கள்.

அப்போது நந்திதேவர் முன்னதாகச் சென்று விண்டு முதலாயினோர் வரவைச்சிவபிரானுக்கறிவிக்க, அவர்தமதுபுத்திரனை அச்சட்புறத்தில் நிறுத்தி மீட்டுந் திருவோலக்கமண்டபத்தி லெழுந்தருளினர். உடனேவிண்டுவாதிதேவர்கள் முறைமையாகப்பணிந்தெழுந்தார்கள். பின்னர் இந்திரனானவன் பிரமன்முகத்தைநோக்கி உலகமாதாவாகிய பரமேஸ்வரியீன்றருளிய குழந்தையை இங்ஙனம் வருவிக்கவேண்டுமென்றுசொல்ல, அவ்வாறேபிரமன் வரவழைத்தனன். அப்போது அக்குழந்தையைச் சிலதேவர்கள்பார்த்து இப்பங்கமுற்ற பிள்ளையைக்கொண்டுபோய்க் கடலிற்போடுங்களென்றுசொல்ல, அவர்களைப்பிரமன் விழிகளி லனற்பொறிபறக்கும்படியாகப்பார்த்துக்கோபித்தனன். அதற்குத்தேவர்களெல்லாம் ஒடுங்கி அச்சங்கொண்டார்கள். பின்னர்பிரமன் தனக்குள் நடுக்கங்கொண்டு இக்குழந்தை அந்தரியாமியாயிருக்கின்ற சர்வேஸ்வரனேயென்று நிச்சயித்து, ஓ கிருபாமூர்த்தியே! அநாதிசித்தராய்-உலோகங்களையெல்லாம் உண்டாக்கவல்ல கருத்தாவாய்-அடியேங்களுடைய பாவங்களனைத்தையு மொழித்து இடர்களைப்பொடிபடுத்தவல்ல இறைவராய்-ஏகாநேகசொரூபராய் - மனோவாக்குகளுக்கு மெட்டாதவத்துவாயிருக்கின்ற தேவரீர், இவ்வாறுசிரமில்லாது இங்ஙனமவதரித்திருக்கின்ற காரணமென்ன? அவ்விரகசியத்தைக்கவலைக்கடலில் மூழ்கிமயக்கமுற்றழுகின்ற அடியேங்கட்குவெளிப்படுத்தித் தெளிவித்தருளல்வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதனை விண்டுகேட்டு பிரணவமந்திரசொரூபியாயிராநின்ற விநாயகமூர்த்தியினது மகிமையைச்சிறிது மறியாதவராகி, ஓ வாணிகேள்வனே! சரீரத்திற்குண்டான உறுப்புக்களில்பிரதான உறுப்பாயிருப்பது சிரம். அச்சிரமில்லாமல் பிறந்தகுழந்தைகள் எவ்வுலகத்திலேனும் பிழைத்ததுண்டோவென்றனர். அதைப்பிரமன் கேட்டவுடன் கோபித்து, நீர் எவ்விதத்தாற்றகாதவார்த்தைகளை மற்றைத் தேவர்களைப் போலப் பேசினீரென்று அவர்வாயினையடக்கி, ஓ துழாய்மௌலியே! ஆணவமலத்திலழுந்தித் தீராதமயக்கத்தினையுடைய சிறியோர்களாகிய நம்மைப்போல உடற்கருவிகள் கூடாதகாலத்தி லறியுந்தன்மையில்

லாத அவ்வறிவினையுடையவர் இவர் எங்கும்பரிபூரணவறிவாய் அனைத்தையு மொருமிக்கவறியும் பெருமானாகும். முன்னஞ்சிவபிரானுடைய வில்லுக்கு நீர்நாணாயிருக்தகாலத்தில் இந்திரன்முதலிய தேவர்களெல்லாஞ் சிதலாய்வந்து அந்நாணை அரித்தனர். அப்போது அந்தநாணாயிருந்த நீர் உம்முடையசிரம் அறுபட இறந்துபோகீரோ அது போலவும், உலகத்திற்றலையிழந்தவர்கள் உயிர்தரித்து வாழாரென்பது போலவும், சகலலோகங்களையுந்தோற்றுவித்தழிக்கவல்ல இச்சுயம்பிரகாசமூர்த்தியினைச் சொல்லப்போமோ? பரந்தவுலகமனைத்தினையுந் தமது இரண்டுமாயையினைக்கொண்டு சகலதத்துவங்களும் பொருந்தத்தோற்றுவித்து, உயிர்களது அஞ்ஞானவிருளைப் போக்குவித்தற்கு தநுவாதிகளைக்கொடுத்து இரட்சித்து உள்ளுக்குள்ளே அந்தரியாமியாயிருந்து அறிவுவிளங்கவைத்துத் தாயினைப்போல வளர்த்துவருந்தயாபரமூர்த்தியினுடைய திருவுருவில் ஓருருவமில்லாவிடில் அவர்க்கென்னகுறை? உருவம் வேண்டுமென்றும் வேண்டாமென்றும் வருகின்ற இரண்டு ஊழும் இவர்க்கில்லை. தம்மை அணுகினோர்க்குச் சகலவரிட்டங்களையும் போக்கவல்ல இவரியல்பைத் தேவர்களுமறியார்கள். அத்தேவர்களெல்லாந் தொழத்தலைமைபெற்றிருக்கின்ற நீருமறிந்திலீர். ஆசானுடைய அருமையை அபக்குவர்களறிவார்களோவென்று சொல்லினன். அவையனைத்தையுஞ்சர்வஞ்சமூர்த்தியாகிய விநாயகக்கடவுளானவர் செவியில்லாமலே கேட்டுச்சந்தோஷித்து, வாயில்லாமலே இதனைவிளம்புவதாயினர்.

ஓ இரணியகருப்பனே! பூருவத்தில் யாம் சிருட்டித்தொழிலை உனக்குத்தந்தபோது ஓர் சலப்பிரவாகத்தில் உன்னால்யாம் எவ்வாறுகாணப்பட்டோமோ அவ்வாறே இப்போது ஈஸ்வரியினிடத்தில் உன்னாற்காணப்பட்டோம். ஆனாற்சிரமில்லாமற் காணப்பட்டதற்குக்காரணமியாதெனில், அதனையுஞ்சொல்லுவோங்கேள். எப்போதுந் தீமைகளை விளைத்துவருகின்ற சிந்தூரனைக்கொல்லவும், உங்கட்கு அவன் செய்துவருகின்ற அரிட்டங்களைநீக்கவும், வேதாகமநெறிகளைவிருத்தியாக்கவும், உமாதேவிக்குப்பணிபுரியவும் என்று விநாயகமூர்த்தி திருவாய்மலர்ந்தருளலும்; அதனைப் பிரகஸ்பதிதேவர்கேட்டு, சுவாமி! தேவரீர் திரிலோகங்களையுங் காத்தருளவேண்டி அவதரித்ததாயின் தேவரீருடைய திவ்விய சொரூபத்தையாவருந் தரிசிக்கும்படியாகக்காட்டி அடியேங்கள் மனதிலிருக்கின்ற மயக்கத்தைத்தீர்த்து மகிட்சியை

விளைத்தருளவேண்டுமென்றனர். அதற்கு விநாயகமூர்த்திசந்தோஷித்து, ஓ தேவகுருவே! முன்பு மயேசுரனென்னுமரசன் உன்னைமிகுந்த பத்தியுடனே பணிந்தபோது நீ அவன்தலைக்குக் கொடுத்தவரத்தினால் பின்பு அவன்கஜமுகாசுரனாகப்பிறந்து சிவபிரானுடையசூலாயுதத்தினாலறுபட்டுச் சாருபபதவியைப்பெற்றிருக்கின்றனன். அவன்சிரமானது அக்கடவுளால் பூசைசெய்யப்பட்டிருக்கின்றது. அன்றியும் அஃது நீண்டதுதிக்கையினோடு மிக்க அழகாயிருக்கின்றது. நமதுதிருமேனியைப்பார்த்து இது என்னவென்று உங்களுங்கள் மனதில்வெவ்வேறே எண்ணுகின்ற எண்ணமெல்லாந்தீருவதற்கு, அந்தச்சிரத்தை நமதுசரீரத்திற் கலக்கச்செய்வதேகருமம். அதற்குமிக்கது வேறொன்றில்லையென்றனர். அதைப் பிரகஸ்பதிதேவர்கேட்டு, ஓ திரிகாலங்களையுமறியவல்ல கடவுளே! தெளிந்த அறிவினையுடைய மயேசுரராசன்பொருட்டு அடியேன்கூறிய வார்த்தையானது இங்குயாவருமறியுமாறு தேவரீராற்றிருவாய்மலர்ந்தருளுவதாயதே: விஸ்வரூபியாயும்-விஸ்வேசுரராயும்-பத்தர்களுடைய விடர்களைநீக்கவல்ல பரம்பொருளாயுமிருக்கின்ற தேவரீருடைய சுயம்பிரகாசசொரூபத்தை அடியேன்காணும்படியான அறிவில்லாதவனாயினேன். என்று இவ்வாறு பலமுறைமிகுந்த உருக்கத்தோடுந் துதிசெய்துக்கொண்டிருந்தனர். அச்சமயத்தில் நாரதமுனிவர் விநாயகமூர்த்தியைப்பணிந்தெழுந்து, ஓ சிற்பராநந்தமூர்த்தியே நித்தியானந்த-நிரூபத்திரவ - நிர்மல-நிரந்தர நிராகார-நிஷ்கர்ம-நிர்ச்சங்க-நிர்விகார - நிர்க்குண-நிஷ்கிரிய - நிற்விகற்ப நிரஞ்சன-நிராலம்ப-நிரதிசயானந்த முதலிய அளவற்றகுணாதிசயங்களைவாய்ந்ததேவரீர் இவ்வுலகமனைத்தினையும் யானைமுகங்கொண்டுகாத்தருளும்பொருட்டுத் திருவுளஞ்செய்து மிகுந்தகிருபையோடும் உமாதேவியினிடமாக அவதரித்ததுமெய்யேயாகும். ஆயினுந் தேவரீர் சிரமானது இடையிலொழிந்ததாகக்காணப்பட்டிருக்கின்றமையால் அஃது யாவராலொழிக்கப்பட்டதோ அதனைத்திருவாய்மலர்ந்து, அடியேங்கட்குண்டாகிய சந்தேகத்தினைத் தெளிவித்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தனர். அதற்குவிநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து, ஓ தேவமுனியே! நாம்பரமேஸ்வரிவயிற்றிற்கருவாயிருந்த எட்டாந்திங்களில், முன்னம்பிரகஸ்பதிதேவன்மயேசுரராசனுக்குக்கொடுத்த வரமானது முற்றுப்பெறற்பொருட்டும், அம்மயேசுரராசன் வழியிற்சென்றபோது உனக்குவந்தனை செய்யவில்லையென்றுகொடுத்த சாபமானது சரியாத





ற்பொருட்டும் நமதுசரீரத்தினைவிட்டு நீங்கிய சிரமானது விழுந்தவிடத்திலிருக்கின்ற சிலைகளனைத்தும் நமது சொரூபத்தினையடையும்பொருட்டும், அவைகளையெடுத்துப்பூசித்துவருகின்ற ஆன்மாக்களுக்கு வேண்டியவரங்களைக் கொடுத்தற்பொருட்டும், மனிதர்-நாகர்-தேவர்-முதலியோரால் அழிவுபெறுதவலியினைவாய்ந்த சிந்தூரனைச் சங்கரித்தற்பொருட்டும், யாம்யானைவதனத்தையடைதற்பொருட்டும் இருவுளங்கொண்டு; இத்தகைய திவ்விய சரீரத்திலிருந்த நமதுசிரமானது நீங்குமாறு யாம் கருவாகிவளர்கின்ற சேதியைச் சிந்தூரனுக்கு ஆகாயவாக்கினாலறிவித்தனம். அவன் உடனே தனது உருவத்தைமறைத்துவந்து மாயரூபங்கொண்டு ஈஸ்வரியினுதரத்துட்புகுந்து கருவாயிருந்த சிரத்தை யறுத்துக்கொண்டுசென்றனன். இப்போதுயாம் கசமுகத்தைத்தரித்துக்கொண்டு அச்சிந்தூரனைச் சங்காரஞ்செய்தருளுவமென்று திருவாய்மலர்ந்தனர்.

அவையனைத்தையும் நாரதமுனிவர்கேட்டிருந்தபெருவகையோடு மீட்டும்பணிந்தெழுந்து, சுவாமி! அந்தயானையின் சிரமானது அடியேங்கள் சிரத்திறைஞ்சத்தக்கதன்று, அதைக்கொண்டுவந்து தேவரீர் திருமேனியிற் சேர்க்கத்தக்க வல்லபமும் அடியேங்கட்கில்லை. ஆக்கல்-காத்தல்-அழித்தல் - என்னுமுத்தொழிலுக்கு முதன்மையாயிருக்கின்ற தேவரீரே அதனை வரச்செய்து தரித்தருளவேண்டுமென்று சொல்லினர். அச்சொல் நிறைவேறுவதற்குமுன்னமே விநாயகமூர்த்தியானவர் மயேசுரனென்கிரயானையின் சிரசையாவருங்கண்டு அ ரிசிக்கும்படியாகவரச்செய்துதமது திருமேனியிற் சேர்த்துக்கொண்டு மகரகுண்டலம்-கிரீடம்-முத்துமாலை-பொற்செருடி முதலிய ஆபரணங்களோடு நான்குபுயங்களும் மூன்றுவிழிகளும் விளங்கும்படி இடப்பாகத்திற்சித்தியும் வலப்பாகத்தில் புத்தியுமாகத் தரிசனந்தந்தனர். இவ்வாறுதரிசனந்தந்தருளிய விநாயகமூர்த்தியைத் தேவர்கள் முதலிய யாவருங்கண்டு பிணிமுழுவதுமொழிந்து பேரின்பக்கடலாழ்ந்தார்கள். மீட்டும்பிரமனாதி தேவர்களு முனிவர்களும் விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளில் முறைமையோடு தாழ்ந்தெழுந்து இருகரங்களையுஞ்சிரமேற்கூப்பிநின்று, பரப்பிரமசொரூபமாக விளங்குங்கர்த்தனேபோற்றி: திரிமூர்த்திகளே முதலியசகலருக்கு மூலகாரணக் கடவுளாகவிருக்கின்ற பரம்பொருளேபோற்றி: ஞானசத்தி கிரியாசத்தி சொரூபமாய் விளங்கிய சித்திபுத்திகளை இருமருங்கினும்பொருந்தவை




த்து சராசரப்பிரபஞ்சங்கள் விர்த்தியடையச்செய்தருளுந் தயாநிதியேபோற்றி: யானெனதென்னு மதாங்காரச்செருக்கிற்பட்டு உலகத்தைவாட்டிவருமசுரர்களைச்சங்கரிக்கவல்ல தேவதேவோத்தமனேபோற்றி: எம்மையொத்தவழித்தொண்டர்கட்கு நாதனாகவிருந்து தடுத்தாண்டிரட்சிக்கும் பக்தவற்சலனேபோற்றி: சோமசூரியாக்கினியைத்திரிநேத்திரங்களாகக் கொண்டிருக்கும் ஆதிதேவனேபோற்றி: பிறப்பிலியாய்ச்சலனமற்று எக்காலத்தும் விளங்கும் பெருமையினைவாய்ந்த தாணுவேபோற்றி: எல்லாப்பொருள்கட்கு முதன்மையாகிய பொருள்யாதோ அதற்குமூலமாகவிருக்கும் அதீதப்பொருளே போற்றி: எறும்புமுதல் யானையீறுகச்செல்லும் எண்பத்துநான்குலட்சஞ் சீவபேதங்களினிடத்தும் அந்தராண்மாவாகப்பொருந்தி ஆட்டியூட்டியுறக்கிவரும் லோகநாயகனேபோற்றி: வேதாகமமுதலிய சாத்திரங்களின்முடிவில்நின்று நிருத்தஞ்செய்யுமண்ணலேபோற்றி: உலகங்களில்வாசஞ்செய்யும்பிராணிகள் எத்தகையராயினும் அவ்வவர்கள் வழிபடும் அந்தந்ததெய்வங்களாகவிளங்கி அவர்கள்மனோபீஷ்டங்களைக் கடாட்சித்தருளுங் காரணவத்துவேபோற்றி: மெய்ப்பத்தியினால் தேவரீரை ஆராதித்து தெரிசிக்கப் பெற்ற புண்ணியவான்களுக்கு இம்மையில் அளவற்ற போகபாக்கியங்களை யனுபவிக்கச் செய்து மறுமையில் மோட்சசாம்பிராச்சியத்தையுந் தயைசெய்தருளும் அடிகளேபோற்றி: வேதாகமங்களையுண்டுபண்ணி அவற்றினை அன்புடன் பதக்கிரமமாய்ப் பாராயணஞ்செய்துவரும்மேன்மை பெற்றவர்களுக்கு மேலானபதவிகளைத்தகுதியாக அனுக்கிரகஞ்செய்துவருஞ் சர்வஞ்ஞனேபோற்றி: முப்பத்தாறு தத்துவங்களுக்கு மேலாகவிளங்கி நடிக்குந்தற்பரமூர்த்தியேபோற்றி: என்றிவ்வாறு அனந்தமுறை ஒருமைப்பட்டமனதோடு தோத்திரஞ்செய்து, ஓ சகலசீவராசிகளும் பிழைக்கும்படி எழுந்தருளிய நாதனே! தேவரீர் கஜானனனென்னுந் திருநாமத்தினைக் கொள்ளல்வேண்டும். மனிதர்கள் தேவர்கள் முதலியோரெல்லாம் அவ்வவர்கள் செய்யுஞ்சற்கருமங்கள்தோறுந் தேவரீர்க்குவழிபாடுசெய்ய அவ்வவ்வழிபாடுகளில் சுவாமிகளெழுந்தருளிக் கிருபைபுரிய வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அப்போதுசிவபிரானும் உமாதேவியும் துக்கத்தினின்று நீங்கிச்சந்தோஷமடைந்து, சித்தியைக்கொடுப்பவரும் முத்தியைக்கொடுப்பவரும் இவ்விக்கினநாசர் விக்கினநாயகரென்று சொல்லி ஒப்புசொல்லுதற்கரிய தமதுகுமாரருடைய மேன்மையான

குணங்களைப்பார்த்து உவகைபூத்தார்கள். பின்னர் விநாயகமூர்த்தியானவர் தமதழகினால் உலகமனைத்தும் விகடனொன்னுந்திருநாமத்தாற் றுதிக்கப்பட்டனர். உடனே உமாதேவியார் அவருக்குநீராஞ்சனமுதலியவைகளைச் சுழற்றிப்பணிசெய்துவரச் சிவபிரான் யாவரும் வியப்பமெய்தும்படி அளவற்ற மகிழ்ச்சியோடு பூசனைசெய்தனர். இந்திரன் பிரமன் விண்டுமுதலிய தேவர்களும் முனிவர்களும் விநாயகமூர்த்தியினிடத்தில் அளவற்ற வரங்களைப்பெற்றுத்தத்தமிடங்களிற்போய்ச்சேர்ந்தார்கள்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே! இவ்வாறு விநாயகமூர்த்தி திருவவதாரஞ்செய்தருளியதினம் ஆவணிமாதம் பூருவபட்ச சதுர்த்தியாதலால் அந்தச் சதுர்த்திதினத்தில் விநாயகரைப் பூசனை செய்வோர்கள் அடையும்பயனை யார் அளவிட்டுச்சொல்லவல்லவர்கள்? மேலும் அந்த ஆவணிமாத சதுர்த்தியானது உலகமனைத்தும் பூசிக்கப்பெற்ற இறைவராகிய சிவபிரானைப்பூசித்தநாளாதலாலும், விநாயகப்பெருமான் திருவவதாரஞ்செய்த மேன்மையையுடையதாதலாலும், வருடந்தோறும் அவரைப்பூசிப்பதற்கு முக்கியமாக விருக்கின்றது. யாவரும் விகடரென்றுசொல்லத்தக்க பேரழகினைவாய்ந்த கஜானனவிநாயகர் இவ்வாறிருக்க நாரதமுனிவர் பூலோகத்திலிருக்கின்ற சிந்தூரனிடத்திற்சென்று அவனால் வந்தனமுதலிய வழிபாடுக
பெற்று அவனிருந்த ஆசனத்திலிருந்து, உன்னையொத்
கள் மூவுலகத்தினு மில்லையென்று சொல்லினர். அ
கேட்டு சந்தோஷித்து நாரதமுனிவரது மலர்ந்தமுக
ஸ்வாமி! இதுகாறு மில்லாததாயும் அருமையானதாயு
தனமுள்ளதாயும் - அற்புதமுற்றதாயுமிருக்கின்ற சரிதம்யாதேனும் உண்டாயின் அதனை அடியேற்குச் சொல்லியருளல்வேண்டுமென்றனன். அதற்கு நாரதமுனிவர் மகிழ்ந்து, ஓ சமஸ்தவுலகினையும் வென்ற தீரனே! நாம் எவ்விடங்களினுஞ் சுபாவமாய்த்திரிகின்றோம். அவ்வாறே உன்னிடத்திற்கும் வந்தனம். உன்னால் நமக்குவேண்டுவது யாதொன்றுமில்லை. இதுகாறுமில்லாத திவ்வியமான சரித்திரமொன்றுண்டு அதனைச் சொல்லுவோம் சோர்வுறாமற் கேட்பாயாக. கைலாயத்தில் உமாதேவியாருடைய வயிற்றில் சிரமின்றாயல் ஒரு திவ்வியமான குழந்தை உற்பவித்தது. அதற்குமுன் சிவபிரான் யானையின் சிரமொன்றைப் பூசைசெய்துகொண்டிருந்தனர். அச்சிரத்தை அக்கு

ழந்தையானது தனது தாய் துயரநீங்குமாறு தானே வரும்படிசெய்து சரீரத்திற் றரித்துக்கொண்டது. மேலும் அக்குழந்தையோ மிக்கவலிமையினையுடையது. உயர்ந்த அறிவினையுடையது. அக்குழந்தைக்கு நிகர் யாரையுங்காணேம். அஃது முதலிற் கவந்தமாய்ப் பிறந்தது யாதுகாரணத்தினலோ அறிகின்றிலம். பின்னர் அதுவே யானைமுகத்தினைத் தரித்துக்கொண்டிருக்கின்றதென்றனர். இவையனைத்தையுஞ் சிந்தூரன்கேட்டவுடன் அயர்ந்து மூர்ச்சையாகிப் பூமியில் வீழ்ந்து மீட்டுந்தெளிந்தெழுந்து உள்ளந்தளர்வெய்தித் துக்கித்து, முன்னம் நமக்கு ஆகாசவாக்கொன்று உண்டாயிருந்தபடி அவனே நமக்குப் பகைவனென்று நிச்சயித்து, ஓமகதிமுனிவரே! அக்கஜானன முகத்தையுடைய மைந்தனை எவ்விதத்தினாலும் யான் கொல்லவேண்டும் கொல்லாதுவிடுத்தால் அவன் என்னைக்கொல்லுவான். இதுசத்தியம் இத்தினமே அவனிருக்குமிடத்திற்சென்று அவன் தந்தையாகிய பரமசிவன் அவனை எவ்விதத்திற் பாதுகாத்து வைத்திருந்தாலும் பற்றி இழுத்துக்கொண்டுவந்து கொன்று பத்துத்திசைகளினும் எனது பராக்கிரமத்தை நாட்டிவைப்பேனென்று சொல்லினன். அதனை நாரதமுனிவர்கேட்டு முகமலர்ச்சிகொள்ளத் தானும் முகமலர்ச்சிகொண்டு மிகுந்த ஊக்கத்தோடும் யுத்தத்திற் கெழுந்தனன். அப்போது நாரதமுனிவர் அவனைநோக்கி, ஓ புனிதனே! நாம் உனக்கு இதஞ்சொல்ல இங்குவந்தனம். நீயோ பிரமதேவனுடைய முகத்திற்பிறந்து அதனால் அளவற்றமேலான வரங்களைப்பெற்று இதுகாறும் ஓர்வருத்தமின்றி வாழ்ந்திருக்கின்றனை. மேலும் அப்பிரமதேவனையும் உன்னைக்கண்டவுடன் அஞ்சிப்பதுங்கும்படியாகச் செய்தனை. இத்தன்மைத்தான வல்லபத்தையுடைய உனக்கு நாமுறைப்பதென்ன விருக்கின்றதென்று நயங்கூறி அவ்விடத்தினின்று மகன்று கைலாயவரையை யடைந்து உமாதேவியாரெதிரில் நின்று, ஓசகத்ரட்சகியே! தேவரீர் குமாரரைக் கொல்லும்படியாகச் சிந்தூரனென்பவன் இதோ வந்துவிட்டவனென்று சொல்லிப்போயினர்.

இவ்வாறு நாரதமுனிவர்சொல்லி அகல்வதன்முன்னர் அழலைத்தானே சொரியும்படியான விழிகளையுடைய சிந்தூரனனவன் கயிலைக்குவந்து, விண்ணுலக மண்ணுலக முழுவதுந் நடுங்கும்படி ஊழிக்காலத்திலுண்டாகின்ற இடியேற்றினையொப்பக் கர்ச்சித்து, குரூரமான சொற்களைக் கொண்டு, எனக்குப் பகைவனாக இங்கு உதித்திருக்கின்ற

வன் எவனோ அவன் என்னெதிரில் வரக்கடவன்? யானைமுகத்தோடு கூடியிருக்கின்ற அவனைக்கொல்லுவதற்கு யான்ராஜகண்டீரவத்தைப் போல வந்திருக்கின்றேன். விஷ்ணு பிரமன்முதலிய தேவர்களில் ஒருவரேனும் என்னெதிரில்நின்று எதிர்த்தவர்களில்லை. சராசரங்களையெல்லாம் ஓர்நிமைப்போதில் சாம்பராக்கியிருக்கின்றேனென்று சொல்லி ஆர்ப்பரித்தனன். இவ்வாறு ஆர்ப்பரித்து அறைகூவியிருக்கின்ற சிந்தூரன்முன்னே யானைமுகத்தினையுடைய விநாயகமூர்த்தி யெழுந்தருளி, அடா துட்டனே! உன்னைக்கொல்லத்தக்க மகாபராக்கிரமத்தினையுடைய வீரன் யாமே? நம்மை விஷ்ணு பிரமனாதியரைப்போல நினையற்க. நம்மையெதிர்த்த தேவர்கள், அவுணர்கள், அரக்கர்கள் முதலாயினோரையெல்லாம் அப்போதைக்கப்போது வந்து சங்கரித்திருக்கின்றனம். வருணாசுரனினையுங் காய்ந்தனம். நதிகள்முதலானவைகளை யொழித்தனம். மலைகள்முதலானவைகளை யழித்தனம். பிரபஞ்சங்களையெல்லாம் ஆக்கலும் அழித்தலும் நமது செய்கையே யல்லாமல் வேறாய் நினையற்க. உன்னால் மாய்க்கக் கூடாத சகத்தினையெல்லாம் யாமாய்ப்போம். உன்னால் மாய்த்திருக்கின்ற சகத்தையெல்லாம் உனது கண்ணெதிரிற்றானே சிருட்டிப்பம். தேவர்கள்முதலாயினோர்க்கு மறலியைப்போன்ற நின்னையும் அவ்வாறே அழித்திடுவெம். அதை இப்போது நீ காணக்கடவையென்றனர். அவ்வியனைத்தையும் பராக்கிரமத்திற்சிறந்த சிந்தூரன்கேட்டு, இவனே நமக்குப் பகைவனென்று தன்மனதில் நிச்சயித்தும் அவனைச் சிறுகுழந்தையென்றே அவமதித்து, ஓ பிள்ளாய்! நீ யேன் வீணிலென்னைப் பகைத்து மாளவேண்டும்? ஐயோ! உன்னைப்பார்த்தால் எனக்குக்கொல்ல சம்மதமில்லை. எங்குமில்லாத பேரழகைப் படைத்திருக்கின்றனை. நீயுன் தாயிடத்திற்சென்று முலைப்பாலுண்டு அவள் கண்களிக்கும்படியாக முன்றிலில் விளையாடச்செல்லுகவென்று இழிச்சொல் கூறிநகைத்தனன். அதை விநாயகமூர்த்திகேட்டு, அடா சுத்தமூடசிரோமணி! கனத்த இருட்கூட்டங்களை ஓர்சிறியதிரியினைவாய்ந்த தீபங்கொல்லும். அண்டமுகட்டை யுரிஞ்சும்படியானபெரியபர்வதங்களை ஓர்சிற்றுளியிளக்கும். மும்மதங்களையும் பொழிகின்ற யானைக்குழாங்களை ஓர்சிறிய அங்குசமடக்கும். நம்மைச் சிறுகுழந்தையென் றவமதித்துக் கூறினை. யாம் யமனைப்போலவந்து உன்னைக்கொல்லத்தக்க காலமென்றறிந்தி ராலும், என்றுசொல்லி உடனே தமது சிரமானது அண்டகோள

கையை எட்டும்படியாக நீண்டு, பெரியபர்வதங்களுக்குச் சமானமான புசங்களோடு - சிரம் - விழி - செவி - முகம் - கரம் - பாதமுதலிய உறுப்புக்களனைத்தும் ஆயிரமாயிரமாகவிளங்க விஸ்வரூபங்கொண்டு, சொர்க்காதி உலகங்களனைத்தையும் ஓர்நொடிப்போதில் தமக்குள்ளேயொடுக்கினர். அவ்வற்புதத்தைச் சிந்தூரன்பார்த்து, சிங்கத்தைக்கண்ட யானைபோலவும் - சிம்புகளைக்கண்ட சிங்கம்போலவும் - கருடனைக்கண்ட பாம்புபோலவும்-பயந்து நடுங்கினன். அதனைச் சத்துச் சித்தானந்தசொரூபராய் விளங்கிய விநாயகக்கடவுள்நோக்கி, ஓ பேதாய்! சகலலோகங்களும் நமக்குள் ஒடுங்கியதைக்கண்டனை. மீட்டும் அவைகளை வெளிப்படுத்துவங் காண்பாயாகவென்று திருவாய்மலர்ந்து தமது முகத்தில் அந்தணரையும், புசத்தில் அரசரையும், முழந்தாளில் வணிகரையும், பாதத்தில் சூத்திரரையும், விழியிற் சூரியனையும், இதயத்தில் சந்திரனையும், நாசியில் அக்கினியையும், உந்தியில் ஆகாயத்தையும், முடியில் விண்ணுலகையும், அடியில் மண்ணுலகையும், செவியில் திக்குகளையும், ஏனைய திருவுருவங்களில் கடல்கள் மலைகள் நதிகள் முதலிய யாவையுமுண்டாக்கி; இவையனைத்தையுங்கண்டு நடுக்கமுற்றிருக்கின்ற சிந்தூரனைப்பார்த்து நகைத்து, முன்னர் நம்மிடத்திலொடுங்கிய உலகங்களையெல்லா மீட்டும் நாமே உண்டாக்கியதைக்கண்டனையல்லவாவென்று திருவாய்மலர்ந்து, ஞெரேலென்று நீண்ட துதிக்கரத்தினால் அச்சிந்தூரனை வாரியெடுத்துக் குழைத்துத் தமது மத்தகத்தில் மகிழ்வோடு பூசிக்கொண்டனர். திசைகள்தோறுஞ்சென்று கமழும்படியான பரிமளத்தினை வாய்ந்த சிந்தூரனுடைய சரீரமானது ஐங்கரக்கடவுளாகிய விநாயகமூர்த்தியினது மத்தகத்திற்குச் சாந்தாகியது. அவனுயிரானது அக்கடவுளுடைய திருவடிகளையடைந்து பேரானந்த மெய்தியது. உடனே ஆகாயத்தில் பஞ்சகருவிகளுமுழங்கின. தேவர்கள் புட்பவருடஞ்சொரிந்தார்கள். கந்தருவர் கானம்பாடினார்கள். முனிவர்கள்வேதமோதினார்கள். ஞானவித்தகராகிய விநாயகக்கடவுள் பழையபடி குழந்தையுருவா யமர்ந்தருளினர். உலகமனைத்தும் பேரானந்த வாரியிற்றிளைத்தன. உருத்திரன் விண்டு பிரமனாதிய தேவர்களெல்லாம் அவ்விடத்தில் வந்து மிகுந்த பத்தியோடு விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளிற் பூசித்தார்கள். கொன்றைப்பூமாலையினையணிந்த சிவபிரான் அத்தேவர்கள் வேண்டுதலின்பேரில் கஜானனமூர்த்தியினை யாவரினு மேன்மைபெற்றிருக்கு

ம்படி வைத்தனர். பின்னர் பிரமதேவன் தனது கரத்திலிருக்கின்ற கமண்டலதீர்த்தத்தால் விநாயகமூர்த்திக்குப் பாத்திய முதலியவைகளைச்செய்து பூசித்து கரத்திற் செந்தாமரைப் பூவினைக்கொடுத்தனன். அவ்வாறே வருணன்பூசித்து மிருத்தவல்லபத்தையுடைய பாசத்தைக்கொடுத்தனன். தேவேந்திரனென்பவன் தனது கற்பகவனத்திற்பூத்த செந்தாமரைமலரினாலுஞ்செங்குவளைமலரினாலுங் கட்டப்பட்டிருக்கின்ற மாலையைத்தரித்துப் பூசித்து நிருத்த கீதவாத்தியங்களைச் செய்வித்து மகிழ்ந்தனன். சிவபிரான் சூலாயுதத்தைக் கொடுத்தருளினார். மற்றுமுள்ளவர்களனைவரும் வேறுவேறு பூசித்து அவ்வவர்கள் கையிலகப்பட்ட பொருள்களைக் கொடுத்துத் தீர்க்கதண்டன் செய்தார்கள். இவ்வாறு யாவராலும் பூசிக்கப்பெற்ற கஜானனமூர்த்தியானவர் பின்னர் அங்கிருந்தபடி மறைந்தருளினர். இச்சரித்திரத்தைக் கருப்பமுற்ற ஸ்திரீகள் ஈனமாட்டாது யாதனைபடுங்காலத்தில் அவர்கட்குச் சொன்னால் உடனே வருத்தமனைத்து நீங்கிப் பிள்ளையைப் பெறுவார்கள். அக்குழந்தையும் நற்குண நற்செய்கைகளோடு தளர்வின்றி வளரும். யாவரேனும் யாத்திரைசெய்யுங்காலத்தில் இதனைச்சொல்லிக்கொண்டுசென்றால் சென்றவிடத்திற் செயம்பெறுவார்கள். அரசர்முதலாயினோரை வெல்லவேண்டி அவர்கள் சபையிற்செல்லுவோன் இதனைப் பக்தியோடு துதிசெய்து செல்லுவானாயின் அவன் யாவராலும் தோல்வியுறாது வெற்றிபெற்று மீளுவன்.

௩-வது கஜானனர் திருவவதாரப்படலம்,

முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

நான்காவது

## விக்கினராசர் திருவவதாரப்படலம்.

இக்குநேர்மறைவலி யிருங்கசானனன்
திக்கெலாம்பரவுதான் சிந்தித்தேத்தியே
உக்கிரமூடிகத்தூர்ந் துமேலாகமான்
விக்கினராசன்சீர் விளக்கக்கூறுவாம்.

சவுனகாதிமுனிவர்களே! விநாயகமூர்த்தி கஜானனர் திருவவ
ன்று பிரமதேவன் கொட்டாவியினின்று முதித்த சிந்தூர

னைக்கொன்று தேவர்கள் முதலாயினோரைக் காத்தருளிய திருவிளையாடலைச்சொன்னோம். இப்பால்விக்கினராசர் திருவவதாரங்கொண்டு செய்தருளியதிருவிளையாடலைச் சொல்லுவோங்கேட்பீராக. வெள்ளியங்கிரிக்குத் தலைவராகிய சிவபெருமான்தமது திருமேனிமுழுவதுந் திருவெண்ணீற்றினையணிந்திருப்பதுபோல எக்காலத்திலுஞ் சுத்தயோகங்கட்கு மிருப்பிடமாய் அளவிடற்கரியபனிப்படலங்களால் எங்குமூடப்பட்டிருக்கின்றதாகிய இமயமலை, அம்மலையில்தவத்தர்கட்கெல்லாந்திலோதகம்போலச்சகலவிரதங்களினுஞ் சீர்த்திபெற்றவுள்ளத்தோடுதத்துவமனைத்தினையுமுணர்ந்து, அவத்தைகளினின்றுநீங்கியதமது மெய்யறிவினால்வேதாகமங்களையபேட்சித்து வருகின்றபக்குவர்கட்கு அவைகளைப்போதித்து, அவர்களை அவக்கடலினின்றுமெடுத்துப்பாதுகாக்கவல்லவராய், * அகப்பற்று புறப்பற்றென்னு மிரண்டினையுந்துறந்தவராய், பிரமம் - தெய்வம் - பூதம் - பிதிர்-மானுடம் 0 என்கின்றஐவகைவேள்வியும் பிரதிதினமியற்றும் இயல்பராய், சிவபெருமானுடைய திருவடிகளையன்றி வேறொன்றினைச் சிந்தைசெய்யாதவராய், சாபாநுக்கிரக சாமார்த்தியத்தினை யுடையவராய் விளங்கிய சவுபரியென்னு மொரு முனிபுங்கவரிருந்தார். அவர்குற்றமற்ற கற்பினுங் குணத்தினுந் தனக்கொருவர் நிகரில்லாத பெருமையினைவாய்ந்த மனோமயையென்னுமனைவி பணிசெய்ய வாழ்ந்திருக்குநாளையில், ஓர்நாள் அம்முனிபுங்கவர் நதியில் ஸ்நானஞ்செய்யச்சென்றனர். அவர்மனைவியானவள் ஆசிரமத்திற் பணிசெய்திருந்தனள். அச்சமயத்தில் கருணைநாயகராகிய விநாயகக்கடவுளுடைய திருவடிகட்கிடைவிடாது பூசனைசெய்துவருபவனும் ஆகாயமார்க்கத்திற் சஞ்சரித்துக்கொண்டிருந்த கிரவுஞ்

* அவையாவன. உயிர்களுக்கு மாயையினுண்டாகிய தனுகரணபுவனபோகங்கள் நான்கினுள் தனுகரணங்களை யானென்னுமகப்பற்றாகவும், புவனபோகங்களை எனதென்னும்புறப்பற்றாகவுஞ் சொல்லப்படும், இவற்றுள் தனுவென்றது, தேகத்தை. கரணமென்றது, அந்தக்கரணப் புறக்கரணங்களை. புவனமென்றது, பூபூதராதி பிரபஞ்சத்தை. போகமென்றது, சத்தாதிவிடங்களை. அன்றியும்-கரணங்கள்தனுவுக்கு அபேதமாயும் புவனங்கள்போகத்திற்கு அபேதமாயுநிற்கையால், தேகபோகமென் றிரண்டாகவுஞ் சொல்லப்படுமெனக்கொள்க.

0 இவற்றுள் வேதமோதல், பிரமயாகம். ஓமம்வளர்த்தல், தெய்வயாகம். பலியீதல், பூதயாகம். தருப்பணமுடித்தல், பிதிர்யாகம். இரப்போர்க்கு உணவு முதலிய வீதலே, மனுடயாகம்.

சனென்னும் ஓர்கந்தருவராசன் அவ்விருடிபத்தினியைப்பார்த்தனன். உடனே சுக்கிரக்கயிறற்றுவிழுந்தாற்போல ஆகாயத்தினின்றுமிறங்கி அவ்வாசிரமத்திலவந்து, தன்னைமுடுக்கிய விரகத்தினால் அவ்விருடிபத்தினியை முன்னதாயொன்றுங்கேளாது கரம்பற்றினன். இவ்வாறு பற்றலும் அவ்விருடிபத்தினியானவள் பூனைவாயிற்பட்ட கிளியினைப்போல நடுநடுங்கி, மனந்தளர்ந்து, தனது கற்பின்வலியால் அவனை யானைமேலெழுஞ் சிங்கத்தைப்போலச்சீறி, தனதுள்ளத்திற் கொதித்தெழுகின்ற கோபத்தினாலவனைப்பார்த்து, அடாபாவி! எனது பிராணநாயகரில்லாத சமயம்பார்த்து என்னைக் கைப்பற்றிக்கலவிக் கிழுக்கின்றனை. இனி என்கரத்தைவிடாமற் போவையெனில் உன்னை இவ்விடத்தில் நீறாக்கிவிடுவேனென்றுசொல்லினள். அத்தருணத்தில் ஸ்நானஞ்செய்யச்சென்றிருந்த சவுபரிமுனிவர் மீட்டும் ஆசிரமத்திற்குவந்து, தமது பத்தினியினுடைய கரத்தைக் கிரவுஞ்சன் பிடித்திழுப்பதைப்பார்த்து, கண்களில் அனற்பொறியெழும்பவும் இதழ்கள் துடிக்கவும் புருவங்கள் நெறியவுமாகக் கோபித்து, அடாமூர்க்கனே! ஓரபராதமுஞ்செய்யாத இவளை நீ கரம்பற்றி இழுக்கவேண்டுங்காரணமென்ன? இவ்வாறு நீ செய்தாய் அவளது கரத்தைப்பற்றிய குற்றத்தினால் நீ இனிமண்பறித்து வளையிலொளிக்கின்ற மூடிகமாகக் கடவதென்று சபித்தனர். உடனே அக்கந்தருவராசன் பயந்து, சுவாமி! அடியேன் கிரவுஞ்சனென்னுமரசன். யான் ஆகாயத்திற் செல்லுகின்றபோது இவரழகைக்கண்டு மோகித்துவந்து கரம்பற்றினேன். அதுவன்றி யான் ஒரு பாதகமுஞ்செய்தறியேன். அடியேன் இவர்கரம்பற்றிய பிழையினைப்பொறுத்துத் தேவரீர் அடியேற்குக்கொடுத்த சாபத்தினை நீக்கியருளல்வேண்டும், அடியேன் தேவரீரைச் சரணமடைந்தேன். இனி அடியேற்குத் தேவரீரையன்றி வேறுதுணையில்லை என்று பிரார்த்தித்தனன். அதற்கு விருப்புவெறுப்புமற்ற சவுபரிமுனிவர் மனமிரங்கி, ஓ கிரவுஞ்சனே! நெருப்பினுடைய சூடுகுளிர்ந்தாலும் நீரினுடைய குளிர்ச்சி வெம்மையானாலும், நமதுவாக்கு ஒருகாலத்தும் பொய்ப்பதில்லை. நீதகாதகாரியத்திற் உடம்பட்டனையாயினும் உடனே நம்மைச்சரணமடைந்தனையாதலால், உனக்கு யாம் கிருபையோடு சாபத்தீர்வுசொல்லுகின்றோம்கேள். திருமாலை இடபமாக ஊர்ந்தருளிய சிவபிரானுடைய குமாரராகிய விநாயகமூர்த்தியானவர் இன்னுஞ்சிலகாலையுள் பராசர முனிவருடைய கிரகத்தில் அவதரித்தருளுவர். அப்

போது நீ அவனுக்கு வாகனமாகி, விண்டுவாதிதேவர்கட்குக் கிடைத் தற்கரிய பாக்கியத்தைப் பெற்று யாவரும் வந்து பணியும்படியான மூ தன்மையோடு முத்தியையும் பெறுவாயாகவென்று அநுக்கிரகஞ்செ ய்தருளினர். அப்பால் மேருகிரியைப்போல மற்றொரு மேருகிரி உண் டானதென்று சொல்லும்படியாக அக்கிரவுஞ்சன் ஒரு மூஷிகமாகி, உ லகமெங்குந் திரிந்துக்கொண்டிருந்தனன்.

இவன் சரிதமிவ்வாறாக, இந்திரனானவன் தனது சுவர்க்கலோகத்தி ல் அரசியற்றிவருகின்றநாளையில் ஓர்நாள் நாரதமுனிவர் அவனிடத்தி ற்குவருவதாயினர். அவர்வரவை அவ்விந்திரன் தூரத்தேயறிந்து, உடனே தனது சிம்மாசனத்தைவிட்டிறங்கி அளவற்ற தேவர்கள்தன் னைப்புடைசூழ்ந்துவர அவரை எதிர்கொண்டுபோயழைத்துவந்து ஓர் சிறந்த ஆதனத்திலிருக்கவைத்து, மிக்கபோஷணையோடுந் துதித்து ப் பூசனைசெய்தனன். அவன்செய்தபூசைக்குந் தோத்திரங்கட்கும் நாரதமுனிவர்மனமகிழ்ந்து, ஓ தேவராசனே! பூலோகத்தில் ஓர்புது மையைக்கண்டு இங்குவந்தனம். அப்புதுமையைச் சொல்லுமிடத் து உனக்குக்கேட்கட்கு நன்மைபயப்பதாகவேயிருக்கும். அஃதியா தெனில்-இமயகிரிக்கும் விந்தகிரிக்குமத்தியில் ஏமவதியென்று ஒரு நகரமிருக்கின்றது. அந்நகரத்திற்கரசன் அபிநந்தனனென்னும் பெ யரினையுடையவன். அவன் இப்போது ஓர்பெரிய யாகத்தினைச்செ ய்யத்தொடங்கினன். அந்தயாகத்திற்கு உன்னைவரிக்காது உனதுசொ ர்க்காதிபோகங்கள் தனக்குக் கிடைக்கவேண்டுமென்று குறித்திருக்கி ன்றனன். மேலும் அந்தயாகத்திற்கு இருடிகள்வந்திருக்கின்றார் கள். இந்தமிடத்தில் அவ்வரசனைச் செயிக்காமற் போவையெனில் அவன்செய்யத்தொடங்கிய யாகத்தின் முதனாளிற்றானே உனதுபத வியை இழந்துபோவை. அதனால் உனக்குச்சகல விடர்களும் உண் டாகுமாதலால், விரைவில்அதற்கேற்றபடி முயலக்கடவையென்றுசொ ல்லி நாரதமுனிவர் எழுந்தருளிப்போயினர். பின்னர் இந்திரன் இத ற்கென்செய்யவல்லோமென்று மாலோசனையிற் றலைப்பட்டவனாகி, அவ்வவர்கள் செய்துவரும் பலகருமங்களிலும் முதலில்நமக்குஞ் சந் திரனுக்கும் பிரமதேவனுக்கும் அவிர்ப்பாகங் கொடுக்கவேண்டுமென் று வேதத்திலும்-சுருதியிலும்-ஸ்மிருதியிலும்-சமுத்திலும்-ஸ்மார்த்த த்திலும் விதித்திருக்க இதுகாறும் அவ்வாறேயாவரும்கொடுத்துவர, இப்போது அம்முறைமையினின்றுந்தப்பி யாகஞ்செய்து வருகின்ற

அபினந்தனராசனைச் சங்கரிக்கத்தக்கவன் உலகமனைத்தையுங் கணத்தி லழிக்கத்தக்க காலரூபியேயல்லாமல் வேறொருவரில்லையென்று தன்மனதில் நிச்சயஞ்செய்தனன். இவ்வாறு நிச்சயிக்குமுன் அக்காலரூபியென்போனும் அவ்விந்திரனுக்கெதிரில்வந்து நின்றான். அவனை இந்திரன் சிறக்கப்பார்த்து, ஓ காலரூபியே! நீ இங்கிமிடத்தில் அளவற்றரூபங்களோடும்பூலோகத்திற்சென்று அபினந்தனராசனையழித்து அவன்செய்கின்றயாகத்திற்கும் மற்றுமுள்ளோர்களாற் செய்துவருகின்றயாகங்கட்கும் பலவிக்கினங்களைநடாத்தி அழித்துவிடக்கடவையென்று சொல்லியனுப்பினன். உடனே காலரூபியானவன் தனதுபுருவங்களைநெறித்துக்கோபித்து, அளவற்றவிக்கினரூபங்களைகொண்டு பூவுலகத்திற்சென்று அபினந்தனராசனுடையயாகசாலையில் மிகுந்தகோரத்தினோடும் பிரவேசித்து, அவனையும் அவன்யாகத்திற்கு வந்திருக்கின்ற இருதுக்களையு நாசஞ்செய்து, மற்றையோரை எல்லாந்தன்னைத்தெண்டனிட்டோடும்படியாகமுடுக்கி, அவிற்பாகத்திற்குச் சேகரித்திருந்த பொருள்களையெல்லாம் அள்ளியுண்டு, ஓமகுண்டத்தையிடித்துத்தள்ளி அதிற்புழுதிகளைநிரப்பி யவித்து. யாகசாலைமுழுமையுந்தூளாக்கி, பலபண்டங்களை யமைத்துவைத்திருந்த பாத்திரங்களை எல்லாம் உடைத்தெறிந்து, அவ்விடத்துநின்று நீங்கித் திக்கட்டங்கள் எழுந்துசெல்லுவதுபோலத் திசைகள்தோறுஞ்சென்று ஆங்காங்குஞ்செய்துவருகின்ற யாகங்களை எல்லாமழித்து அந்த யாகத்தலைவர்களையு நாசமாக்கி எவ்விடங்களினுந் துன்பங்களையேவிளைத்துச், சிலரை அருவமாய்ச்சென்றுதாக்கியும்-சிலரை உருவமாய்ச்சென்றொழித்தும்-ஓர்நொடிப்போதில் திசைமுழுவதுஞ்சுழன்றும்-வேதாகமநெறிகளையெல்லாம்பேதிக்கச்செய்தும்-இவ்விதமான விக்கினங்களைநாடோறுஞ்செய்துவந்தனன். இவ்வாறு காலரூபிசெய்துவருகின்ற துன்பங்களினாலே அளவற்றமுனிவர்கள் ஓரிடத்தில் ஒன்றாகக்கூடி, சகல சீவராசிகளையும் ஆக்கவும் அழிக்கவும் வல்லதயாபரமூர்த்தியைத் துதிசெய்வதானார்கள்.

எண்ணிலாருயிர்களி னிதயபங்கய
நண்ணுநாயகவுயிர் நவிற்றுகன்மத்தி
னண்ணுசான்றாகிய வமலவெங்கள்டாற்
றிண்ணியவிக்கினந் தீர்க்கல்வேண்டுமே.

